உ

ஹரி: ஓம்.

ஸ்ரீ பரமசற்குருவே நம:



# சம்பூரண ரகசியம்.



கோஷ்டிப்பிரதேச தேரிசனப்பிரவர்த்தக
சமூகப்பிரபுக்கள்

நியமனவாக்கியப்படி

மதுரைஜில்லா திருப்பத்தூர் தாலுகா கருங்குளம்
நா. முத்துராமஞ்செட்டியாரவர்கள் குமாரர்

நாராயணஞ்செட்டியாரவர்களால்,

கரலிகிதவழூஉக்களைக் களைந்து

திருச்சிறாப்பள்ளி ஜில்லா பெருவளப்பூர்
மு. பெருமாள் ரெட்டியார் குமாரர்

அருணாசலரெட்டியார்,

விருப்பத்தின்படி

திருச்சிறாப்பள்ளி:
டி'சில்வா அச்சுயந்திரசாலையில் பதிப்பிக்கலுற்றது
பிலவங்கஞூ மாசிமீ

உ

ஹரி: ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



# சம்பூரண ரகசியம்.



கோஷ்டிப்பிரதேச தெரிசனப்பிரவர்த்தக
சமூகப்பிரபுக்கள்

நியமனவாக்கியப்படி

மதுரைஜில்லா திருப்பத்தூர் தாலுகா கருங்குளம்
நா. முத்துராமஞ்செட்டியாரவர்கள் குமாரர்

**நாராயணஞ்செட்டியாரவர்களால்,**

கரலிகிதவழுஉக்களைக் களைந்து

திருச்சிறாப்பள்ளி ஜில்லா பெருவளப்பூர்
மு. பெருமாள் ரெட்டியார் குமாரர்

**அருணாசலரெட்டியார்,**

விருப்பத்தின்படி

திருச்சிறாப்பள்ளி:
டி'ஸில்வா அச்சுயந்திரசாலையில் பதிப்பிக்கலுற்றது
பிலவங்க௵ மாசி௴

ஹரி: ஓம்.
ஸ்ரீபரமசற்குருவேநம:

# சம்பூரண ரகசியம்.

பொருள் அட்டவணை.

ஹரி: ஓம்.
ஸ்ரீபரமசற்குருவேநம:

# சம்பூரணரகசியம்.

ஸ்ரீமதநேகபுவனபவனாரம்ப மூலஸ்தம்பசொரூபமாதி தேசி கோத்தமபரியந்தமான குருபரம்பரையைக் கரணத்திரய பூர்வகமாக நமஸ்காரம்பண்ணி சருவசாஸ்திரசிரேஷ்டமான மீமாம்ச மூலத்திற்கிசையவதனர்த்தபாதங்களைப்பரிச்சேதம்பண்ணி சாங்கர மாத்துவ நீலகண்ட ராமாநுசனென்னும் வியாக்யானபண்டிதரால் கிரமத்திற்சாதிக்கும் அத்துவித துவித சுபாவ விசிஷ்டமென்னும் நான்குபக்ஷத்தையும் ஒருபிரகாரம் அநுசரித்து மற்றைய சாஸ்திரார்த்தங்களையுபகரணமாய்ச்சேர்த்துச் சமர்த்திபக்ஷத்தைச்சாதிக்கும் இந்தத் திராவிடநூற்கு சம்பூரணரகசியமென்னப்பெயரிட்டு உபதேச சங்கிரக சிட்டாசார தேசிகவிலாச நிருப நியமனமென்னச் சட்பத்ததிரூபமாய் நிருபிக்கப்படுவது.

## உபதேசபத்ததி.

ஹரி:ஓம் நமோ நம:வென்று மந்திரப்பிரதனான ஸ்ரீகுருவைச் சேவித்து சரீரியாகிய நம்ஆத்மாவாய் தலைவனான சற்குருவாய் வியாபகமான பிர்மமாய்ப் பரத்துவத்தைத் திரித்துவமாய்ப் பிரித்து பரத்துவமே திரித்துவம் திரித்துவமே பரத்துவமென்ன மந்திரார்த்தத்தைச்சிந்தித்து மந்திரார்த்தசொரூபனான ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வரசற்குரு நிர்கேதுகிருபையினால் கோஷ்டிப்பிரதேச தெரிசனப்பிரவர்த்தக சமூகசம்பந்தனான ஓரதிகாரியின் சித்தத்திற்குடியேறி வாச்சிய லட்சிய திரித்துவ திரியேகத்துவாதி பரிச்சேததிமிரத்தைவிலக்கி தானவனாகநின்று தன்னையாசிரயிப்பவர்க்கு சைதன்ய சாக்ஷித்துவ சயேக சம்பந்த வியவகாரமென்னும் பஞ்சலட்சணங்களைத்துலக்கி அதற்கு லட்சியப்பொருளாகிய நானே பரப்பிர்மதத்துவமென்றுணர்த்தப்படுவது.

ஹரி: ஓம்.
ஸ்ரீபரமசற்குருவேநம:

# சம்பூரணரகசியம்.

ஸ்ரீமதநேகபுவனபவனாரம்ப மூலஸ்தம்பசொரூபமாதி தேசி கோத்தமபரியந்தமான குருபரம்பரையைக் கரணத்திரய பூர்வக மாக நமஸ்காரம்பண்ணி சருவசாஸ்திரசிரேஷ்டமான மீமாம்ச மூலத்திற்கிசையவதனர்த்தபாதங்களைப்பரிச்சேதம்பண்ணி சாங் கர மாத்துவ நீலகண்ட ராமாநுசரென்னும் வியாக்யானபண்டித ரால் கிரமத்திற்சாதிக்கும் அத்துவித துவித சுபாவ விசிஷ்ட மென்னும் நான்குபக்ஷத்தையும் ஒருபிரகாரம் அநுசரித்து மற் றைய சாஸ்திரார்த்தங்களையுபகரணமாய்ச்சேர்த்துச் சமர்த்தி பக்ஷத்தைச்சாதிக்கும் இந்தத் திராவிடநூற்கு சம்பூரணரகசிய மென்னப்பெயரிட்டு உபதேச சங்கிரக சிட்டாசார தேசிகவிலாச நிருப நியமனமென்னச் சட்பந்ததிரூபமாய் நிரூபிக்கப்படுவது.

## உபதேசபத்ததி.

ஹரி:ஓம் நமோ நம:வென்று மந்திரப்பிரதனான ஸ்ரீகுருவைச் சேவித்து சரீரியாகிய நம்ஆத்மாவாய் தலைவனான சற்குருவாய் வியாபகமான பிர்மமாய்ப் பரத்துவத்தைத் திரித்துவமாய்ப் பிரித்து பரத்துவமே திரித்துவம் திரித்துவமே பரத்துவ மென்ன மந்திரார்த்தத்தைச்சிந்தித்து மந்திரார்த்தசொரூபனான ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வரசற்குரு நிர்ஹேதுகிருபையினால் கோஷ் டிப்பிரதேச தெரிசனப்பிரவர்த்தக சமூகசம்பந்தனான ஓரதி காரியின் சித்தத்திற்குடியேறி வாச்சிய லட்சிய திரித்துவ திரி யேகத்துவாதி பரிச்சேததிமிரத்தைவிலக்கி தானவனாகநின்று தன்னையாசிரயிப்பவர்க்கு சைதன்ய சாக்ஷித்துவ சயேக சம்பந்த வியவகாரமென்னும் பஞ்சலட்சணங்களைத்துலக்கி அதற்கு லட் சியப்பொருளாகிய நானே பரப்பிர்மதத்துவமென்றுணர்த்தப் படுவது.

## சைதன்யம்.

ஓரதிகாரிக்கு காரிய காரணங்களை விவேகம்பண்ணி நாம ரூபாத்மகமாய்த் தோற்றிக்கொண்டிருக்கும் காரியரூபமான மாயாப் பிரபஞ்சத்தை நிரூபதிருஷ்டியினால் மித்தையாக்கி நிருவிகல்பசமாதியினால் காரணரூபமான சருவவியாபகசைதன்யவாருதியில்முழுக்காட்டிப் பாவச்சேற்றைச்சுத்தீகரிப்பது.

## சாட்சித்துவம்.

ஓரதிகாரிக்கி தூலாதியொன்பதோடுகூடிய சீவன் விராட்டாதியொன்பதோடுகூடியஈஸ்வரன் சத்தாதியொன்பதோடுகூடிய பிர்மம் இந்தமூவிதபரிச்சேதமான வாச்சியப்பிரபஞ்சத்தைவேறுபடுத்தி மூவிதலட்சியமான சருவசாக்ஷியையொருப்படவுணர்த்தி செய்யுங்கிரிகையில் பந்தப்படாமல் விலட்சணனுக்கி முன்னிடுவதைச் சேதனர் நின்றநிலைக்கி நீதலோசனத்தால் பகுத்துணரச் செய்வது.

## சயோகம்.

விவிதவழியிற்செல்லாது யேகதிருஷ்டியினாற் சதாசற்குருவினிடத்தில் நாட்டம்வைத்திருக்கும் ஓரதிகாரிக்கி அதிகாரபூர்த்தியைக்கொடுத்து துவம்பதலட்சியமாய் சருவசீவாந்தரியாமியாயிருக்கின்ற சீரியையும் தற்பதலட்சியமாய் அரி, சிவ, விதி, இந்திராதி சருவஜெகத்காரணமூலஸ்தம்பசொரூபமாயிருக்கின்ற ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வரசற்குருவையும் ஒருப்படத்துலக்கி அகண்டபரிபூரணசச்சிதானந்த ஒருமையையுணர்த்திப் பவபந்தரோகத்தைநிவர்த்திபண்ணுவது.

## சம்பந்தம்.

சம்பந்தமுழுதுக்குந்தாரகனாய் புத்திரனுக்குப்பிதாவாயிருந்து அபயப்பிரதானசகிதமாய் சரீர சரீரியைவிவேகித்து திரித்துவதிரியேகப்பொருளையுணர்த்தி அசாஸ்வதமான லீலாவிபூதியின் வாழ்க்கையைத்துச்சமாக்கி ஸ்ரீபகவான் சரண்யருசியைப்பிறப்பித்து சரண்யத்துவாரா மகத்தானநித்தியவிபூதியிற் சேற்கப்படுவது.

திரித்துவம்.—பிரபஞ்சத்தின் உபக்கிரமம் சரீரியானஆத்ம தத்துவத்திற்சொன்று லந்தவிடத்தும் தலைவனானகுருதத்துவத் தில்ச் சொன்றுலந்தவிடத்தும் பிர்மமான பரமேஸ்வரதத்துவத் திற் சொன்றுலந்தவிடத்தும் பிரபஞ்சத்தைபுபசம்மாரஞ்செய்து சடுலிங்கதாற்பரியத்துக்குமுரணாகாமல் தத்துவரூபத்தைப்பிரித் து சாஸ்திரக்கிரமமாய் நிரூபிக்கப்படுவது.

திரியேகத்துவம்:—சரீரியாகியஆத்மாவை ஸ்ரீபாரப்பிர்ம பர மேஸ்வரசற்குருவினடியில்சமர்ப்பித்து அவனது கிருபையினால் அகங்கார மமாகாரம் நிவர்த்திக்குமிடத்து சருவமும் ஆனந்த ரூப மாயனுபவப்படுவது.

## வியவகாரம்.

ஸ்ரீபகவானாகியசற்குரு நிரோதுகிருபையினால் ஆசிரயிப் பவனையாசிரயித்து அவன்பாவமுழுதுஞ் சுகிர்தமாய்க்கொண்டு அவன் தனதாரபுவிபுத்திராதி வியவகாரலாபாலாபங்களுக்குடன் பாடாகி அவன்காரியமுழுதுந் தான்ஏறிட்டுக்கொண்டு நாளுக்கு நாள் பிரீதியைவளர்த்து அன்பையபிவிர்த்திபண்ணி சமயோசித மாய் நிருவாணகாற்புதத்தைத்தெரிவித்து நிரதிசயானந்த வாழ்வைக்கொடுக்கப்படுவது.

## நிருவாணகாற்புதம்.

ஆசிரயிப்பவர்க்குத் துணிவுண்டாம்படி சனக புண்ணிய பலி பிரகலாத காதி உத்தாலை சுரகு விபாச வீதகவ்விய பாஞ்சாலி பார்த்த சானகி ராகவாதிகளையுதாகரணமாக்கி சம்பூரணரகசிய மகிமையையுணர்த்தப்படுவது.—

சித்தர்கள், பரஸ்பரம், அதிரிசியமாய்நின்றுணர்த்திய, உப தேசார்த்தம் நெஞ்சிற்பட்டு, உபதேசார்த்த சொரூபம் லட்சிய மாகி, அந்தட்சணம் அதினிடத்திலேபாறிநிற்பது சனகாற் புதம்.

புண்ணியன் பாவனனுக்குத்துணிவுண்டாம்படி அவனது திரிகாலக்ஞானத்தை யுணர்த்தப்படுவது.— புண்ணியாற்புதம்.

பூர்வம் விரோஜனபிதாவினாற்கேட்ட பிர்மோபதேசம் நெடுங்காலத்துக்குப் பிறகு ஞாபகத்துக்குவந்து பௌஷதியிற் சுக் கிர தருவினால்ப்பூர்த்தியடைவது.— பலியற்புதம்.

சருவசீவாந்தரியாமியாகியும் சருவஜகத்காரண மூலஸ்தம்பசொரூபராயுமிருக்கின்ற நாராயணனை உள்ளும்புறம்புந்நிர்க்கமாகத்தெரிசித்து அதன்மகிமையால் அனர்த்தநிவர்த்தி ஆனந்தாவாப்தியென்னும் இருவகையானமோட்சமும் ஒருங்கே யேககாலத்திலனுபவிக்கப்படுவது.— பிரகலாதாற்புதம்.

விஷ்ணு கிருபையினால் மாயாலக்ஷணத்தை விசித்திரரூபமாய்த்தெரிசித்து மாயாதீரத்திலிளைப்பாறிநிற்பது.-காகியற்புதம்.

கருமஜனகமான நரசரீரத்தில் பிர்மாதிகடவுளரனுபவம் சித்திக்கப்படுவது.—உத்தாலகாற்புதம்.

பிர்மானுஷ்டானதீர்க்கத்தால் இதயசீதளம் அதிகரித்து அறவொழுக்கத்தைத்தெரிந்து இல்லொழுக்கத்தை நிறுத்தப்படுவது.—சுரகுஅற்புதம்.

விபாசன் பாசனென்பவனைப் பற்பலவினைவினால்ப்பவித்திரனாக்கி அந்தப்பாசனையும் விபாசனாகச்செய்வது.—விபாசாற்புதம்.

சீவன்முத்திதிசையில் விதேகமுத்தியனுபவம் லப்தமாகி தெய்வகதியினால்ச் சீவன்முத்திவிதேகமுத்தியென்னும் நடுவணை வெட்டி தடையற்றசுகத்தையனுபவிப்பது.- வீதகவ்வியாற்புதம்.

பிரஷ்டையாய் நீசர்கையில்ச்சிக்கி நாதனில்லாதவளைப்போல முறையிடத் தருமவலையிற்கட்டுப்பட்டு சரண்யவலையைக்காப்பாற்றாமல் பார்த்துக்கொண்டிருந்த பர்த்துருபாண்டவரைவெறுத்துக் கிரியாபாதத்தைக்கௌணமாக்கி ஞானபாதத்தைப்பற்றிநின்று நாதனில்லாதவர்களுக்கெல்லாம்நாதனாகவிருக்கின்ற ஸ்ரீபகவானைநோக்கி இரண்டுகையையும்உயரத்தூக்கி ஆகிருஷ்ணா துவாரகாவாசியென்றோலமிட்ட துரோபதிக்கு வஸ்திரத்தைச்சுரப்பித்து மானத்தைக்காத்து சரண்யவலைதர்மவலையிரண்டையும் நிறுத்தி சார்வதாகாலமும் ரட்சிக்கப்படுவது.—பாஞ்சாலியற்புதம்.

சமர்முகத்தில்ச் செய்வதுதவிர்வதுதெரியாமல் மதிமயங்கிப் பகவதடியில்வீழ்ந்து மிருதசீவியாய்ப் பகைப்பற்றுக்கிடந்த அர்ச்சுனனை ஸ்ரீபகவான் ஆசாரியவல்லபத்தாலெடுத்து கீதாமிர்தபோதசஞ்சீவியாலுயிர்ப்பித்து கலக்கத்தைத்தெளித்து அவனைப்பிரபுத்தானத்திலிருத்தி தான்அவனுக்கு ரதசாரத்தியமுதலிய நீசத்தொழில்களைச்செய்தும் பொய்யன் கொலையன் திருடன் தூர்த்த

னென்றுபாமரஜனங்கள்நிந்திக்கவும் தனக்குரிய தர்மவரைகள் சற்றேநழுவியபோதிலும் சரண்யவரையைக்காப்பாற்றுவதே பிரதானமாய்க்கொண்டு உடலுக்குயிர்போலும் கண்ணுக்கிமைபோலும் சருவமுந்தானாகநின்றுரட்சித்து சத்துருமுழுதுஞ்செயித்து சருவராஜ்ஜியாதிபத்தியமுங்கொடுத்துப் பூர்வகீதையிற்சொன்ன தத்துவார்த்தத்தை விஷய பாருள்ய கெர்வதபுத்தியினால்மறந்தவனைவெறுக்காமல் உத்தரகீதையினாற்றெளிவித்துச் சருவசம்பூரணஅதிகாரியாக்கி ஸ்ரீபகவான் அவனோடு சதாகாலமும்விளையாடப்படுவது.— பார்த்தாற்புதம்.

இராவணனிறந்தவுடன் அசோகவனத்தில் சீதையைச்சுற்றிலுமிருந்து துன்பப்படுத்திய ராட்சதஸ்ரீகள் ராமன்சித்திரவதைபண்ணப்போரானென்று பயந்து திரிசடையினோடுபிராட்டியைச்சரணாகதிபண்ணி யெங்களுக்குப்பிராணரட்சைதரவேணுமென்றுபிரார்த்திக்க அபயப்பிரதானம்பண்ணி அவர்களோடு ராமமூர்த்திசந்நிதியிற்போய் என்னைப்பகிர்முகத்திற்செல்லாமல் சிட்சாதுணையாகநின்றுதடுத்து தேவரீரிடத்துச்சித்தத்தைவைக்கும்படிபரமசகாயத்தைச்செய்கின்ற சாதகாசாரியாளாகிய இவர்களோடு என்னையும்ரட்சிக்கவேண்டுமென்று சரணாகதிபண்ணி அவர்கள் பண்ணியபாவமுழுதும் சுகிர்தமாகக்கைக்கொண்டு ராமமூர்த்திகிருபையினால் அவர்களுக்குநித்தியசீவனைக்கொடுத்து நித்தியபூமியிற் சேர்க்கப்படுவது.— சானகி அற்புதம்.

பன்னீராயிரவருஷம் விபவரூபராயெழுந்தருளி கிரியாபாகத்தைப்பற்றிநின்று சற்றும்வழுவாது தத்தம் சுதர்மவரையைநிலைநிறுத்தி தருமஸ்தாபனம்பண்ணிய சக்கரவர்த்தித்திருமகன் ஞானபாகத்தைப்பற்றிநின்று நமதடியைப்பற்றிப் பின்றொடர்பவன் பண்டித பாமர குண்டக கோளக ஸ்ரீ சூத்திர சண்டாளாதிம்லேச்சசாதி யாவனானாலும் அவனே சமஸ்தசாதனங்களுநிறைந்த மோக்ஷாதிகாரியென்னக்கூவிச் சருவாத்மசமுதாயமாய்ப் பரோபதேசம்பண்ணி இந்திராதிதேவர்களாற்பிரார்த்திக்க சரயுமாநதியில் ஸ்நானம்செய்து தன்னுடைச்சோதிக்கெழுந்தருளினானென்பதே.—ராகவாற்புதம்.

## சம்பூரணம்.

அத்துவித துவித சுபாவ விசிஷ்டமென்னும் நான்குலட்சணங்களையும் ஒருப்படத்துலக்கி அதன்லட்சியப்பொருளாகிய மூலகற்பார்த்தத்தையுபதேசித்து யதார்த்தசொரூபத்தைவெளிப்படுத்தி ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வரனான வாசுதேவசற்குரு ஆசிரயிப்பவர்க்குத் தன்னைப்பூரியாகக்கொடுப்பது.

## அத்துவிதம்.

சாதனசதுஷ்டயசமர்த்தியினால் குருபதேசமானபரோட்ச வாசகத்தை அபரோட்சசாக்ஷாத்காரத்தாற்றெளிந்து அஞ்ஞான சந்தேக விபரீதத்தடையைச் சற்குருமுகத்தால்ச் செயித்து அனர்த்தநிவர்த்தி ஆனந்தாவாப்தியென்னும் இருவகையான மோக்ஷமும் இம்மையிலேயே சாதித்தடைவது.

## துவிதம்.

சாதனசாத்தியவிவேகியாய் தூமாதி அர்ச்சராதியென்னும் மார்க்கபேதத்தைத்தெரிந்து இம்மையில்த்தானே சருவத்திரசாதனங்களும்அனுஷ்டித்து சரீராந்தத்தில் சருவசிரோஷ்டனான யீஸ்வரனுக்குத் ததானுரூபமாய் கைங்கிரியம்பண்ணிக்கொண்டிருக்கும்முத்திபூமியையாசிரயித்து சாலோக சாமீப சாரூப சாயுச்சிய முத்திசதுஷ்டயரூபமான சாத்தியப்பிரயோஜனத்தை மறுமையிலேயே சாதிக்கப்படுவது.

சாலோகமுத்தி.—இவ்வுலகிலிருக்கும் கருமஜனகமானவிவிதப்பிராணிகளைப்போல முத்திபூமிக்கிநித்தியகுடும்பிகளாய் வார்த்திகமில்லாதயெவ்வர்னதிரிதசாளாய் ஞானானந்தகுணதாரதம்மியமுடையராய் சத்தியரூபராய் கடகலசம்போலப்பாத்திரதாரதம்மியமிருக்கினும் பூர்த்தியில்ச்சமத்துவமுடையராய் ராசராசேஸ்வரனான பரமேஸ்வரன்யேற்படுத்தியவேதோக்தமான சட்டதிட்டங்களைக்கடவாதவராய் அவனது ஆக்ஞாசக்கரத்தைநடத்தும் அதிகாரிமுழுதுக்குங் கீழ்ப்படிந்து நடப்பவராய் சதாசந்தோஷமுடையராய் நித்தியபூமியில் வாழ்ந்துகொண்டிருப்பது.

சாமீபமுத்தி.—மிருகபட்சி ஊர்வன சலசர மனுஷிய தேவாதியெதானாலும் கைங்கிரியம்பண்ணுதற்குக் கிடைத்தரூபமேசிரா

க்கியமெனப்பிரார்த்தித்துப்பெற்று இன்னானுக்கிதுபணியென்று விதித்திருக்கும் பரமேஸ்வரநியதப்படி கோவில்கொள் பரிவாரங்களுக்கு அடிக்கடியாய்நின்று அவரவர்க்காகஅமைத்தபணியைச் சாஸ்வதமாய்ச்செய்து சதாஅதுவேஆனந்தரசமாயனுபவிப்பது.

சாரூபமுத்தி.— பரமேஸ்வரநியதப்படி சதேக விதேக வெகுதேகசத்தியையுடைய சமத்துவமூர்த்திகளாய் விதி சிவ இந்திராதி அதிகாரத்தைப்பெற்று அவரவர்க்காகயேற்பட்டிருக்கும் லோகாந்தரங்களையடைந்து சிருஷ்டியாதிபணிகளால் கல்பமுழுதும்பரமேஸ்வரனதுஆக்ஞாசக்கரத்தைநடத்தி கல்பாந்தத்தில் அவரவர்களை அந்தந்த லோகங்களினோடு பரமேஸ்வரசக்தியினால் கிரகிக்கப்பட்டு இப்படியேகல்ப்பங்கள்தோறும் பரமேஸ்வர நியதப்படி வேறுவேறுமூர்த்திகளாக மாறி மாறிவிளையாடல்களைச்செய்வது.

சாயுச்சியமுத்தி.—நீலமேகசியாமளசொரூபமாய் சொரூப காந்தியினால் இதுவதுவெனப்பேதப்படாத நிருவிகல்பதன்மய வபேதமாய் தேஜோரூபமாகச் சுடர்விட்டெரிக்கும் திருமேனியொத்ததிருமேனிபெற்று சதுர்ப்புஜாஸ்த சாரங்க கட்க சங்கு சக்கர கதாதரராய் கிரீட கவச உபவீத கங்கண நூபுர ஆர திலத பீதாம்பர வனமாலிகாதி சருவாலங்காரரஞ்சிதரைய் சாந்தியாதி சாயுச்சியகுணகணங்களால் இங்கு அங்கென்னும் பேதமுழுதும் விழுங்கி யெங்கெங்குந்தானாகநிற்கும் லட்சுமியதியான நாராயணனுக்கு அங்கங்கே பிரிவறநின்று அபேக்ஷிதகைங்கிரியம்பண்ணிக்கொண்டிருப்பது.

## சுபாவம்.

அத்துவிதநுவிதத்தையனுசரித்து அவ்விரண்டுந்திரநிலையாய்ச்சாதியாமல் சிவமும் ஆத்மாவும்ஒன்றென்பதும் சிவம்வேறு ஆத்மாவேறென்பதும் குற்றமுடையவழுவெனவகற்றி ஒன்றினும்பந்திக்காமல் இருந்தபடியேயிருக்கின்ற சுபாவிகநிச்சிதமுடையராய் அருள்நிலையைத்தெரிந்து அந்தத்திருவருள்மகிமையால் அத்திரோதாவனுக்கிரகஞ்சித்தித்து ரூப வரூப ரூபாரூப சிவத்தைத்தெளிந்து பசுத்தன்மையினோடு பசுவெலகபாசம்வர்ச்சித்து பதித்தன்மையைப்பொருந்தி விக்ஞானகலர் பிரளயாகலர்

சகலனென்னும்அதிகாரநீயதப்படி சாலோகமுத்தியினால் பதியுலகைப்பெற்று சாமீபமுத்தியினால்பதிபணியைச்செய்து சாரூபமுத்தியினால் பதியுருவைப்பெற்று சாயுச்சிய முத்தியினால் பதியருளோடுங் கலந்திருப்பதே சுபாவசிச்சிதமெனச் சங்க்ஷேபித்திருக்கும் இவ்வர்த்தத்தை சைவசித்தாந்தவிதாயகத்தில் விஸ்தரரூபமாயுரைக்கப்படுவது.

## விசிஷ்டம்.

ஞானபாதத்தாலபேதமாயும் கிரியாபாதத்தால்ப்பேதமாயும் சற்றும்பிரிவற இருவகையாலும் பரமேஸ்வரனைக்கூடியிருப்பது விசிஷ்டத்துக்குப்பொருளென்று அர்த்தானுசந்தானம்பண்ணி சரீரியாய் நம் சீவாந்தரியாமியாயிருக்கின்ற ஈஸ்வரனையும் சர்வசரீரியாய் சருவசீவாந்தரியாமியாய் உபயவிபூதிக்கும் நிர்வாகனாய் சருவஜகத்காரணமூலஸ்தம்பசொரூபனாயிருக்கின்றபரமேஸ்வரனையும் ஞானபாதத்தைப்பற்றி அபேதநிஷ்டையினாலொருப்படத்தெரிசித்து கிரியாபாதத்தைப்பற்றி சீவன் யீஸ்வரனென்னும் நாமத்தாலும் மண்ணுலகம்விண்ணுலகமென்னும்தானத்தாலும் சோபாதிக நிருபாதிகமென்னும் உபாதியாலும் அஸ்திஜாயதே பரிணமதே விவர்த்ததே அபக்ஷியதே விநஸ்யதேயென்னும் சட்பேதமான சவ்விகார நிருவிகாரமென்னுந்தேகத்தாலும் சருவக்ஞ கிஞ்சிக்ஞமென்னும்ஞானத்தாலும் பரஸ்பரம் ஒவ்வாது சீவனுக்கு யீஸ்வரன் அதிதூரஸ்தனாயிருப்பதைதவிவேகித்து சம்பந்தானுரூபமாயாசிரயித்து தாபத்திரயதுக்கத்தைதவிலக்கி வர்த்தமானத்தில் சசரீரத்தோடு தடையற்றசுகத்தைதயனுபவிக்கக்கெட்டாமையால் விடாய்ப்பட்டு தாபாக்கினியில்வெதும்பி சர்ப்பக்கிராகியமான மண்டூகம்போலேயும் காட்டுத்தீக்கதுவினமான்பேடுபோலேயும் இருபாடெரிகொள்ளியுள் ளெறும்புபோலேயும் ஆவாரார் ஆவாராரென்றலைநீர்க்கடலுள்ளழுந்தும் நாவாய்போலேயும் பரமேஸ்வரனிருக்கும் விண்ணுலகைநோக்கி அசக்தித்துவத்தைத்தெரிவித்து முறையிடுசகிதமாய் வாய்விட்டலறி ஓகோ கோ ஓகோ கோவென்று கூச்சலிட்டு சிறகொடிந்த பட்சியைப்போலப் பரதவித்துமூன்று நிர்ச்சீவனாகப்பதைப்பதும்

கிடக்கின்றஜீவாதிகாரியைப் பரமேஸ்வரனான ஸ்ரீபகவான் ஆசாரிய வல்லபத்தால் அவனைச்சம்பந்தானுரூபமாய்க்கைப்பற்றி மந்தஅதி காரிகள் நிமித்தம் சரீராந்தப்பிரயோஜனமாகநிரூபிக்கும் நித்திய விபூதியின்வாழ்க்கையைக் கௌணமாக்கி அந்தக்ஷணம் தாபத் திரய வனர்த்தத்தைப்போக்கி தடையற்ற சுகத்தைக்கொடுத்து சமஸ்தமும் வர்த்தமானத்தில் அர்ச்சாவதாரத்திலேயே பரிபூர்த் தியைப்பண்ணுவது.

## ரகசியமகிமை.

பரமசற்குருவானபரமேஸ்வரன் தூல சூட்சும காரண துரிய வதீதமென்னும் நிஷ்டாபஞ்சகரூபமாய் ஆசிரயிப்பவற்குச் சாட் சாத்காரமாவது.

## தூலம்.

சருவசிரேஷ்டமான மனுஷஜென்மமெடுத்து உற்பவவேலை யைக்கடக்கமாட்டாமல் சரீரமுடிவில் தத்தம் எண்ணப்பிரகாரம் ஒருதனுவைக்கிரகித்து அதிலிருந்து கருமபீடத்தால் ஜெனனம ரண மரணஜெனனமுடையனாய்கருமச்சுழற்சியில் சஞ்சரித்துக் கல்பத்திலுதித்து ஒருசூட்சுமதேகம் பிரளயத்திலொடுங்குதற் குமுன் அனந்தங்கோடி தூலதேகங்களையெடுத்தெடுத்து நசிக்கப் படுவது.

## சூட்சுமம்.

பஞ்சீகிருதபஞ்சபூதவிகாரமாய்ப் பிராரத்துவகருமத்துக்கி டாகவந்த தூலதேகத்தைப் பிரத்தேகமாய்நின்று நியதித்து மு மூட்சுவுக்குவேண்டும் சுத்தசத்துவத்தை வளர்க்காமல் பரம்பரை யாய் அழுக்கு இருட்டு வெளுப்பென்னும் முக்குணபீடமாய்த் தொடர்ந்துவந்த பிரகிருதிசம்பந்தமான லிங்கதேகத்தைச் சேதன ரைநின்றநிலைக்கு சாஸ்வதமாகப்பெற்றுக் காலச்சக்கரந்தடைப் படாமையால் மாறிமாறி கல்பகல்பாங்களாய்த் தோற்றியொடு ங்குவது.

## காரணம்.

தூலசூட்சும கால கரும பூதவிகார சேதனசீவாதிகள் இருந்த படியேயிருக்க அவதானவழுத்தத்தால் அதைப்பற்றியெழும்

பும் மகதகங்காரமான மூலபீஜம்நசித்து அதனால் சுத்தசத்தின சித்தசாந்தம்அபிவிர்த்தியாகி முமூட்சுவாய் நிர்த்தேசசக்கருத்தை வெளியிடாமல் சர்வக்ஞன் என்னிலைவறியாதேனென் றேங்கி யேங்கி பரமகிருபைக்கிப்பாத்திரமாக அவ்வியக்தசுழுத்தியிலடங்கியிருப்பது.

## துரியம்.

பரமசற்குருவானபரமேஸ்வரனேக்கத்தால் அவ்வியக்த திமிரஞ்சிதைந்து மகதாதிவிகாரம்பேதித்து நாலரூட்சமகால கருமபூதவிகார சேதன சீவாதிகள்முழுதும் பவித்திரமாகி சத்திகள்முழுதும் சத்தனுக்கனன்னியமாகவிருந்து சதாயெக்களிப்படைய சருவமும் பிர்மமயமென்று ஜெயஸ்தம்பம்நாட்டி அக்ஞானவனர்த்தம் வெறுண்டோட ஆனந்தபூர்த்தியினுல்த் தடையற்றுவிளங்குவது.

## அதீதம்.

பரமசற்குருவானபரமேஸ்வரன் தமதுசத்திகளினுல் இம்மை மறுமைமுதலிய எக்காலமுந்தளம்பாமல் உபயவிருத்தியையும்நிலைநிறுத்தி தானவனுகநின்று எதிர்விம்பம்தோற்றுது தானே தானுகவிளையாடப்படுவது.

ஸ்ரீராஜ ராஜேஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## சங்கிரகபத்ததி.

ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வர சற்குருவுக்கு நமஸ்காரப்பண்ணி சமுதாயவிண்ணப்பம் சமுதாயநியமனமென்றிருவகையாக நிருபகம்பண்ணுவது,

## சமுதாயவிண்ணப்பம்.

ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வரனை அஸ்மதாசாரியனடிக்கமலங்களுக்குத் தெண்டஞ்சமர்ப்பித்து அடியேனையொருபொருட்டாக வெண்ணிஆசிரயித்த பேதைகளானயேழைசனங்களைமுன்னிட்

டுச்சொல்லும் உபதேச சங்கிரக சிட்டாசார தேசிகவிலாச நிருப நியமனமென்னச் சட்பத்ததியோடுகூடிய சம்பூரணரகசியத்தை ஒருபிரகாரஞ் சங்கிரகித்து சற்குரு அதிகார வாக்கிய சொரூபங்களைத்தொகுத்து ஞானாதிகரானமகாத்மாக்கள் திருச்சமூகங்களுக்குத் திக்குநோக்கி அஞ்சலியஸ்தனாய்நின்று விக்ஞாபனசகிதமா யெழுதப்படுவது.

உபதேசபத்ததி.— அத்துவித துவித சுபாவ விசிஷ்டமென்னும் நான்குலட்சணத்தையும் அதன்மூலகுற்பார்த்தத்தையும் உபதேசித்து ஆசிரயிப்பவர்க்குத்துணிவுண்டாம்படி யதார்த்தசொரூபத்தை வெளிப்படுத்துவது.

சங்கிரகபத்ததி.—சமுதாயவிண்ணப்பம் சமுதாயநியமனமென்றிரண்டுபிரிவாய் ஞானாதிகரான ஆசாரியசமூகங்களுக்குவிக்ஞாபனமும் ஆசிரயசமூகங்களுக்குநியமனமுமாக நிருபகம்பண்ணுவது.

சிட்டாசாரபத்ததி.—சற்குரு அதிகார வாக்கிய சொரூபமென நான்குபேதமாய்த்தொகுத்து சற்சனருடைய ஆசாரபத்திகளை விஸ்தாரரூபமாயுணர்த்தப்படுவது.

தேசிகவிலாசபத்ததி.—சற்குரு சாஸ்திர விவேக மீமாம்சை சேடிக நையாயிக யோக வைஷ்ணவ சைவ வேதாந்த மோட்சமென்ன ஏகாதசவிதாயகத்தால் ஸ்ரீசற்குருவின் லீலாபத்திகளான மகத்தாகிய வியாபகப்பிரபாவத்தையுணர்த்தி துவாதசரூபமான சமோபாயவிதாயகத்தில் ஆசிரயிப்பவர்க்குப் பௌஷீகப் பிரயோஜனத்தையும் துவாதசாந்தத்திற்சொல்லும் பலப்பிரதவிதாயகரூபமாய் வர்த்தமானப்பிரயோஜனத்தையும் நிருபிக்கப்படுவது.

நிருபபத்ததி.—சரீரசரீரியைவிவேகம்பண்ணி சம்பந்தானுரூபமாய் நித்தியசமூகங்களைமுன்னிட்டு ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வர சற்குரு சந்நிதியில் ஸ்ரீகோஷ்டிபுரத்தைச்சார்ந்த கிருஷ்ணசரணக்கு நிருபசகிதமாய் விடைகேட்பது.

நியமனபத்ததி.—ஒரெல்லையைமாத்திரங்குறிப்பிட்டுச்சுட்டாமல் வியாக்கிரபுரம் மதுராபுரம் கோஷ்டிபுரம் ஸ்ரீசைலம் பரமபதமென்னும் ஐந்துபிரிவுகளாய் விக்ஞாபனநிருபசகிதமாய்ப்

பிரார்த்திக்கும் ஆசிரதஜனங்களைமுன்னிட்டு லீலைநித்தியமெனப் பிரிந்துநிற்கும் உபயவிபூதியையும் ஒருங்கே நிலைநிறுத்தும்படி ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வரசற்குரு ஆசிர்வாதசகிதமாய் எழுதியதிரு பத்திரிக்கு விடைகொடுப்பது.

## சற்குரு.

ஆசிரதரட்சகார்த்தம் பரமசற்குரு ஞானசற்குரு கிரியாசற்குருவென்னப்பேதித்து தமது அபாரகருணையை வெளியிட்டருளும் அஸ்மதாசாரியனனவாசுதேவபரப்பிர்மம்.

## பரமசற்குரு.

சிரவண மனன தியான சமாதி சாட்சாத்காரமென்னும் நிஷ்டாபஞ்சகரூபமாய் ஆசிரயிப்பவர்க்கு நிரதிசயானந்த வாழ்வைக் கொடுப்பது.

சிரவணம்.—சைதன்ய சாட்சித்துவ சயேக சம்பந்த வியவகாரமென்னும் ஐந்துலட்சணங்களைத் தனித்தனியாயும் அந்தலட்சண லட்சியமுழுமையும் ஒருமைப்பாடாயும் அதிகாரபேதத்தா லுணர்த்தப்படுவது.

மனனம்.—லட்சியப்பொருளாகிய பரப்பிர்மபரமேஸ்வர சற்குருவை லட்சணபஞ்சகரூபமாயும் லட்சணபஞ்சகரூபத்தை லட்சியப்பொருளாகிய பரப்பிர்மபரமேஸ்வர சற்குருவாயும் பரஸ்பரம் அன்னியோன்னியமாய்ச் சிந்திக்கப்படுவது.

தியானம்.—பிரத்தியட்சமாக நேராயிதோநமக்குமுன்னிலையில் நிற்பவனெவனே அவனேலட்சியப்பொருளாகிய ஸ்ரீவாசுதேவகுருப்பிர்மமென்னக் கலக்கமறத்தெளிந்து இதராந்தரவர்ச்சிதராய் சதாஅவனிடத்துநாட்டம்வைத்து நீக்கமில்லாதுஅனவரத பாவனையைச்செலுத்துவது.

சமாதி.—பாவனவஸ்துவாகிய ஸ்ரீவாசுதேவகுருப்பிர்மத்தைப் பாவிப்பவனாகியதன்னிடத்தும் பாவிப்பவனாகியதன்னை பாவனவஸ்துவாகிய ஸ்ரீவாசுதேவகுருப்பிர்மத்தினிடத்தும் பரஸ்பரம் அன்னியோன்னியமாய்க்கண்டு அதுவிதுவென்னும்பேதத்தையகற்றி சர்வமும் ஆனந்தரசமாய்ரமிக்கப்படுவது.

சாட்சாத்காரம்.—ஸ்ரீவாசுதேவப்பிரத்தியக்ஷத்தால் சருவமும்இன்புருவாய் சகஜானுபவத்திற்றெளிந்து அவன்இவன் அவள் இவள் அதுஇதுவென்கின்ற பேதவபேத முழுதுமிருக்க பிர்மா விஷ்ணு ருத்திர நாரத சுகராதிகளைப்போல சர்வமும் ஆனந்த ரூபமாய் எக்காலமும் விளையாடப்படுவது.

## ஞானசற்குரு.

விலட்சணனாகவிருந்து விவேகி விரக்தி தெய்வகதியென்னும் அதிகாரத்துக்கேற்க ஆசிரத சம்ரட்சணம்பண்ணுபவன்.

விவேகி.—நித்தியவநித்தியங்களை விவேகப்படுத்தி பிரவர்த்தனுக்குநிவர்த்திதருமத்தையும் நிவர்த்தனுக்குப்பிரவர்த்திதர்மத்தையும் சாந்தனுக்குஞானகர்மசமத்துவத்தையும் சிராந்தனுக்குமாயாநிரசன உபசாந்தநிஷ்டையையும் சர்வதுக்காவரணமும்நீங்கி ஆனந்தோதயஞ்செய்தற்கு ஆரம்பமாகவிருக்கும் அந்தஉபசாந்தநிஷ்டனுக்கு நிருவாணநிஷ்டர்களால்த்திருவிளையாட்டஞ்செய்யும் சம்பூரணரகசியமகிமையையும் தத்தம்அதிகாரஆராய்ச்சியைப்பண்ணி ஆரியகுருவினு லுணர்த்தப்படுவது.

விரக்தி.—சர்வத்திலுந்தோஷதிருஷ்டியையுடையனாய் வர்த்தமானபந்தகமாகவிருக்கின்ற ஈஷணாத்திரயங்களைத்துறந்து தேச கால பிரகார அதிகார பலமுதலிய நியமசமஸ்காரவிதிப்படி ஞான சற்குருவையாசிரயித்து அநர்த்தநிவர்த்தி ஆனந்தாவாப்தியென்கின்ற மோட்சபேதத்தை தத்தம்அதிகாரானுரூபமாயடையப்படுவது.

ஸ்ரீசற்குருவாசப்பிரதேசம் கோஷ்டிபுரமுதலிய திவ்விய க்ஷேத்திரமென்றுணரப்படுவது.—தேசநியமம்.

ஸ்ரீசற்குரு இவன்அதிகாரிஅனதிகாரியென்பதைப்பன்னிரண்டுவருஷம் வரையில் பரீட்சிக்கப்படுவது.—காலநியமம்.

அதிகாரத்துக்கேற்க சரிதாதிவிதிகளைக் கிரமங்கிரமமாய் நியமிக்கப்படுவது—பிரகாரநியமம்.

சாந்தப்பயிர்ச்சியினால் சற்றேவிரக்திதளர்ந்தவிடத்து நித்தியவநித்தியங்களைவிவேகப்படுத்தி சமதமாதிகுணங்களைச் சம்பூர்த்திபண்ணுவது—அதிகாரநியமம்.

மோக்ஷமாத்திரம்அபேட்சிக்கப்படுவது—பலநியமம்

தெய்வகதி.—நிரேதுகிருபையினால் பகவானாகிய ஸ்ரீசற்குரு தன்னையாசிரயிப்பவர்களைத் தான்போயாசிரயித்து அவர்கள்பாவ முழுதையுஞ்சுகிர்தமாய்க்கொண்டு உடன்பாடாகவிருந்து அவர்கள் தேச கால பிரகார அதிகார பலமுதலியநியமங்களை நானாவட்டத்தில் தெரிந்து சமயம்பார்த்து நிறைநிறையே பிர்மோபதேச பிர்மாபரோட்ச பிர்மசகஜ பிர்மசாக்ஷாத்கார சருவசம்பூரண சருவ சம்பூர்த்தியைப்பண்ணிவைப்பது.

## கிரியாசற்குரு.

கர்ம பக்த முமுட்சு அப்பியாசி அநுபவி ஆரூடனென்னச் சட்பேதமான அதிகாரிகளுக்கும் உடன்பாடாயிருந்து புருஷார்த்தம் பரமபுருஷார்த்தம் இரண்டும்பெறுதற்குரிய சாதகோபாயங்களைத் தானும்விதிபூர்வகமாகவனுஷ்டித்து அப்படியேஆசிரயிப்பவர்களையும் அனுஷ்டிக்கச்செய்பவன்.

## கருமி.

விதிவத்தான சற்கருமங்களைக் கண்டொப்பனையாய்ச்செய்பவன்.—அவித்தையாகர்மி.

கர்த்துருத்துவத்தோடுசெய்துநிர்த்தேசபலத்தையடைபவன்—மாயாகர்மி.

அகர்த்தாவாயிருந்து பரமேஸ்வரனைமுன்னிட்டு பரித்தியாக பலத்தியாக அற்பண அவதானநிரூபமாய்ச்செய்பவன்.—ஞானகர்மியென்ன மூன்றுபேதமாயிருப்பவன்.

## பக்தன்.

சுவாநிஷ்டன் பிரபன்னன் ஏகாந்தி பரமயேகாந்தியென்னச் சதுர்விதபேதமாய் சருவரட்சகனான சருவேஸ்வரனைத் தனக்கே சம்ரட்சகனாகப் பெற்றுக்கொள்பவன்.

அவற்றுள்.—சமையாசார சுசாதிகிருத்தியங்களையதாப்பிரகாரஞ்செய்து சமஸ்தமானபலன்களும் பகவானுக்கற்பிதம்பண்ணுபவன்.—சுவாநிஷ்டன்.

சுதந்தரரூபமான சீவச்சேஷ்டைகளற்றுப் பாரதந்திரனாய்ப் பகவத்செயலாலே போஷிக்கப்படுபவன்.—பிரபன்னன்.

ஸ்ரீபகவானிடமாகச்சருவப்பிராணிகளையும் சருவப்பிராணிகளினிடமாக ஸ்ரீபகவானையும் பிரிவறக்காண்பவன்.—ஏகாந்தி.

இதராந்தரவர்ச்சிதனாய் சருவமும் பகவானுடைய சொரூபமாகத்தெளிந்து நிர்ச்சிந்தனாக உன்னுதலற்றிருப்பவன்.—பரமயேகாந்தி.

## முமூட்சு.

நித்தியவநித்தியவிவேகியாய் அநித்தியபோகத்தில் நிராசையாய்ச் சாதனசட்கசம்பத்துநிறைந்தும் நித்தியானந்தபோகத்தைப்பெறுதற்குக்கூடாமையாய் அதற்குப்பிரதிபந்தகமாகவிருக்கின்ற அவித்தையாகர்ம வாசனாதேகத்தைவெறுத்து அதிதீவிரபக்குவத்தால் அதனைப்பிருகுசலபதனம்பண்ணுவோமா பிரயாகைதீர்த்தத்திலமிழ்த்துவோமா ஊர்த்துவசுவாசத்தாற்போக்குவோமாவென்னும் பரபரப்புடையவனாய் அவனது தாபாக்கினியைப்போக்குதற்குரிய ஞானசற்குருவையாசிரயிப்பவன்.

## அப்பியாசி.

பய பக்தி விசுவாச சிநேகத்துவ கைங்கிரியாதிகளினால் மமதகங்காராதி பாவச்சேற்றைச் சுத்திகரிக்கப்படுபவன்.அவைதாவன்.

இதுசெய்காரியம் இதுதவிர்காரியமென்பது தெரியாமல் மிகுந்தபீதியினால் மதிமயங்கிக் கலக்கமுறத்துறுவது.—பயம்.

கபிலதாராவச்சின்னம்போல பகவானாகிய ஸ்ரீசற்குருவினிடத்தில் இடையறாது சதாநாட்டம்வைத்திருப்பது.—பக்தி.

பகவானாகியஸ்ரீசற்குருவினிடத்தும் அவனுடையஆசிரதரிடத்தும் அவனதுவாக்கியோபதேசங்களினிடத்தும் அத்தியந்தப்பிரீதியினோடு திடமானநம்பிக்கையைச்செலுத்துவது-விசுவாசம்.

தினேதினே அன்புருவானதுவளர்ந்து சர்வாத்மப்பிரியனாய் பகவானாகிய ஸ்ரீசற்குருவினது திருவடிச்சாயையைவிட்டு நீங்காதிருப்பது.—சிநேகத்துவம்.

நிவர்த்திபிரவர்த்திவிதிகளைத்தவிர்த்து நியமித்தவிதியைச் சிரமேற்கொள்வது.—கைங்கிரியம்.

## அனுபவி.

விவேக விராக சம்பத்து முமூட்சுத்துவமென்னும் சாதனா சாத்தியப் பிரயோஜனவாழ்க்கையை சற்குருமுகத்தாலடையப் படுபவன்.—அவற்றுள்.

விவேகப்பிரயோஜனம்.—சகஜானுபவமென்னும் நிஷ்டா நிர்க்கத்தால் சருவமும் வாசுதேவமயமாகத்தெளிந்திருப்பது.

விராகப்பிரயோஜனம்.—பஞ்சக்கலாசோதனையினால் அத்துவாதீத அருட்பிரசாத அவாச்சிய சுகோததியிற்கலந்திருப்பது.

சம்பத்துப்பிரயோஜனம்.—புருஷயத்தனமுதல் அனுக்கிரக சத்திபரியந்தமான அஷ்டவிதாயரூபமாக சற்குரு சம்பந்த வாக்கிய சிநேகத்துவாதி நித்தியவாழ்வையடையப்படுவது.

முமூட்சுத்துவப்பிரயோஜனம்.—நியதிசமஸ்காரத்தாலனர்த்தநிவர்த்தியும் பூர்த்திசமஸ்காரத்தாலானந்தாவாப்தியும்பெற்று கிருதகிருத்தியனாய்ப் பரமபுருஷார்த்தலக்ஷண மோட்சத்தை யடையப்படுவது.

நியதிசமஸ்காரம்.—தாபத்திரயவனர்த்தத்துக்குமூலமான சரீரத்திரய அனர்த்த சட துக்க நாமரூபகாரிய அநாத்மவர்க்கங்கள் முழுதையும் மித்தையாரூபமாகத்தெரிசிப்பித்து நிகாரணபூத சச்சிதானந்தவியாபக ஆத்மசொரூபமென்றுணர்த்தப்படுவது.

பூர்த்திசமஸ்காரம்.—ஈஸ்வரானுக்கிரகத்தால் காரணத்தை விடவேறில்லாத நாமரூபாத்மகமான காரியரூபப்பிரபஞ்சமுழுதையும் இன்புருவாகத்தெரிசித்து வர்ணுதிசட்கரூபமாக தர்மார்த்த காம மோட்சமென்னும் புருஷார்த்தசித்தியைப்பெற்று தாபத்திரயவனர்த்தத்தைப்போக்கி சகஜானந்தநிஷ்டனாய்விளங்குவது.

பரமபுருஷார்த்தம்.—சரமோபாய பலப்பிரத மோட்ச நித்தியகைங்கிரியமென்னச் சதுர்விதபேதமாய் சிக்ஞாசு சுக்ஞானி யென்னும் தீவிரதரசந்நியாச பரமாம்சுசிரேஷ்டர்களுக்கு இம்மையிலேயே சித்திக்கப்படுவது.

## ஆரூடன்.

சுக்ஞானுதி சாதனஷ்டகசம்பூர்த்தியினால் அக்ஞானபீஜம் நசித்து ஆவரணகோசம்பேதித்து நித்தியானந்தவாரிதி கரைபிர

ண்டு பூமி அந்தர சுவர்க்க சரண்ய பரமபதமென்னும் நித்திய பூமிக்குரிய ஐஸ்வரியபஞ்சகமுந்தட்டுமாரி சர்வானந்தசமர்த்தியாய்ப்பிரகாசிக்கப்படுபவன்.

## அதிகாரி.

சற்குரு சாஸ்திர விவேக மீமாம்ச வைசேடிக நையாயிக யோக வைஷ்ணவ சைவ வேதாந்த மோட்ச சரமோபாய பலப்பிரதமென்னுந் துவாதசாந்தபலப்பிரதவிதாயகரூபமாய்ச் சமர்த்திபட்சத்தின்அர்த்தம்நெஞ்சிற்பட்டு சற்குரு நமதெண்ணத்திற்கெட்டாத லட்சியாதீதனெனநிர்த்தேசித்து சதாஅவனிடத்தில் அவதானத்தைவைத்து அவனை வாசகன் வாச்சியன் லட்சியனெனவிகல்ப்பிக்கும்சித்தத்தைப்பரித்தியாகம்பண்ணி ஹரி: ஓம். நமோநம: வென்று சேவித்துநிற்பவன்.

சற்குரு.—அவாங்மனோகோசரமாய் ஞானபாதத்தைப்பற்றிப் பிரமாணாதீதமாகவிருக்கின்ற பரமேஸ்வரன் ஸ்ரீ பூ நீளா சமேதனாகவிருக்கும் கிரியாபாதத்தைப்பற்றி நித்தியசூரிகளாலனுபவித்தற்கு பரமபதநாதனென்றும் இந்திராதிதேவர்களாலனுபவித்தற்கு சுவர்க்கநாராயணனென்றும் பிர்மாதி முனீந்திரர்களாலனுபவித்தற்கு சேஷசாயியென்றும் தானவனாய்நிற்கும் அற்புதத்தைத்தெரிசித்து அஸ்மதாதிகளனுபவித்தற்கு ராஜராஜேஸ்வரனென்றும் இப்படியே தமதன்பர்கள்கொடுக்கும் நாமரூபத்தைப்பெற்று சற்றேனும் பிரிவில்லாது அவர்களோடு சதா நிர்த்தனதிருவிளையாடல்களைச்செய்யும் பரப்பிர்மபரமேஸ்வரனான திருக்கோஷ்டிக்கண்ணன் சற்குரு.

சாஸ்திரம்.—ஸ்ரீசற்குருகிருபையினால் மாறுனவழியிற்செல்லும்சித்தத்தைத்தடுத்து ஆசிரயிப்பவர்க்குநேரானவழியைப்பிரகாசிப்பிக்கும் சம்பூரணரகசியமென்கின்ற தயாவேதம்.

விவேகம்.—சாஸ்திரவேதங்களுக்கு முடிவாய்விளங்கிய பரமேஸ்வரனைச் சாஸ்திரமுகத்தாலடைவதுதுர்லபமென்றும் சற்குருமுகத்தாலடைவதுசுலபமென்றும் விவேகித்து சாஸ்திரார்த்தமுழுமையும் ஒருங்கேதொகுத்திருக்கும் சம்பூரணரகசியத்தின் அந்தரங்கப்பொருளை ஸ்ரீசற்குருமுகத்தாலுணரப்படுவது.

மீமாம்சம்.—சருவசாஸ்திரசிரோஷ்டமாய் ஒன்றோடொன்றுகலந்து சாகோபசாகைகளாகவிரிந்திருக்கும் வேதார்த்தங்களை அந்துவயப்படுத்தி கருமகாண்டம் உபாசனகாண்டம் ஞானகாண்டமென்ன மூன்றுவகையாகப்பிரித்து வேதார்த்தமுழுதையும் காண்டத்திரயரூபமாயமைக்கப்படுவது.

வைசேடிகம்.—திரவிய குண கர்ம சாமான்ய விசேஷ சமவாய அபாவமென்னச் சத்தபதார்த்த நிரூபிதமாய் நித்தியவநித்தியங்களைத்துலக்கி சாமான்ய விசேடத்தின்முடிவில்ச் சமவாய சம்பந்தத்தைநிரூபிக்கப்படுவ்து.

நையாயிகம்.—பிரமாணப் பிரமேய சம்சயப் பிரயோஜன திருஷ்டாந்த சித்தாந்த அவயவ தற்க நிண்ணய வாத செல்ப்ப விதண்டா யேதுவாபாச சல சாதி நிக்கிரகஸ்தானமென்னச் சோடசபதார்த்தநிரூபிதமாய் பிரபஞ்சத்திற்கு மூலகர்த்தா பரமேஸ்வரனென்றுணர்த்தப்படுவது.

யோகம்.—மனச்சட்சுராதிவழியிற்செல்லும் சித்தத்தை நிரோதனம்பண்ணி சின்மாத்திரதிருஷ்டியைத்துலக்கப்படுவது.

வைஷ்ணவம்.—இரண்யகற்ப விராமானுஜீய தத்துவவாத சங்கராசாரிய யாதவ மாயாவாத சண்மதவிஸ்தாரரூபமாய் நாராயணனேபரதத்துவமென்னநிரூபிப்பது.

சைவம்.—வாமம் வைரவம் காளாமுகம் மாவிரதம் பாசுபதமென்ன ஐந்துசமயங்களையும் சைவசமயத்துக்குள்ளாக்கி சத்தி வைரவ வீரபத்திர கௌமார கணேசனென்னும் ஐந்துமூர்த்திகளுக்கும் அதீதமாக சிவசொரூபத்ததைநிரூபிக்கப்படுவது.

வேதாந்தம்.—பிராகபிரத்தொம்ச அன்னியொன்னிய அத்தியந்தமென்ன நான்குபேதமாய்ப் பிரபஞ்சத்துக்கு அபாவத்துவஞ்சாதித்து ஆத்மாவுக்கும் பிர்மத்துக்கும் அபேத பேத ஐக்ய விசிஷ்டநிலைமையையுணர்த்துவது.

மோட்சம்.—சந்நியாச பரித்தியாகமென்னும் நிஷ்டாபேதத்தால்ச் சருவபந்தங்களையும் நிவர்த்திக்கப்படுவது.

சரமோபாயம்.—ஸ்ரீபகவானுகியசற்குரு ஆசிரயிப்பவர்க்குப் பற்றுக்கோடாகநின்று சரண்யருசியைப்பிறப்பித்து சரண்யத்து

வாரா நித்தியவிபூதியில்ச்சேர்த்து மருமைப்பிரயோஜனத்தைக் கொடுக்கப்படுவது.

பலப்பிரதம்.—அதிகாரசிரோஷ்டத்தால் பௌஷீகரூபமான மறுமைப்பிரயோஜனத்தை வர்த்தமானத்தில்கொடுக்கப்படுவது.

சமர்த்திபட்சம்.—அத்துவித துவித சுபாவ விசிஷ்டமென்னும் விவிதபோதத்தால் ஆசிரயிப்பவர்க்குப் பக்குவபூர்த்தியைப்பண்ணி சம்பூரணநிச்சயத்தையுணர்த்தப்படுவது.

## வாக்கியம்.

இயல் ஒலி வரியென்னும் வேதவசனங்களை யுச்சரிப்பதற்கும் அதிகாரமில்லாதயேழைஜனங்களும் உஜ்ஜீவிக்கும்பொருட்டு சர்வத்திரஅதிகாரமாகக்கைக்கொண்டு சம்பூரணரகசியமென்னுந்தயாவேதத்தால் சமஸ்தமான ஜனங்களையும் அழைக்கப்படுவது.

## இயல்வேதம்.

சுயம்புவாயும் சாஸ்வதமாயும் கிருதகிருத்தியாளான முத்தாத்மாக்களினது மௌனசுபாவத்தாலனுபவப்படுவதாயுமிருப்பது.

## ஒலிவேதம்.

அநாதியாய் சமஸ்தவேதங்களையும் உற்பத்திபண்ணுதற்கு மாதாவாய் அவ்வேதங்களை விஸ்தரித்தொடுக்குவதற்கு மூலபீஜமாய் பதத்திரயரூபமாகப்பிரித்தும் பிரித்தறியக்கூடாத பிரணவாகாரதிரியேகவஸ்துவாய் சருவசங்க பரித்தியாக சந்நியாச சிரோஷ்டர்களான யோகீஸ்வரர்களினது இதயப்பிரதேசத்திற்கோப்பியமாக உச்சரிப்பதற்கேதுவாயுமிருப்பது.

## வரிவேதம்.

பிரணவஸ்வரூபமாகிய அவ்வட்சரப்பிர்மத்தை ஈஸ்வராதிகள் அற்புதசமாதியிற் சாட்சாத்கரித்து ருக்கு யெசுர் சாம அதர்வணமென்னச்சதுர்விதபேதமாய் வர்னத்திரய சிரோஷ்டர்களான பிர்ம க்ஷத்திரிய வைசியர்களே அதனைப்பரம்பரையாய் அத்தியயனம்பண்ணுதற் கதிகாரிகளாயும் மற்றையவர்கள் செவியிற் கேட்பதற்குக்கூட அதிகாரமில்லாததாயும் சமஸ்கிருதபாஷையி லெழுத்துருவாகவிதிக்கப்படுவது.

## சம்பூரணரகசியம்.

நதிநதாகத சமுத்திரசாமியம் சைவ வைஷ்ணவ ஸ்மார்த்த மாத்துவ சமயவாத சமுதாயபொக்கிஷம் வேத வேதாந்த ஸ்மிருதி புராண இதிகாச சாங்கிய பாதஞ்சல நியாய வைசேடிக மீமாம்சாதி சர்வசாஸ்திரார்த்த வபிமதசம்யுக்தம் திராவிடபாஷாவசன ரூபம் உபதேச சங்கிரக சிட்டாசார தேசிகவிலாச நிருப நியமன பத்ததிசட்கநிரூபிதம்.

## தயாவேதம்.

சிரத்தையோடும் ஆசிரயிப்பவர்கள் சைவ வைஷ்ணவாதி உள்ச்சமயிகளானாலும் முகம்மதுகிறிஸ்துவாதி புறச்சமயிகளானாலும் அவர்களினது சாதி சமயக் கிரிகையாதிகளிருந்தபடியேயிருக்க அதனைக்கொலைக்காமற் காதுள்ளவன் கேட்கக்கடவன் கண்ணுள்ளவன்பார்க்கக்கடவன் மூக்குள்ளவன் முகக்கக்கடவன் நாக்குள்ளவன்ருசிக்கக்கடவனென்று பலவாறாகப்பறையடித்தழைத்து சேதனர்நின்றநிலைக்கி சரண்யருசியைப்பிறப்பித்து சரண்யத்துவாரா சமத்துவ ஏக பரிபூரண பரப்பிர்மசுவாநுபவரூபமான பேரின்பநலத்தையனுபவிக்கச்செய்வது.

அவற்றுள் பிறப்பொழுக்கத்தைப்பற்றித் தாரதம்மியமுடையர்களாய் பற்பலபேதமாகப்பிரிந்துநிற்பது.—சாதி.

பிறப்பொழுக்கத்தைக்கொலைத்து தத்தம் அபிமதவிஷயத்தைக்கைக்கொண்டவர்கள் யாவரானாலும் அவர்களே சிரேஷ்டர்களென்னச்சாதிக்கப்படுவது.—சமயம்.

சாதியொழுக்கம் சமயவொழுக்கத்தை அனுசரித்து பிராம்மணாதி சண்டாளபரியந்தம் செய்கையொழுக்கத்தைப் பலவாறாக விதிக்கப்படுவது.—கிரிகை.

## சொரூபம்.

யேகமேவ சுபாவசொரூபமாய் பிர்மத்துக்கும் ஆத்மாவுக்கும் அபேத பேத பேதாபேதத்தைச்சாதிக்கும் அத்துவித துவித விசிஷ்டாத்துவிதமென்கின்ற திரிமதசித்தாந்தப்பொருளாய் அவரவரபிமதபேதத்தால் அநேகதேவாகப்பிரிந்துநின்று அவர்களுக்கானந்தபூர்த்தியைக்கொடுப்பதாய் ஸ்ரீபரமகுருவாக நம்சந்

தேகமுழுதையும் நிவர்த்திபண்ணி சம்பூரணரகசிய சம்பூர்த்தி பண்ணுவதாய் நிரூபக நீத சயேக சம்பந்த வியவகாரமென்னும் பஞ்சலட்சணநிரூபிதமாய் அவாங்மனோகோசரமாயுமிருப்பது.

அவற்றுள் தேசகாலவஸ்துவாதிகளாற் பரிச்சேதிக்கக்கூடாத ஞானபரிபூரணராகிய நிருபாதிகசைதன்யமே கண்டவகண்டங்களை விழுங்கிநிற்பது: நிரூபகம்.—நிரூபகதிருஷ்டியினோடு சர்வ வியாபக சாட்சிபூதராகநின்று சர்வாண்டபந்திகளையும்பகுத்தறிவது: நீதம்.—நிரூபகநீததிருஷ்டியினோடு சமயவாதங்களுக்ககோசரமாகிய பரயேகவஸ்துவாகப்பிரகாசிப்பது: சயேகம்.—நிரூபக நீத சயேக திருஷ்டியினோடு ஸ்ரீவாசுதேவனே பரவாசுதேவன் பரவாசுதேவனே ஸ்ரீவாசுதேவனெனக் கலக்கமறத்தெளிந்திருக்கின்ற நித்தியவர்க்கங்களிடத்துப் பிரியாவிடையாகக்கலந்திருப்பது: சம்பந்தம்.—நிரூபக நீத சயேக சம்பந்த திருஷ்டியினோடு லோகரட்சகார்த்தம் சிருஷ்டிஸ்திதி சம்ஹார அவதார அனுக்கிரகாதி கிரியாரூப தாரதம்மியமுடையவர்களாகத் தருமஸ்தாபனம் பண்ணப்படுவது: வியவகாரம்.

ஸ்ரீராஜ ராஜேஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணேநம:



உ

ஹரி ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## சமுதாய நியமனம்.

சருவலோகசரண்ய ஸ்ரீவாசுதேவசற்குருஒருவனையே ரட்சகனாக வாசிரயிக்கின்ற வர்த்தமான பூருவோத்தர அதிகாரசமூகங்களுக்குப்பொதுமையாய் வாக்குத்தத்தம் சரணாகதி நியமனம் பரசமர்த்தி சரித்திரவிலாசம் பரமார்த்ததெரிசனமென்னும் சட்பிரகாரமான ஓரதிகாரியின் சிறப்புலட்சணங்களை வெளிப்படுத்தி ரகசியசமாப்தம்பண்ணப்படுவது.

## வாக்குத்தத்தம்.

பரமகிருபையினுற் சருவலோகங்களுக்கும் இதபரமாக ஓரதிகாரியைமுன்னிட்டு நீயென்னைரட்சகனுகவடை நானுன்னை முத்தனும்படிபண்ணக்கடவேனென்னும் உறுதிமொழியைச்சாதிக்கப்படுவது.

## சரணுகதி.

வாக்கியஉடபிடிக்கையை யதார்த்தமாகக்கைக்கொண்டு இதராந்தரவர்ச்சிதனுகத் தானவனுக்கிடுபட்டு ஸ்ரீவாசுதேவசற்குரு ஒருவனையே தனக்குரட்சகனுகவடையப்படுவது.

## நியமனம்.

ஆசிரயமான அதிகாரிக்கு அபயப்பிரதானம்பண்ணி தொந்தவருபமான பிராரத்வசரீரமிருக்கும்போதே மமதகங்கார புண்ணியபாவ பரிச்சேதபந்தகமுழுமையும் வர்ச்சித்துக் கிருதகிருத்தியனுய் சம்பந்தானுசம்பந்தங்களோடும் நித்தியமுத்தனுக நீ எப்போதும்வாழ்கக்கடவதென்றுசிர்விதிப்பது.

## பரசமர்த்தி.

பிரகிருதி புருட விவேக உபதேச சாட்சி சம்பந்த சொருப வியாபக சாஸ்திர வியாக்யான தொய்த அத்தொய்த சுபாவ விசிஷ்ட கேவல பூரணமென்னும் சோடசலட்சணங்களால் ஆசிரயமானவதிகாரிகளுக்கு சரண்யருசியைப்பிறப்பித்து சர்வலோகசரண்யனை வாசுதேவசற்குருசரணமே ஆசிரயித்தவர்களை இனிமேலாசிரயிப்பவர்களுக்கும் நிட்சிதகதியென்றுணர்த்தப்படுவது.

பிரகிருதி.—திரிகுணுத்மகம் விவிதவிகாரஜெனகம் கபவாதபித்தரோகாலயம் வியக்த வவ்வியக்த வியக்தாவியக்தருபம்: வியக்தம்.—பூதாதி யேகாதசேந்திரிய தத்துவசோடசம்: அவ்வியக்தம்.—நிருவிகாரமூலப்பிரகிருதி தத்துவம்யேகம்: வியக்தாவியக்தம்.— மகதகங்காரதன்மாத்திராதத்துவசத்தமம் ஆகச்சதுர்விம்சதி தத்துவாத்மகம்.

புருடன்.—திரிகுணரகிதன் சரீரபேதவனேகன் சுகதுக்கபோக்தா சரீரரதவதிஷ்டாதா பிரகிருதிசிலதிருஷ்டா கைவல்யப்பிரவர்த்தகன் அசங்கவகர்த்தநித்தியன் மத்தியஸ்த சுயம்பிரகாச

வுதாசீனன் வியக்த வவ்வியக்த வியக்தாவியக்த சதுர்விம்சதிதத்துவாதீதன்.

விவேகம்.—பிரகிருதி சரீரநாசம் பிரதானநிவர்த்தி அத்தியந்ததுக்கசூன்யமான ஐகாந்திகம் ஆத்தியந்திகமென்னும் உபயகைவல்யப்பிராப்தியினால் நசிக்கப்படுவதென்றும் புருடன் நான் அசங்கன் சின்மாத்திரனென்னும் தீர்க்கசாதகத்தால் மூலப்பிரகிருதியைத்திரஸ்கரித்து ஸ்ரீபரமசற்குருகிருபையினால் திவ்வியசட்சுவைப்பெற்று எப்போதும்நித்தியமுத்தனாக பிர்மசாயுச்சியத்தையடையப்படுவனென்றும்நிட்சயித்தறிவது.

உபதேசம்.—ரகசிய ரகசியதர ரகசியதமமென்கின்ற அதியந்தரங்கமான குஹ்யார்த்தங்களை அதபஸ்கரன் அபக்தன் வாசுதேவதிரஸ்கரன் முதலானோர்களுக்குச்சொல்லாமல் நிசபக்தன் சிஷிருஷன் வாசுதேவப்பிரியன் முதலானோர்களுக்கிதபரமாகவுணர்த்தி கிரியாயெக்ஞம் மானசயெக்ஞம் ஞானயெக்ஞங்களாலாராதித்து சதாசரண்யவாஞ்சிதராய் வாசுதேவசற்குருஒருவனையே ரட்சகனாகவடையச்செய்வது.

சாட்சி.—ராக விராக சிவ வியவகாராதிகளுக்குவிலட்சணமாய் அதனதுவிவிதகற்பிதங்களைப் பகுத்தறிந்துகொண்டிருப்பது.

சம்பந்தம்.—ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமே நித்தியசூரிகளிடத்தும் முத்தாத்மாக்களிடத்தும் பரஸ்பரம்அன்னியொன்னியமாய்க்கலந்துகொண்டிருப்பது.

சொரூபம்.—திரிமத சித்தாந்த சமத்துவ ஏக பரிபூரணராய் ஆசிரதரட்சகார்த்தம் பரத்துவ சௌலப்பியமெனமாறுபட்டு மாமேகநிஷ்டையாலொருமித்துக்காட்டுவது.

வியாபகம்.—தேசகாலவஸ்துவாதிகளாற் பரிச்சேதிக்கக்கூடாத சர்வபரிபூரணராயெல்லையற்றிருப்பது.

சாஸ்திரம்.—நம்உபதேசப்பொருளாகிய வாசுதேவபரப்பிர்மத்தைச் சட்பத்தரூபமாகநிரூபித்திருக்கின்றசம்பூரணரகசியம்.

வியாக்யானம்.—படனவபிப்பிராயாதிகளின்முடிவாய் விளங்கிய ஆசாரியவாக்கியமென்னும் பதினான்காம் உரையைப் பிரதானமாகக்கொண்டு அதற்குமாறுபடாமல் யெடுத்தசாஸ்திரங்களுக்கு உரைசெய்யப்படுவது.

தொய்தம்.—பிர்மம் சர்வசமத்துவமாயிருந்தாலும் ஆத்மாக்கள் பெத்ததிசையைப்போல முத்திதிசையிலும் தாரதம்மியமுடையதென்னச்சாதிப்பது.

அத்தொய்தம்.—சாட்சிபூதரான ஆத்மாவுக்கும் சைதன்ய வியாபகரானபிர்மத்துக்கும்எப்போதும் அபேதநிலையைச்சாதிப்பது.

சுபாவம்.—விருக்ஷமும் சாயையும் ஒன்றிரண்டெனக்குறிப்பிடக்கூடாததுபோல் பிர்மத்துக்கும்ஆத்மாவுக்கும் அபேதபேதத்தைக்கற்பிக்காமல் மும்முதலுமிருந்தபடியேயிருக்க முத்திநிலையைச்சாதிக்கப்படுவது.

விசிஷ்டம்.—அநாதியாய் ஏகரூபராயிருக்கின்றபிர்மத்துக்கும் நித்தியராய் அநேகரூபராயிருக்கின்ற ஆத்மாக்களுக்கும் ஆதார ஆதேயமுதலிய சம்பந்தானுசம்பந்தங்களாற் பேதவபேதத்தையனுசரித்திருக்கும் முத்திபூமியையடையப்படுவது.

கேவலம்.—ஜெகசீவபரமுழுதும்மித்தையாகக்கண்டு அவையாவும் பரசொரூபமாகத்தெரிசித்து அந்தப்பரசொரூபமேதானுகவிளங்குவது.

பூரணம்.—ஸ்ரீபரமசற்குருகிருபையினுல் சீவபேத கற்பித மமதகங்காரபந்தகம்வர்ச்சித்து சருவமும்வாசுதேவமயமாகத்தெரிசிக்கப்படுவது.

## சரித்திரவிலாசம்.

சந்ததிவர்க்கம் உபாசனுபரம் சதாசாரியக்கிரமம் பரமகுரு தெரிசனம் சுவானுபவப்பிராப்பியமென்னும் ஐந்து பிரகாரமாய் விஸ்வாசிப்பவர்களின் தாரதம்மியத்தைப்பற்றி அதனர்த்தத்தைப்பொதுரூபமாயும் சிறப்புரூபமாயும்தினேதினேபிரகாசப்படுத்துவது.

சந்ததிவர்க்கம்—தற்பரனூரிற் சனித்ததொல்வணிகன் அற்புதசுதர்மகத்தாயிரரளித்தபின் தக்கவனருள்பெறுதற்கரணேகிய வக்குவன்கமலேயின்வழிவழிதரவரும் சூரியன் பாகன் சூரியன் மெய்யன் சீர்பெறவடைக்கன் சேவகன்முதலோர் நற்றவத்துதித்தநாரணனீன்றருள் முத்துராமன்னெனும்புத்திரன்யானே.

உபாசனுபரம்.—பிதிர்முதலடியடிபிதாவிதயபூஷணன் ததியர்களடியடி தநயர்கட்காதரன் தந்தைதாய்சுதர்மனைசகோதரர் முதலாய் எந்தனைக்கார்க்கவோமொல்லைபுட்டங்கினேன் அஷ்டகதெரிசனம்அகம்புறமெனக்குத் திட்டமதாகச்சேவைசெய்தருள்பவன் குருவரனருள்திருக்கோஷ்டியூர்மேவிய திருமகள்மனேரதன்ஸ்ரீசௌமியநாரணன்.

சதாசாரியக்கிரமம்.—பரமகுருவெனும்பரவாசுதேவநற் கருணையைக்கழனியிற்கதிபெறவிளக்கும் முத்துராமப்பரன் மொழிந்தருள்கீதைநம் சித்தத்தமைக்கநற்றேசிகனேனென் கோஷ்டிமாதவனே குலதெய்வம்நமக்கெனக் காட்டியபரிசாற்கருணையைவளர்த்தோன் என்தாய்வல்லியோடின்புறமகிழுமென் தந்தைநாராயணன்சரணமென்சிரமே.

பரமகுருதெரிசனம்.— மூலஸ்தம்பவயோத்திப்பிரதேசன் பார்வதிசைலவேங்கடபூதரன் சீகாழிப்பதிகோஷ்டி மகாத்மியன் அனந்தநாரணனருள்அற்புததெரிசியான்.

சுவாநுபவப்பிராப்பியம்.—பரவாசுதேவன்முற் பவந்தொடர்ந்தெனது திரவிருளகற்றியதிருவுளத்தியல்பும் மூலஸ்தம்பமுதல்வனைக்காட்டிய சேனுக்கண்ணுள்தெரிசனமகிமையும் திரியேகப்பொருள் சிறப்பொடுவிரித்துக் கிரியாபூமியிற்கீர்த்திநாட்டியதும் நித்தியர்க்கருளியநியமனமுதலாய் சத்தியவநுபவம்சாற்றுதற்கரிதே.

## பரமார்த்தம்.

விஷய சம்பந்த பிரயோஜன அதிகாரமென்னும் அனுபந்த சதுஷ்டயரூபத்தால் நிரூபிக்கப்படுவது.

அவற்றுள்.—வாசுதேவபரப்பிர்மம்.—விஷயம்.

அகத்திலிருக்கின்றஸ்ரீவாசுதேவனே புறத்திலிருக்கின்றபரவாசுதேவன் புறத்திலிருக்கின்ற பரவாசுதேவனே அகத்திலிருக்கின்றஸ்ரீவாசுதேவனென்று பரஸ்பரம்ஏகீகப்படுத்துவது.- சம்பந்தம்.

எப்போதும் நித்தியமுத்தனைகச் சருவானந்தசம்பூர்த்தியினுல்த் தடையற்றுவிளங்குவது.—பிரயோஜனம்.

ஆசிரயித்தவர்களை ஆசிரயித்து சாஸ்திரஇருதயமான சத்தியார்த்த வாசுதேவபரப்பிர்மத்தைச் செய்யுள் வாக்கிய தெரிசன

சுவானுபவமென்னும் பிரயோகசதுஷ்டயரூபத்தாற்றெரிசிக்கப் படுபவன். - அதிகாரி.

செய்யுட்பிரயோகம்.— வேதவேதாந்தசாரமாகிய கீர்வாண வசனரசனைகளைத் திராவிடபாசுரங்களிலமைத்து அந்நூற்குக் கைவல்யநவநீதமென்னப்பெயரிட்டு ஸ்ரீபகவானாகியநாராயணசற்குருகிருபையினால்த் தாண்டவமூர்த்திசுவாமிகள் தமது சுவாநுபவக்கருத்தைவெளியிட்டருள்வது.

வாக்கியப்பிரயோகம். - இந்நூல்த் தயாவாசகம் இலக்கணவாசகமென்பதைத்தெரிந்து காண்டிகை விருத்தியென்னும் உரைபேதத்தாற் கேவலபூரணத்தைவிஷயமாக்கி அதனர்த்தத்தை வியாக்யாதாவினால் விஸ்தரிக்கப்படுவது.

காண்டிகையுரை. - உத்தரார்த்தசுருதியையனுசரித்து பதபதார்த்த வாக்கியயோசனை பரீட்சை பரிகாரமென்னும் வியாக்யானபஞ்சகரூபமாக அத்துவிததொய்தத்தைநியதித்து கேவலம் ஆத்மசொரூபத்தைநிரூபிக்கப்படுவது.

விருத்தியுரை. - பூருவோத்தரசுருதிகளுக்குவிரோதம்வாராமல் ஆரம்ப அதிகார போதக வியாக்யான சமாதான சமாப்தமென்னும் சடுலட்சணங்களால் சாட்சி சம்பந்தம் இரண்டையும் ஒருமித்துச் சம்பூரணரகசியரூபத்தாலமைக்கப்படுவது.

ஆரம்பம்.— நன்னிலத்தைமருவி என்னிலத்தும்சாட்சியாய் நிற்கும் ஏகநாயகன் அதோஊர்த்துவ பதங்களுக்கு நமஸ்கரித்துக் கைவல்யநவநீத சாஸ்திரத்தின் அந்தத்திற்சொல்லியபொருளை ஆதியிலும் ஆதியிற்சொல்லியபொருளைஅந்தத்திலும் அந்தமோடாதி ஆதியோடந்தம் உதாகரணைதிசகிதமாய் வசனரூபத்தாலமைத்து ஸ்ரீபகவானாகியநாராயணசற்குரு நியமனவாக்கியப்படி இந்நூற்குச் சம்பூரணரகசியமென்னநாமந்தரிக்கப்படுவது.

அதிகாரம்.— சருவசிரோஷ்டனான ஓரதிகாரியைமுன்னிட்டு அவனையாசிரயிப்பவர்கள் யாவரானாலும் அவர்களனைவரும் அதிகாரிகளெனக்கைக்கொண்டு கொள்ளத்தக்கபோதகவியாக்யானாதிகளை குறிப்பறிந்துகொடுக்கப்படுவது.

போதகம்.—பாரிசேடமின்றியிருத்தல் ஏற்றநோக்கத்துக் கருளுதல் ரட்சணைவழியைக்காட்டுதல் தெளிவாய்த்தோற்றுதல் தேவலட்சணம் இயற்கைப்பிரமாணம் பிரபஞ்சசரித்திரம் காலவரையறை தன்பாகுபாடு அற்புதம் சாட்சி பௌஷீகம் இலிங்கம் முடிவுரையென்னும் பதினன்குலட்சணமான போதகரூபத்தாற் றன்னையுந் தலைவனையும் பிர்மத்தையும் வேறுவேறகப்பிரித்தும் பிரித்தறியக்கூடாத திரியேகவஸ்துவையுணர்த்தப்படுவது.

வியாக்யானம்.—படனம் அபிப்பிராயம் வாக்கியம் வாக்கியார்த்தம் சஞ்சேபம் உதாகரணம் சங்கை சமாதானம் விசேஷம் விஸ்தாரம் அதிகாரம் துணிவு பிரயோஜனம் ஆசாரியவாக்கியமென்னும் பதினான்குலட்சணங்களோடும் இந்நூற்கு விருத்தியுரையைப் பிரயோகம்பண்ணி அவ்வுரையாகிய சம்பூரணரகசியத்தைச் சம்பூர்த்தியாக்குவது.

சமாதானம்.—விருத்தியுரைக்கிமாறுபடாமல் அதனநுசாராம்சத்தை நவநவமாயனுபவித்தற்பொருட்டு நதிநதாசரணம் மண்டூகதாவனம் சராசன தீபம் நவ்விநோக்கம் பட்சிக்கிராகியமென்னும் வியாக்யான பஞ்சகரூபமாய் பரப்பிர்மதத்துவத்தைப் பிரகாசப்படுத்தி அனர்த்தநிவர்த்தி ஆனந்தாவாப்தியென்னும் உபயமோட்சங்களையும் ஒருங்கேசாதிக்கப்படுவது.

அநர்த்தநிவர்த்தி.—சாட்சிபூதனுகநின்று மனச்சட்சுராதி அநாத்மவர்க்கங்களனைத்தையும் யதாப்பிரகாரம் மித்தையாரூபமாகத்தெரிசித்து அபரோட்சானுபவ நிருபாதிகநிஷ்டனுய் அவித்தையாரூபமான மனுஷ கர்த்த சீவபேதங்கள்வர்ச்சித்திருப்பது.

ஆனந்தாவாப்தி.—ஸ்ரீபரமசற்குருகிருபையினுல் சுபேட்சையாதி ஞானபூமிமார்க்கவிதிப்படி லீலையாதி நித்தியபூமிக்குரிய ஐஸ்வரியபஞ்சகத்தை ஆரோகண அவரோகணரூபமாக நிறைநிறையேதெரிசித்தும் சவ்விய அபசவ்விய சவ்வியாபசவ்விய அபசவ்வியசவ்வியமென்னும் நானுப்பிரகாரங்களாற்றெரிசித்தும் சர்வம்பிர்மமயமெனத்தெளிந்து சர்வானந்தசமர்த்தியையுடையவனுய்த்தடையற்றுவிளங்குவது.

சமாப்தம்.—சராசரசித்திரங்களையொருங்கேதோற்றிய வாசுதேவப்பிரபாதெரிசனத்தால் பவபந்தநிகளம்வர்ச்சித்து நித்தியா

னந்தவாழ்வைப்பெறுதற்குரிய சொரூபானுசந்தான வேட்கை
யையுடையவனுய் வாதரூபமானவாக்கியப்பிரயோகத்தைநிவர்த்
தித்து சுபேட்சையாதிமுடிவில் விளங்கிய துரியசுபாவமௌன
னுய் ஆரம்பவந்திதனுன ஸ்ரீவாசுதேவசற்குருவின் திருநோக்கத்
துக்கெதிர்பார்த்திருப்பது.

தெரிசனப்பிரயோகம்.—ஸ்ரீவாசுதேவசற்குருவினது திரு
வடிசம்பந்தமுடையவனுய் ஞானசட்சுவைப்பெற்று லீலை நித்தி
யம் அகண்டம் சரண்யம் பரமபதமென்னும் நித்தியபூமிக்குரிய
ஐஸ்வரியபஞ்சகத்தை நிறைநிறையேதெரிசித்து அவையாவும்
வாசுதேவபரப்பிர்மத்தில் ஒருமையாகப்பார்க்கப்படுவது.

சுவாநுபவப்பிரயோகம்.—நன்னிலவாசிகளாகிய நித்திய சூரி
களாலனுபவிக்கும் லீலையாதிநித்தியபூமிக்குரியஐஸ்வரியபஞ்சகத்
தை ஸ்ரீவாசுதேவசற்குருகடாட்சத்தினுற் கிரியாபூமியிலடையப்
பெற்று பிரபோதபாஸ்கர பரிபூரணமுத்தனுய் பிர்மானந்த சாகர
சதோதயசூரியனுய் மறைப்பின்றிஎக்காலமும்பிரகாசித்துக்கொ
ண்டிருப்பது.

## ரகசியம்.

சம்பூரண சங்கிரக உபதேசமென்னத் திரிவிதரூபமாய்
பௌஷிக வர்த்தமான பூருவமென்னும் அதிகாரபேதத்தாற் சா
திக்கும் சிறப்புலட்சணங்களைநிரூபிக்கப்படுவது.

## சம்பூரணம்.

சற்சனுளுடையஆசரணபந்திகளை நிரூபித்திருக்கின்ற பூர்வ
பாகத்திற்குச் சிட்டாசாரபத்ததியென்றும் சற்குருவினது தெரி
சனுஷ்டக லீலாபந்திகளைநிரூபித்திருக்கின்ற உத்தரபாகத்திற்கு
த்தேசிகவிலாசபத்ததியென்றும் அதனந்தரங்கப்பொருளைப்பெ
றுதற்கதிகாரிநிசபக்த சிஷிருஷவாசுதேவப்பிரியனென்றும்நிரூபி
க்கப்படுவது.

## சங்கிரகம்.

சம்பூரணரகசியசாஸ்திரார்த்தங்களை விக்ஞாபனம் நியமன
மென்று இரண்டு பிரகாரமாகச்சஞ்சேபித்து உபதேசார்த்தத்
தையொருப்படக்காட்டிய உபதேசசங்கிரகத்தின் அந்தரங்கப்
பொருளைப்பெறுதற்கதிகாரி சிஷிருஷவாசுதேவப்பிரியனென்று
ணர்த்தப்படுவது.

## உபதேசம்.

வாசுதேவப்பிரியனென்னும்ஓரதிகாரிக்கிச் சர்வார்த்தசாரமாகிய பரமார்த்ததெரிசனத்தையுணர்த்தி அதனந்தரங்கமான பரமரகசியத்தைவெளிப்படுத்தி நித்தியகைங்கிரியத்தை நியமிக்கப்படுவது.

ஸ்ரீராஜ ராஜேஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## சிட்டாசார பத்ததி.

சற்குருலட்சணம் அதிகாரிலட்சணம் அஷ்டகவாக்கியம் சொரூபஸ்திதியென்னும் நான்குபிரகாரமாக நிரூபிக்கப்படுவது.

## சற்குருலட்சணம்.

அப்பிராகிருததேஜோரூபன் சத்துச்சித்தானந்தசதோதீத பரிபூரணன் சடங்க பரத்துவ சௌலப்பியமாதி சகலகுணசம்பூரண சருவாதீனமுடையவன் ஸ்ரீபகவான்வாசுதேவ பரப்பிர்மம் சற்குரு.

### சடங்கம்.

அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற ஸ்ரீபகவான்வாசுதேவ குருப்பிர்மத்தை ஆசிரயிப்பவர்கள் நவநவமாயனுபவித்தற்பொருட்டு ஆநநம் இதயம் அஸ்தம் பாதம் தானம் தெரிசனமென்னச் சட்பிரகாரமாக நிரூபிப்பது.

உருவம் அருவம் சகலம் கேவலம் சருவம் சம்பூரணமென்னச் சட்பிரகாரமாகவிருப்பது:ஆநநம்.—சத்தியம் ஞானம் அனந்தம் ஆனந்தம் பரிபூரணம் ததாகாரமென்னச் சட்பிரகாரமாகவிருப்பது: இதயம்.— ஆயுதஸ்தம் அபயஸ்தம் உல்லாசம் பங்

தனம் நிருத்தம் சையோகமென்னச் சட்பிரகாரமாகவிருப்பது: அஸ்தம்.— தூளிதம் உதகம் பஸ்பம் சுகந்தம் பாதுகை விமல மென்னச் சட்பிரகாரமாகவிருப்பது: பாதம்.— அகோசரம் அனந்தாசனம் யோகசயனம் பரந்தாமமென்னச் சதுர்விதரூப மாகவிருப்பது:தானம்.— சர்வசுதந்தரனான ஸ்ரீவாசுதேவின் சந்நிதியிற் பரதந்திரனாய் ஆத்மசுதந்தரத்தைத் தவிர்த்திருப்பது: தெரிசனம்.

## பரத்துவம்.

சமத்துவயேகபரிபூரண அகண்டசச்சிதானந்த பரமாத்மா வாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற ஸ்ரீவாசுதேவபரப் பிர்மம்.

## சௌலப்பியம்.

தனக்கெனவோருருவநாமமின்றி நித்திய நியமன சொரூப ஆலய அபிமானமென்னும் வர்க்கபஞ்சகசிரேஷ்டர்களான தமது ஆசிரதாள் எந்தரூபத்தைக்கொடுக்கிறார்களோ அதுவேதனக்கு உவந்தரூபமாயும் அவர்களெந்தநாமத்தைக் கொடுக்கிறார்களோ அதுவேதனக்குஉவந்தநாமமாயும் பெற்றுக்கொண்டு அவர்களகத் திலும்புறத்திலுமிருந்து ரட்சித்து அவர்களோடு சார்வதாகால மும் விளையாடப்படுவது.

நித்தியவர்க்கம்.—சாட்டியபாகத்தைக்கௌணமாக்கி ஸ்ரீபக வானாகிய சற்குரு தன்னைச்சரணமாகஆசிரயிப்பவர்க்கு தனக் குரிய நித்தியசம்பந்தத்தைத்தெரிவித்து சரண்யத்துவாரா நித் தியபூமியிற்சேர்ப்பித்து நித்தியசூரிகளோடுமிருந்து நித்தியகைங் கிரியம்பண்ணிக்கொண்டிருப்பது.

நியமனவர்க்கம்.—ஸ்ரீபகவானாகியசற்குரு தன்னைச்சரண மாகஆசிரயிப்பவர்களைப் பூருவநியதவிதிப்படி தத்தம்சுதர்மவரை யில் நிலைநிறுத்தி தமதுஆக்ஞையால் நாளாவட்டத்தில் சாந்தப் பயிர்ச்சியைப்பண்ணி சுத்தவிசாரத்தை அபிவிர்த்தியாக்கிச் சத் தியமோட்சத்தைக்கொடுக்கப்படுவது.

சொரூபவர்க்கம்—ஸ்ரீபகவானாகியசற்குரு ஆசிரதரிதயமே திருக்கோவிலாக வெழுந்தருளி சத்தியக்ஞானத்தைத்தெளிவித்து

சஞ்சிதவேரைக்கிளைந்து தன்மயராக அபேதமாக்கி அவர்களிடத்துச்சதாகாலமுமிருந்து விளையாடப்படுவது.

ஆலயவர்க்கம்.—சொச்சமாய் ஞானகாசமாகத்தெளிந்திருக்கின்ற நம்இதயப்பிரதேசத்தில் நித்தியபரிவாரங்களோடு ஸ்ரீபரமபதநாதன் ஏகசக்கிராதிபதியாகவிருந்து சதாசெங்கோல்நடாத்திக்கொண்டிருப்பதைத்தெரிசித்து ஞானனந்தசத்தியசொரூபராகவழிபட்டு சந்தோஷசாந்தியாதி சுகுண சுசிலபுஷ்பங்களாலர்ச்சித்து மனச்சட்சுராதி சர்வாவயவங்களாலும் இடையறாது சதாகைங்கிரியம்பண்ணிக்கொண்டிருப்பது.

அபிமானவர்க்கம்.— பிர்மா விஷ்ணு ருத்திர மகேஸ்வர சதாசிவனென்னும் ஈஸ்வரபஞ்சகரூபமாய்ப்பிரிந்து திதிலயோற்பவ திரோதான அனுக்கிரகாதிகளைச்செய்வித்தும் வாக்மீயம் லட்சுமீகரம் ரௌத்திராணிகம் திரோதாயகம்சதானுக்கிரகமென்னும் ஐந்துசத்திகளும்ஒருப்பட்டு ஸ்ரீபகவானகிய சற்குருசொரூபமாய் ஆசிரயிப்பவர்க்குப்பற்றுக்கோடாகநின்று அவர்களைப்பரமபதவாழ்வில்ச் சேர்ப்பித்தும் அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற ஸ்ரீபகவானகிய வாசுதேவபரப்பிர்மத்தை ஹரிசிவப்பிர்மாதி தத்தம் ஓரிஷ்டதெய்வத்தோடபேதமாக்கி அதன்மகிமையால் தமக்கிஷ்டசித்தியைப்பெற்றுக்கொள்வது.

ஸ்ரீராஜ ராஜேஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீப்ரமசற்குருவேநம:



## அதிகாரிலட்சணம்.

அஷ்டாங்கசேவித சகஜ சாயுச்சிய சருவாபீஷ்ட மோட்ச சருவாபேட்சையையுடையவனய் பகவானகிய ஸ்ரீவாசுதேவ சற்குருவைச் சரணமாகவடைபவன் அதிகாரி.

## அஷ்டாங்கசேவை.

சரீரம் இந்திரியம் பிராணன் மனம் புத்தி ஜீவன் ஆத்மா போதமென்கின்ற இவ்வெட்டுறுப்பினையும் சந்நிதிபூர்வகமாய் வாசுதேவினடிக் கமலங்களுக்குத் தெட்சணையாகச் சமர்ப்பித்து சதா ஸ்ரீபகவானாகிய வாசுதேவசற்குருவின் திருவுளக்கருத்துக் கெதிர்பார்த்திருப்பது.

சரீரசமர்ப்பணம்.—ஆசிரயிப்பவர்களுக்கு நித்தியரூபத்தைக் கொடுத்து நித்தியகைங்கிரியத்தைநியமிக்கும் ஸ்ரீவாசுதேவினடிக் கமலங்களில் அநித்தியசரீரக்கிரியையை நிவர்த்தித்து அறுபட்ட மரம்போலவீழ்த்தப்படுவது.

இந்திரியசமர்ப்பணம்—பார்த்துக் கேட்டுப் பரிசித்துப் பரிமளித்து ருசித்து ரமிக்கும்படி திவ்வியரூபத்தோடு ஆசிரயிப்பவர்க்குப் பிரத்தியட்சமாகின்ற ஸ்ரீவாசுதேவசந்நிதியில் விவிதவிஷயங்களிற்சென்று சதாவிடாய்ப்பட்டுழல்கின்ற பஞ்சேந்திரியங்களை நிக்கிரகித்திருப்பது.

பிராணசமர்ப்பணம்.—சருவத்திரவியாபியாய்நின்று ஆசிரயிப்பவர்களுக்கு நித்தியஜீவனைக்கொடுத்துக் காலத்தத்துவரூபத்தர்க்குத் தம்சொத்துக்களாகிய சருவப்பிராணிகளையும் கல்பாதியிற்பிறப்பித்து தத்தம் கருமானுரூபமாய்ரட்சித்து கல்பாந்தத்திற்சிகித்து விளையாடும் ஸ்ரீவாசுதேவினடிக்கமலங்களில் திசைதிசைநம்பரிச்சேதபிராணனை யாகுதிபண்ணி பரப்பிரமகோசத்தி லிளைப்பாறிநிற்பது.

மானதசமர்ப்பணம்.—கேசாதிபாத பாதாதிகேசபரியந்தம் ஆசிரயிப்பவர்கள் நவநவமாயனுபவிக்கும் ஸ்ரீவாசுதேவினடிக் கமலங்களில் சஞ்சலமனதைப்பலிகொடுத்து சஞ்சலமகற்றுப் ரமித்திருப்பது.

புத்திசமர்ப்பணம்.— ஆசிரயிப்பவர்க்குச் சத்தியரூபமாக நின்று சதாசேவைசாதிக்கும் ஸ்ரீவாசுதேவனிடத்தில் நிர்க்கமமாக எப்போதும்மாறுபடாத அவதானத்தைவைத்து அசத்தியபரிச்சேதங்களை நிவர்த்திக்கப்படுவது.

சிவசமர்ப்பணம்.— ஆசிரதவபிமானியாய் சதாவவர்களை ரட்சிக்கும் ஸ்ரீவாசுதேவினிடத்தில் நம்சித்தத்தைவைத்து எப்போதும் வாசுதேவவபிமானியாய் இதராந்தரங்களை விசர்ச்சிக்கப்படுவது.

ஆத்மசமர்ப்பணம்.—சர்வசுதந்தரனை ஸ்ரீவாசுதேவின்சந்நிதியில் பாரதந்திரனாய் சுவாதங்காரத்தை நிவர்த்தித்திருப்பது.

போதசமர்ப்பணம்.—பரிச்சேதவுணர்வைத்தியச்சித்து சருவமும் ஞானபரிபூரணரான ஸ்ரீவாசுதேவின்மயமாகத் தெரிசிக்கப்படுவது.

## சகஜம்.

விவேக வியவகார ஸ்திதி லய உற்பவ சுவாநுபவமென்னும் சட்பிரகாரமான தத்துவபோதநிஷ்டையால் சர்வமும் பிர்மமயமென்றுணர்த்துவது.

## விவேகம்.

பிரகிருதி மாயை அவித்தை ஆவரணம் விட்சேபமென்னும் சத்திரூபத்தையும் சத்துவ ரசசு தமசென்னும் முக்குணப்பூதத்தையும் விஸ்தரித்து நித்தியவநித்தியத்தைநிரூபித்துக்காட்டுவது.

பிரகிருதி.—அகண்டபரிபூரண சச்சிதானந்தப்பிர்மத்தினிடத்தில் மூலப்பிரகிருதியென்றொருசத்தி சத்துவ ரசசு தமசென்னும் முக்குணங்களுடனேயுண்டாயின.

மாயை.—அந்தப்பிரகிருதியின் சத்துவகுணத்திற்கு மாயையென்றும் சருவக்ஞவுபாதியென்றும் ஈஸ்வரன் காரணசரீரமென்றும் பெயர். அந்தச்சத்துவகுணமாயையினிடத்தில் சத்துவத்தில் சத்துவம் விஷ்ணு.- சத்துவத்தில் ரசசு பிர்மா.- சத்துவத்தில் தமசு ருத்திரன்.

அவித்தை.—மூலப்பிரகிருதியின் ரசோகுணத்திற்கு அவித்தையென்றும் கிஞ்சிக்ஞவுபாதியென்றும் சிவகாரணசரீரமென்றும்பெயர். அந்தரசோகுண அவித்தையினிடத்தில் ரசசில்சத்துவர் தத்துவக்ஞானநிஷ்டர் ரசசில்ராசதர் காமக்குரோதபரர் ரசசில்தாமதர் சோம்பல் நித்திரை மயக்கங்களையுடையவர்.

ஆவரணம்.—மூலப்பிரகிருதியின் தமோகுணத்தில் ஆவரணம் விட்சேபமென்னும் இரண்டுசத்திகளுண்டாயின ஆவரணசத்தி

## அஷ்டாங்கசேவை.

சரீரம் இந்திரியம் பிராணன் மனம் புத்தி சீவன் ஆத்மா போதமென்கின்ற இவ்வெட்டுறுப்பினையும் சந்நிதிபூர்வகமாய் வாசுதேவினடிக் கமலங்களுக்குத் தெட்சணையாகச் சமர்ப்பித்து சதா ஸ்ரீபகவானாகிய வாசுதேவசற்குருவின் திருநோக்கத்துக் கெதிர்பார்த்திருப்பது.

சரீரசமர்ப்பணம்.—ஆசிரயிப்பவர்களுக்கு நித்தியரூபத்தை க்கொடுத்து நித்தியகைங்கிரியத்தைநியமிக்கும் ஸ்ரீவாசுதேவினடிக்கமலங்களில் அநித்தியசரீரக்கிரிகையை நிவர்த்தித்து அடியற்ற மரம்போலவீழ்த்தப்படுவது.

இந்திரியசமர்ப்பணம்—பார்த்துக் கேட்டுப் பரிசித்துப் பரிமளித்து ருசித்து ரமிக்கும்படி திவ்வியரூபத்தோடு ஆசிரயிப்பவர்க்குப் பிரத்தியட்சமாகின்ற ஸ்ரீவாசுதேவசந்நிதியில் விவிதவிஷயங்களிற்சென்று சதாவிடாய்ப்பட்டுழல்கின்ற பஞ்சேந்திரியங்களை நிக்கிரகித்திருப்பது.

பிராணசமர்ப்பணம்.—சருவத்திரசுவாமியாய்நின்று ஆசிரயிப்பவர்களுக்கு நித்தியசீவனைக்கொடுத்துக் காலதத்துவரூபத்தால்த் தம்சொத்துக்களாகிய சருவப்பிராணிகளையும் கல்பாதியிற்பிறப்பித்து தத்தம் கருமானுரூபமாய்ரட்சித்து கல்பாந்தத்திற் கிரிகித்து விளையாடும் ஸ்ரீவாசுதேவினடிக்கமலங்களில் தினேதினே நம்பரிச்சேதபிராணனை யாகுதிபண்ணி பரப்பிர்மசுகோததியி லினைப்பாறிநிற்பது.

மானதசமர்ப்பணம்.—கேசாதிபாத பாதாதிகேசபரியந்தம் ஆசிரயிப்பவர்கள் நவநவமாயனுபவிக்கும் ஸ்ரீவாசுதேவினடிக் கமலங்களில் சஞ்சலமனதைப்பலிகொடுத்து சஞ்சலரகிதனாய் ரமித்திருப்பது.

புத்திசமர்ப்பணம்.— ஆசிரயிப்பவர்க்குச் சத்தியரூபமாக நின்று சதாசேவைசாதிக்கும் ஸ்ரீவாசுதேவினிடத்தில் திர்க்கமாக எப்போதும்மாறுபடாத அவதானத்தைவைத்து அசத்தியபரிச்சேதங்களை நிவர்த்திக்கப்படுவது.

நிவேசமர்ப்பணம்.— ஆசிரதவபிமானியாய் சதாவவர்களை ரட்சிக்கும் ஸ்ரீவாசுதேவனிடத்தில் நம்சித்தத்தைவைத்து எப்போதும் வாசுதேவவபிமானியாய் இதராந்தரங்களை விசர்ச்சிக்கப்படுவது.

ஆத்மசமர்ப்பணம்.—சர்வசுதந்தரனான ஸ்ரீவாசுதேவன்சந்நிதியில் பரதந்திரனாய் சுவாகங்காரத்தை நிவர்த்தித்திருப்பது.

போதசமர்ப்பணம்.—பரிச்சேதவுணர்வைத்தியச்சித்து சருவமும் ஞானபரிபூரணரான ஸ்ரீவாசுதேவன்மயமாகத் தெரிசிக்கப்படுவது.

## சகஜம்.

விவேக வியவகார ஸ்திதி லய உற்பவ சுவாநுபவமென்னும் சட்பிரகாரமான தத்துவபோதநிஷ்டையால் சர்வமும் பிர்மமயமென்றுணர்த்துவது.

## விவேகம்.

பிரகிருதி மாயை அவித்தை ஆவரணம் விட்சேபமென்னும் சத்திரூபத்தையும் சத்துவ ரசசு தமசென்னும் முக்குணப்பூதத்தையும் விஸ்தரித்து நித்தியவநித்தியத்தைநிரூபித்துக்காட்டுவது.

பிரகிருதி.—அகண்டபரிபூரண சச்சிதானந்தப்பிர்மத்தினிடத்தில் மூலப்பிரகிருதியென்றொருசத்தி சத்துவ ரசசு தமசென்னும் முக்குணங்களுடனேயுண்டாயின.

மாயை.—அந்தப்பிரகிருதியின் சத்துவகுணத்திற்கு மாயையென்றும் சருவக்ஞவுபாதியென்றும் ஈஸ்வரன் காரணசரீரமென்றும் பெயர் அந்தச்சத்துவகுணமாயையினிடத்தில் சத்துவத்தில் சத்துவம் விஷ்ணு.- சத்துவத்தில் ரசசு பிர்மா.- சத்துவத்தில் தமசு ருத்திரன்.

அவித்தை.—மூலப்பிரகிருதியின் ரசோகுணத்திற்கு அவித்தையென்றும் கிஞ்சிக்ஞவுபாதியென்றும் சீவகாரணசரீரமென்றும்பெயர் அந்தரசோகுணஅவித்தையினிடத்தில் ரசசில்சத்துவர் தத்துவக்ஞானநிஷ்டர் ரசசில்ராசதர் காமக்குரோதபரர் ரசசில்தாமதர் சோம்பல் நித்திரை மயக்கங்களையுடையவர்.

ஆவரணம்.—மூலப்பிரகிருதியின் தமோகுணத்தில் ஆவரணம் விட்சேபமென்னும் இரண்டுசத்திகளுண்டாயின ஆவரணசத்தி

யென்பது தத்துவஞானியையும் ஈஸ்வரனையுந்தவிர மற்றவர்களுக்கு சரீரத்திரயம் சிதாபாசன் சாட்சி சைதன்யமென்பவைகளை ஒன்றற்கொன்று பேதந்தெரியவொட்டாமல் மறைத்து நிற்கும்.

விட்சேபம்.—விட்சேபசத்தியினிடத்தில் சத்ததன்மாத்திரையான ஆகாசமும் அவ்வாகாசத்தில் பரிசதன்மாத்திரையான வாயுவும் அவ்வாயுவில் ரூபதன்மாத்திரையான அக்கினியும் அவ்வக்கினியில் ரசதன்மாத்திரையான அப்புவும் அவ்வப்புவில் கந்ததன்மாத்திரையானபிருதிவும் இந்தப்பஞ்சபூதங்களும் சத்துவ ரசக தமசென்னும் முக்குணங்களுடனேயுண்டாயின.

சத்துவகுணப்பூதம்.—பஞ்சபூதங்களின் சத்துவகுணசமஷ்டியில் உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்காரமென்னும் அந்தக்கரணங்களுண்டாயின.

ஆகாசத்தினம்சமான உள்ளம் இடங்கொடுத்துத்தரிக்கும் வாயுவினம்சமானமனம் அலையும் அக்கினியினம்சமானபுத்தி இது விதுவென்றுவிளக்குவிக்கும் அப்புவினம்சமானசித்தம் விடயங்களைப்பற்றும் பிருதிவினம்சமான அகங்காரம் நானென்றபிமானிக்கும்.

பஞ்சபூதங்களின் சத்துவகுணவியஷ்டியில் சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணமென்னும் ஞானேந்திரியங்களுண்டாயின.

ஆகாசத்தினம்சமானசுரோத்திரம் சத்தவிஷயங்களையறியும் வாயுவினம்சமானதுவக்கு பரிசவிஷயங்களையறியும் அக்கினியினம்சமானசட்சு ரூபவிஷயங்களையறியும் அப்புவினம்சமான சிங்குவை ரசவிஷயங்களையறியும் பிருதிவினம்சமான ஆக்கிராணம் கந்தவிஷயங்களையறியும்.

ஆகப்பஞ்சபூதங்களின் சத்துவகுணத்தாலுண்டான தத்துவம்பத்தும் ஞானசாதனமாயின.

ரசோகுணப்பூதம்.—பஞ்சபூதங்களின் ரசோகுணசமஷ்டியில் வியானன் பிராணன் அபானன் சமானன் உதானனென்னும் பஞ்சவாயுக்களுண்டாயின.

தில் அப்படிப்பிரிக்கக்கூடாத சுத்தாகார சத்தியரூபமாய் பரப்பிர்மபரமேஸ்வர சற்குருசொரூபமாயிருப்பது.

சித்து.—சருவியாபகமாய் சருவஜகத்பீஜமாய் சாரவசாரமான சருவப்பிராணிகளுக்கும் ஆதாரமாய் அப்பியாசசமாதியில் ஜீவேஸ்வர கூடஸ்த பிர்மமென்ன வாச்சிய லட்சியத்தைப் பிரிப்பதாய் ஆரூடதிசையில் ஏகபரிபூரணமாய் எல்லையற்றிருப்பது.

ஆனந்தம்.—சத்துரூப சித்துரூபத்தை அற்புதசமாதியிலொருப்படச்சாதித்து அதன்மகிமையால்க் காரணரூப பவபந்தபீஜம் நசித்து மூலச்சித்தினசைவினால் காரியரூப லீலாப்பிரவர்த்தகராய் அநுபூதியில் நின்றெழுந்தருளிய தற்பதநிஷ்டர்களாலனுபவிப்பது

சுத்ததன்மாத்திரை ஆகாயம்.—ஆகாயத்தில் ஆகாயம் இதயம்.—ஆகாயத்தில்ப்பிருதிவு சுவர்க்கலோகம்.—ஆகாயத்தில் அப்பு அரூபவாகினி.—ஆகாயத்தில்த் தேய்வு சுயோதிரூபம்.—ஆகாயத்தில்வாயுவு சலனசூனியம்.

பரிசதன்மாத்திரைவாயுவு.—வாயுவில்வாயுவுமனம்.—வாயுவில்ப்பிருதிவு பவனலோகம்.—வாயுவில்அப்பு ஜீமூதஜலம்.—வாயுவில்த்தேய்வு ரூபசூனியம்.—வாயுவில்ஆகாயம் நாதபேதம்அகோரகெர்ச்சிதம்.

ரூபதன்மாத்திரை தேயுவு.—தேயுவில்த் தேய்வு புத்தி.—தேயுவில்ப்பிருதிவு சூரியலோகம்.—தேயுவில்அப்பு தயிலகாஷ்டம்.—தேயுவில்வாயுவு சுவாலாகம்பிதம். — தேயுவில்ஆகாயம் தூமாதிமார்க்கம்.

ரசதன்மாத்திரைஅப்பு.—அப்புவில்அப்பு சித்தம்.—அப்புவில்ப்பிருதிவு வருணலோகம்.—அப்புவில்த்தேய்வு வடவானலம் அனல்க்குமிழி.—அப்புவில்வாயுவு உல்லோலகல்லோலம்.—அப்புவில்ஆகாயம் எதிர்விம்பம்.

கந்தன்மாத்திரைபிருதிவு—பிருதிவில்ப்பிருதிவு அகங்காரம்—பிருதிவில்அப்பு சமுத்திரசரிதாதி.—பிருதிவில்த்தேய்வு சிலாதியாசிரயம்.—பிருதிவில் வாயுவு பூகம்பனம்—பிருதிவில்ஆகாயம் நிரந்தரவியாப்பியம்.

ஆறுதத்துவம்.—சர்மம் உதிரம் மாம்சம் நரம்பு அஸ்தி மச்சை இவைகளாம்.

நால்வகைப்பிறப்பு.—சராயுஜம் அண்டஜம் சுவேதஜம் உற்பீஜம் இவைகளாம்.

மூவகைச்சாதி.—இகலோகபுத்தி பரலோகபுத்தி இரண்டுமுடைய மனித தேவர்கள்: உத்தமசாதி.—பரலோகபுத்தியின்றி இகலோகபுத்திமாத்திரமுடைய பசுபட்சிமுதலானவைகள்: மத்திமசாதி.—இருவகைப்புத்தியுமில்லாத மரஞ்செடிகொடிகள்: அதர்மசாதி.

பௌதீகவடிவம்.—பிருதிவினம்சம்பாதி சாதுர்ப்பூதம்பாதி அஸ்மதாதிகள்.—அப்புவினம்சம்பாதி சாதுர்ப்பூதம்பாதி சந்திரன்முதலான பிதிர்க்கள்.—அக்கினியினம்சம்பாதி சாதுர்ப்பூதம்பாதி சூரியன்முதலான தேவர்கள்.—வாயுவினம்சம்பாதி சாதுர்ப்பூதம்பாதி காந்தர்வசித்தயோகிகள்.—ஆகாசத்தினம்சம்பாதி சாதுர்ப்பூதம்பாதி சிவபெருமான்முதலான ருத்திரகணங்கள்.

## அநித்தியம்.

ஆகப்பஞ்சபூதங்களின் முக்குணத்தாலுண்டாகிய தத்துவம் இருபத்தாறும் காரியசரீரமென்றுசொல்லப்படும்.

காரணசரீரதத்துவம்.—சீவன் ஈஸ்வரன் அவித்தை வித்தைப் பிர்மம் ஐந்து.—ஆகப்பஞ்சபூதமுள்பட தத்துவமுப்பத்தாறிற் பிரகிருதியிற் கற்பனையாய்த்தோற்றியொடுங்கிய அநாத்மதத்துவமுப்பத்தைந்தும் அநித்தியம்.

## நித்தியம்.

முப்பத்தாருந்தத்துவமாயும் அகண்டபரிபூரணசச்சிதானந்தபரப்பிர்மமாயும் அதிஷ்டான கூடஸ்த பரமேஸ்வரனுயும் விளங்கிய ஆத்மதத்துவம் ஒன்றுமே நித்தியம்.

## வியவகாரம்.

இரண்டுமூன்றெட்டாகப்பிரித்தறிவது. அவற்றுள். இரண்டாவன.—தூலசூட்சுமசீவனவித்தைஇருபத்தெட்டுத்தத்துவமும் சீவர்கள் தனித்தனியே அனுபவிப்பது.-பஞ்சபூத மாயை ஈஸ்வரன் பிர்மம் எட்டுத்தத்துவமுஞ் சமுதாயமாயனுபவிப்பது.

மூன்ருவன.—தூலசூட்சும சீவனவித்தை இருபத்தெட்டுந் தனதன்னியதத்துவமாம்.— பஞ்சபூத மாயை ஈஸவரன் ஏழுந் தனக்கன்னியதத்துவமாம்.— சாட்சிபூத சின்மாத்திர சொரூபம் ஒன்றுமே எப்போதுந்தானுனதத்துவமாம்.

எட்டாவன.—தூலசரீரவியவகாரத்திற்கு: தூலசூட்சுமகாரணதத்துவம் முப்பத்தொன்று.—சூட்சுமசரீரவியவகாரத்திற்கு: சூட்சுமகாரணதத்துவம் இருபத்தைந்து.—காரணசரீரவியவகாரத்திற்கு: காரணதத்துவம்ஐந்து.—இந்திரியவியவகாரத்திற்கு: இந்திரிய சட்கோச பிராண கரண காரணதத்துவம் இருபத்திரண்டு.—மனோராச்சியவியவகாரத்திற்கு: கரண காரண தத்துவம்பத்து.—சீவவியவகாரத்திற்கு: சீவேஸ்வரசாட்சிதத்துவமூன்று.—ஈஸ்வரவியவகாரத்திற்கு: ஈஸ்வரசாட்சிதத்துவம் இரண்டு.—சாட்சிவியவகாரத்திற்கு: சாட்சிதத்துவம் ஒன்று.

சாட்சிக்கிவியவகாரம்.—முப்பத்தைந்து தத்துவங்களையும் விஷய பூத கடாதிரூபமாய்த் தோற்றியொடுங்கக்கண்டு சாட்சி சாட்டியமெனப்பேதிக்கும் சித்தசலனத்தைமாற்றித் ததேகப் பிர்ம சுயம்பிரகாசமாய்விளங்குவது.

கடாதிகள்.—அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயமென்னும் பஞ்சகோசவுருவாதிகளாம். பூதம்.—பௌதிகசாலங்களைத் தன்மயமாக்கி ஒன்றையொன்று கிரகித்துக்கொண்டு சூட்சுமை பைசந்தி மத்திமை வைகரிரூப நாதப்பிர்மத்திலடங்கியிருப்பது. விஷயம்.-அவ்வியயமாய் சர்வஜகன்மாதாவாய் பின்னையபின்னையெனப்பேர்பெற்று பின்னுருபத்தால் உதயாஸ்தரகிதசதோதீத நித்தியானந்தங்களைவிளைவித்தும் அபின்னுருபத்தால் வன்னியும்உஷ்ணமும்போலப் பிரிவற்றுவிளங்குவது.

## ஸ்திதி.

ஸ்தூலமுதலாத்மாபரியந்தம் அதற்குரிய லட்சணங்களோடு விதிக்கப்படுவது.

ஆறுதத்துவமாய்ப் பஞ்சீகிருதபாகத்தால் இருபத்தைந்து பேதமாய் திரிவிதகருமத்துக்கீடாகத் தோற்றி நசிப்பது: தூலம்.—வியாபக சுவாச சீரண சமரச சுழற்சியைச்செய்வது: வாயுக்கள்.—வசன தான கமன விசர்க்க ஆனந்தமென்னும் கிரியாவிதிகளைச்செய்வது: கன்மேந்திரியம்.—சத்த பரிச ரூப ரச

கெந்தமென்னும் பஞ்சவிஷயங்களைத்தொகுத்தறிவது: ஞானேந்திரியம்.—சாந்த சாஞ்சல்ய நிச்சய சமுசய அபிமானரூபமே: கரணம்.—பிராணிகளுக்கு இட தாக பாக உலாத்தல் அவகாசாதிகளுக்கேதுவாய்க் கல்பாதியிலுதித்துப் பிரளயாந்தத் தொடுங்கிற்பது: பூதம்.—மறைப்புநினைப்புருவாய்த்தமோகுணப்பிரகிருதியிற்றோற்றியொடுங்குவது: ஆவரணவிட்சேபம்.—மூன்றுபேதமான சீவர்களுக்குக் காரணசரீரமாய் ரசோகுணப்பிரகிருதியிற்றோற்றியொடுங்குவது: அவித்தை.—மூன்றுபேதமான ஈஸ்வரனுக்குக் காரணசரீரமாய்ச் சத்துவகுணப்பிரகிருதியிற் றோற்றியொடுங்குவது: மாயை.—பரமாத்மாவில் விவர்த்தமாய் ஆவரண விட்சேப அவித்தை வித்தைக்கு மூலமாய் அதன்மகிமையை இத்தன்மையதென யாவராலுமறியக்கூடாத அவாச்சியசொரூபமாயிருப்பது: பிரகிருதி.—முப்பத்தைந்து தத்துவங்களையும் பகுத்தறிவதாய் முப்பத்தைந்து தத்துவங்களுக்கும் விலட்சணமாய் முப்பத்தாறுவது தத்துவமாய் சுத்தப்பிர்மமாகிய சர்வசாட்சியாகவிளங்குவது: ஆத்மா.

## லயம்.

நித்திய நைமித்திய பிராகிருத அத்தியந்த மென்னும் பிரளய சதுஷ்டயரூபத்தாற்றெரிவிப்பது.

அவற்றுள்.நித்தியப்பிரளயம்.— நாசவுற்பவாதி சடாகார பீஜமாய்ச் சீவசுழுத்தியிலயப்படுவது.

நைமித்தியப்பிரளயம்.—மனுவந்தத்திற் பீஜரூபமாக நின்று பிர்மசுழுத்தியிலயப்படுவது.

பிராகிருதப்பிரளயம்.—பிர்மாவினந்தத்தில் சரீர பிராண மனோ புத்தி புருடப் பிரகிருதி ஆத்மாவென்னுஞ் சத்தாவரணவித்துருவாகநின்று மூலப்பிரகிருதியிலயப்படுவது. அவற்றுள்.-தேசகாலவஸ்துவாதிகளின்றிப் பரிச்சேதித்து நாமரூபாத்மகமாக விளங்குவது: சரீரம்.—ஏகமாய் உபாதிபேதத்தால் அநேகமாய் ஏகவநேகத்தைத் தறிப்பிப்பதாயு மிருப்பது: பிராணன்.—சங்கற்ப விகற்பரூபமாய்ச் சுத்தவசுத்தக் கிரியைகளை விருத்தி பண்ணுவது: மனம்.—விசாரரூபத்தால் நித்தியவநித்தியங்களை

நிச்சயித்தறிவது: புத்தி.—அபிமான பேதத்தாற் சிவேஸ்வரப் பெயருருவாதியை யுடையவன்: புருடன்.—அவ்வியயமாய் வித்தையவித்தைக்கிமூலமாய் சந்நிதானவிசேஷத்தாற் பாஞ்சபூதமகதகங்காராதிகளைப் பிறப்பித்தொடுக்குவதாயுமிருப்பது: பிரகிருதி.—சிவேஸ்வரப்பிரகிருதியைப் பகுத்தறிவதாய் அசங்கசின்மாத்திர சொரூபமாயுமிருப்பது: ஆத்மா.

அத்தியந்தப்பிரளயம்.—யாதொரு புருஷனுக்குச் சகலமுமிருக்கும்போதே சற்குருகடாட்சத்தினுற் பீஜரூபப்பிரகிருதி நசித்துச் சர்வமும் பிர்மமயமாய் விளங்குகிறதெதுவோ அதுவே அத்தியந்தப்பிரளயம்.

## உற்பவம்.

பிர்மானந்தவாரிதியில் அலை திரை திவலை நுரை குமிழிகளாகவெளிப்பட்டு அவ்வியக்த மகதகங்கார திரிகுண பூத கோசவர்ணச்சிரம ஸ்ரீ புருஷ தனதனைய சாதி லோகசயன பரிசகிரகக் கிராம க்ஷேத்திர தேவ திரியக்காதி சங்கற்பசால அபரிச்சின்ன சுகாகாரசொரூபங்களாகப் பரவிநிற்பது.

## சுவாநுபவம்.

லட்சியதிருஷ்டி மித்தையாதிருஷ்டி வாதனுதிருஷ்டி பிரலாபதிருஷ்டி பரமார்த்ததிருஷ்டி யென்னும் நிஷ்டாபஞ்சகரூபமாய்ச் சாதிக்கப்படுவது.

## லட்சியதிருஷ்டி.

நித்தியவநித்தியவிவேகியாய் அநித்தியசம்பந்தமான தத்துவவாச்சிய சடிந்திரியவியவகாரங்களைத்தியச்சித்து நித்தியசம்பந்தமான தத்துவலட்சிய கூடஸ்த பிர்ம ஐக்கிய ஆத்மசொரூபமேதானுகவிளங்குவது.

## நித்தியம்.

புத்திர பாரிகை சுவ ரட்சை சேஷ ஞேய சரீர ஆதேய போக்கியமென்னும் நவபேதமாய் இம்மையிலேயே அதற்குரிய தத்துவலட்சணங்களைப்பொருந்தி தங்களுக்கு லட்சியப்பொருளாகிய ஸ்ரீவாசுதேவசற்குருவினுலாசிரயித்து மார்ச்சாலவிதியினுல் த்துலக்கப்பெற்று ஞானதீராய்ச் சரணியதாரையைப்பற்றி மர்க்கடநீதியாய்த்தொடர்ந்து நின்று மாருதசுகத்தையனுபவித்துக் கொண்டிருப்பது.

## அநித்தியம்.

கருமானுரூபமாய் சுக்கிலசோணிதம் ஒருப்பட்டுக் கரசரணாதிகளாய்த்தடித்து ஊர்வன ஜலசராதி விவிதப்பிராணிகளும் மனிதருருவாகவெளியிட்டு விவேக புருடனுக்குரிய ஞானகர்மோபாசகத்தில்ப்பேதமும் ஆகாரம் நித்திரை மைதுனமுதலியதிற்சமானமுமுடையராய்ச் சரீரம் பிராணன் மனம் புத்தி சீவனென்கின்ற கோசபாசப்பின்னலிற்சிக்கி பர்த்துருபாரியா புத்திரதாசாதிகளைப் போல இவ்விடத்திற்சிலநேரம் அசிங்கிதகுடும்பமாய்க்கூடியிருந்து பரஸ்பரம் ஒவ்வாது கீழது மேலது மேலதுகீழதாய்மாறுபட்டு அவரவர்க்குப்பரம்பரையாய்த்தொடர்ந்துவந்த ஊர்வனஜலசராதிகளுக்குரிய விவிதகுணங்களோடு அளவற்றஜென்மத்தைத்தருவதான அசுத்தகுணங்களையும் அகக்கரணத்தைக்கொண்டு நாளுக்குநாளபிவிர்த்திபண்ணி சம்சாரவர்த்தகராய்த்துக்கித்து அகக்கரணத்தில் பரிபாகமாகவிருக்கின்ற விவிதஜென்மத்தையெடுத்தற்பொருட்டு காலமுடிவில் இந்தமனிதஜென்மத்தை நிவர்த்தித்தோடுவது

தாவரரூபமாய் அசைவற்றிருப்பது: சரீரகோசம்.—சரீரத்தைச் சில கருமக்கிரிகையினூடசைப்பித்துருவது: பிராணகோசம்.—சரீரபிராணனை வாசனரூபமாயசைப்பித்து வாக்காதியைந்தோடும்பரிமளிப்பது: மனோகோசம்.—சரீரபிராணிகளைச் சத்தாதியைந்தினாற்பரிமளப்படுத்தி சாதுரியயூகத்தாற்காப்பாற்றப்படுவது: புத்திகோசம்.—வியவகாரதிசையில் சரீரேந்திரியமனோபுத்தியாதிகளை நானெனதென்று அபிமானரூபமாய்விவகரித்து பரமார்த்ததிசையில் அவையாவையும் நிவர்த்திபண்ணி அகம் அகமென்று சுதந்தரரூபமாய்ச்சுகித்திருப்பது: சீவகோசம்.

## அநித்தியசம்பந்தம்.

மனுஷியாளாகப்பிறந்தும் ஞானகர்மோபாஸ்தியைச்சாதித்து காலச்சக்கரத்தைத்தடுத்து தங்களுக்குரிய மானவத்தன்மையைநிறுத்திக்கொள்ளமாட்டாமல் பௌஷதியில் ஊர்வன ஜலசர மிருக பக்ஷி தாவர மனுஷிய தேவமென்னும் விவிதஜென்மத்தையடைதற்கேதுவாக வர்த்தமானத்தில் விவிதகர்மத்தை அபிவிர்த்திபண்ணுகின்றசீவர்கள் பூர்வகருமத்துக்கீடாக பர்த்துருபாரியா புத்திர

தாசாதிகளைப்போல இவ்விடத்திற்சிலகாலங்கழித்து அதற்குரியலக்ஷணம் சற்றேனுமில்லாமல் நாளுக்குநாள் மாறுபட்டு சரீரமுள்ளபரியந்தம் சதாதுக்கசாகரத்தில் முழுகி சரீராந்தத்தில் நாடகசபையைப்போல தத்தங்கருமானுரூபமாய்ப்பிரித்தோடப்படுவது.

சற்றேனும்வெட்கமில்லாமல் சரீரகிரிச்சையைப்பண்ணிசரீரமுள்ளபரியந்தம் இரக்கத்துணிவது: ஊர்வனஜாதி.—யாசிப்பவர்க்குத்தானுங்கொடாமல் கொடுப்போர்களையும் நிந்திக்கப்படுவது: ஜலசரஜாதி.—மாதா பிதா பிராதா குரு தெய்வமுதலியவர்களைச்சற்றேனுமதிக்காமல் தாய்தாரமுதலிய வரம்பைக்கெடுத்து குருவபூரணனாய்த்தடிப்புற்றிருப்பது: மிருகஜாதி.—சத்கதைகேட்கச்செவிகொடாமல் சத்காரியங்களுக் ககலப்போய்விடுவது: பக்ஷிஜாதி.—இந்திரியகரணங்கள் ஒடுங்கும்படியாய் இதரஜனங்களுக்கிடுக்கஞ்செய்வது: தாவரஜாதி.—ஞானோபாசகருமத்தால் காலச்சக்கரத்தைத்தடுத்து விவேகபுருடனையவதரிக்கப்படுவது: மனுஷஜாதி.—நிர்ச்சலரூபமானஸ்திரபுத்தியினால் ஆசுரவழியைத்தடுத்து விதிவத்தானகர்மங்களைத் திர்க்கமாகச்சாதித்து சுவர்க்கபூமியையடையப்படுவது: தேவஜாதி.

ஆசுரவழி.—எழுவகைப்பிராணிகளுக்கும் இம்சகனாய் இதரஜனங்கள்நடுங்கும்படி பாவபயங்கரமானகொடுந்தொழில்களைப்பண்ணி பூர்வபுண்ணியம்மீடித்திராமல் சீக்கிரமாகவிவர்த்திப்பதனாலது சுவர்க்கவழியைத்தடுத்து நரகபூமியைக்கொடுக்கப்படுவது.

## நித்தியசம்பந்தம்.

பாரிகையாய்ப் புத்திரனாய் சுவமாய் சட்டைகளாய் அதற்குரிய தத்துவலட்சணங்களைப்பொருந்தி அநேகாகாரமாகவிருக்கின்ற நாமெல்லோரிடத்தும் ஏகாகாரமாகவிருக்கின்ற ஸ்ரீபகவானாகிய சற்குருவும் பர்த்தாவாய்ப் பிதாவாய்ச் சுவாமியாய் ரக்ஷகனாகவிருக்கின்ற ஸ்ரீபகவானாகியசற்குருவினிடத்துப்பாரியா புத்திர பரிசனபரிவாராதிகளாகிய நாமெல்லோரும் நாமவர் அவர்நாமெனப்பிரிக்கக்கூடாது பரஸ்பரம் அன்னியோன்னியமாகக்கலந்து நின்று எக்காலமும் அகலாநேசமுடையராய் மேல்வீடுபெற்று பரமாநந்த சுகத்தை அனுபவித்துக்கொண்டிருப்பது.

## மித்தையா திருஷ்டி.

அதிஷ்டான ஆரோபவிவேகியாய் ஆரோபிதமான சீவேஸ்வரப் பிரபஞ்சத்தை அதன் யதாப்பிரகாரம் அசத்தியமெனக்கண்டு அதிஷ்டானமான கூடஸ்த பிர்ம ஐக்கிய ஆத்மசொரூபமே தானாகவிளங்குவது.

சீவப்பிரபஞ்சம்.—அக்ஞானம் நிவர்த்திக்குமாத்திரம் நசிக்கப்படுவதாய் தூல சூக்ஷம காரணமென்னும் இருபத்தெட்டுத் தத்துவமாய்ச் சற்றேனும்நிலைபெறாது கீழது மேலது மேலது கீழதாய்க் காலச்சக்கரத்தினால் தத்தங்கருமானுரூபமாய்ச் சுழற்றப்படுவது.

தூலம்.—நகமுதல்சிகைபரியந்தமான அவயவங்களுக்கு வெவ்வேறுநாமத்தைப்பெறுகையால் அவற்றின் நாமென்னுஞ் சொல்லுக்குப்பொருட்படாமையாய் நம்மாலறியப்படுகின்றசடமாய்ப் பிரித்துப்பார்க்குமிடத்து சர்மம் உதிரம் மாம்சம் நரம்பு அஸ்திமச்சையென்னும் ஆறுதத்துவமாய்க் காலமுடிவில் நசிக்கப்படுவதாயுமிருப்பது.

சூக்ஷமம்.—மனமாதி சுரோத்திராதி வியானாதி வாக்காதி யென்னும் இருபதுதத்துவமாய் அளவற்றபிறவியைத் தருதற்குக்காரணமாய் சங்கற்பசொப்பனத்திலுள்ளதாய் சமாதிசுழுத் தியிலில்லதாய் உதயாஸ்தரூபமாய்ச் சஞ்சரிப்பது.

காரணம்.—சீவன் அவித்தையென்னும் இரண்டுதத்துவமாய் சத்பாவத்தால் சர்வமுந்தானாகவிளங்கிய ஈஸ்வரனையும் சிற்பாவத்தால் சர்வத்துக்குஞ்சேஷியாகவிளங்கிய ஆத்மாவையும் சாக்ஷிதத் தினால் மூடப்பட்டுக்கண்டு அதனை அபிமான ஆசைகோபாதிகளை விசர்ச்சித்திருக்கின்ற ஆனந்தயோகிகளினால் நிவர்த்திக்கப்படுவதாய் மற்றசீவர்களிடத்து அக்ஞானசுதந்தரரூபமாய் நிலைபெற்றிருப்பது.

ஈஸ்வரப்பிரபஞ்சம்.—அதிஷ்டான மாத்திரமாகவிருக்கின்ற ஈஸ்வரன் சந்நிதிமாத்திரத்தால் ஜெகசீவரூபமாய் மூலப்பிரகிருதியிற்றோற்றிவிரித்திருக்கின்ற முப்பத்தைந்து தத்துவங்களுக்குள் ளுற்பத்தியும் பரிபூர்த்தியாகவிருக்கும் தன்னுமையினால் சர்வமாய் சர்வாதிஷ்டானமாய் சர்வாதாரமாய்ச் சர்வாத்மாவுக்கும்

அந்தரியாமியாய் பிருதிவு அப்பு தேயுவு வாயுவு ஆகாசமனோபுத்திஅகங்காரமென்னும் அஷ்டமூர்த்தமாய் சர்வஸ்திதிலயோற்பவகாரணபூதையாய் சர்வத்திலும் வியாபித்திருக்கின்ற மாயாப்பிரபஞ்சத்தை அதிஷ்டானபரப்பிர்மத்துக்கனன்னியமாய்ச் சித்திரபட சிலாபங்கயம்போலப் பிரிவறக்காண்கின்ற தத்துவஞானிகளுக்கு அத்தியாசமோகமுழுதும்நிவர்த்தித்து இருந்தபடியேயிருக்கநசிக்கப்படுவது.

## வாதனைதிருஷ்டி.

திரிகுணாத்மகமாய் வியாவகாரிகத்திற் றோற்றிக்கொண்டிருக்கும்மூலப்பிரகிருதியின்காரியமான முப்பத்தைந்துதத்துவங்களையும்நிருவிகல்பசமாதியைக்கூடும்பொருட்டு சாக்ஷிபூதனாகின்று பிரத்தேகப்படுத்திக் காரணபூத பரமாத்மாவினோடபேதசமாதியைச்சாதித்துபிர்மசுகியாயெப்போதும்அந்தநிலையிலிருக்கவொட்டாதுகருமபீடிதத்தால்வெளியிட்டும் பரமாத்மாவினோடபேதநாட்டமகலாமல் பரபுருஷனைநச்சிய சோர ஸ்திரீயைப்போல சதாவாசனைசுகியாய் விவகரித்துக்கொண்டிருப்பது.

## பிரலாபதிருஷ்டி.

பிர்மானந்தவாரிதியில் புற்புதாகாரமாகவெளியிட்டு புண்ணியகுருவாக மூர்த்திகரித்து பவபந்தநிகளத்தைச்சிதைத்து சீவன்முத்தன் திடப்பிரக்ஞன் பகவத்பக்தன் குணாதீதன்முதலிய வேதநாமங்களுக்குப்பொருளாக்கி பரமசுகிர்தத்தைவெளிப்படுத்தி சீவன்முத்திப்பதத்திலிருத்தி காலமுடிவில் சாட்டிய பாகம்நசித்து இந்தப்பிரகாரம் இருந்தபடியேயிருக்கின்ற விதேக முத்திப்பதத்தைத்தெளிவித்துச் சதேகவிதேகமென்கின்றதொந்தவபேதத்தையகற்றி சருவமும்பிர்மமயமென்றுபதேசித்தருளிய ஸ்ரீபகவானாகிய நம்வாசுதேவப்பிரபுவை சதாஸ்தௌத்தியம்பண்ணி அவனால்நமக்குக்கொடுக்கின்ற சமஸ்தமான லாபங்களையும் நவநவமாகஅனுபவித்துக்கொண்டிருப்பது.

## பரமார்த்ததிருஷ்டி.

பிர்மானந்தவாரிதியில் அலை திரை திவலை நுரைகுமிழிகளாக வெளியிட்ட அவ்வியக்த மகதகங்கார திரிகுண பூத கோசக் கிரகக்

கிராம க்ஷேத்திராதி அற்புதசொரூபங்கள்முழுதையும் அந்தப்பிர் மானந்தசாகரசொரூபமாக அனுபவிக்கப்படுவது.

## சாயுச்சியம்.

விக்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னும் அதிகாரபேதத் தாற் சிவசீவஐக்கியத்தைத் திரிவிதரூபமாகநிரூபிப்பது.

விக்ஞானகலர்.—அணுசதாசிவர் அஷ்டவித்தீஸ்வரர் மந்தி ரேஸ்வரரென்னத் திரிவிதரூபமாய்த் தத்தம்லோகமுடிவிற் சிவ சீவஐக்கியத்தைப் பெற்றிருப்பவர்கள். அவற்றுள். அணுசதா சிவர்.-சிவசாரூப்பியமுடையர்களாய் சதாசிவமூர்த்தியைச் சுற்றி லுமிருந்து சதா சேவித்துக்கொண்டிருப்பவர்கள். அஷ்டவித் தீஸ்வரர்.— அனந்தன் சூட்சுமன் சிவோத்தமன் ஏகருத்திரன் ஏகநேத்திரன் திரிமூர்த்தி சிகண்டி ஸ்ரீகண்டனென்றஷ்டபேத மாய் திதிலயோற்பவாதி சிட்சைரட்சைகளைச்செய்து பிரபஞ் சாதிபத்தியம் பண்ணிக்கொண்டிருப்பவர்கள். மந்திரேஸ்வரர்.— நம பவ சுத சுவாகா உம் படு வௌஷடுவென்னும் சப்தகோடி மகா மந்திரங்களால் ஆவாகனம் ஸ்தாபனம் சந்நிதானம் சந்நிரோதனம் திக்குபந்தனம் அவகுண்டனம் தேனுமுத்திரை மகாமுத்திரை யென்னும் அஷ்டசமஸ்காரரூபமாய் ஆசிரயிப்பவர்க்கு சோமாஸ் கந்த உமாமகேஸ்வராதி அஷ்டாவிம்சதி மூர்த்தங்களாகவிருந்து அவரவரபீஷ்டசித்தியைக்கொடுப்பவர்கள்.

பிரளயாகலர்.—இவ்விடத்திற் சிவகிருபையைப் பூரணமா கப்பெற்று சிவாக்ஞையால் சதாசிவன் அனந்தன் ஸ்ரீகண்டன் அம்பிகை ஸ்கந்தன் விஷ்ணு பிர்மாவென்னும் சர்வபுவனசிரேஷ் டமான சப்தகுருபுவனத்தையடைந்து கல்பமுழுதும் அவ்வி டத்திலிருந்து கல்பாந்தத்திற் சிவ சீவ ஐக்கியத்தைப் பெற்றி ருப்பவர்கள்.

சகலர்.—ஸ்ரீபரமசற்குருகிருபையினால் சமஸ்தமும் பதி பசு பாசமென்னுந் திரிவிதரூபமாகவிவேகம்பண்ணி மந்திர பத வர்ன புவன தத்துவ கலையென்னும் சடத்துவாவிதிப்படி பாசமுழுதும் நிவர்த்தித்து பசுத்தன்மையைப்போக்கி பதியாகிய சிவத்தோ டைக்கியம்பெற்றிருப்பவர்கள். அவற்றுள்.-ஏகரூபராகவிருக்கின் ற அகண்டசச்சிதானந்தசிவம்; பதி.—அனேகரூபராய் மாயாமல

கர்மங்களிற் பந்தித்திருக்கின்ற சீவர்கள்: பசு.— ஆத்மாக்களுக்கு சிவரூபத்தையும் சீவரூபத்தையும் எவ்வளவுந்தெரியாமல் வல்லிருளாகமறைக்கப்பட்டது: பாசம்.

மந்திரஅத்துவா. — விராட்டுருவத்தை ஈசானுதியேகாதச பேதமான மந்திரபுருடனுகப் பிறப்பித்தொடுக்கி மந்திராதீத சிவத்தோடைக்கியப்படுத்துவது.

பதஅத்துவா.—விராட்டுருவத்தைப் பிரணவாதி எண்பத்தொருபதங்களாகப் பிறப்பித்தொடுக்கி அந்தப்பதங்களுக்கெல்லாம் முடிவாய்விளங்கிய அதீதசிவத்தோடைக்கியப்படுத்துவது.

வர்னஅத்துவா.—விராட்டுருவத்தை அகாராதி அன்பத்தொருபேதமான அட்சரபுருஷனுகப் பிறப்பித்தொடுக்கி அவ்வட்சராதீத சிவத்தோடைக்கியப்படுத்துவது.

புவனஅத்துவா.— விராட்டுருவத்தை அனுசிரதைமுதலான இருநூற்றிருபத்துனாலு புவனங்களாகப் பிறப்பித்தொடுக்கி அந்தப்புவனமுழுதுக்கும் முடிவாய்விளங்கிய புவனுதீத சிவத்தோடைக்கியப்படுத்துவது.

தத்துவஅத்துவா.—விராட்டுருவத்தை பிருதிவியாதி முப்பத்தாறுபேதமான தத்துவபுருடனுகப் பிறப்பித்தொடுக்கி தத்துவாதீத சிவத்தோடைக்கியப்படுத்துவது.

## கலேயத்துவா.

விராட்டுருவத்தை நிவர்த்திகலே பிரதிஷ்டாகலே வித்தையாகலே சாந்திகலே சாந்தியாதீதகலேயென்னும் ஐந்துபேதமாகப்பிறப்பித்து மந்திர பத வர்ன புவன தத்துவமென்னும் ஐந்துஅத்துவாக்களேயும் அவ்வைந்துகலேகளுக்குள்ளே ஆந்தர்ப்பூதமாகச்சேர்ப்பித்து அந்தக்கலேகளேயே சாக்கிர சொப்பன சுழுத்தி துரிய துரியாதீதமென்கின்ற பஞ்சாவஸ்தைகளாகவும் பிர்மா விஷ்ணு ருத்திர மகேஸ்வர சதாசிவமென்கின்ற பஞ்சப்பிர்மமே அக்கலேகளுக்கதிஷ்டானதேவாகவும்பிறப்பித்து நிவர்த்தியைப் பிரதிஷ்டையிலும் பிரதிஷ்டையை வித்தையிலும் வித்தையைச் சாந்தியிலும் சாந்தியைச் சாந்தியாதீதையிலும் சாந்தியாதீதையை ஆதிசத்தியிலும் ஆதிசத்தியைப் பராசத்தியிலும் பராசத்தியைச் சிவத்திலும் ஒன்றிலொன்ருெடுக்கி அந்தச்சிவமேதானுகவும் தானேசிவமாகவும்

பரஸ்பரம்ஐக்கியப்படுத்தி அகண்டபரிபூரணசச்சிதானந்த அதீத சிவமாகப்பிரகாசித்துக்கொண்டிருப்பது.

## சருவாபீஷ்டம்.

சைதன்ய சாட்சித்துவ சயேக சம்பந்த வியவகாரமென்னும் லட்சணபஞ்சகத்துக்கு லட்சியப்பொருளாகிய ஸ்ரீவாசுதேவ குருப்பிர்மமும் சத்துச் சித்து ஆனந்த நித்திய பூரணமென்னும் லட்சணபஞ்சகத்துக்கு லட்சியப்பொருளாகிய நம்ஆத்மாவும் எக்காலமும் பிரிவற்றிருப்பது. அவற்றுள்.—நிரூபகதர்மமாய்ச் சர்வவியாபியா யெல்லையற்றிருப்பது: சைதன்யம்.—நீதரூபமாய்ச் சருவாத்மாக்களிடத்தும் தோஷரகிதமாய் ஜொலித்துக்கொண்டிருப்பது: சாக்ஷி.—மூலஸ்தம்ப பரயேகவஸ்துவாயிருப்பது; சயேகம்.—சருவாத்மாக்களிடத்து ஸ்ரீவாசுதேவும் ஸ்ரீவாசுதேவினிடத்துஞ் சருவாத்மாக்களும் பரஸ்பரம் அன்னியொன்னியமாய்க் கலந்துகொண்டிருப்பது: சம்பந்தம்.

சங்கருஷணரூபத்தால் ருத்திர அக்கினி அந்தகாதிகளுக்கந்தரியாமியாகநின்று பிரபஞ்சத்தைச் சங்கரித்தும் பிரத்தியும்நாரூபத்தால் பிர்மாவுக்கும் பிரஜாபதிகளுக்கும் அந்தரியாமியாகநின்றுபிரபஞ்சத்தைச்சிருஷ்டித்தும் அநிருத்தரூபத்தால் விஷ்ணுவுக்கும் இராமகிருஷ்ணாதி அவதாராதிகளுக்கும் அந்தரியாமியாகநின்று பிரபஞ்சத்தைரட்சித்தும் வாசுதேவரூபத்தால் சருவாத்மாக்களுக்கும் அந்தரியாமியாகநின்று ஆசிரயிப்பவர்களுக்குப் பற்றுக்கோடாக அகத்திலிருக்கின்றபடியே ஸ்ரீசற்குருசொரூபமாய்ப் புறத்தேசாநித்தியமாகி சரணியருசியைப்பிறப்பித்துச் சரணியத்துவாபா நித்தியசாம்பிராக்ஷிய சருவாபீஷ்டசித்தியைக்கொடுத்தும் புருஷோத்தமரூபத்தால் சர்வேஸ்திரிலயோற்பவாதி நிக்கிரகவநுக்கிரகங்களைச்செய்தும் அவற்றேடுபந்தப்படாது விலட்சண விக்கிரகயுக்தராகவிருந்தும் இன்னும்பலவாறான விசித்திர கோலாகலாதிகளை நடத்திக்கொண்டிருப்பது: வியவகாரம்.

விவிதரூபமாய் மாறிமாறிவருகின்ற சரீரதத்துக்கதிஷ்டாதாவாய்க் காலத்திரயத்தும் நாசமில்லாது எப்போதும் ஒருதன்மையவாகவிருப்பது: சத்து.—விலட்சணமாகவிருந்து சாட்டியசைதன்யத்தைப்பகுத்தறிவது:சித்து-சதுர்விதபுருஷார்த்தமும்ஒருங்

கேயனுபவித்தும் சாந்தவிருத்தியினாற்பிரபஞ்ச சர்வமும் வாசுதேவமயமாக ரமித்திருப்பது: ஆனந்தம்.—சச்சிதானந்த மென்றும் ஒருமித்து சற்குருசம்பந்தத்தால் மேல்வீடுபெற்றிருப்பது: நித்தியம்.—லட்சியப்பொருளாகிய ஸ்ரீவாசுதேவ சற்குருவினிடத்தில் நேசமுடையராய் சதா அவனது நியதகைங்கரியத்தைப் பண்ணிக்கொண்டிருப்பது: பூரணம்.

## மோட்சம்.

சீவன்முத்தனாய் பொது பொதுச்சிறப்பு சிறப்பென்கின்ற தேவகட்டளையை யதாப்பிரகாரம் அனுஷ்டித்து கிருதகிருத்தியனாக விதேகமுத்தியையடையப்படுவது.

## சருணாபேட்சை.

புருஷமுயற்சி சகலத்தியாகம் பிரபத்திநிஷ்டை ஆசாரியாபிமானம் பாரதந்திரம் நிர்ஹேதுகடாக்ஷம் கைங்கரியம் அனுக்கிரகத்தியென்னும் சாதனாஷ்டக சம்பூர்த்தியினால் இகபர போக்ஷூக்கியபரமபதமென்னும் சர்வப்பிரயோஜனமும் அடையப்படுவது.

புருஷமுயற்சி.—ஸ்ரீபகவான்வாசுதேவனைப் பிரார்த்தித்தாய் அவனதுகடாட்சத்தால் ரிஷி தேவ பிதிர்களுக்குத் திருப்தியண்ணி சமஸ்தமானகருமங்களையும் விதிபூர்வகமாகச்செய்து இகபர மோட்சத்தைக்குறிக்கும் பிரயோஜனத்தையுத்தேசியாமல் வாசுதேவனுக்கற்பிதமாக்குவது. அவற்றுள்: ரிஷிதிருப்தி.—வர்ணாச்சிரம கோத்திர சூத்திரவிதிப்படி பிறப்பொழுக்கத்துக்குரிய தர்மசாஸ்திரத்தையனுசரித்து நடப்பது. தேவதிருப்தி.—பிராம்மிய பிராத மத்திய சாய சயன பஞ்சகால பூசையனுஷ்டித்து யிருப்பது. பிதிர்திருப்தி.— தர்மபத்தினியோடொப்பபடி. இல்லற வாழ்க்கையைநிலைநிறுத்தி சற்புத்திர குணவிசேஷசந்தானபரம்பரையை யபிவிருத்திபண்ணுவது.

சகலத்தியாகம்.—ஸ்ரீபகவான் வாசுதேவனைத்தவிர வேறொருவனை ரட்சகன் அவனையாசிரயிப்பவனென்றே அவனே அதிபதி அவனால் நியமிக்கப்பட்டதெதுவோ அதுவே விதிவத்தான நித்திய கைங்கிரியமென்று யதாப்பிரகாரந்தெரிந்து அதற்குப் பிரதிபந்தகமான மந்த்ராந்தர தேவதாந்தரமுதலிய இதராந்தரமுழுமையும் விசர்ச்சிக்கப்படுவது.

பிரபக்திநிஷ்டை.—ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிரமத்தை சற்குருரூபமாய்ச்சாக்ஷாத்கரித்து அவனதடிக்கமலங்களிற் சரணாகதிபண்ணி அகந்தையபிமானஆசைகோபாதி சீவச்சேஷ்டைகளை நிவர்த்தித்திருப்பது.

ஆசாரியவபிமானம்.—ஜென்மபரம்பரையாய்ச் சுவாமிமானத்தால்வந்த பாரம்பராசுதந்தரத்தைச் சுடரொளியாகநின்று தீட்சிப்பித்துத்தன்சொத்தை இழந்துபோகாமலபிமானித்துச் சுவாமியாய்நின்று ரட்சிக்கப்படுவது.

பாரதந்திரம்.—தனக்கெனவோரபேட்சையுமின்றி பகவான் ஸ்ரீவாசுதேவசற்குருவின் அபேட்சையே தனக்கபேட்சிதமாய்த் தாசவத்துவம் ராசவத்துவமெனக்குறிக்காமல் அவனால் நியமிக்கப்படுமெதுவோ அதுவே சருவசிரேஷ்டமென்றொருப்பட்டுச் சதாவெச்சரிக்கையாய்ச் சந்நிதிபூர்வகமாயெதிர்பார்த்திருப்பது.

நிரோதகடாட்சம்.—அகாரணமாகக்கைக்கொண்டு சிந்தைரூபம் நேத்திரகடாட்சம் அஸ்தசையோகம் பாதப்பிரட்சாளனம் வாக்கியபோதமென்னும் பஞ்சசம்ஸ்காரரூபமாய்ச் சுத்தீகரித்துப் பரமசிரேஷ்டர்களான தமதடியார்களுக்குப் பணியாளாகவமைக்கப்படுவது.

கைங்கரியம்.—நிவர்த்தி பிரவர்த்திவிதிகளைத்தவிர்த்து சற்குருவினது நியமனவிதியைச் சிரமேற்கொண்டு பிர்மவிஷ்ணுருத்திர நாரதசுகாதிகளைப்போல வழிவழியாய் ஊழிபேரூழியாய்நின்று அடிமைத்தொழிற்செய்வது.

அனுக்கிரகசத்தி.—சகஜாபிராப்த வைதேக சாயுச்சிய சருவாபீஷ்ட மோட்ச சருவப்பிரயோஜனமும் தேசகாலவஸ்துக்களின்றி ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிரமம் ஆசிரயிப்பவர்க்குக் கொடுக்கப்படுவது.

## பிரயோஜனம்.

இகம்: இம்மைப்பிரயோஜனம்.—பரம்: மறுமைப்பிரயோஜனம்.—மோட்சம்: பாசபந்தத்தைநிவர்த்தித்திருப்பது.—ஐக்கியம்: பரமாத்மாவினிடமொன்றாக்கப்படுவது.— பரமபதம்: ஆத்மபதம் ருத்ரபதம் பிர்மபதமென்னும் முப்பதங்களுக்குமதிகமாய்ப்பதங்க

களுக்குமுடிவாய் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஏகசக்கிராதி பதியாகவிருந்து சதாசெங்கோல்நடத்தப்படுவது.

ஸ்ரீராஜராஜேஜஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## அஷ்டகவாக்கியம்.

மகாவாக்கியம் பிரதிபத்திவாக்கியம் திருவருள்வாக்கியம் பகவத்வாக்கியம் பூரணவாக்கியம் சுவாநுபூதிவாக்கியம் நிரூபக வாக்கியம் வாக்கியசம்பூரணமென்னும் அஷ்டபேதமாய் ஸ்ரீபகவான்வாசுதேவசற்குருவின் வாச்சியப்பிரபாவத்தினால் வாசகலட்சியங்களையொருமித்துக்காட்டுவது.

## மகாவாக்கியம்.

சருவத்திரபோதமாம்பொருட்டுப் பூருவாசாரியர்கள் ருக்கு எசுர் சாம அதர்வணமென்னும் நான்குவேதத்திலும் நான்கு விபுத்துவ வாக்கியங்களைப் பிரத்தேகமாகவெடுத்து அந்தவாக்கிய சிரேஷ்டத்தை உற்பத்தி பேதம் மகிமை பிரகாசம் நிவர்த்தி அவதி நிச்சயம் கதை தியானம் உரையென்னும் தசலட்சணங்களால் விஸ்தரித்துரைப்பது.

## வாக்கியவுற்பத்தி.

பிரக்ஞானம் பிர்மமென்னும் வாக்கியத்தை ருக்குவேதத்திலும் அகம்பிர்மாஸ்மியென்னும் வாக்கியத்தை எசுர்வேதத்திலும் தத்துவமசியென்னும் வாக்கியத்தை சாமவேதத்திலும் அயமாத்மாப்பிர்மமென்னும் வாக்கியத்தை அதர்வண வேதத்திலும் எடுக்கப்பட்டது.

## வாக்கியபேதம்.

ஆசாரியன் சிஷ்யனுக்கு ஞானமேபிர்மமென்றுணர்த்த அது யாதெனவினவ அகமென்ன எந்தஅகமென்ன அதுசொரூபோக தேகோகங்களுக்கு வேறாகுமென்ன சொரூபதேகமென்றிரு வகைப்பட்டதேதென படர்க்கை தன்மை முன்னிலையென்னும் முப்போதநிஷ்டையால் பூர்த்திசமஸ்காரவிதிப்படி சச்சிதானந்த

ஒருமையையுணர்த்தி சர்வமும் பிர்மமென்றுபதேசிப்பது.— அவற்றுள். படர்க்கைப்போதம்.—ஆப்பிர்மஸ்தம்ப பிபீலிகாதி பரியந்தம் விளங்குகிரசைதன்யமெதுவோ அதுவே பிர்மஸ்வரூப மென்றுணர்த்துவது. தன்மைப்போதம்.-சருவாத்மகோடிகளின் இருதயகமலமத்தியையிற்புத்திக்கிச்சாட்சியாய்அகம்அகமென்று ஜொலித்துக்கொண்டிருக்குகிற தெதுவோ அதுவே பிர்மஸ்வ ரூபமென்றுணர்த்துவது. முன்னிலைப்போதம்.- விஸ்வவிராடாதி தொந்துவப்பிரத்தேகமான ஆனந்தோப்பிர்மத்தை விளக்கி அதுவே நீயென்றுணர்த்துவது.

## வாக்கியமகிமை.

முதல்வாக்கியப் பொருளாகிய காரணரூப சருவவியாபக சைதன்யத்தை நிஷ்டாரூபமாய்ச்சாதிக்கில் விஸ்வவிராடாதிகாரிய ரூப விவிதப்பிரபஞ்சம் அதனிடத்தில்லாதபடியால் அதைப்பற்றி அபிவிர்த்தியாகின்ற ஆகாமியகர்மம் விசர்ச்சிக்கப்படுவது: முதல் வாக்கியமகிமை.—இரண்டாம்வாக்கியப்பொருளாகிய சாட்சிபூத சின்மாத்திர சொரூபத்தை நிஷ்டாரூபமாய்ச்சாதிக்கில் சீவாத்ம பரமாத்ம பேதம் வர்ச்சித்து செய்யுங்கிரிகையிற் பந்தப்படாது சர்வவிலட்சணராய்த் தாக்கற்றிருப்பது: இரண்டாம்வாக்கியமகிமை.- மூன்றும்வாக்கியப்பொருளாகிய தொந்துவரகித ஆனந்தோப்பிர்மத்தைநிஷ்டாரூபமாய்ச்சாதிக்கில் மமதகங்காரம் வர்ச்சித்துச் சித்தசாந்தம் அபிவிர்த்தியாகிச் சருவவனர்த்தமும் போகச்செய்வது: மூன்றும்வாக்கியமகிமை.—நான்காம்வாக்கியப்பொருளாகிய சச்சிதானந்த ஒருமையை நிஷ்டாரூபமாய்ச் சாதிக்கில் சஞ்சிதகர்மம் நீங்கித்தற்பதவாழ்விலமர்ந்திருப்பது: நான்காம்வாக்கியமகிமை.

## வாக்கியப்பிரகாசம்.

முதல்வாக்கியநிஷ்டையால் விஸ்வவிராடாதி காரியரூபப் பிரபஞ்சமுழுதும் வர்ச்சித்துக்காரணபூத சருவவியாபக சைதன்யமாகிய சத்ரூபம்பிரகாசிக்கும்.—இரண்டாம்வாக்கியநிஷ்டையால் சாட்டிய சைதன்யத்தை வேறுவேருகப்பகுத்தறிகின்ற சாட்சிபூத சித்ரூபம்பிரகாசிக்கும்.— மூன்றும்வாக்கியநிஷ்டையால் காரியகாரண தொந்துவபேதம் வர்ச்சித்துச் சருவமும் ஆனந்த

களுக்குமுடிவாய் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஏகசக்கிராதிபதியாகவிருந்து சதாசெங்கோல்நடத்தப்படுவது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

## அஷ்டகவாக்கியம்.

மகாவாக்கியம் பிரதிபத்திவாக்கியம் திருவருள்வாக்கியம் பகவத்வாக்கியம் பூரணவாக்கியம் சுவாநுபூதிவாக்கியம் நிருபகவாக்கியம் வாக்கியசம்பூரணமென்னும் அஷ்டபேதமாய் ஸ்ரீபகவான்வாசுதேவசற்குருவின் வாச்சியப்பிரபாவத்தினால் வாசகலட்சியங்களையொருமித்துக்காட்டுவது.

## மகாவாக்கியம்.

சருவத்திரபோதமாம்பொருட்டுப் பூருவாசாரியர்கள் ருக்கு எசுர் சாம அதர்வணமென்னும் நான்குவேதத்திலும் நான்கு விபுத்துவ வாக்கியங்களைப் பிரத்தேகமாகவெடுத்து அந்தவாக்கிய சிரேஷ்டத்தை உற்பத்தி பேதம் மகிமை பிரகாசம் நிவர்த்தி அவதி நிச்சயம் கதை தியானம் உரையென்னும் தசலட்சணங்களால் விஸ்தரித்துரைப்பது.

## வாக்கியவுற்பத்தி.

பிரக்ஞானம் பிர்மமென்னும் வாக்கியத்தை ருக்குவேதத்திலும் அகம்பிர்மாஸ்மியென்னும் வாக்கியத்தை எசுர்வேதத்திலும் தத்துவமசியென்னும் வாக்கியத்தை சாமவேதத்திலும் அயமாத்மாப்பிர்மமென்னும் வாக்கியத்தை அதர்வண வேதத்திலும் எடுக்கப்பட்டது.

## வாக்கியபேதம்.

ஆசாரியன் சிஷ்யனுக்கு ஞானமேபிர்மமென்றுணர்த்த அதுயாதெனவினவ அகமென்ன எந்தஅகமென்ன அதுசொரூபோபாகதேகோகங்களுக்கு வேறுகுபென்ன சொரூபதேகமென்றிருவகைப்பட்டதேதென படர்க்கை தன்மை முன்னிலையென்னும் முப்போதநிஷ்டையால் பூர்த்திசமஸ்காரவிதிப்படி சச்சிதானந்த

ஒருமையையுணர்த்தி சர்வமும் பிர்மமென்றுபதேசிப்பது.—அவற்றுள். படர்க்கைப்போதம்.—ஆப்பிர்மஸ்தம்ப பிபீலிகாதி பரியந்தம் விளங்குகிரசைதன்யமெதுவோ அதுவே பிர்மஸ்வரூபமென்றுணர்த்துவது. தன்மைப்போதம்.-சருவாத்மகோடிகளின் இருதயகமலமத்தியையிற்புத்திக்கிச்சாட்சியாய்அகம்அகமென்று ஜொலித்துக்கொண்டிருக்குகிற தெதுவோ அதுவே பிர்மஸ்வரூபமென்றுணர்த்துவது. முன்னிலைப்போதம்.- விஸ்வவிராடாதி தொந்துவப்பிரத்தேகமான ஆனந்தோப்பிர்மத்தை விளக்கி அதுவே நீயென்றுணர்த்துவது.

## வாக்கியமகிமை.

முதல்வாக்கியப் பொருளாகிய காரணரூப சருவவியாபக சைதன்யத்தை நிஷ்டாரூபமாய்ச்சாதிக்கில் விஸ்வவிராடாதிகாரியரூப விவிதப்பிரபஞ்சம் அதனிடத்தில்லாதபடியால் அதைப்பற்றி அபிவிர்த்தியாகின்ற ஆகாமியகர்மம் விசர்ச்சிக்கப்படுவது: முதல் வாக்கியமகிமை.—இரண்டாம்வாக்கியப்பொருளாகிய சாட்சிபூத சின்மாத்திர சொரூபத்தை நிஷ்டாரூபமாய்ச்சாதிக்கில் சீவாத்ம பரமாத்ம பேதம் வர்ச்சித்து செய்யுங்கிரிகையிற் பந்தப்படாது சர்வவிலட்சணராய்த் தாக்கற்றிருப்பது: இரண்டாம்வாக்கியமகிமை.-மூன்றும்வாக்கியப்பொருளாகிய தொந்துவரகித ஆனந்தோப்பிர் மத்தைநிஷ்டாரூபமாய்ச்சாதிக்கில் மமதகங்காரம் வர்ச்சித்துச்சித் தசாந்தம் அபிவிர்த்தியாகிச் சருவவனர்த்தமும் போகச்செய்வது: மூன்றும்வாக்கியமகிமை.—நான்காம்வாக்கியப்பொருளாகிய சச்சிதானந்த ஒருமையை நிஷ்டாரூபமாய்ச் சாதிக்கில் சஞ்சிதகர்மம் நீங்கித்தற்பதவாழ்விலமர்ந்திருப்பது: நான்காம்வாக்கியமகிமை.

## வாக்கியப்பிரகாசம்.

முதல்வாக்கியநிஷ்டையால் விஸ்வவிராடாதி காரியரூபப் பிரபஞ்சமுழுதும் வர்ச்சித்துக்காரணபூத சருவவியாபக சைதன்யமாகிய சத்ரூபம்பிரகாசிக்கும்.—இரண்டாம்வாக்கியநிஷ்டையால் சாட்டிய சைதன்யத்தை வேறுவேறுகப்பகுத்தறிகின்ற சாட்சிபூத சித்ரூபம்பிரகாசிக்கும்.— மூன்றும்வாக்கியநிஷ்டையால் காரியகாரண தொந்துவபேதம் வர்ச்சித்துச் சருவமும் ஆனந்த

ரூபமாய்ப்பிரகாசிக்கும்.—நான்காம் வாக்கிய நிஷ்டையால் சச்சிதானந்தப் பிரிவற்று சருவமும்பூரணஸ்வரூபமாய்ப்பிரகாசிக்கும்.

## வாக்கிய நிவர்த்தி.

முதல்வாக்கிய நிஷ்டையைச்சாதிப்பவர்க்கு விஸ்வவிராட்டிரைபேதிக்கப்படுவதால் ஆவரணம் நிவர்த்திக்கும்.—இரண்டாம் வாக்கிய நிஷ்டையைச்சாதிப்பவர்க்கு சாட்சிபூதமாய்நின்று எதிரிட்டதெல்லாம் பகுத்தறிவதால் விட்சேபம் நிவர்த்திக்கும்.—மூன்றும்வாக்கிய நிஷ்டையைச் சாதிப்பவர்க்கு ஆனந்தோப்பிர்மம் சாட்சாத்காரமாகி அவித்தை மாயை நிவர்த்திக்கும்.—நான்காம்வாக்கியநிஷ்டையைச் சாதிப்பவர்க்குச் சர்வமும் பிர்மமயமென்று அனுபவப்படுவதால் சர்வத்திரபீஜமாகிய மூலாக்ஞானம் நிவர்த்திக்கும்.

## வாக்கிய அவதி.

சாக்கிர சொப்பன சுழுத்தியென்னும் சாட்டியப்பிரபஞ்சத்தைக்கடந்து சைதன்யவியாபகத்தி லமர்ந்திருப்பது: முதல்வாக்கிய அவதி.—புவனதேக சாஸ்திர ரூபமான வாசனைபந்திகள் கருமபீடிதத்தால்வரினும் சத்தசத்தென்று அதன்யதார்த்தத்தை சைதன்யசாட்டிய விவேகத்தாற் பகுத்தறிந்துவிலக்கி சர்வவிலட்சணனாகநின்று அவ்விருவகை வியாவகாரிகத்தையும் அபினிவேஷத்தால் நடத்தப்படுவது: இரண்டாம் வாக்கியஅவதி.—மானவசுகமுதல் விராட்புருஷசுகமிறுதியாய் ஒன்றுக்கொன்று தாரதம்மியமுள்ள ஏகாதசபேதமான அநித்தியவானந்தங்களையளவிட்டு எப்போதும் அழிவில்லாதநித்தியசுகத்திலமர்ந்திருப்பது: மூன்றும்வாக்கிய அவதி.—உத்கிருஷ்டதபோமகிமையால் மறுமைப் பிரயோஜனத்தை இம்மையிலடையப்பெற்று இம்மை மறுமையென்னும் சுட்டுதலற்றுச் சர்வமும் பிர்மமயமாகத்தெளிந்திருப்பது: நான்காம்வாக்கிய அவதி.

## வாக்கிய நிச்சயம்.

சுவாநுபூதிநிலையானதால் நான்காம்வாக்கியம் முதற்றரம்.—உபதேசக்கிரமமானதால் மூன்றும் வாக்கியம் இரண்டாந்தரம்.—அப்பியாசக்கிரமமானதால் இரண்டாம்வாக்கியம் மூன்றுந்தரம்.—அப்பிரத்தியட்சரூபமான பரோட்சக்ஞானமானதால் முதல்வாக்கியம் நான்காந்தரமென்னச் சாதிக்கப்படுவது.

## வாக்கியகதை.

குச்சரீபதேசத்துச் சக்கிரியன் மிகவும் கோவதைசெய்த பாவத்துக்கஞ்சி அனுதாபமிகுதியினால் காரியரூபப்பிரபஞ்சத்தைக் கட்டோடுமறந்து காரணரூப சர்வவியாபக சைதன்யவாரிதியிற் படிந்து அதனாற்சமஸ்தபாவமும் வர்ச்சித்து சிரேஷ்டபதத்தையடைந்தானென்பது: முதல்வாக்கியகதை.

நீதிமார்க்கத்தைமறந்து தேகோகபுத்தியினால் மிகவும் அநீதகாரியத்தை நடாத்திய நிசிசரன் நீதிவாக்கியத்தை ஞாபகப்படுத்திய கற்பிணியைச்சரணாகவடைந்து அநீதகாரியமுழுதும் விசர்ச்சித்து அவள்சொல்லும் நீதிவாக்கியத்திற்கட்டுப்பட்டு அதன்மகிமையால் நீதவனீதத்தைப்பகுத்தறியும் சாக்ஷிஞானம் உண்டாகி அதனாற் பவபந்தங்களம்வர்ச்சித்துச் செவ்விதாக மோக்ஷத்தையடைந்தானென்பது: இரண்டாம்வாக்கியகதை.

சமாதிகூடுதற்குப் பிரதிபந்தகஞ் செய்யும் அறிவீனபுத்திரர்களாற்றுன்புருகின்ற வேடுவச்சிக்கி அறிவுருவே ஆனந்தரூபமாகத் தடித்து அறிவே ஆனந்தம் ஆனந்தமே அறிவென்னும் ஞானாநந்த நிஷ்டையைச்சாதிக்க அதனாற்சித்தசாந்தம்பிறந்து சித்த சாந்தியினாற் சர்வதுக்கமும் வர்ச்சித்து சிரேஷ்டசுகத்தையடைந்தாளென்பது: மூன்றாம்வாக்கியகதை.

திரியம்பகனென்னும் ஒருபிராமணனுக்கு ஸ்ரீசற்குருவானவர் சச்சிதானந்த ஒருமையாகிய தமது நிசசொரூபத்தைக்கொடுத்து அகத்திருப்பவனே புறத்திருப்பவன் புறத்திருப்பவனே அகத்திருப்பவனென்று இதோபதேசத்தைச்செய்யப் பாவபீடிதத்தால் அவனுக்குச்சந்தேகம் பிறந்து அதனால் ஈனகிருத்திய நிக்கிருஷ்ட போகங்களை பலவாருகவனுபவித்துச் சந்தேகநிவர்த்தியினாற் சர்வசிரேஷ்டனானானென்பது: நான்காம்வாக்கியகதை.

## வாக்கியதியானம்.

பிரதிபக்திரூபமாய் ஸ்ரீபகவான் வாசுதேவசற்குருவின் கைப்புகுதுகிரபரியந்தம் பக்தி பிரபக்தி உபபக்தியென்னும் பக்தித்திரய நிஷ்டையைச் சாதிக்கப்படுவது: முதல்வாக்கியதியானம். அவற்றுள்.— தயிலதாராவச்சின்னம்போல ஸ்ரீசற்குருசொரூபத்தை

இடையறாதுதியானிப்பது:பக்தி.—ஸ்ரீசற்குருசந்நிதியில் அகங்கார பந்திகளாகிய சிவச்சேஷ்டைகளை நிவர்த்தித்திருப்பது: பிரபக்தி.—ஸ்ரீசற்குருவினிடமாகத் தோற்றிவிரிந்திருக்கின்ற ஜெகசீவபரமுழுதையும்ஸ்ரீசற்குருசொரூபமாய்த்தெரிசிக்கப்படுவது: உபபக்தி.

சாக்ஷிரூபமாகநின்று சைதன்யசாட்டியங்களை வேறுவேறாகப்பகுத்தறிவது: இரண்டாம்வாக்கியதியானம்.— கண்டவகண்டமுந்தானாகவிருப்பது: மூன்றும் வாக்கியதியானம்.—நிர்ச்சிந்தராய்க்கண்டத்தைப்பற்றிய உன்னுதலற்று அகண்டாகாரமேதானாகவிருந்து நிருவாணஸ்வரூபத்தைத் தியாணிக்கப்படுவது: நான்காம் வாக்கியதியானம்.

## வாக்கியவுரை.

நான்குவாக்கியங்களையும் பதினொருபதமாகப்பகுத்து அதன் அர்த்தத்தை வியாக்யாதாவினால் விஸ்தரிக்கப்படுவது.

முதல்வாக்கியவுரை.- நமதிடத்திற்பிரகாசிக்கும் நிருபாதிகமாகிய சுயம்பிரகாசசைதன்யத்தையே உபாதிபேதத்தால் ஞானபதம் பிர்மபதமென இருவகையாகப்பிரித்து அதனர்த்தத்தைத் தெரிவிப்பது.ஞானபதத்துக்கருத்தம்.— சத்தாதிவிஷயங்களையறிவதாகியும் பிரகாசத்துக்கெல்லாம்பிரகாசமாகியும்தேகமுதற்சொரூபபரியந்தம் விளக்குவிப்பதாயுமிருப்பது.-பிர்மபதத்துக்கருத்தம். பிர்மாதிஸ்தம்பபரியந்தம் உயிர்க்குயிராகியும் அதனையாக்கிவித்துத் துடைத்தற்கேதுவாகியும் நிலைபெற்ற பரிபூரணராயுமிருப்பது.

இரண்டாம்வாக்கியவுரை.— அகம்பதம் பிர்மபதம் அஸ்மிபதமெனத்திரிவிதம்.அகம்பதத்துக்கர்த்தம்.-பரமார்த்தமாய்நாசவத்துவமில்லாததாய் சர்வத்திரசாட்சிபூதமாய் நினைத்தவருள்ளத்தில் நிச்சயித்தறிவதாய் அகங்காரநிவர்த்தியினால் அநுபவிப்பதாயுமிருக்கின்ற நமதுசுபாவசொரூபம். பிர்மபதத்துக்கர்த்தம்.—தனக்குத்தானேசமானமாயும் சமானரகிதமில்லாததாயும் நிருபாதிகமாயும் அகண்டசொரூபமாயும் சச்சிதானந்த சதோதிதபூரணமாயும் விளங்குவது. அஸ்மிபதத்துக்கர்த்தம்.-பரத்துவசௌலப்பியத்தையொருமித்து அகம்பிர்மம் பிர்மோகமெனநிரூபகம்பண்ணும் மாமேகநிஷ்டையாற் சாதிக்கப்படுவது.

மூன்றும்வாக்கியவுரை.- தற்பதம் துவம்பதம் அசிபதமென த்திரிவிதம். தற்பதத்துக்கருத்தம்.— உலகமுதற்பொருளேயென்னும் பாசுரத்திற்சொல்லிய ஆசீர்வாதப் பொருளாயும் அதனந்தரங்க வஸ்துவாயும் முப்பதமுடிவாயும் அதனது வாச்சிய லட்சிய பூரணமாயும் விளங்குவது. துவம்பதத்துக்கருத்தம்.— விஸ்வவிராடங்களுக்குவேறுகவிளங்கிய சாட்சிபூத சின்மாத்திர சொரூபம். அசிபதத்துக்கர்த்தம்.— பிர்மாத்மநிலையையுணர்த்தி அதுவே நீ நீயே அதுவென்னும் பிர்மாத்மவைக்கியத்தை உபதேசநிஷ்டையாற்சாதிக்கப்படுவது.

நான்காம்வாக்கியவுரை.—அயம்பதம் ஆத்மபதம் பிர்மபதமெனத்திரிவிதம். அவற்றுள்.—சுயம்பிரகாச வபரோட்ச சுபாவசொரூபம்:அயம்பதத்துக்கருத்தம்.—ஜெகத்காரணமாகிய மூலஸ்தம்பசொரூபம் ஆத்மபதத்துக்கருத்தம்.—நான்குவாக்கியங்களுக்குமுடிவாய்விளங்கிய ஏகமேவாத்விதப்பிர்மத்தை சுவாநுபூதி நிஷ்டையாற் சாட்சாத்கரிப்பது: பிர்மபதத்துக்கருத்தம்.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## பிரதிபத்திவாக்கியம்:

ஸ்ரீபகவான்வாசுதேவகுருப்பிர்மம் ஆசிரயிப்பவர்களைக்கைக்கொண்டு அவர்கள்அகத்திலும்புறத்திலுமிருந்து பூதப்பிரகிருதி கரணப்பிரகிருதி குணப்பிரகிருதி கருமப்பிரகிருதி மூலப்பிரகிருதியென்னும் பிரகிருதிபஞ்சக பரிச்சேததிமிரத்தைவிலக்கி தமது பரத்துவசௌலப்பியப் பிரபாதி லக்ஷணங்களை சம்பந்தானுரூபமாய் விரிக்கப்படுவது.

## பிரகிருதிபஞ்சகம்.

அஸ்தி மாம்ச சுக்கில சோணிதாதி அசுத்தமலங்களால் மறைக்கப்படுவது: பூதப்பிரகிருதி.— மனோபுத்தி சித்தாங்கார மென்னச் சதுர்விதபேதமாய்ச் சங்கல்ப நிச்சய சமுசய அபிமானநிரூபமாய்மறைக்கப்படுவது: கரணப்பிரகிருதி.- சாத்துவிக ராசத தாமதமென்னத்திரிவிதபேதமாய்சுத்த வசுத்த சுத்தாசுத் தகுணங்களால் மறைக்கப்படுவது: குணப்பிரகிருதி.— புண்ணிய பாவ மிசிரமென்னத் திரிவிதபேதமாய் சுக வசுக சுகாசுகரூபமாய் மறைக்கப்படுவது:கருமப்பிரகிருதி.-பூதகர்மகுணகரணாதி சர்வதந்திரபீஜமாய் அறிவறியாமைக்கிக்காரணபூதையாய் மகதாதிவிகாரத்தைப் பிறப்பித்தொடுக்குவதாய் அதன்மகிமையை யாவராலும் இத்தன்மையதென அளவிட்டறியக் கூடாததாயுமிருப்பது: மூலப்பிரகிருதி.

## பரத்துவலக்ஷணம்.

நித்த சுத்த புத்த முத்த சத்திய ஆனந்த அத்துவித பரப்பிர்ம அகம் அஸ்மியாதிகுணங்கள்.

நித்தலக்ஷணம்.— தேவமனுஷ நரகதிரியக்காதி சரீரத வதிஷ்டாதாவாகவிருந்து அவையாவையுந் தத்தங்கருமானுரூபமாய் நடத்தப்படுவது.

சுத்தலக்ஷணம்.— அனுர்தசடதுக்க அநித்தியகண்டவிகாராதி அநித்தியகுணங்களைப்பரிகரித்து ஆசிரயிப்பவர்கள் உஜ்ஜீவித்தற் பொருட்டு சத்துச்சித்தானந்த நித்தியபூரண குணாகாரமாய்விளங்குவது.

புத்தலக்ஷணம்.— பரமயோகிகளான மகாத்மாக்களிளிடத்து அவரவர்மனோரதப்படி தத்தம் நிர்த்தேசரூபமாயுள்ப்புகுந்து தினேதினே நவநவமாகச் சுடர்விட்டெரிப்பது.

முத்தலக்ஷணம்.— சருவாத்மாக்களுக்கும் அந்தரியாமியாய் சமஸ்தபிரபஞ்சத்துக்குங் கர்த்தாவாயுமிருந்து சருவஸ்திதிலயோற்பவாதி கிருத்தியங்களைநடாத்தியும் பிரத்தேகனாய் அவைற்றோடு பந்தப்படாமல் விலட்சணவிக்கிரகயுக்தனாகவிளங்குவது.

சத்தியலக்ஷணம்.—சற்கிருத்திய சந்நியாச சாஸ்திரபடனமென்கின்றசங்கல்பபத்திரயநிஷ்டை அதிதீவிரவைராக்கிய ஞான

சமாதியென்கின்றவிகல்ப்பத்திரையநிஷ்டை நிரானந்த நிரானந்த மோனசுபாவமென்கின்ற நிருவிகல்ப்பத்திரயநிஷ்டை இவ்வொன் பதுவிதமான நிஷ்டையை யதாப்பிரகாரஞ்சாதித்துக் கலக்கமறத் தெளிந்திருக்கின்ற பரமசாதுக்களினிடத்து எப்போதுமாறுப டாமல் ஒருதன்மையவாகவிருக்கின்ற பரமார்த்தசொரூபம்.

ஆனந்தலக்ஷணம்.— ஸ்ரீவாசுதேவினிடமாக சருவப்பிராணி களும் சருவப்பிராணிகளினிடமாக ஸ்ரீவாசுதேவும் பரஸ்பரம் அன்னியொன்னியமாகப்பிரிவற்றிருக்கின்ற சுகசொரூபத்தைக் கோரமூடவர்ச்சிதரான சாந்தமூர்த்திகள் சம்பந்தானுரூபமாய் ஆசிரயித்து சருவமும்சுகாகாரசுகோததியுருவாய்ரமிக்கப்படுவது.

அத்துவிதலக்ஷணம்.— சிட்டாசாரவிதிப்படி ஸ்ரீசற்குருவை யடைந்து அவனதுகடாக்ஷத்தால் சிரவண மனன தியான சமாதி சாக்ஷாத்காரமென்னும் நிஷ்டாபஞ்சகத்தைச்சாதித்து அதலை டைகின்ற தொய்தநிஷேதப்பிர்மம். அவற்றுள்.- சச்சிதானந்தபூர ணமென்னும் வஸ்துசொரூபத்தைச் சற்குருமுகோநாக்கேட்பது: சிரவணம். — சற்குருவாக்கியத்தைச் சுருதியுக்தியினுலாராச்சி செய்வது: மனனம்.— சிந்தனுவஸ்துவைக்கலக்கமறத்தெளிவது: தியானம்.—வஸ்துசொரூபமாயொருமித்திருப்பது: சமாதி.— சுக ஜானந்தநிஷ்டனுய்த் தடையற்றுவிளங்குவது: சாக்ஷாத்காரம்.

பரப்பிர்மலக்ஷணம்.— தொய்திகளுக்குப்பேதமாய் அத்து விதிகளுக்கபேதமாய் விசிஷ்டாத்துவிதிகளுக்குப்பேதாபேதமாய் சைவருக்குச் சிவமாய் வைஷ்ணவருக்கு விஷ்ணுவாய் அஞ்ஞக் கனுவாய் மகத்துக்கு மகத்தாய் அவரவரபிமதபூர்வகமாயிடங் கொடுத்தும் அவையாவுக்குமெட்டாத அகோசரசுயம்புவாயெல் லையற்றிருப்பது.

அகம்லக்ஷணம்.—சருவப்பிராணிகளென்னும் விவிதமணிகளை அகம்அகமென்னும் ஏகசூத்திரத்திற்கோர்வையிட்டு சருவாண்ட பந்திகளையும் ஊடுருவிநிற்கும் சூத்திராத்மாவாகிய ஸ்ரீபரமாத்ம தேவைப் பரமயோகிகளான மகத்துக்கள் தங்களுக்குள்ளேதெரி சித்து அவ்வனுபவதீர்க்கத்தாற் சருவமும் பரமாத்மதேவாகத் தெரிசிக்கப்படுவது.

அஸ்மிலக்ஷணம்.—நித்தோஸ்மி சுத்தோஸ்மி புத்தோஸ்மி முக்தோஸ்மி சத்தியோஸ்மி ஆனந்தோஸ்மி அத்துவிதோஸ்மி பரப்பிர்மோஸ்மி அகம் அஸ்மியென்னப் பலவாருகச்சாதித்து ஸ்ரீபகவான் பாண்டவமத்தியனுன அர்ச்சுனனைமுன்னிட்டு த்வம் அஸ்மியென்ன நிரூபித்து அவன் மமதகங்காரத்தைப்போக்கி மௌனமுத்திரையையனுக்கிரகம்பண்ணுவது.

## சௌலப்பியலக்ஷணம்.

வாத்சல்ய ஸ்வாமித்துவ சௌசீல்ய சௌலப்பிய அபேக்ஷித ப்ரபுத்துவ மென்கின்ற தெய்வீகலக்ஷணமும் புண்ணியத்தோற்றம் இயற்கைசற்குணம் மிருதுசரித்திரம் லோகாசரணம் ஆசிரத ரட்சகம் புருஷோத்தமமென்கின்ற மனுஷீகலக்ஷணமும் ஒருமித்து தெய்வீகமனுஷீகரூபமாய்ச்சந்நிதிபண்ணிக்கொண்டு சதா ஆசிரதவரவுபார்த்திருக்கின்ற வாசுதேவகுருப்பிர்மம்.

## தெய்வீகலக்ஷணம்.

வாத்சல்யம்.—தோஷகுணங்களைப்பாராமல்ஆசிரயரட்சணம் பண்ணப்படுவது. சுவாமித்துவம்.— ஆசிரதகாரியங்களை ஏறிட்டுக்கொண்டு தன்னதென்னச்செய்யத்துணிவது. சௌசீல்யம்.— சுவாமித்துவத்தைக்கண்டகலாமற்பணியாளாகநின்று ஆசிரதவர்க்கங்களினது அக்ஞான சுதந்தர ஆசைஅபிமானுதிபாவச்சேற்றைச் சுத்திகரித்து சுக்ஞான பரிசுத்த சுகிர்த மோக்ஷ ஐக்கிய சுசீலத்தோடகலாதிருப்பது. சௌலப்பியம்.—கண்டுபற்றுதற்கேதுவாக ஆசிரதவரையிற் கட்டுப்பட்டு அவ்ரவரளவைக்களவையாகத்தன்னைத்தளர்த்திக்கொடுப்பது. அபேக்ஷிதம்.— பலப்பிரதரூபமாகப் பரமசுகிர்தத்தைவெளிப்படுத்தி அவரவரிஷ்டபூர்த்தியைச்செய்யப்படுவது. பிரபுத்துவம்.—ஞான சக்தி பல ஐஸ்வரிய விரியதேஜஸாதி நித்தியசம்பத்துக்கள் நினக்கேயுரியதென்னத்தெரிவித்து அதனைச் சமயோசிதமாகவும் அதிகாரானுரூபமாகவும் பருவம் பார்த்துக்கொடுக்கப்படுவது.

## மனுஷீகலக்ஷணம்.

புண்ணியத்தோற்றம்.—ஞானகர்மோபாசக சிரேஷ்டமான சந்ததியிலவதரிக்கப்படுவது. இயற்கைசற்குணம்.—கருவிலேதிரு

வுடையராய் பரிசுத்தம் நீதி விவேகம் இரக்கம் மாறுமை அன்பு சத்தியமுதலிய நற்குணங்களாற்பிரகாசிக்கப்படுவது. மிருதுசரித்திரம்.— தவம் மகம் தீர்த்தம் சேவை அர்ச்சனை தானவிரதாதி சற்கிருத்தியங்களை யாவரும்வெறுவாமற்பின்றொடரும்படி பொதுப்பக்ஷமாய் சுவபரசுகமாகநடத்தப்படுவது. லோகாசரணம்.— கிருதகிருத்தியனாகவிருந்தும் ஆசிரதவரையிற்கட்டுப்பட்டு படனாதி தர்மாதி சரிதாதிமுதலிய உபகாரஸ்மிருதியைநடத்தப்படுவது.

படனாதி.—களாபடனம் விகாதாகாரம் தத்துவவாராச்சியம் நிர்க்கததண்டனம் சந்தேகநிவாரணம் அன்னியகுணசமனம் பரதிரிதானயோகம் பரார்த்ததெய்வப்பிரார்த்திதமென்ன அஷ்டபேதமாகவிருப்பது. அவற்றுள்.-ஆசிரயிப்பவர்களுக்குச் சத்சாஸ்திரங்களைப்போதித்துவைப்பது: களாபடனம்.— புண்ணியகுருவாய்மூர்த்திகரித்திருப்பது: விகாதாகாரம்.— பரப்பிர்மதத்துவத்தைத்தெளியச்செய்வது: தத்துவவாராச்சியம்.— ஆசிரயிப்பவரை நரகவழியிற்செல்லாதுசிக்ஷிக்கப்படுவது: நிர்க்கததண்டனம்.-ஆசிரயிப்பவர்களுக்குச் சருவசந்தேகங்களையும் நிவர்த்திக்கப்படுவது: சந்தேகநிவாரணம்.— ஆசிரதரநேக அபராதங்களைச்செய்தாலும் அதைப்பொருத்துக்கொள்வது: அன்னியகுணசமனம்.— தான் ஒருகுற்றங்களையும் ஆசிரயிப்பவர்க்கு முக்கரணத்தாலுஞ்செய்யாதிருப்பது: பரதிரிதானயோகம்.— ஆசிரயிப்பவர்கள் கிருதார்த்தராகும்பொருட்டு சதா வாசுதேவினிடத்தில் பிரார்த்திக்கப்படுவது: பரார்த்ததெய்வப்பிரார்த்திதம்.

தர்மாதி. — அறம் ஐயப்படாமை அவாவொன்றின்மை அறிவுவுவர்ப்பின்மை மூடமறுத்தல் அழிந்தோரைநிலைநிறுத்தல் அறுசமயத்தவர்க்கன்புரல் அறத்தைவிளக்கலென்னும் அஷ்டபேதமாகவிருப்பது. அவற்றுள்.—வர்ணாதிவிதியிற்கட்டுப்பட்டிருப்பது:அறம்.-அதிஷ்டானவஸ்துவில் நிர்ச்சந்தேகனாகவிருப்பது: ஐயப்படாமை.— சமஸ்தகாரியங்களிலும் நிராசாபரனாயிருப்பது: அவாவொன்றின்மை.—துவள்ச்சியில்லாத ஞானதீரனாயிருப்பது: அறிவுவுவர்ப்பின்மை.— அறியாமையைச்சேதிக்கப்படுவது: மூடமறுத்தல். -க்ஷீரணித்தவர்களை க்ஷீரணோத்தாரணம் பண்ணுவது:அழிந்தோரைநிலைநிறுத்தல்.— சற்றேனும்வைசம்மியமில்லா

மல் சட்சமயத்தவர்களும் சிநேகமாம்படி பொருத்தமுடையனாயிருப்பது: அறுசமயத்தவர்க்கன்புறல்.— சமஸ்தமான தர்மங்களையும் பிரகாசப்படுத்துவது: அறத்தைவிளக்கல்.

சரிதாதி.—மெத்தனச்சரித்தல் சித்தத்தாறுதல் தெய்வவொருப்படல் தீர்க்காலோசனை இச்சையடக்கம் பொறுப்பக்ஷமென்னச் சட்பேதமாகவிருப்பது. அவற்றுள்.—உலகநடையையனுசரித்துமிருதுவாகநடக்கப்படுவது: மெத்தனச்சரித்தல்.—மனதில் சருவவருத்தமும்நீங்கி விஸ்ராந்தியுடையனாயிருப்பது: சித்தத்தாறுதல்.—வாசுதேவபரப்பிர்மம் ஒருவனே நமக்குரக்ஷகனென்றெண்ணியிருப்பது: தெய்வவொருப்படல்.— ஒரு காரியத்தில் பிரவேசித்தபின்பு மாறுபடாமல் பிரவேசிப்பதற்குமுன்னமே நன்றாய்ப் பரியாலோசனைபண்ணி அக்காரியங்களிற் பிரவேசிப்பது: தீர்க்காலோசனை.— மனச்சட்சுராதிகளைப் பாவவழியிற்செல்லாமற் சிக்ஷிக்கப்படுவது: இச்சையடக்கம்.— தன்னிடத்திலுள்ள அபிமானத்தைப்போல சருவப்பிராணிகளிடத்தும் அபிமானமுடையனாயிருப்பது: பொறுப்பக்ஷம்.

ஆசிரதரக்ஷகம்.—ஒருவனே கடவுளென்றும் அவ்வொருவனைப்பற்றிச்சாதிப்பதே வேதமென்றும் அவ்வொருமையை விதிபூர்வகமாக மாமேகநிஷ்டையாற் சாதித்துக்காட்டுபவனே சற்குருவென்றும் அவனடியிற் சரணமாகவடைந்திருப்பவர்களே நித்தியவாசிகளென்றும் அவர்களது ஸ்ரீபாதரேணுவே அலங்காரசிரோபூஷணமென்றும் அவர்களது கைங்கிரியமே நித்தியானந்தப்பிராப்தியென்றும் யாவரும் எளிதிலுணர்ந்து உஜ்ஜீவிக்கும்படி தமதுநிச்சிதசுவாநுபவத்தை வெளிப்படையாகக்காட்டப்படுவது.

புருஷோத்தமம்.— வாசுதேவசத்தையைச் சங்கிரகித்துக்கொண்டு ஏகமேவ சுபாவசொரூபத்தை நிருவாணநிஷ்டையாற் சாதித்துக்காட்டுவது.

## சம்பந்தம்.

பர்த்துருபாரியா பிதாபுத்திர ரக்ஷியரக்ஷிக சேஷிசேஷ ஞாதுருக்ஞேய சொத்சுவாமித்துவ சரீரசரீர ஆதாரஆதேய போக்துருபோக்கியமும்போலச் சருவாத்மாக்களிடத்து ஸ்ரீவாசு

தேவும் ஸ்ரீவாசுதேவனிடத்துஞ் சருவாத்மாக்களும் எப்போதும் பிரிவில்லாது பரஸ்பரம் அன்னியோன்னியமாகவிருக்கின்ற சுக சொரூபத்தைச் சம்பந்தானுரூபமாகத்தெரிந்து ஸ்ரீசற்குருமூகமாயடையப்படுவது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணயகுருப்பிர்மணே நம:



உ

ஹரி: ஓம்.

ஸ்ரீபரமசற்குருவே நம:



## திருவருள்வாக்கியம்.

அகண்டபரிபூரணசச்சிதானந்தபரசிவம் ஆசிரகருஞ்ஜீவித்தற்பொருட்டு ஸ்ரீசற்குருமூர்த்தமாயெழுந்தருளி வேதாகமப் பொருளைவிரித்து சருவார்த்தசாரமான தமதுநிசசொரூபத்தை அவர்களுக்கு நிரோதுவாகக்கொடுத்து ரக்ஷிக்கப்படுவது.

## வேதப்பொருள்.

சுசாதிக விசாதிக சுகதபேதமற்று சமஸ்தவேதங்களுக்கும் முடிவாய்விளங்கும் ஏகமேவாத்துவிதப்பிர்மத்தைச் சுருதிபூர்வகமாக அதத்துவாவிருத்தி தடஸ்த சொரூபமென்னும் லக்ஷணாத்திரய துவாதசஅங்கங்களால் நிரூபிக்கப்படுவது. சுருதி.—ஏகமேவாத்விதீயமென்னும் வாக்கியத்திற்கு ஏக ஏவ அத்விதீயமென்னும் பதத்திரயத்தையும் ஐக்கிய அவதாரணை தொய்தநிஷேதமென்னும் அர்த்தத்திரயத்தையும் விளக்கி சமஸ்தவேதப்பொருளாகிய ஏகமேவாத்விதப்பிர்மத்தை நிரூபிக்கப்படுவது. அதத்துவாவிருத்திலக்ஷணை.— தேகாதியநாத்மவர்க்கங்களை நிஷேதபண்ணி நின்ற ஆத்மனையறிவிப்பது. தடஸ்தலக்ஷணை.—சாகாசந்திரநியாயத்தால் பூதாதிஜகத்காரணமாகவிளங்கிய பரமாத்மாவை யறிவிப்பது. சொரூபலக்ஷணை.— சூரியனுக்குப் பிரகாசமேவடிவமென்பதுபோலச் சத்துஞ் சித்து ஆனந்தம் நித்தியம் பூரணமென்னும் பஞ்சலக்ஷணங்களாற்சருவமும்பிர்மசொரூபமெனத்தெரிவிப்பது

சத்து.—வியாவகாரிகசத்து பிராதிபாதிகசத்து பாரமார்த்திகசத்தெனத்திரிவிதம். அவற்றுள்.— சுழுத்திமூர்ச்சையிற்றேன்றுது எழுந்தபோதுமுன்போலத்தோன்றுவது: வியாவகாரிகசத்து.— சொப்பன காலத்துதித்து விழித்தகாலத்து நசிக்கப்படுவது: பிராதிபாதிகசத்து. — சமஸ்தகற்பனைக்கும் அதிஷ்டானமாய்த் தோன்றுதடங்காதிருக்கிற பிர்மசத்தே: பாரமார்த்திகசத்து.

சித்து.—ஒருசித்தே சிவ ஈஸ்வர கூடஸ்த பிர்மமெனச் சதுர்விதம். அவற்றுள்.—வியஷ்டியபிமானியே: சிவசித்து.—சமஷ்டியபிமானியே: ஈஸ்வரசித்து.— அதிஷ்டானபரமேஸ்வரனே: கூடஸ்தசித்து.—பரிபூரணவியாபகசைதன்யமே: பிர்மசித்து.

ஆனந்தம்.—லீலாசுகம் நித்தியசுகம் பூரணசுகமெனத் திரிவிதபேதமாயிருப்பது. லீலாசுகம்.— நாடகசபையைப்போல தனதாரபுவிபுத்திராதி கருமசங்கேதங்களாகச்சேர்ந்துசதாபிரதிபந்தகத்தோடுங்கூடிய அல்ப்பசுகத்தையனுபவித்துத்தத்தங்கருமானுரூபமாகப் பிரிந்தோடப்படுவது. நித்தியசுகம்.— சர்வாத்மப்பிரபுவான ஸ்ரீபரமசற்குருவினது திருவடிசம்பந்தம்பெற்று எப்போதுமாறுபடாத சத்தியசுகிகளாக மேல்வீடுபெற்று சம்பந்தானுரூபமாக நித்தியவாழ்வையடையப்படுவது. பூரணசுகம்.—சிந்தையிலெழுந்துததும்பி ஜெகசீவபாத்தைநிறைத்து அந்தமில்லாமற்றேங்கி இவ்வானந்தம் வந்தமகிழ்ச்சியை ஒருவரோடும் சொல்வதற்குக்கிட்டாமல் தன்யோஸ்மிதன்யோஸ்மியென்னும் வாக்கியகோஷ்ட ஆனந்தாவேஷ நிர்த்தனராய் அகாரணமாக இப்படிச்செய்தருளிய சருவேஸ்வரனது கிருபாமகிமையை பிராரம்பாதிசமாப்தபரியந்தம் நினைத்து நினைத்து சதாஸ்தௌத்தியம்பண்ணிக்கொண்டிருப்பது.

நித்தியம்.—பிராக பிரத்தொம்ச அன்னியொன்னிய அத்தியந்தமென்னும் நான்கபாவமுமற்றுப் பூருவமாய்ப் பௌஷதியாய் பரஸ்பரமாய்ச் சதோதிதமாயிருப்பது.

பூரணம்.-தேசகாலவஸ்துவாதிகளாற் பரிச்சேதிக்கப்படாமல் சருவவியாபியாய் எல்லையற்றிருப்பது.

## அங்கம்.

ஸ்ரீமுக வியாக்யான அந்நுவய அநுபந்த விதித்துவ அதிகார மோக்ஷ உபாய தேசிக உபதேசப் பிரமாண சம்மதமென்ன துவாதசம்.

ஸ்ரீமுகம்.—நூல்முகத்திற்சொல்லும் ஆசிர்வாத நமஸ்கார வஸ்துநிர்த்தேசமென்னும் மங்களாசரணத்தைத்தெளிந்து நிர்த்தேசப்பொருளைக்கோசரித்து வாழ்த்துவணக்குரூபமாய்த் துதி செய்யப்படுவது.

வியாக்யானம்.— பத பதார்த்த வாக்கியயோசனைபரீக்ஷை பரிகாரமென்றைந்துபேதமாகநிரூபிப்பது. அவற்றுள்.- அர்த்த விரோதம் வாராமல் முன்னும்பின்னும் ஆலோசித்துப் பாசுர மொழியைப்பகுத்துக்காட்டுவது: பதம்.— பகுத்தபதங்களை அந்நுவயக்கிரமமாய்ச்சேர்த்து அந்தப்பதத்தினுக்குரியபொருளைப் பிரகாசப்படுத்துவது: பதார்த்தம்.-வாக்கியத்தைப் பதங்களாகப் பிரித்தும் பதங்களை வாக்கியங்களாகச்சேர்த்தும் இந்தவாக்கியத்துக்கிதுபொருளென்று தீர்க்கமாகப் பரியாலோசனைபண்ணுவது: வாக்கியயோசனை.-வாக்கியசமூகங்களை ஆசிரயிப்பவர்க்குப் போதமாம்படி சங்கியாரூபமாகத்தொகுத்து வினவுதல்செய்வது: பரீக்ஷை.—வினவியசங்கைக்கு உத்தரரூபமாய்ச் சமாதானஞ்சொல்லி தத்துவார்த்தத்தை வெளிப்படுத்துவது: பரிகாரம்.

அந்நுவயம்.—கர்த்தகருமக்கிரிகையைத்தொகுத்து விசேஷியனனசத்தனுக்கு விசேஷணரூபமாய்ச்சம்பந்தப்படுத்துவது.

அநுபந்தம்.—விஷய சம்பந்த பிரயோஜன அதிகாரமென்ன நான்குபிரகாரமாக நிரூபிப்பது. அவற்றுள். சிவேஸ்வரஐக்கியமே: விஷயம்.— அவ்வைக்கியப்பிர்மத்தை சாஸ்திரபூர்வகமாக பரஸ்பரம் ஏகீகப்படுத்துவது: சம்பந்தம்.—துக்கநிவர்த்தி தடையற்றவானந்தமே: பிரயோஜனம்.—விவேக விராக சம்பத்து முமூக்ஷுத்துவமென்னுஞ் சாதனசதுஷ்டயமுடையவன்:அதிகாரி.— நித்தியவஸ்து அநித்தியவஸ்துவைப்பகுத்தறிவது: விவேகம்.-இக லோக பரலோகங்களிலுள்ள அர்த்தபலபோகங்களினிடத்திலிச்சையற்றிருப்பது: விராகம்.—சம தம திதீக்ஷை உபரதி சிரத்தை

சமாதானம்: சம்பத்து. அவற்றுள்.—அகக்கரண நிக்ஷேயே: சமம்.—புறக்கரண நிக்ஷேயே: தமம்.—சுகதுக்க சகனமே: திதீக்ஷை.—சருவகருமப்பரித்தியாகமே: உபரதி.—சற்குரு சாஸ்திரப் பிரீதியே: சிரத்தை.—சற்குருவாக்கியப்படி அமைந்துநிற்பதே: சமாதானம்.—தாபத்திரயாக்கினிக்குச் சகிக்கமாட்டாமல் ஈஷணாத்திரயங்களை ஊடுருவிக்கொண்டு மோக்ஷப்பிரீதியுடையவனாக சற்குருசேவைபண்ணுவது: முமுக்ஷுத்துவம்.

விதிவத்துவம்.—ஆத்தம் அங்கம் தானம் சத்பாவமென்னச் சதுர்விதம். அவற்றுள்:— சகலகுணசம்பூரணனான சற்குருவுக்கு அநுகூலக்கிரிகையைச் செய்வது: ஆத்தம்.— சற்குருவினுல்விய மிக்கும் ஏவல்பணிவிடைகளைச் செய்தற்கெச்சரிக்கையாயிருப்பது: அங்கம்.—தனுகரணபுவனபோகங்களை சற்குருவுக்குரியதாகப் பாதுகாப்பது: தானம்.— சற்குருவைப் பிரத்தியக்ஷ பரமேஸ்வரனுக நம்புவது: சத்பாவம்.

அதிகாரம்.—கருமகாண்டி பக்திகாண்டி ஞானகாண்டி யெனத் திரிவிதம். அவற்றுள்.—ஆகமமதுருவாய் வர்ணாச்சிரமதருமங்களை வழுவாமல் நடத்துபவன்: கருமகாண்டி.—பரித்தியாக பலத்தியாக அற்பண அவதானுதி ரூபத்தால் சகலகருமங்களையும் ஈஸ்வரப்பிரீதி பண்ணுபவன்: பக்திகாண்டி.—அகங்காரபந்திகள் வர்ச்சித்து கிருத்தியாகிருத்திய சாக்ஷியாய்விளங்குபவன்: ஞானகாண்டி.

மோக்ஷம்.—கருமி முமுக்ஷு அப்பியாசி அநுபவி ஆரூடனென்ன ஐவகை. அவற்றுள்.-வர்ணாச்சிரமவிதிப்படிநடந்து நூறு ஜென்மத்தில் மோக்ஷமடைபவன்: கருமி.-சத்தியலோகத்தை நித்திய பாவனைபண்ணிப் புறக்கரும நிஷ்டனாய் மூன்றுஜென்மத்தில் மோக்ஷமடைபவன்: முமுக்ஷு.- பரமாத்மவிவேகத்தாற் கற்பனரூப அநர்த்தோஷத்தைக்கண்டு இரண்டுஜென்மத்தில் மோக்ஷமடைபவன்: அப்பியாசி.— விவேகபூரணனாய்ப் பந்த மோக்ஷ வியவகாரங்களைமறந்து ஏகஜென்மத்தில் மோக்ஷமடைபவன்: அநுபவி.— விவிததிருஷ்டி விசாரதிருஷ்டியிற்றோற்றும் பேதவபேதமுழுமையும் வர்ச்சித்து சகஜானந்தநிஷ்டனாய் அவாங்மனோகோசரமாய் விளங்குபவன்: ஆரூடன்.

உபாயம்.—விவேகம் விரக்தி தெய்வகதியெனத்திரிவிதம். அவற்றுள்.-சற்குருவையடைந்து ஆத்மவநாத்மாவைப்பகுத்துப் பிரபஞ்சமூலம் விசாரிப்பது: விவேகம்.- அநித்தியதோஷத்தைக் கண்டு நித்தியவிசாரம்பண்ணுவது: விரக்தி.— அமானவவாசகத் தினாற்றெளிந்து சுக்ஞானநிஷ்டனாய் விளங்குவது: தெய்வகதி.

தேசிகன்.—சிடபேதத்தாற் போதக வேதக நிஷித காமிய சூசக வாசக காரக விகிதனென்ன அஷ்டவிதம். அவற்றுள்.- சாஸ் திரார்த்தங்களை அனுக்கிரகிப்பவன்: போதககுரு.- தத்துவார்த் தங்களைவெளிப்படுத்துபவன்: வேதககுரு.— வசியம் பேதனம் மோகனம் ஸ்தம்பனம் ஆகருஷணம் உச்சாடனம் வித்துவேஷ ணம் மாரணமென்னும் அஷ்டகர்மவிஷயத்தினால் இம்மையிலின்ப மும் மறுமையில்நரகத்தையுங் கொடுப்பவன்: நிஷிதகுரு.- தர்ம போதகத்தினால் இகபரசுகத்தைக் கொடுப்பவன்:காமியகுரு.- சம தமாதிகுணங்களைத் தொகுத்துக் காட்டுபவன்: சூசககுரு.— அநர் தவிஷயத்தைப்போக்கிப் பரமார்த்த விருப்பமுறச்செய்பவன்: வாசககுரு.— சிவேஸ்வரஐக்கியத்தை வெளிப்படுத்துபவன்: காரக குரு. — சத்தியோன்முத்தியைச் சாட்சாத்காரமாக நிரூபித்துக் காட்டுபவன்: விகிதகுரு.

உபதேசம்.—உத்தேசம் இலக்கணம் சோதனையெனத் திரி விதம். அவற்றுள். — தத்துவார்த்தத்தைச் சத்தாமாத்திரமாக அநுக்கிரகிப்பது: உத்தேசம்.- பசுவுக்குப்பிரதானலக்ஷணம் களை கம்பளமென்பதுபோல ஆத்மாவுக்குச் சத்துச்சித்தானந்த நித்திய பூரணமென்னும் முக்கியலக்ஷணத்தை எடுத்துக்காட்டுவது:இலக்க ணம்.- சுவாநுபூதிநிஷ்டையினாற் பரீக்ஷித்துக்காட்டுவது:சோதனை

பிரமாணம்.- பிரத்தியக்ஷம் அநுமானம் ஆகமம் உபமானம் அருத்தாபத்தி அபாவம் ஐதீகம் சம்பவமென அஷ்டவிதம்.-அவற் றுள்.—சந்தேக விபரீத யதார்த்தமெனப்பிரத்தியட்சந்திரிவிதம் கட்டையைக்கண்டு கள்ளனோ தறியோவென்பது: சந்தேகப் பிரத்தியட்சம்.— கட்டையைக்கள்ளனென்றுநிச்சயிப்பது: விப ரீதப்பிரத்தியக்ஷம்.- கட்டையைக் கட்டையென்றறிவது: யதார் த்தப்பிரத்தியக்ஷம்.— புகையைக்கண்டு நெருப்புண்டென்பது: அநுமானம்.— அது பிரதிக்ஞை, ஹேது திருஷ்டாந்தமென்னத்

திரிவிதம். - பருவதம் அழலுடைத்தென்பது: பிரதிக்ஞை.- புகையுண்மையினா லென்பது: ஹேது. — மடைப்பள்ளிபோலென்பது: திருஷ்டாந்தம். ஆகமம். — வித்தையா விநய வைராக்கிய சற்குண சம்பன்னனான ஆப்தவாக்கியத்தை யுறுதியாக நம்புவது. உபமானம்.— அரண்யபுருஷனாற் பசுப்போலிருக்கும் மரையென்பதைக்கேட்டு அவ்வரண்யத்திற் பிரத்தியக்ஷமாகக் காணப்படுவது. அருத்தாபத்தி. — காணருத்தாபத்தி கேள்வியருத்தாபத்தியென இருவகை.—உபவாசியென்று சாதிப்பவனுடைய தேகபீனத்துவத்தைக்கண்டு உணவையொளித்துண்பானெனப் பொருள்கொள்வது: காணருத்தாபத்தி.—தேவதத்தன் கிரகத்திலில்லையென்றால் மற்றொருவிடத்திலிருப்பானெனப் பொருள்கொள்வது: கேள்வியருத்தாபத்தி. அபாவம். — பிராகபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னியோன்னியாபாவம் அத்தியந்தாபாவமென்னச் சதுர்விதம்.- குயவன் றிருகைமண்ணைப்பார்த்துக் கடமுன்னில்லையென்பது: பிராகபாவம்.— முன்னுண்டானகடம் பின்னில்லையென்பது: பிரத்தொம்சாபாவம்.- கடத்திற்படமும் படத்திற்கடமுமில்லையென்பது: அன்னியோன்னியாபாவம்.— ககனாரவிந்தம் ஒருக்காலுமில்லையென்பது: அத்தியந்தாபாவம்.-இவ்வடவிருட்சத்தில் யட்சனிருப்பானென்னும் லோகவார்த்தையால் யட்சவிஷயக்ஞானமே: ஐதீகம்.— சகஸ்திரசங்கியையிற் சதசங்கியாக்ஞானமே: சம்பவம்.

சம்மதம்.— லோகாயுதனுக்குப் பிரத்தியட்சப்பிரமாணம் ஒன்றும் சைனபுத்தவைசேடியர்களுக் கனுமானத்தோடிரண்டும் சாங்கியருக்கு ஆகமத்தோடு மூன்றும் நையாயிகருக்கு உபமானத்தோடு நான்கும் பாட்டப்பிரபாகரருக்கு அருத்தாபத்தியோடைந்தும் வேதாந்திகளுக்கபாவத்தோடாறும் பௌராணிகருக்கைதீக சம்பவத்தோ டெட்டுப்பிரமாணமும் அங்கீகரிக்கப்படுவது.

## ஆகமப்பொருள்.

சகலாகமசாரசங்கிரகமான சிவக்ஞானபோதம் சத்தியமார்க்க தீபிகை முதலான சித்தாந்தசாஸ்திரரூபமாய் வெளியிடப்படுவது.

சிவக்ஞானபோதம்.- துவாதசசூத்திரரூபமாயும் சிவக்ஞானபோதமென்னும் வாக்கியத்திற்கு சிவம் ஞானம் போதமென்

கின்ற பதத்திரயத்தையும். சிவமென்பது: ஏகம்.—அதனையதாப் பிரகாரந்தெரிந்துகொள்வது: ஞானம்.—மமதகங்காரவர்ச்சிதராய் அதனைத்தெரிந்தபடியே தெளிந்திருப்பது போதமென்கின்ற அர்த்தத்திரயத்தையும்விளக்கி சமஸ்தவேதாகமங்களுக்கும்நாமே பொருளென்று நம் வாதவூரடிகளுக்கு அனுக்கிரகம்பண்ணுவது.

சத்தியமார்க்கதீபிகை.—ஸ்ரீசம்பந்த தத்துவராயகுருவினால் அனுக்கிரகித்த சட்சூத்திரரூபமாயும் தத்துவரூபம் தத்துவதெரிசனம் தத்துவசுத்தி ஆத்மரூபம்ஆத்மதெரிசனம் ஆத்மசுத்தி சிவரூபம் சிவதெரிசனம் சிவயோகம் சிவபோகமென்கின்ற தசலட்சண நிரூபிதமாயுமிருப்பது. அவற்றுள். - பிருதிவிதத்துவமுதல் நாததத்துவபரியந்தம் தனித்தனியேகாண்பது: தத்துவரூபம்.—அதனை மலத்திரய சடத்துவாகாரமாய்க்காண்பது: தத்துவதெரிசனம்.-சற்குருகடாட்சத்தினால் நீக்கப்படுவது: தத்துவசுத்தி. அக்ஞானவிருளைச்சிதைத்துச் சுக்ஞானசொரூபமாய்க் காண்பது: ஆத்மரூபம்.-தற்செயலற்றிருப்பது: ஆத்மதெரிசனம்.-ததபாவநிலையிற்றோற்றும்சிவசொரூபத்தைச்சுட்டாதிருப்பது: ஆத்மசுத்தி.-ஒருவனே பஞ்சகிருத்திய பராபரப்பிர்மமென அனுபவநிச்சிதமாய்த் தெளிந்திருப்பது:சிவரூபம்.-சுட்டுதலற்று அற்புதாகாரமாய் விளங்குவது: சிவதெரிசனம்.- கிருத்தியாகிருத்தியங்களைத் திருவருளாலே நடத்தக்கண்டு சித்தசலனத்தைமாற்றி சிவானந்தவாரிதியிற்படிந்திருப்பது: சிவயோகம்.-ஆசிரயவிஷயத்திற்பக்குவாபக்குவம்பாராதே ததாகாரமாகவிழுங்குவது: சிவபோகம்.

## நிசசொரூபம்.

அகம் பிரபஞ்சாத்மகப்பிர்மம் அகம் ஏகமேவாத்விதப்பிர்மம் அகம் பாவாபாவாதீதப்பிர்மம் அகம் சுவாநுபவாதீதப்பிர்மமென்னும் சமஸ்தசுருதிசாரப்பொருளாகிய வாக்கிய சதுஷ்டயரூபமாய் தமதுயதார்த்தசொரூபத்தைவிளக்கி ஆசிரயிப்பவர்களுக்குத் தன்னைப்பூரியாகக்கொடுக்கப்படுவது.

அகம் பிரபஞ்சாத்மகப்பிர்மம்.—விருத்திபட்சத்தையங்கீகரித்து பரிணம ஆரம்ப விவர்த்தமென்னும் பட்சத்திரயத்தைவிலக்கி சமுத்திரதரங்கநியாயத்தால் நமதிடத்தில் ஜெகத்துருவாய்த் தோற்றி விரிந்திருக்கின்ற வர்ணுதிபேதமுழுதும் பிர்மம் அவை

யாவும் நமதுசொரூபமென்றுணர்த்துவது. அகம் ஏகமேவாத்விதப்பிர்மம்.—பேதத்திரய பிராந்திஜென்னிய அபாவசதுஷ்டய மிருத்திகாபேதமெனப் போதகரூபத்தாற்சாதிக்கும் பிரபஞ்ச பரிச்சேதத்தைத் தியச்சித்து ஏகமேவாத்விதப்பிர்மமே நாமென்றுணர்த்துவது. அகம் பாவாபாவாதீதப்பிர்மம்.— அதிஷ்டான ஆரோபத்தைத் தியச்சித்து சர்வமும் சிவாகாரமாய்விளங்கிய தொந்துவரகிததொய்தநிஷேதப்பிர்மமே நாமென்றுணர்த்துவது அகம் சுவாநுபவாதீதப்பிர்மம்.— சின்மய சிவமய திரிசிய சூனிய கல்ப்பவிகல்ப்ப நித்த வநித்தமெனப் பிர்மாப்பியாசிகளாற்சாதிக்கும் நிஷ்டாசாதனங்களைத்தியச்சித்து அதனது சாத்தியப் பொருளாகிய சுவாநுபவவதீதப்பிர்மமே நாமென்றுணர்த்துவது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



உ

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## பகவத்வாக்கியம்.

ஸ்ரீபகவான் கரும பக்தி ஞானத்துவாரா தத்துவரூபத்தைப் பூருவகீதையினுல்த்துலக்கி உத்தரகீதையினுல்ப் பரிபூர்த்திபண்ண அதனைச்சாதித்தடைதற்கசக்தனுகை சரணுகதிபண்ணிய அர்ச்சுனனுக்கு மூலகற்பார்த்தத்தைப் பிரத்தியக்ஷமாக்கி நித்தியகைங்கிரியத்தை நியமித்தருளினுனென்றுணர்த்திய ராஜராஜேஸ்வரனை பர்த்தாவை ராஜநாயகிமுதலிய தேவிமாரும் மற்றய புத்திர தாச பரிசன பரிவாராதிகளும் இவனே அந்த கிருஷ்ணபரமாத்மாவென்னத்தெளிந்து அவனடிக்கமலங்களுக்கு நமோநம: வென்று சேவித்து நவநவமாகஆராதிக்க அவர்களுக்கு ஸ்ரீபகவான் மூலகற்பதனத்தைக்கொடுத்து நித்தியகைங்கிரியத்தை நியமிக்கப்படுவது

## பூர்வகீதை.

சம்பூரணநிச்சிதமான மூலகர்ப்பார்த்தத்தை நெஞ்சில்வைத்துக்கொண்டு கிரந்தமூலத்திற்கிசைய அத்துவித தொய்த விசிஷ்டமென்னும் பக்ஷத்திரயவியாக்யானதாற்பரியத்தை ஒருபிரகாரஞ் சொல்லத்தொடங்கி இவ்விடத்தில் சீவாத்ம பரமாத்மாவுக்கு அபேதத்தைச்சாதிக்கும் அத்துவிததாற்பரியத்தை முதலிடைகடையென்ன மூவாறுபேதமாக நிரூபிக்கப்படுவது.

### முதலாறு.

ஆரம்பம் சாங்கியம் தேவபூசை சம்பிரதாயம் சந்நியாசம் அப்பியாசமென்னக் கருமத்தைச் சட்பிரகாரமாக நிரூபிப்பது.

ஆரம்பம்.— குருபூமியிற் சருவசேனாமத்தியையிற் கிருஷ்ணசாரத்திய ரதாரோகண யுத்தசன்னாக தனுர்த்தண்டதாரியாய் நின்ற அர்ச்சுனன் பிதா பிராதா குரு மாமன்முதலிய சர்வஜனப் பிரீதியினால் அவர்களோடு யுத்தஞ்செய்தற்கஞ்சி சித்தப்பிராந்தனாய் இதுசெய்காரியம் இதுதவிர்காரியமென்பதுதெரியாமல் மதிமயங்கிக் கலக்கமுற்று மிருதசீவியாய்ப் பதைப்பற்றுக்கிடந்தவனைத்தேற்றிக் கிருஷ்ணாமிர்தவாசகசஞ்சீவியென்னும் கீதாபோதமகத்துவத்தாலுஜ்ஜீவிக்கத்தொடங்குவது.

சாங்கியம்.—நியம நிரூபித சரண ரக்ஷக தர்ம கர்ம ஞான நிச்சித சாந்தி ஆசிரயமென்னத் தசலட்சணங்களால் அர்ச்சுனனுக்கு நித்தியசீவனைக்கொடுத்து சித்தப்பிராந்தியை விசர்ச்சனம்பண்ணி அநித்தியசரீரதர்மத்தை அதன்யதாப்பிரகாரம் உணர்த்தப்படுவது.

நியமம்.—தீர்க்காலோசனைபண்ணி ஒருகாரியத்திற் பிரவேசிக்கவேணும் சௌரியமில்லாப் பேடியைப்போலும் சாஸ்திர ஆராய்ச்சிபண்ணா மூடனைப்போலும் பிரவேசித்தபிறகு ஆலோசிப்பது உன்போலொத்த புத்திமான்களுக்குத் தகுதியல்லவென்பது.

நிரூபிதம்.— சுவர்க்கபோகவபேட்சிதராய் இதோ வீராவேஷத்தோடெதிர்நிற்கும் வீஷ்மதுரோணாதிகளின் அபிமதத்தைத்தெரிந்து நீயும் ஜெயாபஜெயங்களைக்குறிக்காமல் யாவரானா

னும் சமர்முகத்திலெதிரிட்டபேரோடு யுத்தஞ்செய்வதே உனக்குத்தகுதியென்றுணர்த்துவது.

சரணம்.— இதராந்தரவர்ச்சிதனாய் ஸ்ரீவாசுதேவசற்குரு ஒருவனையே ரக்ஷகனாகவடைந்து இப்போ செய்காரியத்தைத் தெரிவித்து எப்போதும் நிர்ச்சலசித்தனாம்படி அடியேனைக் காப்பாற்றவேண்டுமென்று விக்ஞாபனம்பண்ணுவது.

ரக்ஷகம்.— பூத கரண குண கர்மரூபமான பதினான்குவிஷயங்களுக்குப் பிரத்தேகனாய் நித்தியனாகவிருக்கின்ற தனது நிசசொரூபத்தைத்தெரிவித்து சருவத்திரபாபங்களுக்கும் விலட்சணப்படுத்துவது.

தர்மம்.—சூத்திரனுக்குக்கைங்கிரியம் வைசியனுக்குவாணிச்சியம் பிராமணனுக்குப்பூசாகிருத்தியமும்போல க்ஷத்திரியனான உனக்கு சமர்முகத்தில் யுத்தம்பண்ணுவதே வேதவிதியென்பது.

கர்மம்.-பலப்பிரயோஜனத்தை இச்சியாமல் தர்மசூட்சத்தையறிந்து எந்தக்கருமத்தைச்சாதித்தால் இருவினைத்தொகுதியும் வர்ச்சிக்குமோ அந்தக்கருமத்தைத்தெரிந்து அதனையேசாதித்து அதன்பிரயோஜனமான நித்தியவாழ்வையடையப்படுவது.

ஞானம்.— சர்வஸ்திதிலயோற்பவ காரணபூதையாய் ஜெகசீவபரமுழுதும் ஒருபிரதேசத்திலடக்கிக்கொண்டு அவாங்மனோகோசரமாயிருக்கின்ற பரப்பிர்ம பரிபூரண வியாபகசைதன்யத்தைத்தெளிந்து நிர்ச்சந்தேகராகவிருக்கின்ற மகாத்துமாக்களுக்குப் பவபந்தரோகத்தை நிவர்த்திபண்ணுவது.

நிச்சயம்.—கர்மமே பிர்மமென்பது பூருவவேதம் ஞானமே பிர்மமென்பது உத்தரவேதம் பூருவோத்தரவிரோதமாகாமல் சர்வமும் பிர்மமயமெனச் சாதித்தடைவதே நமதாஞ்ஞையென்பது.

சாந்தி.—மமதகங்கார பரிச்சேத பாவமுழுதும் வர்ச்சித்து எப்போதும் நமதிடத்து நாட்டம் வைத்திருக்கின்ற பரமசாதுக்களினிதயப்பிரதேசத்தில் முளைத்து அன்பு அறிவு ஆராய்ச்சி தேற்றமுதலிய சத்தியசற்குணங்களாய்க்கிளைத்து சதாஆனந்தபோகத்தையபிவிர்த்திபண்ணுவது.

ஆசிரயம்.— சரீரமிருக்கும்போதே திரித்துவ திரியேகப் பொருளாகிய நமது நிசசொரூபத்தை யதாப்பிரகாரந் தெரிந் தடைபவர்கள் எவ்வளவும் ஆட்சேபணையில்லாமல் சரீராந்தத் திலும் என்னையே அடைவார்களென நிரூபிப்பது.

தேவபூசை.—சரீரத்துக்குப்பரம் இந்திரியம் இந்திரியத்துக் குப்பரம் மனம் மனதுக்குப்பரம் புத்தி புத்திக்கிப்பரமாகிய புரா தனதேவைத்தெரிந்து பாவவிலட்சணனாய் ஞானகருமமிரண்டை யும் விவேகித்து பூருவநியமம் சிருஷ்டிகவிதி சுருதிசம்மதம் ஜன காதிநிச்சயம் நமதனுபவப்படி நீயும் உன்விதிவைத்தான தர்மத்தைச் சாதிக்கில் அதுவே சர்வப்பிரயோஜனத்தைத்கொடுக்கின்ற தேவா ராதனமெனநிரூபிப்பது.

பூருவநியமம். — யாவராயினும் எப்போதும் எக்காலத்தும் தொந்துவரூபமான கருமத்தைச்செய்யாதாரில்லை ஆசாப்பிரவர்த் தனாயிருந்து செய்யுங்கருமத்தைச் செய்யாமல் விசர்ச்சிக்கில் ஞானகருமமிரண்டுங்கெட்டுப் பதிதனாய் எடுத்தஜென்மத்தை நஷ் டப்படுத்துகிறன் ஆனதால் சருவசிருஷ்டாவாகிய நாம் ஞான கருமமிரண்டும் சமமாய் அநாதியாகவே விதித்திருக்கிறோமென் பது.

சிருஷ்டிகவிதி.—மனுஷியாள் தேவர்களுக்கு யாகாதிகர்மத் தால்த் திருப்திபண்ணவும் தேவர்கள் மனுஷியாதிகளை மழையாதி ரூபத்தாற் காப்பாற்றவும் இருதிறத்தவரும் உஜ்ஜீவிப்பதற்குக் காரணபூதையாகிய தன்னை மமதகங்காரவர்ச்சிதராய் ஆசிரயிக்க வும் சிருஷ்டிகளைமுன்னிட்டுத் திரிலோகசிருஷ்டாவாகிய ஆதிபக வன்னுலும் விதித்திருக்கிறது.

சுருதிசம்மதம்.—உயிருணவாலும் உணவுமழையாலும் மழை தேவமகிழ்ச்சியாலும் தேவமகிழ்ச்சியாகாதிகர்மத்தாலும் யாகாதி கர்மத்தை வேதம்விதிப்பதாலும் வேதத்தையறிவது ஞானத் தாலும் எந்தவேதம் ஞானத்தைச்சாதிக்கிறதோ அந்தவேதமே கர்மத்தைச்சாதிப்பதனுலும் ஞானகருமமிரண்டும் சமமாகவனுஷ் டிப்பதே வேதவபிமதமென்பது.

ஜனகாதிநிச்சயம்.— பூருவம் ஜனகர்முதலிய மகத்துக்கள் ஞானபூரணராயிருந்தும் கர்மத்தையனுசரித்து நடந்து ஞானப்

பிரயோஜனமான மோக்ஷமும் கருமப்பிரயோஜனமான நித்திய வாழ்வும் பெற்றார்கள் அதுபோல் அடியடியாய் அநேகம்பேர் ஞானகருமமிரண்டும் சமமாகவனுஷ்டித்து இருவகைப்பிரயோஜனமும் இம்மையிலேயே சித்திக்கப்பெற்று மறுமையிலும் அப்படியே நித்தியமுத்தர்களாய் சதோதயமான மேல்வீடுபெற்றார்களென்பது.

நமதனுபவம். - சருவப்பிராப்தனானயெனக்கு மூவுலகத்தும் ஒருகருமத்தைச்செய்து அதனால் இனிப்பிராப்தமாக வேண்டிய வஸ்து ஒன்றுமில்லை அப்படியிருக்க ஆசிரதர்களை ரக்ஷிக்கவும் பின்னடியார்கள்கண்டுஜ்ஜீவிக்கவும் ஞானகர்மமிரண்டும் வர்த்தமானத்தில் சமமாகவனுஷ்டிக்குமென்னைப்பார்த்து சருவத்திரசந்தோஷமாம்படி நீயும் அனுஷ்டிப்பாயென்பது.

விதிவத்துவம். - அநாதிவிதி ஆதிவிதி வேதவபிமதம் சிட்டாசாரம் வர்த்தமானசுவாநுபவமென்னும் ஐந்துலக்ஷணங்களையும் நன்றாய்ஆராய்ச்சிபண்ணி ஞானகர்மசமத்துவமுடையனாய் இருவகைப்பிரயோஜனமும் இம்மையிலேயேசித்திக்கப்பெற்று மறுமையிலும் இப்படியே நித்தியமுத்தனாக மேல்வீடுபெற்றிருப்பாயென்பது.

சம்பிரதாயம். - அனந்தஞானம் அனந்ததெரிசனம் அனந்தவீரியம் அனந்தசுகம் ஆதிதேவம் பரப்பிர்மம் யுகாவதாரம் சர்வலோகசரண்யமாகிய நாம் ரவிக்கும் ரவி மனுவுக்கும் மனு இட்சுவாகுக்கும் அநுக்கிரகித்தபடியே நீயும் பரப்பிர்மஜெனகமான யாகத்தைத் திரவியரூபமாயும் தபோரூபமாயும் யோகரூபமாயும் ஞானரூபமாயும் பிராணதிரூபமாயும் கூடியமாத்திரம் அனுஷ்டித்து அதனால் சமானரகிதமான தீக்ஷண்யபுத்தியைப்பெற்று சருவத்திரபாபங்களுக்கும் விலக்ஷணமாயிருப்பாயென்பது.

சந்நியாசம்.—ஞானகர்மசமத்துவமுடையனாய் லக்ஷியத்தை நமதிடத்துவைத்து நம்சந்நிதிமாத்திரத்தால் நடக்கும் மனச்சட்சுராதி கருவிகரணசேஷ்டிதங்களைத்தெரிந்து பாவவிலட்சணனாய் கமலபத்திரோதகம்போலச் செய்யுங்கிரிகையிற் பந்தப்படாதிருப்பது.

அப்பியாசம்.—சர்வாத்மப்பிரியனாய் இஷ்டாரிஷ்டங்களைச் சமமாக்கி யோகாசனங்களைத்திட்டப்படுத்தி ஏகாந்தஸ்தலத்தி லிருந்து சரீரத்தைச்செவ்விதாய்நிருத்தி இந்திரியங்களைநிக்கிர கித்து மனதைச்சமப்படுத்தி உணர்வைப்பரிசுத்தமாக்கி சதாநம் மைத்தெரிந்துகொண்டிருப்பது யோகம் இந்தயோகத்தைச்சா திப்பவன் சரீரம் யோகபூர்த்திபண்ணுதற்கு முன்னம் நசித்தால் அவன் சுவர்க்கலோகத்திற்சென்று அநேககாலம் நிர்ச்சோக போகத்தையனுபவித்து புனர்ச்சென்மதாரியாய் ராஜவம்சம் யோகிவம்சத்திலவதரித்து பூர்வந்தடைப்பட்டயோகத்தை எவ் வளவும் பிரயாசையில்லாமல் பௌஷதியில் பூர்த்திபண்ணிக் கொள்வனென்பது.

## இடையாறு.

மாயாரூபம் அட்சரப்பிர்மம் மாயாவிகாரம் விபூதிவிஸ்தாரம் விஸ்வரூபம் பக்தியோகமென்ன. பக்தியைச் சட்பிரகாரமாகநிரூ பிப்பது.

மாயாரூபம்.—அறிதற்கரியபிர்மத்தையும் அதனையறியும் சத்தியக்ஞானத்தையும் ஞானமார்க்கமாய்வரும் சமஸ்தகருமத் தையும் அறிபவர் விவிதபரிச்சேதமான மாயாப்பிரபஞ்சத்துக் குச் சூத்திரதாரியாய் சகலபூதங்களிலும் சகலதெய்வங்களிலும் பரிபூரணமாகநின்ற என்னையறிவார் இப்படிச் சரீரமிருக்கும் போதே என்னையறிபவர்கள் சரீரம்நசித்தவிடத்தும் அறிவார்க ளெனநிரூபிப்பது.

அட்சரப்பிர்மம்.—பிர்மம் ஞானம் கர்மம் பூதம் தெய்வம் எக்ஞம் இந்த ஆறும் சரீரத்திலிருக்கிறவிதமும் சரீரம்நழுவும் போது பரமார்த்தமானவுன்னை நிர்ச்சந்தேகமாய்த் தெளிந்தடை கின்ற ஆசிரயமும் ஆகஇந்தயேழும் அனுக்கிரகிக்கவேண்டுமென் னும் அர்ச்சுனன்கங்கைக்கு ஸ்ரீபகவான் உத்தரரூபமாய்விஸ்தரித் துரைப்பது.

உத்தரம்.—யாவராலும் அறிதற்கரியது அழிவில்லாதது சதா நித்தியமாயிருப்பது சர்வத்திலுஞ்சிரேஷ்டமாய்ப் பெரிதுக்கெல் லாம்பெரிதாய் பரமமாய் பரார்ப்பரமாய் அட்சரமாயிருப்பது. பிர்மம்.—அதனையுணர்தற்கேதுவாக அந்தக்கரணங்களினின்று

அத்தியாத்மகமென்னும் அறிவு: ஞானம்.—அக்ஞானாய் பிராந்ஞாய் பகிர்முகபரிச்சேதரூபமாய்ப் பிரிந்துநின்ற சீவனுக்கு இந்தப்பிறவியையுண்டாக்குகின்ற யாகம்: கர்மம்.—சீவன்பரம்பரையாய்த்தொடர்ந்து தத்தங்கருமானுரூபமாய் வந்துவந்து நசித்தற்கேதுவாயமைந்ததேகத்தை நானென்கின்றவகங்காரம்: பூதம்.—ஆகங்காரக்கயிற்றால் பந்தித்தவுடலில் அதற்கநுவாக வமைந்துநின்ற புருடன்: தெய்வம்.—இறக்குங்காலத்தில் மனதைச் சத்தாதிவிஷயங்களிற் கிரகித்தோடும் இந்திரியவாசல்களையடைத்து ஒருமைப்பாடாகச் சிந்திக்கப்படுவது: எக்ஞம்.— இந்தத்தேகம் விழும்போது எவன் எதனை ஒருமைப்பாடாய்ச் சிந்திப்பனோ அவன் அதனையே அடைவதுநிச்சயம் ஆதலால் சதா நமது சுபாவத்தையுட்கொண்டு பஞ்சேந்திரிய பஞ்சப்புலன்களையடக்கி ஏகாக்ஷரத்தை மனந்தனித்து வாக்கிலுச்சரிக்க இதராந்தரவர்ச்சிதனாய் அறிவையென்னிடத்துச்செலுத்தி நம்பக்கலில் ஆவியைவிட்டவன் என்னையேயடைவானென்றுணரப்படுவது: ஆசிரயம்.

மாயாவிகாரம். – பஞ்சபூதமனோபுத்தி அகங்காரமென்னும் அஷ்டமூர்த்தமாய் அகிலாதாரமாய் உடலுக்குயிராய் விவிதபரிச்சேதமாய்நின்ற மாயை ஆகாயவாயுவைப்போல நானாகாமலும் எனக்குவேறாகாமலுமிருப்பதைத் தெரிந்து என்னைஞானரூபத்தாலொன்றாயும் சர்வாவயவசகிதமான கிரியாரூபத்தால் தான் வேறு நான்வேறாக நிர்த்தேசித்து புஷ்பம் பத்திரம் கனி காய் ஜலம் ஏதேனும் கிடைத்ததைக்கொண்டுபூசித்து ஈவது நோற்பது உண்பதுமுதலிய யாவையும் எனக்கேஅற்பித்து இன்னாரினியார் ஒப்பார்மிக்காருமில்லாத எனது நிசசொரூபத்தையறியுமன்பர்கள் யாவரானாலும் அவர்களிடத்தில் நானும் நமதிடத்திலவர்களும் நாமவர் அவர்நாமெனப்பிரிக்கக்கூடாது அன்னியோன்னியமாய்க் கலந்திருப்போமென்பது.

விபூதிவிஸ்தாரம்.— பிரமாணாதீதமாக விரிந்திருக்கின்ற எனது நித்தியஐஸ்வரியமுழுதையும் பிறந்தபடியேபேசுதற்கெட்டாதென்று அவ்வைஸ்வரியங்களில் முக்கியமானசிலவற்றை இவ்விடத்திலெடுத்துப்பேசி அவ்வைஸ்வரியமுழுதும் நம்மிடத்திற்

ரூற்றி நம்மிடத்தில்விரிந்து நம்மிடத்திலொருபிரதேசத்தில் ஒடுங்கிநிற்குமென நிரூபிப்பது.

விஸ்வரூபம்.— ககனஞ்சிரமாய் கரந் திக்காய்ப் பதம் பாதலமாய்க் கண் கதிராய் விண் நாபியாய் இப்படியேசருவப்பிராணிகளோடு சர்வாண்டபந்திகளையுந்தெரகுத்துக்காட்ட நீபிரத்தியக்ஷமாய்த்தெரிசித்த என்விஸ்வரூபத்துக்கன்னிதாய் வேறொருவஸ்துவில்லாமையால் அதனைச்செபிப்பவர் தியானிப்பவர்முழுதும் என்னையேயடைவார்களெனநிரூபிப்பது.

பக்தியோகம்.— கர்மம் ஞானம் தியானம் தியாகம் சாந்தியென்னும் ஒன்றுக்கொன்றுயர்வுள்ள அவரோகண சகஜத்தை நிரூபிப்பது. அவற்றுள்.— தத்தங்குலதர்மத்தை யதாப்பிரகாரம் அனுஷ்டிப்பது: கர்மம்.—தன்னைப்பரிபூரண வியாபகனைசதன்யத்துக்கு விஷயமாக்குவது: ஞானம்.— மாடாரூபம் அக்ஷரப்பிர்மம் மாயாவிகாரம் விபூதிவிஸ்தாரம் விஸ்வரூபம் பரப்பிர்மமென்கின்ற சட்பிரகாரவஸ்துவில் அதிகாரானுகுணமாய் ஸ்ரீசற்குருவினிடத்தில் ஒன்றையுபதேசிக்கப்பெற்று அதனிடத்தில் அனவரத பாவனையைச்செலுத்துவது: தியானம்.— சத்தியமாய் உன்னையென்னிடத்தில்வைத்து கர்மபலத்தையிச்சியாமல் விதிவத்தான உன் குலாசாரதருமத்தைச் சாதிக்கவேண்டியது உன்னைச்சரணுகவடைந்த எனக்கு மாதா பிதா குரு தெய்வமுதலிய சமஸ்தமும் நீயாயிருக்க அக்ஞானகிருதமாய்வந்த குலவிதியை அனுஷ்டிக்கச் சொல்வதேதென்றுட்சேபிக்கில் உனக்காகச்செய்யாவிட்டாலும் அக்ஞானகிருதமாய்வந்த சரீரமிருக்கிறபரியந்தம் என்பொருட்டுக் கைங்கிரியரூபமாய்ச்செய்வாயென நிரூபிப்பது: தியாகம்.— சித்தோபசமனமுடையனாய் என்னையுன்னிடத்தில் சாட்சாத்கரித்து சர்வமும் இன்புருவாகத்தெரிசிக்கப்படுவது: சாந்தி.

கடையாறு.

பிரகிருதிபுருஷ குணத்திரய புருஷோத்தம தெய்வாசுர சிரத்தாத்திரய சருவசஞ்சேபமென்ன ஞானத்தைச் சட்பிரகாரமாக நிரூபிப்பது.

பிரகிருதிபுருஷயோகம்.— சரீரம்பிரகிருதி பிராணன் புருஷன் பிராணன்பிரகிருதி மனம்புருஷன் மனம்பிரகிருதி புத்தி

புருஷன் புத்திபிரகிருதி சீவன்புருஷன் சீவன்கருமத்துக்குவசமாகி தேகவியோகத்திற் சட்புலன்களைக்கிரகித்தோடியும் தேகசம்யோகத்திற் சட்புலன்களோடு பிரவேசித்தும் ஜனனமரணாதிதுக்காதிகளுக்குள்ளாகிச் சடனாய்ச் சோகிக்கப்படுவதால் சீவன் பிரகிருதி அதனைநடத்தும் சருவஸ்திதிலயோற்பவ காரணபூதரான ஈஸ்வரன் நிருபாதிகரூபத்தால் பரமாத்மபரப்பிரமமெனவும் சோபாதிகரூபத்தால் சர்வசரீரியாய் சர்வபோக்தாவாய் சர்வக்ஞனாய் சர்வசக்தியாய் சர்வசுதந்தரனாய் பரமபுருஷனாய் பரமாத்மாவாகவிருக்கின்ற ஈஸ்வரன் புருஷன் இப்படி சீவாதிசரீரபரியந்தம் பிரகிருதியென்று யதாப்பிரகாரம் புருஷப்பிரகிருதியைவிவேகித்து லக்ஷிய சாங்கிய பக்திரூபமாய் ஈஸ்வரனைச் சாட்சாத்காரம்பண்ணி நிற்சோகராய் ஜெனனமரணத்தைக் கடந்து நிற்பது.

குணத்திரயயோகம்.— சவ்விகாரியான பிரகிருதிகுணங்களையும் நிர்விகாரியான ஆத்மாவையும் விவேகித்து முக்குணங்களைக் கடந்த புண்ணியாத்மாக்களைத்தெரிசித்து சத்தியமோக்ஷத்தைப் பெறுமவர்கள் என்னைச்சிந்திப்பார்களென நிரூபிப்பது.

புருஷோத்தமயோகம்.- அச்சுவத்தமென்னும் விவிதமாயா விருட்சத்தை அசங்கமென்னும் ஞானவாளாற்சேதித்து தற்பரமாய் மாயாவிகாரமான ரூபவரூபத்தைக்கடந்து அவாங்மனோகோசரமாய் நிற்கும் நம் ஆனந்தஸ்வரூபத்தைத்தெளிந்து சதா அதனிடத்து நாட்டம்வைத்திருக்கின்ற மகத்துக்களுக்குப் பவபந்தரோகத்தை நிவர்த்தித்து அபேட்சித்தபோகத்தைக் கொடுக்கப்படுவது.

தெய்வாசுரம்.— தெய்வசம்பத்து ஆசுரசம்பத்து இரண்டையும்விவேகித்து சர்வத்திரவிரோதிகளான பாவாத்மாக்களாலனுஷ்டித்து அவர்களுக்கு நித்தியநரகத்தைக்கொடுப்பதான அசுரசம்பத்தைநிராகரித்து புண்ணியாத்மாக்களாலனுஷ்டித்து நம் நித்திய ஐஸ்வரியத்தைப்பெறுவதான சத்திய ஞான தபோவிரதாதிசுரசம்பத்தையடைவாயெனநிரூபிப்பது.

சிரத்தாத்திரயம்.—வேதசாஸ்திரவிதியைவிட்டு சிரத்தாளுபமாய் விஸ்வாசிக்கின்ற நிஷ்டன் முக்குணத்திலெக்குணமுடையனென அர்ச்சுனன்கேட்க ஸ்ரீபகவான் அவனே சுத்தசத்துவ

னென்பதைத்நுலக்கி அதனை சாதன சாத்தியப் பிரயோஜனரூப மாய்நிரூபிப்பது. அவற்றுள்.— ரஜோதமோசம்பந்தமான ஆகாரம் தியாகம் தவம் தானமுதலிய அசுத்தவாசனையைக்களைமாக்கி சுத்தஸத்வசம்பந்தமான ஆகாரம் தியாகம் தவம் தானமுதலிய சுத்தவாசனையை அபிவிர்த்திபண்ணுவது: சாதனம்.— பலப்பிரயோஜனத்தை இச்சியாமல் கருமிகள் சத்தியசீலராயும் முமூட்சுக்கள் தற்பதநிர்த்தேசராயும் முத்தர்கள் பிரணவநீர்க்கரராயும் வணைகடவாமற்றத்தங்கருமங்களை அனுஷ்டிக்கப்படுவது: சாத்தியம்.— ஓம் தத் சத்தென்கின்ற சிரத்தாத்திரயத்தை நிஷ்டாபூர்வகமாய் விவேகித்து ஞானவிப்பிரனுக மேல்விடுபெற்றிருப்பது: பிரயோஜனம்.

சருவசஞ்சேபம்.- ஸ்ரீபகவான் பூர்வம் பதினேழு அத்தியாய போதத்தால் முப்பதநிஷ்டையைத்நுலக்கி பதினெட்டாவதான இந்த அத்தியாயபோதத்தால் பந்தநிவர்த்தியைப்பண்ணி பரமார்த்ததெரிசனத்தை அனுக்கிரகித்து யுத்தமுகத்திற்பிரவேசிக்கும்படி க்ஷத்திரியகருமத்தை நியமிக்கப்படுவது.

## முப்பதநிஷ்டை.

ஞானவிப்பிரனாய் ஓம் தத் சத்தென்கின்ற திரிபதார்த்த விவேகியாய் துவம்பத தற்பத அசிபதமென்னும் முப்பதங்களுக்குமுடிவாய் எப்பதங்களுக்கும் மூலகாரணமாகவிருக்கின்ற என்னைப்பற்றிநின்று ஒன்றைச்சாதித்து ஒன்றைப்பேதிக்காமல் அஷ்டாதச அத்தியாயபூர்வகமாய் விதித்திருக்கும் கரும பக்தி ஞானமூன்றும் நமது நியதகைங்கிரியமாக ஒருங்கே சாதிக்கப்படுவது.

பந்தநிவர்த்தி.— சந்நியாச பரித்தியாகமென்னும் நிஷ்டாரூபத்தால் மமதகங்காராதிகளைப்போக்கி அநர்த்தமுழுதும் நிவர்த்திபண்ணுவது. அவற்றுள்.-இறுதியிற்பிரயோஜனத்தைக்கொடுக்கும் காமியகருமங்களைச்செய்யாதிருப்பது: சந்நியாசம்.—நித்திய நைமித்தியாதி சமஸ்தமான கருமங்களையும் விதிபூர்வகமாகச் செய்து அதன்பலப்பிரயோஜனத்தை விசர்ச்சித்திருப்பது: பரித்தியாகம்.

பரமார்த்ததெரிசனம்.- கரும ஞான தியான தியாக சாத்ய பரமார்த்த சுகாபியசித்தி அதிகாரசம்பத்தியென்னும் அஷ்டோபாயபூர்வகமாக பரமப்பொருளைக்காட்சிப்படுத்தித் தடையற்ற சுகத்தை யனுபவமாக்குவது.

கருமம்.— விஷாதயோகம் சொரூபஞானம் கருமஞானம் யாகஞானம் சந்நியாசகருமம் யோகஞானமெனவாறு பிரகாரமாகநிரூபிப்பது. அவற்றுள். விஷாதயோகம்.— சாரதியான ஸ்ரீபகவானை ரதிகனான அர்ச்சுனன் சமர்முகத்தில் யுத்தஞ்செய்தற்கஞ்சி உடலுயிரோடு அஸ்திரசஸ்திரமுழுதும் கழிவுறச்செய்து சோகனாய்ச் சரணமடைவது. சொரூபஞானம்.— இதுசரீரம் இவன்சரீரி இது ஆத்மா இதுபிரமமென்கின்ற தன்சொரூபலட்சணங்களையுந் தனித்தனியேவிவேகித்து அதனை தத்தம் நிஷ்டாரூபமாய்ச் சாதித்தடைவது. கருமஞானம்.— ஆத்மாபேக்ஷங்களான ஞானகரும மிரண்டையுந் தனித்தனியேவிவேகித்து அவ்விரண்டையும் சுபாவயோகத்தினால் ஆத்மதத்துவத்தில் ஒருமைப்பாடாயுணரப்படுவது. யாகஞானம்.— ஜனனமரணமில்லாது தனிமுதலாயிருக்கின்ற ஸ்ரீபகவான் லோகரக்ஷகார்த்தம் தமது மாயையினால் யுகந்தோறும் வெவ்வேறு ரூபத்தைத்தரித்து பூர்வம் ரவியாதிசிலருக்குச்சொன்ன பிரமஜனகமான ஞானயாகத்தை விதிபூர்வகமாகச்செய்து புத்தியாதித்துவாரங்களை ஞானச்சியத்தோடு சற்றும்சேஷமில்லாது பகவதழலில் பூரணாகுதிசெய்து பாவமுழுதும் அகற்றி பவித்திராத்மாவாய்ச் சுத்திகரிப்பது. சந்நியாசகருமம்.-விகிதவழியிற்செல்லுகின்ற சித்தத்தை ஸ்ரீபகவதடியில் நியாசம்பண்ணி பலப்பிரயோஜனத்தைவிசர்ச்சித்து சமஸ்தமானகருமங்களையும் கைங்கிரியரூபமாய்ச் செய்யப்படுவது. யோகஞானம்.— யோகானுஷ்டானத்தால் ஏகமாயும் ஞானானுஷ்டானத்தால் பூரணமாயும் வேறுவேறாக அப்பியசித்து ஞானயோகமிரண்டையும் ஒருப்படுத்தி ஸ்ரீபகவானை ஏகபூரணராயுணரப்படுவது.

ஞானம்.— கருமபந்தகத்தைவிசர்ச்சித்து அத்தியாத்மரூபத்தைச் சுபாவயோகத்தாலுணரப்படுவது. தியானம்.— ஸ்ரீபகவானது திவ்வியமங்களவிக்கிரகத்தைப்பற்றி ஞானபாதத்தாலொன்

ரூபமும் கிரியாபாகத்தால்வேருபமிருந்து மூர்த்தம் அமூர்த்தம் இரண்டையும் ஒருப்படுத்தி அனவரதபாவனையைச் செய்யப்படுவது. தியாகம்.— ஸ்ரீபகவதாக்ஞையால் கோரமூட மமதைகங்கள சித்தியைாதி சாட்டியசேஷ்டிதமூதும் வர்ச்சித்திருப்பது. சாந்தம்.—சத்தாத்மாவாய் சத்காரிசத்தியசற்குணங்களைப்பிரகாசிப்பது. பரமார்த்தம்.— சிரேஷ்டப்பொருளாகிய பரப்பிர்மதத்துவத்தை நிச்சந்தேகமாயுரைப்படுவது. சகாமியசித்தி.- அதிகாரியினவேட்சிதப்பொருளை பரப்பிர்மநோக்கத்தாலடையப்படுவது. அவதாரவைபவம்.—சமஸ்தமான தருமங்களையும் ஸ்ரீபகவான் தாமவதரித்து சாதிப்பித்துவிடத்து அவ்வதிகாரிபேதவேதமில்லாத அனுபூதிவாழ்விலமர்ந்திருப்பது.

## தொய்ததாற்பரியம்.

சீவாத்ம பரமாத்மபேதத்தை கருமபக்தி ஞானமென்னும் யோகத்திரயரூபமாயுணர்த்தப்படுவது.—கருமயோகம். நியத நீத பரம எக்ஞ தியாக யோகமென்னச்சட்பிரகாரமாக நிரூபிப்பது.

## நியதகருமம்.

பர்த்தாவுக்குப்பாரியையாய் பாரியைக்குப்பர்த்தாவாய் பிதாவுக்குப்புத்திரராய்ப் புத்திரருக்குப்பிதாவாய்ப் பரஸ்பரம்அன்புடையராய் தானம் கீர்த்தி சத்தியம் பிரியவாசகம் க்ஷமை சாந்தம் ஆசாரம் அதிதிசத்காரமுதலிய சத்கர்மானுஷ்டிதராய் ஊழ்வினையினால்மாறுபாடினும் ஆழ்வினையையுடையராய்ப் பகவதடியைப் பற்றிநின்று அந்த ஊழ்வினையைச்செயித்துப்பிரதியந்தகவிடையறுத்துப் பூருவகியதமாக அவரவரொடுக்கதனுவை நிருத்தப்படுவது.

## நீதகருமம்.

சனைத்மநிஷ்டனாய் சாம பேத தான தண்டமென்னும் ராஜதர்மத்தையனுசரித்து மாதா பிதா பிராதா குருமுதலிய யாவரானாலும் தனதன்னியமெனப்பாராமல் சற்றேனும் ஒறுக்கமில்லாது நீதவளாயைநிருத்தப்படுவது.

## பரமகருமம்.

பிர்மநிஷ்டனாய் ஜனகாதிநிலையைத்தெரிந்து ஞான கருமம் இரண்டுஞ்சமமாக்கிப் பராபருபத்தைப்பற்றிநின்று நியதநீதமூத

லிய சமஸ்தமான கருமங்களையும் அதன்யதாப்பிரகாரம் நடத்தப் படுவது.

## எக்ஞகருமம்.

அநாதியாய் ஆதியாய் அந்தமாய்ப் பரமமாய் சருவமுமாய் இருக்கின்ற ஸ்ரீபகவான் ரவியாதிசிலருக்கு அனுக்கிரகித்தயாகபேதத்தைத்தெரிந்து தத்தம் மரபுவழியாய்ப் பிர்மாக்கினியில் பிர்மம் நானென்னும் ஆச்சியசமிதைகளைப் பிர்மமந்திரசங்கிதமாயாகுதி பண்ணி பிர்மத்தையடைபவரும் ஞானக்கினிக்கிச் சாட்டிய அறிவைச் சமிதையாக ஆகுதிசெய்பவரும் சமாக்கினியில் ஐம்புலசமிதையை ஈபவரும் இந்திரியத்தொழிலைப் புத்தியினாலகற்றி இந்திரியாக்கினிக்கி ஐம்புல சமிதையைக்கொடுப்பவரும் ஞானக்கினியில் விஷயேந்திரிய சமிதைகளை ஞானச்சியத்தோடு ஆகுதிசெய்பவரும் பிராணனை அபானனில்ப்புகுத்தி அபானசமிதையைப் பிராணக்கினிக்கி ஆகுதிசெய்பவரும் இத்தியாதியாகங்களால் சர்வபாவமும்போக்குதற்பொருட்டு ஞான கர்ம யோக தபோ விரதசீலரான விப்பிரநிஷ்டர்கள் பரம்பரையாக அநுஷ்டிக்கப்படுவது.

## நியாசகருமம்.

ஞானமும்நல்லது கருமமும்நல்லது பெற்றவிடத்தின்பமும் பெறாவிடத்திற்றுன்பமுமிலலாமற் செய்புங்கருமமிகவும்நல்லது அதுவேதுறவு அதுவேஞானமுமாகும் கருமம்விடுவதினும் செய்வது சிராக்கியம் செய்புங்கருமத்தைச் செய்யாதடக்கில் தொந்துவகர்மபீஜமான அஞ்ஞானசுழுத்தியே அதற்குப் பிரயோஜனமாகும் ஞானகர்மமிரண்டும் ஒன்றென்றறிபவன் இரண்டையுமறிவான் ஞானமும் கர்மமும் இரண்டென்றறிபவன் அவற்றிலொன்றையுமறியான் அவன் ஞானியுமாகான் கருமியுமாகானென்று ஞானத்தையும் கருமத்தையும் தனித்தனியே விவேகம் பண்ணி ஞானகர்மமிரண்டும் ஒன்றென்றுணர்பவனெவனோ அவனேமகத்தான ஞானியென்றும் ஞானத்தையுங்கருமத்தையும் வேறு வேறாகக்கருதிச் செய்புங்கருமத்தைச்செய்யாமல் நியகருமத்தைப்பொருந்திநிற்பவன் சதாதுன்பச்சுழற்சியில் சஞ்சரித்துழல்கின்ற பெரியதொந்துவகருமியேயாவனென்றும் நிச்சயித்து

ஞானகரும சமத்துவநிஷ்டனாய் தனதுசித்தத்தை ஸ்ரீபகவா னிடமாகநியாசம்பண்ணி சுசக்தியிழந்துநிற்பவனுடைய வியவ காரமுழுதும் அந்தப்பகவானுடைய பிரேரணையால்நடத்தப் படுவது.

## யோககருமம்.

சகலபூதசீவராசிகளையும் ஞானப்பிரபையினால்விழுங்கி அநா தியாய் பரமரூபராகவிருக்கின்ற ஸ்ரீபகவானையபேதமாக்கிப்பேத சங்கத்தைநிவர்த்தித்து ஏகரூபராய்நின்றுணர்தற்பொருட்டு அத ற்குப் பிரதிபந்தகமாகவிருக்கும் சித்தவிருத்தியை நிரோதனம் பண்ணப் புருஷமுயற்சியினால்ச் செய்யப்படுவது யோகம் அந்த யோகத்துக்கு அவயவம் இயம நியம ஆசனப் பிராணாயாம பிரத்தியாகார தாரணா தியான சமாதியென்னும் அஷ்டபேத மாய் அதில் ஒவ்வோரவயவங்களுக்கு அளவற்றவிசித்திரகிருத்தி யங்களாய் அதனை தத்தம் மரபுவழியாயுபதேசிக்கப்பெற்று அதி சூரர்களான யோகநிஷ்டர்கள் தங்கள் தங்கள்பரம்பரைவழியாய் அனுஷ்டிக்கப்படுவது.

பக்தியோகம். — மாயாதெரிசனம் பரமதெரிசனம் மாயா விகாரதெரிசனம் விபூதிதெரிசனம் விஸ்வரூபதெரிசனம் பக்தி யோகதெரிசனமென்னச் சட்பிரகாரமாகநிரூபிப்பது.

## மாயாதெரிசனம்.

பிருதிவு அப்பு தேயுவு வாயுவு ஆகாசம் மனோ புத்தி அகங் காரமென்னும் எட்டுறுப்பினையுடையமாயை பிராந்தாளுடைய சித்தசீவாதிகளுக்குள்ளும் புறம்புமாய்நின்று பிருதிவில்க்கந்தமாய் அப்புவில் மதுரமாய் தேயுவில் உஷ்ணமாய் வாயுவில்ப் பரிசமாய் ஆகாசத்திலோசையாய் ரவியிலொளியாய் சோமனில்ச் சீதமாய் ஆத்மாவில் அந்தரியாமியாய் இப்படியே சகலபூதசீவராசிகளிடத் தும் சூத்திராத்மாவாகக் கலந்துநிற்கின்ற ஸ்ரீபகவானைத்தெரியா மல் ஞானசட்சுவைமறைத்து அதோமுகவுணர்வினால்ப் பலா பேக்ஷையையுடையராய் வேறுவேறாகத் தெரிசிப்பது.

## பரமதெரிசனம்.

பிறப்பு இறப்புப்பிணிமூப்பாதி இடரைக்களைதற்பொருட்டு பரமரூபரான ஸ்ரீபகவானைச்சிந்தித்துப் பேரன்பானதுவளர்ந்து

அன்புமிகுதியினால் நித்தியசூரிகுணங்கள் அபிவிர்த்தியாகி அதன் விசேஷத்தால் அந்தப்பகவானையே சதாகூடிநிற்பவர்கள் அறிதற்கரியபிர்மத்தையும் அதனையறியும் ஞானத்தையும் ஞானமார்க்கமாய்வரும் கருமத்தையும் அறிவார்கள் அப்படியறிபவர்கள் சகல பூதங்களிலும் சகலதெய்வங்களிலும் சகலயெக்ஞங்களிலும் கூடி நிற்கின்றபகவானைக் கருமதேகமிருக்கும்போதே தெரிசித்து அப்படியே கருமரூபமான இந்தக்கிருமிபஞ்சரம் நழுவியவிடத்தும் தெரிசிக்கப்படுவது.

## மாயாவிகாரதெரிசனம்.

பரமமாய் பிர்மமாய் பராத்பரமாய் நித்தியமாய் நிர்விகாரமாய் அவாங்மனோகோசரமாயிருக்கின்றபகவானை பிர்மனாய் விஷ்ணுவாய் சிவனாய் இந்திரனாய்ப் பக்தஜனங்கள் பின்னர்தத்தம் அபிமததேவாகக்கோசரித்து தலைமைகெடாது சதாவுதவிடத்து வழிபட்டு பகவானால்கொடுக்கும் அந்தந்ததேவதைக்குரிய பலசித்தியைப்பெற்று ஞானபூர்த்தியினால் பவரோகத்தை நிவர்த்திக்கப்படுவது.

## விபூதிதெரிசனம்.

ஸ்ரீபரமரூபரான பகவான் கல்பாதியில் சகலபுவனபீஜமாகவிருந்து சங்கல்பசத்தையினால் மருத்துவர் சூரியர் வசுக்கள் ருத்திரர் மனுக்கள் ரிஷிகள்முதலிய சராசரப்பிரபஞ்சத்தைப் பிறப்பித்து அப்படிப்பிறந்த சகலபூதசீவராசிகளுக்கும் அந்தரியாமியாகவிருந்து வேறுவேறாகப்பிரிந்துநின்று புத்தி பொறுமை தவசு ஞானம் கீர்த்தி அபகீர்த்தி தைரியம் அதைரியம் சாவு பிறப்பு சுகதுக்காதிகளை தத்தங்கருமானுரூபமாய்க்கொடுத்து கல்பமுழுதும்ரட்சித்து கல்பாந்தத்தில் நாமரூபாத்மகமான சகலபுவனபேதவிசித்திரமுங்கிரகித்து ஒருபிரதேசத்திலடக்கிக்கொண்டு ஞானசோபையினால் வியாபித்திருக்கும் பகவதாவிபினைத் தோற்றிவிரிந்திருக்கின்ற ஐஸ்வரியபத்திகளுக்களவில்லை ஆகிலும் அதனையொருபிரகாரம் சஞ்சேபரூபமாய்ச்சொல்லுமிடத்து விஷ்ணுவாதிஆதித்தர் மரீசுவாதிமருத்துவர் ரவிப்பிரபாதிசோதிகள் சந்திராதிநக்ஷத்திரம் சாமமாதிவேதம் இந்திராதிதேவர் மனமாதி இந்திரியம் சேதனாதி அவயவம் சங்கராதியுருத்திரர் குபேராதி

இயக்கர் மேருவாதிபருவதம் பாவகாதிவசு ஷண்முகாதி தலைவர் சமுத்திராதிஜலநிலை ஜெபமாதியெக்ஞம் இமவானாதிதாவரம் பிருகுவாதிமுனி பிரகாதிபுரோகிதர் ஓங்காராதிவாக்கு அச்சுவத்தாதி விருக்ஷம் நாரதாதிதேவமுனி சித்திரரதனாதிகாந்தருவர் கபிலாதி சித்தர் உச்சைச்சிரவமாதி குதிரை அயிராவதமாதியானை மன்னராதிமானிடர் வச்சிராதியாயுதம் வாசுகியாதிசற்பம் சேஷாதி நாகம்காமதேநுவாதிபசு வருணாதிஜலசரம் இயமாதிநீதகண்டிதர் பிரகலாதாதியசுரர் கருடாதிபக்ஷி சிம்மாதிமிருகம் வாயுவாதிவேகம் இராமாதிவீரர் கராவாதிமீன் கங்கையாதிநதி பிரமாதியிச்சை அநீதாதி சங்கியை அகாராதியக்ஷரம் அக்ஷயாதிகாலம் தொந்துவமாதிசமாசம் சிருஷ்டியாதி கிருத்தியம் கீர்த்திலக்ஷுமி பூதிலக்ஷுமி வாக்குலக்ஷுமி மேதாலக்ஷுமி க்ஷமாலக்ஷுமி தைரியலக்ஷுமி தர்மலக்ஷுமியென்னும் சப்தமாதாவாதிஸ்ரீகள் வசந்தாதிரிது மார்கழியாதிமாதம் சாந்தோக்கியாதியுபநிஷத்து காயத்திரியாதிகாவியம்எண்ணுவோர்பாலெண்ணம் நுணிவோர்பாற்றுணிவு வெல்வோர்பால்வெத்தி திரலோர்பாற்றிரம் நல்லோர்பால் நன்மை ஞானிகள்பால்ஞானம் சுக்கிராதிகவி வியாசாதி தேவமுனி கிருஷ்ணாதியாதவர் தனஞ்சயாதிபாண்டவர் மோனமாதிரகசியம் இத்தியாதிவிபூதிமுழுதினும் ஞானசமர்த்தியினால் தலைமைகெடாது தனித்தனியாயும் ஆரோகணவிதிப்படி முதன்மையாயும் அவரோகணவிதிப்படி முழுதுமாயும் ஸ்ரீபரமரூபரான பகவானைப் பரமபக்தர்களால்த் தெரிசிக்கப்படுவது.

## விசுவரூபதெரிசனம்.

சிரவதன கழ மார்ப கர சரணாதிகளில் சந்தன புஷ்ப திலக உபவீத பீதாம்பர நூபுர கிரீடாதிகள் தகதகெனச்சொலிக்க நீர் கொண்டமேகம்போற் காந்தியையுடைத்தாய் நீலமலைபோல்ச் சுடர்விட்டெறிக்கும் பரமரூபமான ஒளிக்கொண்டதிருமேனியிலிருந்து அநேகமாயிரங்கோடிசூரியர்கள் ஏககாலத்துதயஞ்செய்தாற்போல அக்ஷயப்பிரகாச ஆரோக்கிய எவ்வன மிருது சூட்சும சவுந்தரலாவண்யாதி தேஜோரூபமாய்ப்பரிமளிக்கும் அப்பிராகிருதசூரிகளான நித்தியபரிவாரக்கதிர்களைப்பரப்பி ஞான

சமர்த்தியினால் எல்லையற்றிருக்கும் பரமமான நித்தியரூபமும் அந்தநித்தியரூபத்திலிருந்து அநேகமாயிரந்தாள்களும் அநேகமாயிரந்தோள்களும் அநேகமாயிரம்ஆயுதஆவரணங்களும் அநேகமாயிரம்வாய்களும் அநேகமாயிரமுகங்களும் அநேகமாயிரம் அற்புதங்களுமாய் யாவராலும்பண்ணற்கரிதாய் படைத்தற்கரிதாய் காண்டற்கரிதாய் கணித்தற்கரிதாய் ஆகாசாதிசருவத்திரபீஜமாய் சருவபுவனவிஸ்தாரமாகவிருக்கின்ற மகாபுருடனும் அந்தப்புருடனிடத்திலிருந்து ஆகாசாதிபூதமும் பிராச்சியாதிதிக்கும் பிர்மாதிகடவுளரும் சிருஷ்டியாதிகிருத்தியமும் ராமகிருஷ்ணாதி அவதாரமும் தேவமனுஷநரகதிரியக்காதிபிராணிகளும் பிராமணாதி வர்ணமும் மற்றய தனுவண்டபுவனபோக சரவசர பூதசாலப் பிரபஞ்சரூபமும் அந்தப்பிரபஞ்சத்துக்குமூலமான புருடரூபமும் அதற்குமூலமானநித்தியரூபமும் அதற்குமூலமானபரமரூபமும் இந்தநான்குந் தனது திருமேனியில் ஒருங்கேதொகுத்துக்காட்டிய ஸ்ரீபகவானது விஸ்வரூபத்தை பாக்கியவான்கள் அவனதுபரம கிருபையினால் ஞானசட்சுவைப்பெற்று சருவத்திரமூலமான அவனதடியைப்பற்றிநின்று ஆரோகண அவரோகணவிதிப்படி யோகமகிமையினாற் தெரிசிக்கப்படுவது.

## பக்தியோகதெரிசனம்.

விவிதரூபமாய்ச் சித்தசீவாதிகளால்ச் செய்யும் விதிவத்தான சற்கருமங்களைக்காட்டிலும் சித்தசீவாதிகளை நியதித்துச் சின்மாத்திரரூபமாய்த் தெளிந்திருக்கின்ற ஞானம் அதிகம் அதைக் காட்டிலும் ஸ்ரீபகவானை ஞானரூபத்தாலொன்றாயும் கிரியாரூபத்தால் வேறாயுமிருந்து ஞானகருமமிரண்டும் ஒருமைப்படுத்திச் செய்கிற தியானம் அதிகம் அதைக்காட்டிலும் பிரயோஜனத்தைக்குறிக்காமல் கரும க்ஞான தியானமூன்றும் ஒருமைப்படவனுஷ்டித்து அதைப்பற்றியெழும்பும் மமதகங்காராதியை நிவர்த்தித்திருக்கின்ற தியாகம் அதிகம் இப்படியொன்றுக்கொன்றுயர்வான கரும க்ஞான தியான தியாகமென்னும் சாதனசதுஷ்டய சமர்த்தியினாற்ச் சித்தசாந்தமுதித்து அந்தச்சித்தசாந்தமிகுதியினாற் சருவப்பிராணிகளுக்கும் பிரியனாய்த் தலைமைக்கெல்லாந் தலைமையாய்ச் சருவத்துக்குமுதன்மையாகவிருக்கின்ற பரமரூ

பத்தையும் முழுதுவஸ்துவுந் தானாகவிருக்கின்ற பிர்மரூபத்தையும் மோனநிஷ்டையினால் பிரிவறக்காண்பது.

ஞானயோகம்.—பிரகிருதிபுருஷ குணகுணித்துவ சேதனாசேதன தெய்வாசுர சிரத்தாவிப்பிர பந்தமோக்ஷமென்னச் சட்பிரகாரமாக விவேகித்துணர்வது.

## பிரகிருதிபுருடவிவேகம்.

சுகதுக்காயதனமான தேகப்பிரகிருதியையும் அந்தப்பிரகிருதி சம்பந்தத்தால் பிறப்பிறப்புப் பிணிமூப்பாதிகளைப் பொருந்தி அநேகதேகங்களைப்பரிக்கிரகித்து மேலதுகீழது கீழது மேலதாய் சற்றேனும்நிலைபெறாது மாறிமாறி குலாலசக்கரம் போலச்சுற்றித்திரிகின்ற சீவபுருடனையும் அவாங்மனோகோசரமாய் விலக்ஷணவிக்கிரகயுக்தனாகவிருந்தும் நிரோதுகிருபையினால் குற்றவாளிகையிற்கட்டியரச்சுவை காவலாளியுங் கைப்பற்றித் தொடர்வதுபோல சகலபூதசீவராசிகளையுந்தொடர்ந்து அவர்கள் இதாயிதங்களைத்தெரிந்து அவர்களைச்சதாகாலமும்ரட்சிக்கும் சருவசிரேஷ்டனான ஈஸ்வரபுருடனையும் ஞானாத்மாவாகவிருந்து அதனதன்யதாப்பிரகாரம் விவேகித்துணர்வது.

## குணகுணித்துவவிவேகம்.

சேதனாசேதனப் பிரபஞ்சமுழுதும் கிரகித்து ஒருபிரதேசத்திலொடுங்கிநிற்கும்மூலப்பிரகிருதியினிடத்தில் நிரோதுகிருபையினால் ஸ்ரீபகவான் இச்சையாகியகருவைவைக்க அதிலிருந்து சத்துவரசுதமசென்னுமுக்குணமும் அந்தமுக்குணத்தொடர்பாய்ப் பாஞ்சபூதபௌதிகமும் பிர்மாதிகடவுளரும் சிருஷ்டியாதிகிருத்தியமும் தேவமனுஷநரக திரியக்காதி பிராணிகளும் இன்னம்பலவாறாகப்பரவிநிற்கும் பிரகிருதிகுணங்களையும் ஆத்மாநிர்விகாரியாயிருந்தும் அந்தப்பிரகிருதிபீடிதத்தால் எந்தெந்தத்தேகத்தை எடுக்கிறானோ அந்தந்தத்தேகாவஸ்தையையடைந்து அதற்குரிய விவிதவிகாரத்தைப்பொருந்தி முக்குணங்களில் எக்குணங்களும் நிலைபெறாமல் அந்தந்தவசமாய்ப்புதைந்துகிடக்கின்ற சவ்விகார ஆத்மாக்களின் குணகுணித்துவமும் விகாரஸ்பதமான மிசிர குணங்கள்வர்ச்சித்து சுத்தசத்துவமூர்த்திகளாய்மேல்வீடுபெற்று

ஞானனந்தசத்தியசொருபராய் பிரகாசிக்கும் அப்பிராகிருதவாசிகளான நிர்விகாரஆத்மாக்களின் குணகுணித்துவமும் ஞானத்மாவாகவிருந்து அதனதன்யதாப்பிரகாரம் விவேகித்துணர்வது.

## சேதனுசேதனவிவேகம்.

நிர்த்தோஷமாய் சாஸ்வதமாய் பரமமாய் ரூபவரூபத்தைக் கடந்து ரூபவரூபமுழுதினும் நிறைந்து லக்ஷியப்பொருளாகவிருக்கும் ஸ்ரீபகவானது ஆனந்தரூபத்தைத்தெரிசித்து அதனடியைப் பற்றிநின்று பிரயோஜனத்தைக்குறிக்காமல் சமஸ்தமான கருமங்களையுஞ்செய்து சருவமும் ஆனந்தபூர்த்தியாய்த்தெளிந்திருக்கும் ஞானகர்மவனுஷ்டிதனை சேதனனையும் அதோமுகமாய் சாகோபசாகைகளாக விரிந்திருக்கின்ற சாட்டிய அறிவையுடையனாய் பலத்தையுத்தேசித்து அதற்குத்தக்கதக்ககருமத்தை பலவாறுகச் செய்து அல்பசுகியாய் அசாஸ்வதபோகத்தையனுபவித்து அதிலிருந்துநழுவி ஜனனமரணுதியைப்பொருந்தி மாயாசம்பந்தமான கருமபலத்தைப்புசித்துப் பிராந்தனுய்ச்சோகித்து மாயாமூலத்தைத்தெரியாமல் மாயாவிருக்ஷத்தின் தளிர்கொம்புவழியாய்மாறிமாறி சதாசுத்திக்கொண்டு திரியும் மாயாகர்மவனுஷ்டிதனை அசேதனனையும் ஞானத்மாவாகவிருந்து அதனதன்யதாப் பிரகாரம் விவேகித்துணர்வது.

## தெய்வாசுரவிவேகம்.

ஆகார எக்ஞ தபோ தானசிலராய் மோட்சசாதனங்களான சமதமாதிகுணங்களையபிவிர்த்திபண்ணும்புண்ணியாத்மாக்களான தெய்வமாந்தர்களையும் புண்ணியத்தொழிலுக்கு முரணுகவிருக்கும் பாவபயங்கரமான கொடுந்தொழில்களைச்செய்து மறுமையில் மீளாதநரகத்தையனுபவித்தற் கேதுவாக இம்மையிலேயே நரகசாதனங்களைப்பரிபூர்த்திபண்ணும் பாபாத்மாக்களான அசுரமாந்தர்களையும் ஞானத்மாவாகவிருந்து அதனதன் யதாப்பிரகாரம் விவேகித்துணர்வது.

## சிரத்தாவிப்பிரவிவேகம்.

சத்ரூபசிரத்தையினுல்ப் புண்ணியம் அதிகரித்து தத்ரூபசிரத்தையினுல் அதனையற்பிதமாக்கி ஓங்காரசிரத்தையினுல் மம

தகங்காரம்வர்ச்சித்திருப்பவனெவனோ அவனே ஞானவிப்பிரன் அவனே சருவபந்தங்களும் நிவர்த்தித்திருக்கின்ற மோக்ஷாதிகாரி யென்று ஞானாத்மாவாகவிருந்து அதன்யதாப்பிரகாரம் விவேகித் துணர்வது.

## பந்தமோக்ஷவிவேகம்.

ஞானாத்மாவாகவிருந்து சர்வாத்தியாயசாரமான அர்த்தபஞ் சக சமஸ்காரத்தால் இதுபந்தம் இதுமோட்சமென்பதை நன்றாய் விவேகித்து பரமமாய் பிர்மமாய்ப் பராற்பரமாய் அவாங்மனோ கோசரமாகவிருக்கின்ற ஸ்ரீபகவானை கோசரரூபமாய் சாட்சாத் காரம்பண்ணி அவ்வனுபவதீர்க்கத்தால் பந்தமோட்சமென்பது மறந்து சதாபரமகைங்கிரியம் பண்ணிக்கொண்டிருப்பது.

## அர்த்தபஞ்சகம்.

சொச்சொரூபம் பரசொரூபம் உபாயசொரூபம் புருஷார்த்த சொரூபம் விரோதிசொரூபமென்னைந்துபேதமாக நிரூபிப்பது. அவற்றுள். சொச்சொரூபம். ஆத்மசொரூபம்.— அது நித்தியர் முத்தர் பெத்தர் கேவலர் முமூக்ஷுக்களென ஐவகை. அவற் றுள். அநாதிநிர்மல சித்ரூபரான பழவடியார்கள்: நித்தியர். சரீரமிருக்கும்போதே பிரகிருதிகுணங்கள்விடுபட்டு அப்பிராகிரு தகுணங்களோடு விளங்குபவர்கள்: முத்தசேதனர்.—தேகமேஆத் மாவாகவும் தேகபோஷணமேபுருஷார்த்தமாகவும் விஷயலாபத் துக்குறுப்பாக வருணாச்சிரமதருமங்களையழியமாறி அசேவிய சேவைபண்ணி பூதஹிம்சை பரதார பரதிரவிய அபகாரம்பண்ணி சம்சாரவர்த்தகராய் பகவவிமுகராயிருப்பவர்கள்: பெத்தசேத னர்.— சாஸ்திரஜென்யக்ஞானத்தாலே பிரகிருதியாத்மவிவேகம் பண்ணி பிரகிருதி துக்காசிரயமாய் ஏயபதார்த்த சமூகமாயிருக் கிற ஆகாரத்தையும் ஆத்மாபிரகிருதைகபரனாய் சுயம்பிரகாச னாய் சுவதச்சுகியாய் நித்தியனாய் அப்பிராகிருதனாயிருக்கிற ஆகா ரத்தையும் அனுசந்தித்து உணர்முழுநலமான் பரமாத்மவிவேகம் பண்ணமாட்டாது ஆத்மானுபவமாத்திரமே புருஷார்த்தமாகவனு பவித்துப் பின்பு சம்சாரசம்பந்தமும் பகவத்பிராப்தியுமற்று அசரீரியாய்க்கொண்டு திரிபவர்: கேவலசேதனர்.— இதராந்தர

வர்ச்சிதராய்மோக்ஷத்திலிச்சையுடையவர்கள்:முமூக்ஷுசேதனர்.

பரசொரூபம்.—பரத்துவ வியூக விபவ அந்தரியாமி அர்ச்சை யெனஐவகை. அவற்றுள்.—அவாக்சியப்பிரபுவாக எழுந்தருளியிருக்கின்ற பரவாசுதேவன்: பரத்துவம்.—சங்கருஷண பிரத்தியும்ந அநிருத்த வாசுதேவ புருஷோத்தமமென்றைந்து பேதமாகயிருப்பது: வியூகம்.—மச்சிய கூர்ம வராக நரசிம்ம வாமன ராம ராம ராம கிருஷ்ண கற்கியாதி அவதாரம்: விபவம்.- சர்வபிதயப்பிரதேசத்திலும் அங்குஷ்டசொரூபமாயெழுந்தருளியிருப்பது: அந்தரியாமி. தனக்கெனவோருருவநாமமின்றி அடியார்களால்க்கொடுக்கும் உருவநாமங்களை அங்கீகரிப்பதாயும் பிரபத்திபண்ணுவதற்கேதுவாயும் ஆராதனைவிக்கிரகங்களாயுமிருப்பது: அர்ச்சை.

உபாயசொரூபம்.—கருமயோகம் ஞானயோகம் பக்தியோகம் பிரபக்திநிஷ்டை ஆசாரியவபிமானமெனஐவகை.

கருமயோகம்.—எக்கிய தான தபோ தியான சந்தியாவந்தன பஞ்சமகாயெக்ஞ அக்கினிகோத்திர தீர்த்தயாத்திரை புண்ணிய க்ஷேத்திரவாச கிரிசர சாந்தராயண புண்ணியநதிஸ்நான விரத சாதுர்மாசிய பலமூலாசன சாஸ்திராப்பியாச சமாராதனை ஜெப தற்பணாதி கருமானுஷ்டானத்தாற் பாவநாசம்பிறந்து ஞானயோகத்துக்குச் சககாரியுமாய் ஐஸ்வரியத்துக்குப் பிரதானசாதனமுமாயிருப்பது.

ஞானயோகம்.-இயம நியம ஆசன பிராணாயாம பிரத்தியாகார தியான தாரணை சமாதிசொரூபமான அஷ்டாங்கயோக மகேதலயமார்க்கத்தினால் ஞானத்துக்கு ஆத்மாவை விஷயமாக்குகை.

பக்தியோகம்.-இருதயகமலம் ஆதித்தியமண்டலந் தொடக்கமான ஸ்தலவிசேஷங்களிலெழுந்தருளியிருக்கிற சர்வேஸ்வரனை விஷயமாக்கி அனவரதபாவனாரூபமாக்குகை.

பிரபக்திநிஷ்டை.-திருப்தரூபப்பிரபக்தி ஆர்த்தரூபப்பிரபக்தியெனஇருவகை. அவற்றுள். திருப்தரூபப்பிரபக்தி.— சுவர்க்க நரகானுபவங்களில் விரக்தியும் பீதியும்பிறந்து பகவதானுபவப்பிராப்திக்குறுப்பாக சதாசாரிய உபதேசக்கிரமத்தாலே உபாயஸ்வீகாரம்பண்ணி விபரீதபிரபக்திநிவர்த்தராய் வேதவிகிதமான வர்ணாச்சிரம அனுஷ்டானமும் பகவத்பாகவத கைங்கிரியமும்

மான்சவர்சகங்களாலே யதாபலம் அனுசந்தித்து ஈஸ்வரன் சேஷியாய் நியந்தாவாய் சுவாமியாய் சரீரியாய் வியாபகனாய் தாரகனாய் ரக்ஷகனாய் போக்தாவாய் சர்வக்ஞனாய் சர்வசக்தியாய் சர்வசம்பூர்ணனாய் அவாப்தசமஸ்தகாமனாயிருக்கிற ஆகாரத்தையுந் தானவனுக்குச்சேஷமாய் நியாமியாய் சுவமாய் சரீரமாய் வியாப்பியமாய் தாரியமாய் ரக்ஷியமாய் போக்கியமாய் அக்ஞனாய் அசக்தனாய் அபூரணனாய் சாபேக்ஷனாயிருக்கிற ஆகாரத்தையும்அனுசந்தித்துசர்வபரங்களையும் அவன்பக்கலிலேபுகவிட்டு நிற்பரனாயிருக்கை. ஆர்த்தரூபப்பிரபத்தி:— நிரோதுக்டாக்ஷம் அடியார்க் சாஸ்திரார்ப்பியாச் சதாசர்ரிய உபதேசத்தால் இதாக்ஞானம் பிறந்தவாறே பகவதானுபவத்துக்கேகாந்தமாம்படி சர்வேஸ்வரனேபுகலென்று பூரணபக்திபண்ணி தடுத்தும் வளைத்தும்பெறுகை.

ஆசாரியவபிமானம்.— பரமதயாளுவான சற்குருவினது திருவடிச்சாயையிலொதுங்கி பயபக்திவிஸ்வாசத்தினால் அன்புருவானதுவளர்ந்து சிந்தனை திருஷ்டி அபயப்பிரதானமுதலிய தயாபாத்திரமாக ஈடுபட்டிருப்பது.

புருஷார்த்தசொரூபம்.—தர்ம அர்த்த காம மோக்ஷ ஐக்கியமென ஐவகை. அவற்றுள்.— பிராணிரக்ஷணத்துக்குறுப்பாகப் பண்ணும் விருத்திவிசேஷங்கள்: தருமம்.—வர்ணாச்சிரம அனுரூபமாக தனதான்யங்களைச்சங்கிரகித்து தேவதாவிஷயங்களிலும் பிதிரியமான கருமங்களிலும் பிராணிகள்விஷயமாகவும் உத்கிருஷ்டமானதேசகாலபாத்திரங்களையறிந்துதருமபுத்தியாய்வியாபிக்கை: அர்த்தம்.—இகவின்பம் பரவின்பமெனத் துவிபாகமாயிருப்பது: காமம். — பிதிர் மாதுர் ரத்ன தன தான்ய வஸ்திர அன்ன பான புத்திர மித்திர களத்திர பசுக் கிரக க்ஷேத்திர சந்தன குசும தாம் பூலாதி பதார்த்தங்களிற் சத்தாதி விஷயானுபவத்தால்வந்த சுக விசேஷங்கள்: இகவின்பம்.—இதில்விலக்ஷணமாய்த் தேஜோரூபமான சுவர்க்கலோகங்களிற்சென்று பசி தாக சோக மோக சராய் மரணாதிகளில்லாமல் ஆர்ச்சித்தபுண்ணியத்திற் கீடாக அமுதபானம்பண்ணி யப்சரசுகளோடே சத்தாதி விஷயானுபவம்பண்ணுவது: பரவின்பம். — அனர்த்தநிவர்த்தி ஆனந்தாவாப்தியென்

னத் துவிபாகமாயிருப்பது: மோக்ஷம். — பகவதானுபவரூபமான பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷம்: ஐக்கியம்.

விரோதிசொரூபம். — சொரூபவிரோதி பரத்துவவிரோதி உபாயவிரோதி புருஷார்த்தவிரோதி பிராப்திவிரோதியென ஐவகை. அவற்றுள்.—தேகாத்மபுத்தி சுவாதந்திரம் அன்னியசேஷத்துவம்: சொரூபவிரோதி.—தேவதாந்தர பரத்துவ பிரதிபத்தியன்னுவது: பரத்துவவிரோதி.-உபாயாந்தர பிரதிபத்தி: உபாயவிரோதி.—இதரபுருஷார்த்தங்களிலிச்சை: புருஷார்த்தவிரோதி.— குரு சிஷ்யபலத்தை மாறுடிக்கொண்டு அனுதாப சூன்யமாயிருக்கை: பிராப்திவிரோதி.— அகங்காரம்: சர்வத்திரவிரோதியாகக்கடவது.

இப்படி அர்த்தபஞ்சக க்ஞானம்பிறந்து முமுக்ஷுவாய் ஞானுஷ்டானங்களோடே கூடிவர்த்திக்குமவன் ஈஸ்வரனுக்கு நித்திய முத்தரிலும் அத்தியந்த அபிமதவிஷயமாகக்கடவன்.

## விசிஷ்டதாற்பரியம்.

கருமபக்தி ஞானமென்னும் யோகத்திரயரூபமாய் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பேதவபேதத்தை நிரூபிக்கப்படுவது. அவற்றுள். கர்மயோகம்.— ஆசிரயம் நியதம் பரமம் எக்நேம் நியாசம் யோகமென்னச் சட்பேதமாக நிரூபிப்பது.

ஆசிரயதர்மம்.— சருவகர்மங்களையும்விட்டு ஸ்ரீபகவானாகிய பரப்பிர்மசற்குருவையாசிரயித்து அவனது நியமனவாக்கியப்படி சமஸ்தமானகருமங்களையும் கைங்கிரியரூபமாய்ச்செய்யப்படுவது.

நியததர்மம்.-அநித்தியசரீரத்துக்குண்டான ஆனிலாபம் நித்தியசரீரியான ஆத்மாவுக்கில்லையென நமதுகிருபையினால்த்தெரிந்து தீர்க்கதிடவிரதனாய் புனர்ச்செனமத்தைக்கொடுக்காமல் பிராமணனுக்குப் பூசுரகிருத்தியம் க்ஷத்திரியனுக்குநிக்கிரகானுக்கிரகம் வைசியனுக்குக் கிருஷிவாணிச்சியம் சூத்திரனுக்கு அக்கிரவர்ண சேவையும் பிராக்கிலேநின்றும் லப்தமான அநித்தியசரீரமிருக்கிறபரியந்தம் தத்தம்விதிபூர்வகமாகச் செய்யப்படுவது.

பரமதர்மம். — சருவேந்திரிய சிரேஷ்டமாயிருப்பது புத்தி அந்தப்புத்திக்கிப்பரமாகிய புராதனதேவை யுண்மையாகத்தெரி

சித்து நிஷ்காமனாய் ஜனகாதிகளைப்போல ஞானகர்மமிரண்டுஞ் சமமாகவனுஷ்டிப்பது.

எக்ஞதர்மம்.—பலவாறாகவிதித்திருக்கும் யாகங்களைச்சஞ்சேபித்து கிரியாயெக்ஞம் மானசயெக்ஞம் ஞானயெக்ஞமென்னத்திரிவிதரூபமாக நிரூபிக்கப்படுவது. அவற்றுள்.-பகிர்முகப்பிராந்தனாய் இன்னயாகத்துக்கு இன்னபலமெனத்தெரிந்து காமியார்த்தமாக பலத்தையுத்தேசித்துச்செய்து அதற்குத்தக்கதக்க அசாஸ்வதமான புண்ணியபோகத்தையடையப்படுவது: கிரியாயெக்ஞம்.—சமஸ்தமான யாகங்களையும் விதிபூர்வகமாகச்செய்து நிஷ்காமனாய் அதன்பிரயோஜனத்தை எனக்கற்பித்து சாஸ்வதமாயும் நித்தியமாயுமிருக்கின்ற என்னையேயடையப்படுவது: மானசயெக்ஞம்.-கிருதகிருத்தியனாய் சர்வமும்பிர்மமயமெனத்தெளிந்து செய்யுங் கிரிகைக்கு பலரூபியாகவிருந்தும் லோகரக்ஷகார்த்தம் பரப்பிர்மநியதமான சமஸ்தமானயாகங்களையும் விதிபூர்வகமாகச்செய்யப்படுவது: ஞானயெக்ஞம்.

நியாசதர்மம்.— பார்ப்பது கேட்பது முகப்பது ருசிப்பது பரிசிப்பது வசனிப்பது நடப்பதுமுதலிய பாகியக்கிரிகைகள்முழுதும் சகஜமாயிருப்பதால் விஷயேந்திரியப்புணர்ப்பினால் தானே நடக்குமெனத்தெரிந்து மனதைய தன்வழிசெலுத்தாமல் நிர்ச்சலமாக்கி அந்த அசஞ்சலமான நிர்மலமனதை நம்மிடத்தில் சந்நியாசம்பண்ணி நியாசநிஷ்டனாய் சமஸ்தமானகருமங்களையும் விதிபூர்வகமாகச்செய்து நிஷ்காமனாய் அதன்பிரயோஜனத்தை எனக்கற்பிதமாக்குவது.

யோகதர்மம். — அப்பியாசதீர்க்கத்தால் பகிர்முகவழியில்ச்செல்லும் இந்திரியவாசல்களையடைத்து மனதையகமுகமாக்கி அந்த அகமுகமாக்கிய நிர்மலமனசினால் என்னையொருமைப்பாடாகச் சிந்திக்கப்படுவது.

## பக்தியோகம்.

பாவனேஸ்வரன் மந்திரேஸ்வரன் பூதேஸ்வரன் புவனேஸ்வரன் விஸ்வேஸ்வரன் வித்தியேஸ்வரனென்னச் சட்பேதமாய் யார் யார் எந்தரூபத்தைநிர்த்தேசித்து அதனைபக்திபூர்வகமாயுபா

சிக்கிறார்களோ ஸ்ரீபகவான் அவர்களுக்கந்தரூபமாய்ச் சாக்ஷாத் காரமாகி அபேக்ஷிதபூர்த்தியைக் கொடுக்கப்படுவது.

பாவனேஸ்வரன். — தனக்கெனவோருருவநாமமின்றி அடியார்களெந்தரூபத்தைக் கொடுக்கிறார்களோ அதுவேதனக்குவந்த ரூபமாயும் அடியார்களெந்தநாமத்தைக் கொடுக்கிறார்களோ அதுவே தனக்குவந்தநாமமாயும் ஆவிற்பவித்து அவர்களபேக்ஷிதபூர்த்தியைக்கொடுத்து ரக்ஷிப்பவன்.

மந்திரேஸ்வரன்.—அரியயனரனென்னும் மூன்றுமூர்த்தியாய் மூன்றுமூர்த்திகளுக்கும் முதன்மையான பரசொரூபமாய் பிரணவசொரூபமான ஓங்காரப்பொருளாய் அந்த ஓங்காரமான ஏகாக்ஷரத்தைமுதலில்வைத்து தங்கள் தங்கள் அபீஷ்டாக்ஷரத்தை அதனோடுசேர்த்து நம பவ சுத சுவாகா உம் படு ஔஷடு வென்னும் ஏழுவாசகங்களை அதன்முடிவிலமைத்து விதிபூர்வகமாயுச்சரிப்பவர்க்கு அபேக்ஷித பூர்த்தியைக்கொடுக்கின்ற உச்சாரணபலப்பிரதனாகவிருப்பவன்.

பூதேஸ்வரன்.— பிருதிவு அப்பு தேயுவு வாயுவு ஆகாசம் மனோபுத்தி ஆத்மாவென்னும் எட்டுறுப்பினையுடையனாய் உடலுக்குயிராய் உயிருக்குடலாய் அவற்றுக்காதாரமாய் தமதைஸ்வரியம் இழந்துபோகாமல் சதாபாதுகாப்பவன்.

புவனேஸ்வரன்.— இதயாம்பரத்திலிருந்து லீலாவிபூதி நித்தியவிபூதியென்னும் உபயஐஸ்வரியங்களையும் பிறப்பித்து சகல புவனகர்த்தாவாய் சர்வாத்மாக்களுக்கும் அந்தரியாமியாகநின்று சருவரக்ஷணைகளும்பண்ணுபவன்.

விஸ்வேஸ்வரன். — ஞானசக்ஷுவினால்சாக்ஷாத்கரித்தும் நிர்மலமனதினால்தியானித்தும் விதிவாசகங்களால் ஸ்தோத்தரித்தும் ஆசிரதருஜ்ஜீவித்தற்பொருட்டு விஸ்வங்களாகப்பரவியிருக்கின்ற சருவாண்டபந்திகளையும் ஒருதிருமேனியில் தொகுத்து நிற்பவன்.

வித்தியேஸ்வரன்.—சருவாதாரமாய் சருவஜெகத்காரணனாய் ஞானகாசனாய் அனுபவவேத்தியனாய் அவாங்மனோகோசரமாயிருப்பவன்.

## ஞானயோகம்.

க்ஷேத்திரக்னும் சுகிர்தக்னும் சுகக்னும் தேவக்னும் கருமக்னும்

பிர்மக்ஞமென்னச் சட்பேதமாய் அகங்காரமமாகாரம்வர்ச்சித்து ஸ்ரீபகவான் அன்பு அறிவு ஆராய்ச்சி தேற்றமுதலிய ஐக்கிய குணங்களால்ப் பிரிவறநின்று சதா ஆராதிக்கப்படுவது.

க்ஷேத்திரக்ஞம்.—பூதம்ஐந்து புலன்ஐந்து ஞானேந்திரியம் ஐந்து கன்மேந்திரியம்ஐந்து மூலப்பிரகிருதி மனோபுத்தி அகங்காரம் நாலு ஆக இருபத்துநாலுதத்துவங்களோடுகூடிய பிரகிருதி க்ஷேத்திரம் அந்தப்பிரகிருதிகுணங்களைத்தெரிந்து அதற்கு விலக்ஷணமாகவிருக்கின்ற புருஷனாகியநாலே க்ஷேத்திரக்ஞனென்றுணரப்படுவது.

சுகிர்தக்ஞம். — குணத்திரயரூபமாய்நின்று காலச்சக்கரப் பிராந்தியினால் பிராணிகளை தேவ மனுஷிய திரியக்காதிகளாக மாறிமாறி சஞ்சரிக்கப்பண்ணும் பிரகிருதிசம்பந்தத்தைவிலக்கி அப்பிராகிருதசம்பந்தமான சுத்தசத்துவசாந்தியாதி சற்குணவிசிஷ்டனாய் பிராரத்துவரூபமாய்வந்த மானுவமான சுகாசுக இஷ்டாரிஷ்ட சிதோஷ்ணாதிகளில் சமசித்தமுடையனாய் நம்மிடத்திலன்பைச்செலுத்தி எனக்குப்பிரியமாயிருப்பவனெவனோ அவனே புண்ணியாத்மாவென்றுணரப்படுவது.

சுகக்ஞம்.— அச்சுவத்தமாகவிதிக்கும் மாயாதிமிரத்தை ஞான சூரியனாற்சிதைத்து அதற்கதீதமாகவிருக்கும் நம் ஆனந்தசொரூபத்தை விமலசித்தத்திற்றெளிந்து சருவமும் ஆனந்தசொரூபமாய்த்தெரிசிப்பவனெவனோ அவனே புருஷோத்தமனென்றுணரப்படுவது.

தேவக்ஞம்.— நரகசாதனமான அசத்தியம் அனுர்தவாதம் தோஷதிருக்கு மாயோபாயகம் நிர்த்தயை நிஷ்காரணவைரம் பாபசரிதம் பிரஜாக்ஷயம் துரிதாலயம் சுரதாபேக்ஷை தவிர்ச்சென்னியம் துராசாரம் துரார்ச்சிதம் துராக்கிரவகர்த்தைமுதலிய கொடுந்தொழில்களைச்செய்து சிக்கிரம் மீளாதநரகத்தையனுபவிக்கும் அசுரசம்பத்தையும் அந்த ஆசுரகிருத்தியஞ்செய்பவர்களையும் அவர்கள்சம்பந்தமானவரோடு சம்பந்தமானவர்களையும் கட்டோடும்விலக்கி அகிம்சா சத்திய அஸ்தேய பிர்மசரிய அக்குரோத அலோபத்துவ அவஞ்சக குண தைரிய க்ஷமை சுசித்துவாதி

சுசிலகுணகணங்களான தெய்வசம்பத்துக்கள்நிறைந்து சதா நம்மிடத்திலன்பைச்செலுத்துகின்ற புண்ணியசிரேஷ்டனை நரன் சுரனெனக்குறிக்காமல் மகத்தானநித்தியசூரியென்றுணரப்படுவது.

கருமக்ஞம்.—ஓம் தத் சத்தென்கின்ற சிரத்தாத்திரயவிவேகியாய் ஆகர்ரம் எக்ஞம் தவசு தானமுதலிய விதிவத்தான கருமமுழுதும் யதார்த்தமாக சத்ரூபசிரத்தையினாலனுஷ்டித்து அவையாவுந் தத்ரூபசிரத்தையினாலெனக்கற்பித்து மமதகங்காரம்வர்ச்சித்து செய்துஞ்செய்திலனாகவிருக்கும் ஓங்காரசிரத்தையினால் சதாநம்மிடத்திலன்பைச்செலுத்தி எனக்குப்பிரியானேசமாயிருக்கின்ற கிருதகிருத்தியனென்றுணரப்படுவது.

பிர்மக்ஞம்.—அகிலமங்களகுணசொரூபனாய் கல்யாணகுணநிதியாய் சருவாவயவசகிதமான திவ்வியமங்களவிக்கிரக சம்யுக்தனாய் ரதசாரத்தியம்பண்ணிக்கொண்டு இதோ உனக்கு நேரேபிரகாசிக்கும் பார்த்தசாரதியான நானே பரப்பிர்மதத்துவமென்றுணர்த்த அப்படியே பாண்டவமத்தியனான அர்ச்சுனன் ஆகத்திலும் புறத்திலும் அனுபவிச்சிதமாயுணரப்படுவது.

## உத்தரகீதை.

விஷயபாகுள்ய விவிதப்பிராந்தியினால் வீஷ்மபருவத்தில் சிரவணித்த பூர்வகீதையின் அர்த்தத்தில் சந்தேகம்பிறந்து அனுபவரசந்தடைப்பட்டு சரணமாகவடைந்த அர்ச்சுனனுக்குப் பூர்வகீதார்த்தமுழுதும் கரும யோகஞானமென்னும் மூன்று அத்தியாயரூபமாய்ச்சங்கிரகித்து அஸ்வமேதபருவத்தில்ப் போதித்து அவனது அக்ஞான சந்தேக விபரீதமுழுதும் பரிகரித்து ஸ்ரீபகவான் அவனுக்குமெப்போதுமாறுபடாத அப்பிரதிபந்த ஆனந்த பூர்த்தியைக் கொடுக்கப்படுவது.

நித்தியகைங்கிரியம்.—கருமபக்தி ஞானத்தைச் சாதித்தடைதற்கசக்தனாக ஆசிரயிக்கின்ற அர்ச்சுனன் அதனது சூக்ஷமத்தைத்தெரிந்து அதனைச்சாதித்தடையும்படியாக அவனைசக்தனாக்குதற்பொருட்டு கருமப்பிரதம் பக்தி பக்திப்பிரதம் ஞானம் ஞானப்பிரதனான என்னைப்பற்றிநின்று என்னையே குருவாக்கி

பலத்துக்கெதிர்பார்த்திருப்பவன்: கற்பன்.— பிராப்பியபலத்தைப் பிராபகதிசையிலனுபவித்துச் சருவானந்தசொரூபியாய் விளங்குபவன்: நியாமியன்.- பரமப்பிரீதியினுற்கிரகிக்கப்பட்டு திருச்சித்தத்தின்படி யமைந்துநிற்பவன்: பிரவேசன்.— நிரதிசயானந்தமகிமையைச் சாட்சாத்காரமாகத்தெரிசித்து அடிக்கடியாய்ப் பரவிநிற்பவன்: அற்புதன். — பூரணதிருஷ்டியினுற் பரஸ்பரமாகத்தடையற்று விளங்குபவன்: சாமியன்.

## வாசுதேவகுருப்பிர்மம்.

அதிகாரபேதத்தால் வாமன உபேந்திர திருவிக்கிரம வைபவ பரமார்த்தமென்றைந்துவிதமாகப்பிரிந்துநின்று ஆசிரயிப்பவர்க்குச் சர்வரட்சைகளையும்பண்ணுபவன். அவற்றுள்.-ஆசிரயிப்பவர்கள்வெறுவாமல் உபாயபூர்வகமாக சௌலப்பியத்தைக்காட்டிப் பாவச்சேற்றைச்சுத்திகரிப்பது: வாமனம்.— சுவாமித்துவத்தைக் காட்டி சௌசீல்யத்தாற் பூர்த்திபண்ணுவது: உபேந்திரம். — பாவாபாவங்களைக்கடந்து சலட்சண விலட்சணமாக விளங்குவது: திருவிக்கிரமம். — தம்பதிசமேதராகநின்று நித்தியசேவையைக் கொடுக்கப்படுவது: வைபவம்.-வாத்சல்ய சுவாமித்துவ சௌசீல்ய சௌலப்பிய ஞான சக்தியாதி சகலகுணசம்பூரணரான ஸ்ரீவாசுதேவகுருப்பிர்மமே அபாரகருணையினுல் ஆசிரதருஜ்ஜீவிக்கும்படி தமதுயதார்த்தசொரூபத்தைவெளியிட்டருள்வது: பரமார்த்தம். — குற்றங்கண்டு வெறுவாமைக்கு: வாத்சல்யம்.— காரியஞ்செய்யுமென்றுதுணிகைக்கு: சுவாமித்துவம்.-சுவாமித்துவத்தைக் கண்டகலாமைக்கு: சௌசீல்யம். — கண்டு பற்றுகைக்கு: சௌலப்பியம்.— அக்ஞதியைப்போக்குதற்கு: ஞானம்.— தன்னைக்கொடுப்பதற்கு: சக்தி.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணைய குருப்பிர்மணே நம:



ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



# வாக்கியசம்பூரணம்.

ஸ்ரீபகவான் வாசுதேவசற்குருவின் திருவடிக்கமலங்களில்க
காயிக வாசக மானசநிர்த்தேச பூர்த்தித்துவமென்னும் நிஷ்டாபஞ்
சகரூபமாய் ஆத்மசமர்ப்பணம்பண்ணி சற்குரு அதிகார வாக்கிய
சொரூபமென்கின்ற பரிச்சேதரூபமுழுதையும் பகவதாகாரமா
யனுபவிக்கப்படுவது.

காயிகநிஷ்டை.—சந்நிதிபூர்வகமாய் உன்னுதலற்று அடியற்ற
மரம்போலவிழுந்து சுசக்திபிழந்துகிடக்கின்ற ஓரதிகாரியை ஸ்ரீ
பகவான் தமதுசக்தியை உபபலமாய்க்கொடுத்தெழுப்பி அவனது
குறையைக்கேட்டு அக்குறையைப்பரிகரித்துரட்சிப்பது.

வாசகநிஷ்டை.—ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மத்தை மந்
திரரூபமாய்வரித்து மந்திரசமூகங்களாற்செபித்துமந்திரபுஷ்பங்க
ளாலர்ச்சித்துமந்திரபூர்வமாய்ச்சாட்சாத்கரித்து மந்திரப்பிரயோ
ஜனத்தை யடையப்படுவது.

மானசநிஷ்டை.—தேவத்தியானத்தால் தேவரூபத்தையும்
பிதிர்த்தியானத்தால் பிதிருருவத்தையும் எவரொவரொந்தரூபத்
தைத் தியானித்தாலும் அவரவரந்தரூபத்தையே யடைவது
போல இதராந்தரவர்ச்சிதராய் ஸ்ரீவாசுதேவப்பிர்மத்தைத் தியா
னிப்பவர்கள் வாசுதேவசொரூபத்தையே யடையப்படுவது.

நிர்த்தேசநிஷ்டை.—அவாங்மனோகோசரமாய் விளங்குகின்ற
ஸ்ரீவாசுதேவகுருப்பிர்மம் தம்மை யாசிரதாளெந்தரூபமாக நிர்த்
தேசிக்கிறார்களோ தாமவர்களுக்கந்தரூபத்தோடு சாட்சாத்கார
மாகி அவர்களபேட்சித பூர்த்தியைப்பண்ணப்படுவது.

பூர்த்தித்துவநிஷ்டை.—அநகனாய் ஸ்ரீபகவான்வாசுதேவகுரு
ப்பிர்மத்தின் இருப்பிடமான அகோசர வனந்தாசன யோகசயன
பரந்தாமமென்கின்ற தானசதுஷ்டயத்தையும் தூளித உதக
பஸ்ம சுகந்த பாதுகா விமலமென்னும் புஷ்பதாதுக்களாற் சிறப்

பிக்கின்ற பதகமலத்தையும் ஆயுதஸ்த அபயஸ்த உல்லாச பந்தன திருத்த சையோகமென்னும் கெம்பீரசோபைகளாற் சொலித்துக் கொண்டிருக்கின்ற கரகமலத்தையும் சத்திய ஞான அனந்த ஆனந்த பரிபூரண ததாகாரமென்னும் தெள்ளியசற்சாரமதுர மாய் நிறைந்திருக்கின்ற இதயகமலத்தையும் உருவ அருவ சகல கேவல சருவ சம்பூரணமென்னும் விவிதகாந்தியினாற் சுடர்விட் டெறிக்கின்ற முககமலத்தையும் பரத்துவ சௌலப்பியமுதலிய சகலகுணசம்பூரண சருவாதீனமுமுடைய சருவதேஜோரூபத் தையும் பிரமாணாதீதமாகவிருக்கின்ற ஸ்ரீவாசுதேவின் திவ்வியப் பிரபாவமகிமைகளையும் நிறைநிறையே ஆரோகணரூபமாயும் அவ ரோகணரூபமாயும் ஆரோகண வவரோகண வவரோகண வாரோ கணரூபமாயும் நவநவமாகவநுபவித்தும் ஸ்ரீவாசுதேவரசந்தெகுட் டாமையால் மலருமணமும் மணியுமொளியும்போல எக்காலமும் பிரிவற்று சதாஅனுபவித்துக்கொண்டிருப்பது.

ஆத்மசமர்ப்பணம்.—சரீரக்கிரிகை இந்திரியக்காட்சி பிராண பெலம் மனோவாசனை புத்தியவதானம் ஆத்மசுதந்தரமென்னும் சட்கிருத்தியங்களையும் சருவேஸ்வரசற்குருவினால் நடத்தக்கண்டு சமஸ்தமும் ஸ்ரீவாசுதேவப்பிரீதியைப்பண்ணி நானென்னுஞ்சுதந் தரத்தைத் தவிர்த்துநிற்பது.

## சற்குரு.

ஸ்ரீபகவான் ஆசிரதரட்சகார்த்தம் சௌலப்பிய சற்குருவாய் வெளியிட்டுப் பூர்வசிநேகத்தாற்றொடர்ந்து ஆசிரயிப்பவர்களை அகாரணமாகஆசிரயித்து அவர்க்கவராகவழிபட்டு தனக்குரிய நித் தியசம்பந்தத்தைவிளக்கி பரமார்த்ததெரிசனத்தை யனுக்கிரகிக் கும் ஸ்ரீவாசுதேவபரப்பிர்மம்.

## அதிகாரி.

அக்ஞன் பிராந்தன் அபிமானி சரீரி சாட்சி சம்பந்தி முத்தன் நித்தியன் பூரணனென்னும் அதிகார தாரதம்மியத்தைக் குறிக்கா மல்ஆசிரதரட்சகார்த்தம்கிரியாபூமியில் ஆசிரயிப்பவருக்காதரணை யாகவிருக்கும் அனதிகாரிகளையும் அதிகாரிகளாகக்கைக்கொண்டு ஸ்ரீபகவான் வாசுதேவசற்குருவினால் திருத்தப்படுவது. — சடத் துவமிகுதியால் தனதாரபுவிபுத்திராதிகளைக்குறித்து சற்றேனு

முதிப்பில்லாதவன்: அக்ஞன். - விவிதமோகத்தாற் பித்தேறி விஷயாந்தரங்களிற் சுழற்சிசெய்பவன்: பிராந்தன்.- தனதாரபுவிபுத்திராதிகளுக்குத் தளர்ச்சிவாராமற் காப்பாற்றுபவன்: அபிமானி.— சரீரகரணாதிகளைச் சுவாதீனமாக்கி சற்குருமுகமாய்ச் சுத்திகரிப்பவன்: சரீரி. — கருவிகரணாதிகளுக்குப் பிரத்தேகனாய் காரணகாரியங்களைப் பகுத்தறிபவன்: சாட்சி.— முத்தருளத்துத்தானாய் பெத்தருளத்துவேறாய் முமுட்சுசேதனரைத் தடுத்துரட்சிக்கும் ஸ்ரீபகவானாகிய திரித்துவதிரியேகவஸ்துவோடகலாதிருப்பவன்: சம்பந்தி. — மேல்விடுபெறுதற்கு ஆயத்தமாகக் கிரியாபந்தகம் வர்ச்சித்திருப்பவன்: முத்தன்.— நித்தியபூமியையுறித்தாக்கி நியமனார்த்தமாகக் கிரியாபூமியைப்பூர்த்திசெய்பவன்: நித்தியன். — ஸ்ரீபகவான்வாசுதேவசற்குருவின் திருநோக்கத்தால் உபயவிபூதியுந்தட்டுமாறி கிருதகிருத்தியனாய் எல்லையற்றிருப்பவன்: பூரணன்.— சர்வாதிகாரிகளுக்குந்தலைமையாய் அவர்களுக்குள்ளிலும் புறம்பிலு மூர்த்திகரித்துநின்று திரித்துவவஸ்து திரியேகவஸ்துவைவிளக்கி சரண்யத்துவாரா நித்தியத்தையும் சாட்குண்ய சமர்த்தியினால் பூரணத்தையும் அனுக்கிரகிப்பவன் ஸ்ரீபகவான் வாசுதேவசற்குரு.

## வாக்கியம்.

உபதேசபத்ததி சங்கிரகபத்ததி சிட்டாசாரபத்ததி தேசிகவிலாசபத்ததி நிருபபத்ததி நியமனபத்ததியென்னுஞ் சட்பத்ததியோடுகூடிய சம்பூரண ரகசியம். அவற்றுள். உபதேசபத்ததி. — ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மத்தை ஆசிரயிப்பவர்களுக்குச் சிரவணாதிரூபமாய் நிரூபகம்பண்ணுவது. சங்கிரகபத்ததி. — சம்பூரணரகசியத்தை ஒருபிரகாரஞ் சஞ்சேபித்து உபதேசப்பொருளைவிரித்து விக்ஞாபனம் நியமனமென் றிருவகையாக நிரூபிக்கப்படுவது. சிட்டாசாரபத்ததி.— சற்குரு அதிகாரவாக்கிய சொரூபத்தை நிரூபிக்கப்படுவது. தேசிகவிலாசபத்ததி.- சற்குரு சாஸ்திர விவேக மீமாம்ச வைசேடிக நையாயிக யோக வைஷ்ணவ சைவ வேதாந்த மோட்ச சரமோபாய பலப்பிரதமென்னுந் துவாதசாந்த பலப்பிரத விதாயகரூபமாக நிரூபிக்கப்படுவது. நிருபபத்ததி. — சரீர சரீரியைவிளக்கி ஓரதிகாரியின்

பிரயாணவோலையை சருவாதிகாரிகளான நித்திய வர்க்கங்களுக்குச் சம்பந்தானுரூபமா யெழுதப்படுவது. நியமனபத்ததி.—வியாக்கிரபுர மதுராபுர கோஷ்டபுர ஸ்ரீசைல பரமபதமென்னும் சர்வாலயசம்யுக்தனான சர்வேஸ்வரன் தமது ஆசிரதாளான நித்தியவர்க்கங்களை முன்னிட்டுப் பரஸ்பரமாகயெழுதும்நிருபத்தால் பூமியந்தர சுவர்க்கமென்னும் திரிலோகவரையை நிறுத்தப்படுவது

## சொரூபம்.

சிற் சட பந்த மோட்ச ததாகாரபஞ்சக சதாவிசார அற்புதாதிமகிமையால் பிரகாசிக்கப்படுவது. அவற்றுள்.—பரிச்சேதரகிதமா யெல்லையற்றிருப்பது: சித்து.—பரிச்சேததிரிசியமாய்ப் பரவிநிற்பது: சடம். —ஓர்சத்தி சித்திலிருந்துவேறுபட்டுத் திரிசியசடமாய்ப் பரிணமித்துழல்வது: பந்தம். — சடசத்தியைமித்தையாகக் கண்டு சிற்சத்தியை சின்மயமாகத்தெரிசிப்பது: மோட்சம்.—பிரிவில்திரித்துவமாய் சேர்த்தியில்திரியேகமாய் சர்வசத்திமானுகவிருக்கின்ற வாசுதேவபரப்பிர்மம்: ததாகாரம்.—புருஷமுயற்சியினுல் சாஸ்திரபடன சற்கிருத்திய சற்சனசிநேக சுத்தவாசனு சத்திய விவேகத்தைப்பெற்று விவேகநீர்க்கத்தால்ப் பிரதான அங்குரத்தைக்கண்டு மாயாமோகத்தை நிராகரித்துநிற்கும் அதிசூரனுன ஓரதிகாரியைப் பூரணஞானத்தை யடைவித்துப் பவரோகத்தை நிவர்த்திபண்ணுவது: சதாவிசாரம்.

## அற்புதம்.

நிரோதுவாக ஸ்ரீபகவான் ஓரதிகாரியின் சித்தத்திற்குடியேறி பூர்வமலினத்தைமாற்றி நிர்மலமான அவஸ்தா கர்ம குண விஷய சுவிசேஷ அற்புதாதிமகிமைகளால் நவநவமாகப்புதிப்பித்து பரஸ்பர ஐக்கியத்தால்த் தானவனுகநின்று ஞானசக்தியாதி குணகணபூர்த்தியினுல்ப் பிரகாசிக்கப்படுவது. அவற்றுள்.— நம்யேகநாயகனது திருவடிசம்பந்தம்பெற்று துரிய துரியாதீதநிஷ்டனுய்த் தடையற்றுவிளங்குவது: அவஸ்தை.—உபயவிபூதியும் நிலைநிறுத்தி நியதகைங்கிரியத்தை நடத்தப்படுவது: கர்மம்.— ஞானம் பரிசுத்தம் நீதி கருணை அன்பு அடக்கமுதலிய சுசீலசாந்தனுய்ப் பிரகாசிப்பது: குணம். — சுவாமிக்குச் சுவமாய் சொத்துக்குச் சுவாமி

யாயிருப்பது: விஷயம். — ஸ்ரீபகவான் ஓரதிகாரிக்கித் திருவடிமரு டஞ்சூட்டி ஆசாரியபரம்பரையையுபதேசித்து நித்தியகைங்கிரி யத்தை நியமிக்கப்படுவது: சுவிசேஷம்.

இப்படியே ஸ்ரீபகவத்கடாக்ஷத்தால் சருவாதிகாரிகளும் அவரவர்க்குரிய சம்பந்தானுசம்பந்தங்களைத்தெரிந்து நித்தியபலப் பிரதமான பிராப்பியகைங்கிரியத்தைப் பிராபகதிசையிலடையப் பெற்று அதிஆச்சரிய வியப்பையுடையராய் ஜெயாவிஜெயபவ வென்றுவாழ்த்தி ஆசிரதசிருதயகமலமாகிற திவ்வியப்பிரதேசத் தைநோக்கி மங்களதினத்தைக்குறிப்பிட்டு பரஸ்பரம் விக்ஞாபன ரூபமாய் நிருபம் யெழுதப்படுவது: அற்புதம்.

ஸ்ரீராஜ ராஜேஸ்வர திருவஷ்ணுப குருப்பிரமணேநம:



உ

ஹரி ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## சொரூபஸ்திதி.

அவாங்மனோகோசரமாய் விளங்கிய ஸ்ரீவாசுதேவகுருப்பிர மம் ஆசிரதரக்ஷகார்த்தம் அவதாரபிரதுர்பவமாக வெளிவிட்டு அதிகார சற்குரு அற்புத சேவைகளைவிளக்கி அவர்களுக்காகத்த பூர்த்தியைப்பண்ணிவைப்பது.

## அதிகாரி.

சுக்ஞானம் நயாபாத்திரம் எத்தனம் சரமோபாயம் நிரச னம் சுவாநுபாவியம் பலப்பிரதம் நித்தியகைங்கிரியமென்னும் சாதனாஷ்டக சம்பூர்த்தியையுடையவன். அதற்குள். சுக்ஞானம்.- சிற் சடசம்பந்தமான மனதை ஸ்ரீவாசுதேவனிடத்தில் வைத்து ஸ்ரீவாசுதேவனே பரவாசுதேவன் பரவாசுதேவனே ஸ்ரீவாசு தேவனென்றுணரப்படுவது. நயாபாத்திரம்.—வைச்சியானுசந் தானபூர்வகமாக வாசுதேவசற்குருவினதுபரமதயானத்துக்கெதிர் பார்த்திருப்பது. எத்தனம்.—பரமசிருஷ்டிக்கிவிரோதமான மம தகங்காரபந்திகளைப் புருஷமுயற்சியினால் த்தியச்சிக்கப்படுவது.

சரமோபாயம்.— வாசுதேவசற்குருசரணமே தேகதேகி ஆத்மாவைத் திரிகாண்டபூர்வகமாகச் சாதிக்கும் சருவசாஸ்திரபண்டிதரான சக்தாளுக்கும் அவையாவுமில்லாத நம்புதல்மாத்திரமுடைய அசக்தாளுக்கும் நிச்சிதகதியென்றுணரப்படுவது. — அவற்றுள். சிற்சொரூபத்திற் சடத்துவகௌணமும் சடசொரூபத்திற் சித்கௌணமுமாயிருப்பது: தேகம். — தேசகாலவஸ்துவாதிகளாற் பரிச்சேதித்தும் பரிச்சேதிக்கக்கூடாத சச்சிதானந்த பரிபூரணராயிருப்பவன்: தேகி.—கிரியாபூமியிற் சச்சிதானந்தகுணமென்றும் விருத்திபேதத்தாற் றாரதம்மியமுள்ளதாகியும் நித்தியபூமியிற் சத்சொரூபத்தைப்பெற்று ஞானானந்தகுணங்களிற் றாரதம்மியமுடையதாயுமிருப்பது: தேசபரிச்சேதம்.—கிரியாபூமியில் பூதவர்த்தமான பௌஷ்யதியென்கின்ற காலத்திரயமும் அடிக்கடி மாறிமாறிச்சுழல்வதாகியும் நித்தியபூமியிற்கற்பமுதற்பிரளயபரியந்தம் ஒருதன்மைத்தாயுமிருப்பது: காலபரிச்சேதம்.— கிரியாபூமியில் அக்ஞானத்துக்குவசமாகி தாரித்திரசம்பன்ன ஈஸ்வரப்பெயருருவாதி விச்சின்னரூபமாய்ச் சிதைந்துநிற்பது நித்தியபூமியில் ஞானபூரணராகவிருந்தும் வினோதகாரணமாகதாரித்திரசம்பன்ன ஈஸ்வரப்பெயருருவாதி பரிச்சேதரூபமாய்ப் பிரிந்துநின்று பரிச்சேதரகிதரால் விளையாடப்படுவது: வஸ்துபரிச்சேதம். — சருவவியாபக சாக்ஷிபூத சின்மாத்திர சொரூபமாய் எல்லையற்றிருப்பது: ஆத்மா.

நிரசனம்.— சரணாகதிகளுக்குவிலக்கான பாவாத்மாக்களாகிய பாஷண்டசாத்திரர்களைக் கட்டோடுந் தியசிக்கத்தக்கது. சுவாநுபாவியம்.—சரண்யச்சோதிமூல் சாதனசாத்தியரூபமான ஆரோகண அவரோகண நிலையைத்தெரிந்து அவ்வனுபவத்தை அதிகாரானுரூபமாகச் சாதிக்கப்படுவது. பலப்பிரதம்.—சாதனசாத்தியப்பிரயோஜனசொரூபமான வாசுதேவபரப்பிரமமே சருவாபீஷ்டசித்தியுங் கொடுப்பதற்குரியனெனத் துணிந்திருப்பது. நித்தியகைங்கிரியம்.— வர்ணாச்சிரமரூபமாய்ப் பிடித்திருக்கின்ற பூருவகருமங்களைக் கைங்கிரியரூபமாகச்செய்து அவற்றோடு பந்தப்படாமல் இனிமேல்வருகின்ற நியமனகைங்கிரியத்துக்கு எச்சரிக்கையா யிருக்கத்தக்கது.

## சற்குரு.

ஆசிரயிப்பவர்களுக்குப் பற்றுக்கோடாய் அகத்திலும்புறத்தி லும் தானாகவிருந்து யேகதத்துவம் காலாதிவர்ச்சிதம் தொத்துவ நீக்கம் விமலபாஸ்கரம் அபிஷேகம் சருவமங்களம் நித்தியசேவி தம் சம்பூரணமென்னும் அஷ்டலக்ஷணங்களால் நித்தியபூமியிற் சேர்ப்பித்து அவர்களுக்கு முத்திபோகத்தைக் கொடுத்து ரக்ஷிப் பவன். யேகதத்துவம். — உனது அகத்திலும்புறத்திலுமிருக் கின்ற ஒருவனாகியநானே ஸ்ரீவாசுதேவருருப்பிர்மமென் றுணர்த் தப்படுவது. காலாதிவர்ச்சிதம். - ஆசிரயிப்பவர்களைக் காலந் தேசந் திக்குக் கர்மமுதலிய விதிவழியிற்செல்லாமற்றடுத்து அவர்கள் புத்தியை ஸ்ரீவாசுதேவினிடத்தில் ஒருமைப்பாடாகச்செலுத்தி இதராந்தரங்களை விசர்ச்சித்தாலுவது. தொத்துவநீக்கம். — கீழது மேலது மேலதுகீழதாய்ச் சுழல்கின்ற காலச்சக்கரத்தைத்தடுத்து விஸ்வவிராடப்பிரபஞ்சத்துக்குப்பிரத்தேகனாக்குவது. விமலபாஸ் கரம். — சுக்ஞானவாருதியில் முழுக்காட்டிப் பிரகிருதிச்சேற்றை சுத்திகரித்து கோடிசூரியப்பிரகாசமாய் இப்படியே காசரணாதி அவயவங்களோடும் விளங்கிய தேஜோமயமான திவ்வியசொரு பத்தைக்கொடுத்து ஞானதீரத்திற்சேர்ப்பிவிப்பது. அபிஷேகம். ஒளிக்கொண்டதிருமேனியோடு அவ்விடத்தில் ஞானசற்குரு வாகப்பிரசன்னமாகி அஸ்தமஸ்தக சையோகம்பண்ணிபரஸ்பரம் அன்னியொன்னியமாக விருக்கின்ற பிதாபுத்திரசம்பந்தத்தால் இதோபதேசத்தைச்செய்து நீயே முத்திபூமிக்கரசனென்றுசீர் விதிப்பது. சருவமங்களம். — சருவராலும் ஸ்தோத்திரம்பண்ண சருவகோஷ்டங்களோடு ஞானாகாசமயமாய்விளங்கிய நித்தியபூமி யைப்பிரதக்ஷணம்பண்ணி ஸ்ரீபகவான்வாசுதேவருருப்பிர்மத்தை நித்தியசூரிகளோடும் ஆசிரயிப்பது. நித்தியசேவிதம். — ஸ்ரீவாசு தேவாக்ஞையால் சேர்த்தியினிடத்தும் பிரிவினிடத்தும் மாறுத இன்பமுடையனாய் நித்தியசூரிகளோடிருந்து நித்தியகைங்கிரி யம் பண்ணிக்கொண்டிருப்பது. சம்பூரணம். — ஸ்ரீவாசுதேவாக் ஞையால் கல்பப்பிரளய உதயாஸ்த நியதங்களைக்கடந்து ஆரோ கணரூபமாயும் அவரோகணரூபமாயும் ஆரோகண வவரோகண

வவரோகணவாரோகணரூபமாயும் அவரவரபேக்ஷித்தபிரகாரம் எக்காலமும் விளையாடிக்கொண்டிருப்பது.

முத்திபோகம்.—சோகமோக க்ஷுத்பிபாச சராய்மரணாதிகளை விசர்ச்சித்து ஹரி சிவப்பிர்ம நாரதவியாசாதிகளைப்போல தடையற்றசுகிகளாய் எப்போதும்மாறுபடாத பேரின்பநலத்தை யனுபவித்துக்கொண்டிருப்பது.

## அற்புதம்.

சாந்நித்திய சன்மான ரக்ஷக பரமார்த்த பலப்பிரத உபசாந்த ஆசிர்வாத கைங்கிரிய பரமபதமென்னும் நித்தியபூமிக்குரிய பௌஷீகப்பிரயோஜனத்தை ஈஸ்வரானுக்கிரகத்தால் வர்த்தமானத்தில் கிரியாபூமியிலடையப்படுவது. அவைற்றுள். — ஆசிரதரபேட்சிதப்பிரகாரம் பிரசன்னமாவது: சாந்நித்தியம்.—அபேட்சித்தபதார்த்தத்தைக் கொடுக்கப்படுவது: சன்மானம்.—சம்பந்தானுரூபமாய்க் காப்பாற்றுவது: ரட்சகம்.—சத்தியசொரூபத்தை வெளிப்படுத்துவது: பரமார்த்தம். — நித்தியசூரிகளாலநுபவிக்கும் ஐஸ்வரியசம்பந்த ஆனந்தகைங்கிரியாதி நித்தியபூமிக்குரிய திருவாணபாக்கியத்தைத் தேகசகாலாவஸ்தைகளின்றி ஆசிரயிப்பவர்க்கு வர்த்தமானத்திற் கொடுக்கப்படுவது: பலப்பிரதம்.—ஜனனமரண சுகதுக்காதி தொந்தவபாவம் விசர்ச்சித்து சிராந்தி விஸ்ராந்தியிற விளைப்பாறுவது: உபசாந்தம்.—சம்பந்தானுசம்பந்தங்களை யுணர்த்தி உனக்குநித்தியசாம்பிராச்சிய சருவாபீஷ்டமுமுண்டாகக்கடவதென்று வாழ்த்தப்படுவது: ஆசிர்வாதம்.— பூருவோத்தரவிரோதம்வாராமல் உபயபூமியுமனுசரித்து வர்த்தமானத்தில் நியமிக்கப்படுவது: கைங்கிரியம்.—ஸ்ரீபகவான் வாசுதேவகுருப்பிர்மத்தோ டெக்காலமுமகலாதிருப்பது: பரமபதம்.

## சேவை.

சுயந்தோற்றம் காருண்யம் பிரியத்துவம் அவதாரம் அசரீரம் சொப்பனம் தெரிசனம் பிரவேசமென்றஷ்டபேதமாய் ஸ்ரீபகவான்வாசுதேவகுருப்பிர்மம் ஆசிரயிப்பவர்க்குப் பிரத்தியக்ஷமாவது. அவற்றுள்.—நிரேதுவாய் ஸ்ரீபகவான்வாசுதேவகுருப்பிர்மம் ஆசிரதரிதயமே திருக்கோவிலாக வெழுந்தருளுவது: சுயம்

தோற்றசேவை.—தயாமூர்த்தியாய்ப் பிரசன்னமாகிஆசிரதநுக்கத்தை நிவர்த்திபண்ணுவது: காருண்யசேவை.—சம்பந்தாவுருபமா யின்பத்தைக்கொடுப்பது: பிரியத்துவசேவை.- அம்சபூதராக வெளியிட்டுதிரிலோகவனாயைதிருத்தப்படுவது:அவதாரசேவை- ஆகாசவாணியாய்நின்று ஆசிரயிப்பவர்களுக்கு ஆக்ஞாபனம்பண்ணுவது: அசரீரசேவை.— ஆசிரதரகமுகசிருத்தியில் திவ்விய சொரூபத்தோடு பிரசன்னமாவது: சொப்பனசேவை.—ஆசிரயிப்பவர்க்கு ஞானதிருஷ்டியைக்கொடுத்து தமதுநிசசொரூபத்தை வெளிப்படுத்துவது: தெரிசனசேவை.—ஆசிரதரிதயத்தில் உபபலமாக அணுப்பிரவேசித்து அல்ப்பத்தை மகத்தாகப்பண்ணுவது: பிரவேசசேவை.

## ஆனந்தபூர்த்தி.

ஸ்ரீபகவான்வாசுதேவகுருப்பிர்மம்தம்மையாசிரயிப்பவர்க்கு ஏகதத்துவம் காலாதிவர்ச்சிதம் ஜொந்துவர்க்கம் விமலபாஸ்கரம் அபிஷேகம் சர்வமங்களம் நித்தியசேவிதம் சம்பூரணமென்னும் ஆரோகணருபத்தால் சர்வதுக்கத்தையும் நிவர்த்திபண்ணி சருவசம்பூரண சருவத்திரசேவித சருவமங்கள சர்வாபிஷேக சர்வப்பிரகாச ஜொந்துவரகித காலாதிதத்துவாதீத வஸ்துபரத்துவமென்னும் அவரோகணருபத்தால் எப்போதுமாறுபடாததுமையற்ற சுகத்தைக்கொடுக்கப்படுவது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணைய குருப்பிர்மணே நம:

௨

ஹரிஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

## தேசிகவிலாசபத்ததி.

ஸ்ரீபகவானாகியவாசுதேவசற்குருவினால் திருவிளையாட்டஞ் செய்யும் ஏகைக பரித்தியாக நிவர்த்தக விமல அபிஷேக சமங்கள சேவித சம்பூரணமென்கின்றதெரிசனஷ்டகமகிமையைச் சற்குரு சாஸ்திர விவேக மீமாம்ச வைசேடிக நையாயிக யோகவைஷ்ணவ சைவ வேதாந்த மோக்ஷ சரமோபாய பலப்பிரதமென்னும் துவாதசாந்த விதாயகரூபமாக நிரூபிக்கப்படுவது.

## திருவிளையாட்டம்.

சருவசம்பூரண சருவத்திரசேவித சருவமங்கள சருவாபிஷேக சருவப்பிரகாச தொந்துவரகித காலாதிதத்துவாதீத வஸ்து பரத்துவமென்னும் அஷ்டகுணபரிபூரணரான ஸ்ரீவாசுதேவபரப்பிர்மம் இருந்தபடியேயிருக்க ஆசிரிதரட்சகார்த்தம் சௌலப்பிய ரூபத்தைத் தரித்துக்கொண்டு அவரோகண ஆரோகண ஆரோகணவரோகணரூபமாக அநேக பிரகாரம் மாறிமாறிவிநோதிக்கப்படுவது.

அவரோகணம்.—ஸ்ரீவாசுதேவ சௌந்தரநாராயண ஸ்ரீராம சுந்தர அனந்தநாராயண ஸ்ரீபாதசரணம்பதம:வென்று அநேகாபாத விதிப்படி வெளியிட்டு ஆசிரயிப்பவர்க்கு நிருபக நீத சமீப சம்பந்த வியவகாரமென்னும் பஞ்சதிருஷ்டியைவிளக்கிவர்த்தமானத்தில் நித்தியகைங்கிரியத்தை நியமிக்கப்படுவது.

நிருபகதிருஷ்டி.—விஸ்வவிராட்பிரத்தியக்ஷசாட்சியை நிருபாதிக சுயஞ்சைதன்னியத்தி லக்ஷியப்படுத்திப் பரிச்சின்னபேதத்தை நிவர்த்திபண்ணுவது. நீதிருஷ்டி.—விஸ்வவிராடிருதயத்திற் சாக்ஷிபூதராகநின்று ஆசிரயிப்பவர்களுக்கு அந்தரியாமியை விளக்கி மைத்திரியாதிகுணங்களை அபிவிர்த்திபண்ணுவது. சமீபக திருஷ்டி.—சாக்கிர சொப்பன சுழுத்தியென்னும் அவஸ்தாத்திரய ரூபமாய் மாறிமாறித்தோற்றியொடுங்கும் விஸ்வவிராட்பிரபஞ்சத்துக்கு மூலகாரணவஸ்துவாகிய சச்சிதானந்தபரிபூரண ஸ்ரீவாசுதேவபரப்பிர்மத்தைத் துரிய துரியாதீதநிஷ்டையால் உள்ளும் புறம்பிலுஞ் சதாதெரிசிக்கப்படுவது. சம்பந்ததிருஷ்டி.—பாஷண்டாளைப்போல சரீரேந்திரியாதிகளை மாறுபடுத்தி சைதன்னிய வகங்காரத்தையடையாமல் ஸ்ரீவாசுதேவசந்நிதானத்தால் சதா அன்புடையர்களாய் எப்போதுமாறுபாடாக பர்த்தரு பாரியா புத்திரதாசாதி நித்தியவுரிமையை புணரப்படுவது. வியவகார திருஷ்டி.—ஜீவன்முக்தர்களாய்க் கிரியாமுக்கியமாறுபாடாக நியமனபாக்கியத்தைக் கைக்கொண்டு விதேகப்பிராப்தியில் நித்திய பூமியை ஆசிரயித்து இப்படியே சர்வாவயவசகிதமாக திவ்விய தேஜோரூபத்தைப்பெற்று நித்தியசூரிகளோடு நித்தியகைங்கிரிய

பரராய் ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மத்தை இடையறாது சதாசேவித்துக்கொண்டிருப்பது.

ஆரோகணம்.—ஸ்ரீபாதசரண்ய அனந்தநாராயணை சுந்தரராம நாருயணசௌந்தர ஸ்ரீவாசுதேவபரப்பிர்மணேநம: வென்று ஊர்த்துவப்பிரதேசவாசியாகப் பிரகாசிக்கப்படுவது.

## பிரதமம்...சற்குருவிநாயகம்.—சற்குரு.

ஏகமேவ சுபாவசொரூபமாய் அத்துவித தொய்த சுபாவ விசிஷ்டமென்னச் சதுர்விதசித்தாந்தப்பொருளாய் அவரவரபி மதபேதத்தால் அநேகதேவாகப்பிரிந்துநின்று அவர்களுக்குயிஷ்ட சித்தியைக் கொடுப்பதாய் உதயதேசிகம் ஸ்வீகாரசாநித்தியம் அகப்பிராப்தமென்னத் திரிவிதரூபமாய்நின்று ஆசிரயிப்பவர் களுக்கு ஆனந்தபூர்த்தியைப்பண்ணுவதாய் அவாங்மனோகோசர மாகவிருக்கின்ற ஸ்ரீபகவான்வாசுதேவபரப்பிர்மம்.

உதயதேசிகம்.—சருவசம்பூரண சருவத்திரசேவித சருவ மங்கள சருவாபிஷேக சருவப்பிரகாச தொந்துவரகித காலாதிதத் துவாதீத வஸ்துபரத்துவமென்னும் அஷ்டகுணபரிபூரணரான ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் இருந்தபடியேயிருக்க ஆசிரத ரக்ஷகார்த்தம் தனதுமாயையினால் தொந்துவசகிதமான சௌலப் பியரூபத்தை எடுத்துக்கொண்டு தேசகால திக்குக்கருமமுதலிய விவிதபரிச்சேதங்களுக்குள்ளாகி மானைக்காட்டி மானைப்பிடிப்பா ரைப்போல உடன்பாடாகவிருந்து ஆசிரயிப்பவரைச் சுவாதீன மாக்கி அவர்களுக்குப் பரதத்துவத்தை யுணர்த்தப்படுவது.

ஸ்வீகாரசாநித்தியம்.—பரதத்துவநிலையைத்தெரிந்து தத்தம் அபிமததேவை ஸ்ரீசௌலப்பியசற்குருவாய் ஸ்வீகாரம்பண்ணி இதராந்தரவர்ச்சிதராய்வழிபடுமவர்க்குஸ்ரீபகவான் அவரவரபிமத பூர்வமாய்ச் சாக்ஷாத்காரமாகி சரீரமுள்ளபரியந்தம் அகத்திலும் புறத்திலுந் துணையாயிருந்து சரீராந்தத்தில் மார்க்கசகாயனாய் வழித்துணைகூட்டி ஆரோகணவிதிப்படி நித்தியபூமியிற்சேர்ப்பி த்து நித்தியசாம்பிராச்சிய சருவாபீஷ்டமுங் கொடுக்கப்படுவது.

அகப்பிராப்தம்.—அகங்காரமுழுதும்வர்ச்சித்து அகனாக விருக்கின்ற சருவசிரேஷ்டனை ஓரதிகாரிக்கு ஸ்ரீபகவான் வாசு தேவகுருப்பிர்மம் சாக்ஷாத்காரமாகி அதனது சொரூபவிலாசபந்

திகளை ஆரோகணரூபமாயும் அவரோகணரூபமாயும் ஆராதித்து அவ்வாராதனையைச் செய்பவன் கொள்பவனென்னும் வேறுபாடற்று அருட்பிரவாகத்தைவிரித்துக் கிருதகிருத்தியனாகத் தடையற்றுவிளங்குவது. அவற்றுள். — விஸ்வந்தொடங்கி விஸ்வேச ஆசாரிய பரப்பிர்மபரியந்தம் பூசிப்பது: ஆரோகணவாராதனம்.- பரப்பிர்மந்தொடங்கி ஆசாரிய விஸ்வேச விஸ்வபரியந்தம் பூசிப்பது: அவரோகணவாராதனம்.

## விஸ்வாராதனம்.

கிரகஸ்தனானவன் சருவாபீஷ்டசித்தியின்பொருட்டுத் தத்தங்குலதனமாகிய ஹரிசிவப்பிர்மாதிஇஷ்டதெய்வத்தைப்பூசித்து சுவாத்மரக்ஷகம் பந்துஜனபோஷிதம் விருந்தாதரம் தேவதிருப்தி பிதிர்திருப்தி பிரேதசமஸ்காரம் அநாதரக்ஷகம் அதிதிசத்காரம் திரோதாச்சிரமபரிபாலகமென்னும் ஏகாதசதர்மங்களையும் விதிபூர்வகமாகநடத்தப்படுவது.

ஹரிபூசை.—ஸ்ரீவிஷ்ணுதேவனைவரித்து கேசவ நாராயண மாதவ கோவிந்த விஷ்ணு மதுசூதன திரிவிக்கிரம வாமன ஸ்ரீதர ரிஷிகேச பத்மநாப தாமோதராயநம:வென்று நாமாவிதமந்திர புஷ்பசமர்ப்பித சர்வோபசாராதிகளோடுபூசித்து ஸ்ரீவைஷ்ணவர்கள்முகமாகத் திருப்திபண்ணுவது.

சிவபூசை.—மகாகணபதியென்னும் அநாதிசிவத்தைவரித்து சுமுக ஏகதந்த கபில கஜகர்ணிக லம்போதர விகட விக்கினராஜ கணாதிப தூமகேது கணாத்தியக்ஷ பாலச்சந்திர கஜானன வக்கிரதுண்ட சூர்ப்பகர்ண ஹேரம்ப ஸ்கந்தபூர்வஜாயநம:வென்று நாமாவிதமந்திரபுஷ்பசமர்ப்பித சர்வோபசாராதிகளோடுபூசித்து மகேசசப்பிரியர்களான சிவனடியார்கள்முகமாகத் திருப்திபண்ணுவது.

பிர்மபூசை.-சிருஷ்டிகர்த்தாவாகிய ஆதிப்பிர்மாவைப் பிராம்மணமுகமாகவரித்து சந்தன புஷ்ப தாம்பூல பூசை போஜனாதி சர்வவிதஉபசாராதிகளோடுபூசித்து மார்க்கசகாயம்வேதாத்தியயனம் சட்சமயசமத்துவம் கோரக்ஷகம் சிஷ்டவிசர்ச்சனம் சிசுபரிபாலனம் விவாகோபநயனம் ஸ்ரீயாத்ரிதம் அநாதரக்ஷகம் அநாதப்பிரேததகனம் விவிதரோகவௌஷதம் ஸ்ரீபோகம் இருதப்பிர

யோஜனம் பாவபயங்கரம் சுகிர்தபாலனம் சிவாராதனமென்னும் சோடசதர்மங்களாலும் அவரதுசிருஷ்டிகளாகிய சருவப்பிராணிகளின்முகமாகத் திருப்திபண்ணுவது.

மார்க்கசகாயம்.—தட தடாகம் சத்திரம் சாவடி தண்ணீர்ப் பந்தல் சுண்ணமுதலானவஸ்துக்களால் சக்தியானுசாரம் வழிச் செல்வோர்க்கு உபகரணசாதகத்தைச் செய்யப்படுவது. வேதாத்தியயனம்– வேதவேதாந்தங்களையும் அதனர்த்தங்களைச் சொரூபமாய்த்தெரிந்து சருவரும் உஜ்ஜீவித்தற்பொருட்டு ஏற்படுத்தியிருக்கும் மீமாம்சசாஸ்திராதி சர்வசாஸ்திரங்களையும் பாராயணஞ் செய்தல் திரவியசகாயத்தால் பாராயணஞ்செய்துவைத்தல் முதலான வித்தையாபுண்ணியத்தை ஞானமுதித்தற்கேதுவாய்ப் பலவாறுக அபிவிர்த்திபண்ணுவது. சட்சமயசமத்துவம்.—வைசம்மியமில்லாமல் சமஸ்தமான சமயத்தவர்க்கும் உபகாரசத்காரமுடையனாய் அநுகூலபூதையாகவிருப்பது. கோரக்ஷகம்.—பசுவிறை பசுவுரசுதறி பசுவாதரம் பசுவாராதனமுதலியதுகளால் பசுக்களைச் சம்ரக்ஷணஞ்செய்வது. ரிஷபவிசர்ச்சனம்.—பஞ்சகௌவ்யப்பிரயோஜனமான பசுக்களினபிவிர்த்தியின்பொருட்டு ரிஷபத்துக்கு பகவத்சின்னத்தைத்தரித்து அதனபிமதப்பிரகாரம் பிரவேசமாக்குவது. சிசுபரிபாலனம்.—மகப்பெறுவித்தல் மகவளர்த்தல் மகப்பால் மகச்சோறு தலைக்கெண்ணை தின்பண்டமுதலான உபயோகபதார்த்தங்களைச் சந்ததிவிருத்தியின்பொருட்டுச் சிசுக்கள்மூலமாய்ச்செய்யப்படுவது. விவாகோபநயனம்.—பிர்மலோசனத்தைவிளக்கி பிர்மக்ஞானி பக்தயோகி யெக்ஞசீலன்முதலான சத்பாத்திரங்களுக்குத் தன்னுடையபுத்திரியைத் தானமாகக் கொடுப்பது. ஸ்ரீவாஞ்சிதம்.–மஞ்சள் குங்குமம் சந்தனம் புஷ்பம் தாம்பூலம் கண்ணாடி காதோலை ஆபரணம் வஸ்திரம் ரவிக்கை தெக்ஷிணை முதலான சுமங்கலிக்கிவேண்டும் உபகரணங்களைத் தானமாகக்கொடுத்து சுமங்கல்யஸ்திரீகளை பிராம்மிகி நாராயணி மகேஸ்வரி இந்திராணிமுதலான சப்தமாதாக்களாகவரித்து தத்தமரபினுக்குரியவிதிப்படி பிரார்த்திக்கப்படுவது. அநாதரக்ஷகம்.- ஆதுல ரந்தகர் ஊமர் உறுப்பிலி முதலான ஏழைசனங்களுக்கு வேண்டும் உபகரணங்களைச் செய்யப்படுவது. அநாதப்பிரேததக

னம்.—ஆதரவில்லாத பிரேதசவத்துக்குத் தான் ஆதரவுடையனுயிருந்து அக்கினிப்பிரவேசஞ் செய்துவைப்பது. விவிதரோக வெளஷதம்.—பத கர குத குய்ய உதர கண்ட நேத்திர சுரோத்திராதிகளைப்பற்றியுண்டான விவிதரோகங்களுக்குவேண்டும் உபகரணங்களை இலவசமாய்க்கொடுத்து வைத்தியர்மூலமாய் ரோகத்தைநிவர்த்திபண்ணி அவர்களை ஞானகர்மோபாஸ்தியை அபிவிர்த்திபண்ணுதற்குப் பாத்திரமாக்குவது. ஸ்ரீபோகம்.—கருமபீடிதத்தால் ஞானயோகத்தைச்சாதித்தற்குப் பிரதிபந்தமாகத்தடைப்பட்டிருக்கும் சற்சனருடைய உள்ளக்குறிப்பைத் தெரிந்து ஸ்ரீபோகத்தடையைநீக்கி ஞானயோகத்தை யபிவிர்த்தியாக்குவது. கிருதப்பிரயோஜனம்.—வண்ணான் நாவிதன் கருமான் மருத்துவன்முதலான தொழிலாளிகூலியில் பிடித்தம்வையாமலும் கொடுந்தன்மையால் எந்தச்சீவர்களையும் இலவசமாய்வேலைகொள்ளாமலும்பாவத்தைச்சுமக்காமல் அவரவர்செய்கையையறிந்து கூலியைக்கொடுப்பது. பாவபயங்கரம்.—பாவத்தைச்செய்யாமல் பாவஞ்செய்பவரோடுகூடாமல் பாவத்தைக் கண்டால் நடுநடுங்கி பூர்வஞ்செய்தபாவத்தால் வர்த்தமானத்தில்வரும் அரிஷ்டங்களைக்கண்டு அவ்வரிஷ்டத்தைப்போக்கி இஷ்டப்பிராப்தியைப் பெறுதற்பொருட்டு ஸ்ரீபகவானிடமாக முறையிடப்படுவது. சுகிர்தபாலனம்.—சருவேந்திரியங்களுக்கும் புண்ணியகிருத்தியத்தையேற்படுத்தி சருவேந்திரியங்களாலும் புண்ணியத்தைச்செய்கின்ற புண்ணியபுருஷரை யாசிரயித்து புண்ணியத்தை நாளுக்குநாளபிவிர்த்திபண்ணி புண்ணியப்பிரயோஜனத்தை ஈஸ்வரார்ப்பணஞ்செய்து சித்தசுத்தியையுடையனாய் முத்திபூமியை ஆசிரயிக்கப்படுவது.

## சீவாராதனம்.

ஓரறிவு இரண்டறிவு மூன்றறிவு நான்கறிவு பஞ்சறிவு பகுத்தறிவு புண்ணியசீவி நித்தியசீவி பிர்மஞ்ஞானியென்னும் நவவித தாரதம்மியத்தைத்தெரிந்து சேவித்தல் தியானித்தல் பாவித்தல் பிரார்த்தித்தல் கொலைமீட்டல் கூலிகொடுத்தல் துயர்காத்தல் உணவளித்தல் முதலியதுகளால் தக்கதக்கபிரகாரஞ் சத்கரித்து சருவசீவரிடத்துமிருக்கும் ஸ்ரீவாசுதேவினியமற்கைவடிவைத்தெ

ரிந்து சர்வப்பிராணிகளையும் பூசிக்கப்படுவது. அவற்றுள்.— புல் மரமுதலானவைகள் பரிசமாத்திரமுடைய: ஓரறிவுயிர்கள்.-இப்பி நத்தை முதலானவைகள் பரிச ரசமென்னும்: ஈரறிவுயிர்கள்.— சித்தெரும்பு சிதள்முதலானவைகள் பரிச ரச கெந்தமென்னும்: மூவறிவுயிர்கள்.-தும்பிவண்டுமுதலானவைகள் பரிச ரச கெந்தரூபமென்னும்: நான்கறிவுயிர்கள்.— வானவர் மக்கள் நரகர் விலங்கு பக்ஷிமுதலானவைகள் பரிச ரச கந்த ரூப சத்தமென்னும் ஐந்தறிவுயிர்கள்.— பஞ்சறிவிருந்தும் பகுத்தறிவில்லாத அசுணம் இபம் விட்டில் மீன் வண்டுகளைப்போல கிரமமாய் சத்தாதி ஒவ்வொரு விஷயங்களிலமிழ்ந்தி நஷ்டத்தையடையாமல் பின்வருங்காரியத்தை முன்னுதாகவே ஆலோசித்தறிவது: பகுத்தறிவுயிர்கள்.— இம்மைக்குரிய காரியங்களைமாத்திரம் முன்பின்நடப்பவைகளையறிந்து பௌஷதியில் நரகத்தையடையாமல் சரீராந்தத்தில் சுவர்க்கபோகத்தையடைதற்கேதுவாய சற்கருமத்தைச் சாதிப்பவர்கள்: புண்ணியசீவிகள்.-புண்ணியக்ஷயமானவிடத்து பாவவழியில்த் திரும்பாமல் புண்ணியபாவதொந்துவத்தைச் சரண்யத்துவாரா நிவர்த்தித்து சாலோக சாமீப சாரூப சாயுச்சிய முத்திசதுஷ்டய ரூபமாக நித்தியசிவனைப்பெற்றிருப்பவர்கள்: நித்தியசீவிகள்.— மிருதசீவி புண்ணியசீவி நித்தியசீவியென்கின்ற சீவபேதம்விடுபட்டு அத்தியாசமோகம்வர்ச்சித்து அதிஷ்டான பிர்மத்தையறிந்தவனாய் நிருபாதிக நிராவரண நிர்விக்ஷேப நிர்மலசுக்ஞானியாய் அத்துவிததொய்த சுபாவ விசிஷ்ட சமர்த்தியென்கின்ற லீலாபஞ்சக சம்பூரணனாயிருப்பவன்: பிர்மக்ஞானி.

## விஸ்வேசவாராதனம்.

சர்வவிக்கினோபசமனத்தின்பொருட்டு மூலதனமாகிய சுக்லாம்பரதர சுமுகசதுர்ப்புஜ சர்வவியாபக சசிவர்ணமூர்த்தியைத் தியானித்து ததியாராதன சமாராதன சருவாராதனமென்கின்ற பூசாவிதாயகத்தைத்தெரிந்து பக்திபூர்வமாய்ச் சக்தியானுசாரஞ் செய்யப்படுவது. அவற்றுள். ததியாராதனம்.-சருவேஸ்வரனுக்கு அத்தியந்த அபிமதவிஷயமான பக்தஜனங்கள் யாவரானாலும் சருவேஸ்வரனைக்காட்டிலும் அநேகமடங்கதிகமாக அவர்களிடத்தில் வழிபட்டு பய பக்தி விஸ்வாச சிநேகத்துவ கைங்கிரிய உபசாராதி

களோடு சர்வவிதங்களாலும் பூசிக்கப்படுவது. சமாராதனம்.—வர்னம் ஆச்சிரமம் சமயம் அதிவர்னம் ஸ்ரீ துறவென்கின்ற வர்ணுதிசட்க தாரதம்மியத்தைத்தெரிந்து தேசகாலபாத்திரபரீக்ஷிதனாய் மந்திர திரவிய சுகுண சத்கிரிய சத்காராதி சமர்த்தியினாற் பூசிக்கப்படுவது. சருவாராதனம்.—பிருதிவு அப்பு தேயுவு வாயுவு ஆகாசம் அதிதி அன்பர் பருதி கோக்குலம் சுவசரீரம் சருவப் பிராணிகளென்னும் ஏகாதசசொரூபங்களும் விஸ்வேஸ்வரனுக்கிருப்பிடமான அழகியதிருக்கோவிலென்பதைத்தெரிந்து சருவாலய சம்யுக்தனான சர்வேஸ்வரனை சருவாகாரசிரங்களாற் பூசிக்கப்படுவது.

## ஆசாரியவாராதனம்.

பரத்துவ சௌலப்பியமென்னும் வஸ்துசொரூபத்தை பரார்த்த சுவார்த்த கிரியாரூபமாயும் சாங்கோபாங்க பிரத்தியாங்கரூபமாயும் பூசிக்கப்படுவது. அவற்றுள். பரத்துவம்.—ரூப வரூப ரூபாரூபரா யாவராலும் சகள நிஷ்கள நிஷ்களசகளமென நிச்சயித்தற்கெட்டாததாய் அவாங்மனோகோசரமாய்விளங்குவது. சௌலப்பியம்.—பூமி அந்தர சுவர்க்கமென்னும் லோகபந்திகளைத்தரிப்பித்து ஆசிரதரக்ஷணம் பண்ணப்படுவது. அவற்றுள். பூலோகதாரணம்.— கண்ணபிரான்முதலிய அம்சபூதர்களாக வவதரித்து வேணுகீதம் ஞானகீதம் பாலகீதமுதலான கீதாபோதமகத்துவத்தால் திரிகாண்டசமர்த்தியாகிய சம்பூரணவரையை நிறுத்தப்படுவது. அவற்றுள். வேணுகீதம்.-பரஸ்பரம்சத்துருமித்துருவாய்ப் பரிச்சேதித்திருக்கின்ற சிவசத்தையைவேறுபடுத்தி சுவாநுபவ சுகத்தில் ரமிக்கச்செய்வது. ஞானகீதம்.—சத்துருவர்க்கங்களுக்கு வைரியாய் மித்துருவர்க்கங்களுக்கு அடிமையாகநின்று தத்துவார்த்தத்தைப் போதித்து நித்தியானந்தத்தைக் கொடுக்கப்படுவது. பாலகீதம்.—அடியைமுடியிற்சேர்த்திருக்கும் மழலையுருவத்தால் அடியார்களுக்குமீஸ்வரனுக்கும் அபேதமென்பதைத்தெரிவித்து அவ்வடியார்களது ஸ்ரீபாதரேணுவே சருவராலும் ஆராதித்து அர்த்தித்த போகத்தை பெறுதற்குரிய சத்தியப்பொருளென்றுணறதப்படுவது. அந்தரலோகதாரணம்.— அக்ஷயப் பிரகாச மிருதுசூக்ஷ்ம அழகு ஆரோக்கிய நித்தியயெவ்வன சதா அலங்கார

பூசிதராய் இந்திராதிதேவர்களா லாராதித்தற் கெழுந்துநின்ற திருக்கோலம். சுவர்க்கலோகதாரணம்.—சுயம்பு சாஸ்வத சுயாதிபத்திய உதயாஸ்தரகித நித்தியசேவித முத்தானுபாவியராக வீற்றிருக்கின்ற திருக்கோலம்.

பரார்த்தரூபம்.—அவாங்மனோகோசரமாய்விளங்கிய பரப்பிர்மத்தினின்றும் ஓரறிவுருவாகப் பரிணமித்து அவ்வதீதப்பிர்மத்தை ஓர்விம்பாகாரசற்குருவாகநிர்ந்தேசித்து அதிலிருந்து ஹரிஹரப்பிர்மாதி நித்தியவர்க்கங்களைப்பிறப்பித்து சித்திர பட சிலா ஜல தற்பண ஹரித்திரபாத சரித்திரகௌமல மிருத்து லோக சர வசர சுதை தாருவாதி பூசாவிதானத்துக்கருகமான கிரியா ரூபத்திலாவாகனம்பண்ணி திருமஞ்சன அலங்கார நிவேத்திய உபசாராதிகளாற்பூசித்து சொரூப அவயவ ஆயுத வாகன சௌரியப் பிரதாபாதி விசித்திரசின்னங்களோடுங்கூடிய நாமசமூகங்களைச்சொல்லி அர்ச்சித்து ஏகாங்க திரியாங்க பஞ்சாங்க சாஷ்டாங்க சருவாங்க சமர்ப்பணராகவழிபட்டு வழிபடுமவர்களுக்கும் அடிக்கடியாகத் தளர்ந்துநிற்பது. சுவார்த்தரூபம்—பரிணாம நிர்த்தேச கிரகண ஆவாகன பூசித அர்ச்சித வந்தன தாசிய தாசியதாசமென்கின்ற நவவித ஆராதனபந்திகளை ஆந்தரரூபமாகவனுஷ்டித்து பரிணாமசலனத்தைமாற்றி பரப்பிர்மசுகோதகியிலமர்ந்து நிற்பது.

## கிரியாரூபம்.

பக்தாவலோகனம் ஸ்ரீதரசாநித்தியம் யோகமகாத்மியம் தத்துவாசிரயம் ஆசிரதரக்ஷகம் பரமார்த்ததெரிசனம் ரகசியார்த்தபூரிதானம்சருவாபீஷ்டசித்தியென்னும்ஞானயோகசாத்தியமான தெரிசனாஷ்டகம் சருவத்திரபோதமாம்பொருட்டு திருக்கோஷ்டியூரென்னுந் திவ்வியதேசத்தையுவமித்து சித்திர படாதி கிரியாரூபமுன்னிலையிலெடுத்துக்காட்டி ஆசிரயிப்பவர்களால்ப் பூசிக்கப்படுவது.அவற்றுள். பக்தாவலோகனம்.—பக்தஜனவிரோதிகளான சத்துருவர்க்கங்களுக்குப் பார்க்கச்சகிக்காத உக்கிரவடிவமாய் மூர்த்திகரித்திருக்கின்ற சருவேஸ்வரன் பக்தஜனவர்க்கங்களுக்கு அபயவரதகரங்களோடுங்கூடிய அத்தியந்ததயாளவடிவமாகத் தெரிசிக்கப்படுவது. ஸ்ரீதரசாநித்தியம்.—சருவாத்மாக்களென்னும் மண

வாட்டிகளால் மனோரதிக்கும்படி அவரவர்மனோகரப்பிரகாரம் மூர்த்திகரித்திருக்கின்ற ஒப்பற்றபரமபுருஷனாகிய நானேமணவாளனென்பதைத் தெரியும்பொருட்டு மடிமிசையிருத்தி மார்பொடு சேர்த்துஅபயவரதகரங்களால்த்திருமேனியோடும் பிரிவறத்தழுவிய ஸ்ரீயஃபதியாக சதாசேவைசாதிப்பது.

யோகமகாத்மியம்.-தெக்ஷணோத்தரமென்னும் அயனயோகம் யோகயோகம் ஞானயோகமென்னத் திரிவிதரூபமாகநிரூபிக்கப்படுவது. தெக்ஷணாயனம்.-யாகாதிபுண்ணிய சுதர்மகர்மசாதகத்தால் தெக்ஷணாயனமார்க்கமாக பூமி யந்தர சுவர்க்கமென்னும் போகபூமியிற்பிரவேசித்து சுகிர்தபோகத்தையனுபவித்து புண்ணியக்ஷயமானவிடத்துப் போகபூமியைவிசர்ச்சித்து ஜெனனமரணாதிகளுக்கேதுவாய கருமபூமியையடையப்படுவது. உத்தராயனம்.-அர்ச்சராதி பரதந்திர பக்தியோகசாதகத்தால்க் கருமபூமியைத் தியச்சித்து உத்தராயனமார்க்கமாகப் போகபூமியை யாசிரயித்து சராய்மரணாதிகளில்லாத நித்தியானந்தவாழ்வைப் பெற்றிருப்பது. யோகயோகம்.-தெக்ஷணோத்தரமென்னும் உபயயோக சாதகத்தால் தீர்க்கபிராண சித்தநிரோதன சராய்மரணாநிவர்ச்சித ககனமார்க்க சாத்தியத்தைப்பெற்று திரிலோகவாசிகளாக உத்தரோத்தரகமனம் பண்ணிக்கொண்டிருப்பது. ஞானயோகம்.—பூமியந்தரசுவர்க்கமென்கின்ற திரிபுவனகர்த்தாவாகியும் அதனதுதிதிலயோற்பவ நிக்கிரகவனுக்கிரகாதிகளுக்குக் காரணபூதராயுமிருக்கின்ற சருவேஸ்வரனைப் பிரசன்னமாகச்சாக்ஷாத்கரித்து மமதகங்காராதி பரிச்சேதவர்ச்சிதராய் உள்ளிலும் புறம்பிலுஞ் சதாதெரிசித்துக்கொண்டிருப்பது.

தத்துவாசிரயம்.—சாகோபசாகைகளாக விரிந்திருக்கின்ற விவிதப்பிரபஞ்சத்துக்கு மூலபீஜமாய் அகோசரசுயம்புவாயிருந்தும் ஆசிரதரக்ஷகார்த்தம் சருவாண்டபந்தியினோடு சராசரப்பகுதிமுழுமையும் சத்தாவரணத்திலமைத்து அதனோடு சரித்தல் சயனித்தல் நிற்றல் இருத்தல் பூரித்தல் கிரீடித்தலென்னுஞ் சட்பிரகாரமாய் அகத்திலும் புறத்திலுமிருந்து சதாதிருவிளையாட்டஞ்செய்யும் வாசுதேவபரப்பிர்மமே ஸ்ரீசற்குருவாகத்தெரிந்து அவனதடியிற் சரணமாகவடையப்படுவது.

## ஆசிரதரக்ஷகம்.

பூமியந்தரசுவர்க்க சரண்ய பரமபதமென்னும் ஐஸ்வரிய பஞ்சகசருவாபீஷ்டசித்தியும் ஆசிரதவர்க்கங்களுக்குக்கொடுக்கும் ராஜாதிராஜனாகிய நானே வாசுதேவபரப்பிர்மமென்று விச்சுவா செங்கோலாதி ராஜசின்னங்களோடு சேவைசாதிக்கப்படுவது.

பரமார்த்ததெரிசனம். — சருவசிரேஷ்டனாகிய சம்பூரண வதிகாரிக்கி உடையவனென்னும் நாமதேயசகிதமாய் மேல்வீடு கொடுத்து நிஷ்டாபேத பரப்பிர்மவபேதத்தையுணர்த்தி நீயே முத்திபூமிக்கரசனென் றுசீர்விதிக்கப்படுவது.

ரகசியார்த்தபூரிதானம்.—அவ்வதிகாரி மேல்நிலத்திலிருந்து கொண்டு காதுள்ளவன் கேட்கக்கடவன் கண்ணுள்ளவன் பார்க்கக்கடவன் மூக்குள்ளவன் முகக்கக்கடவன் வாக்குள்ளவன் துதிக்கக்கடவன் கருத்துள்ளவன் திருத்தக்கடவன் சுகுர்த்துள்ளவன் இருத்தக்கடவனென்று பரமரகசியமுழுதையும் நானாவித வாக்கியசமூகங்களாற் பறையடித்து இதுவே பரதத்துவமெனத் தெளிந்து சருவரும் உஜ்ஜீவிக்கும்படி அதனந்தரங்கப்பொருளாகிய வாசுதேவபரப்பிர்மத்தைப் பூரியாகக்கொடுக்கப்படுவது.

சருவாபீஷ்டசித்தி.—ஏகதத்துவம் காலாதிவர்ச்சிதம் தொந்துவநீக்கம் விமலபாஸ்கரம் அபிஷேகம் சருவமங்களம் நித்திய சேவிதம் சம்பூரணமென்கின்ற பரிச்சேதடுதரிசனம்வர்ச்சித்து பரிச்சேதரகிதமாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்ம சுகோததியில் நிலைபெற்றிருப்பது.

நித்தியவிதிப்படி தினேதினேபூசிப்பது: சாங்கம்.—நைமித்தியவிதிப்படி விசேஷதினங்களிற் பூசிப்பது: உபாங்கம்.—பிர்மோச்சவமுதலியதாற் பூசிப்பது: பிரத்தியாங்கம்.

## பரப்பிர்மவாராதனம்.

சற்குருசொரூபத்தாற் பாவநிவாரண பரமசுகிர்தத்தையும் ஆத்மசொரூபத்தால் நீதலோசன திரிகாலக்ஞானத்தையும் ஐக்கியசொரூபத்தால் பந்தநிவர்த்தக நிருவாணசுகத்தையும் ஆசிரதவர்க்கங்களுக்குக்கொடுத்தும் பிரித்தறியக்கூடாத திரியேகவஸ்துவாய் அகோசரசுயம்புவாக எல்லையற்றிருக்கின்ற பரப்பிர்மம் சருவசிரேஷ்டரான முத்தாத்மாக்களிடத்துச் சாக்ஷாத்காரமாக

விளங்குவதென்பதைத்தெரிந்து அவர்களது ஸ்ரீ பாதரேணுவைச் சிரோபூஷணமாக்கியமமதகங்காரவற்சிதஞற்சதாபூசிக்கப்படுவது

## அருட்பிரவாகம்.

மணிமுத்தார்நதி வயங்கு தென்கோஷ்டியூர்மருவிப், பணிது சொக்கநாராயணன் பதமலர்பரவி, வணிகநாரணவரதனென்மைந் தனைவாழ்த்திக், கணிதமேமாடுரை கலந்துநீவாங்கிவாகடிதம். (க)

வாங்கிவந்திடுகடிதம் நற்சுதைமலர்மகட்குப், பாங்குணர்ந்திடக் கொடுத்தபின் கோஷ்டிபோய்ப்பரவித், தீங்ககன்றிடக் கண்ணனை ஜெயஜெயஜெயவென், ருேங்கிவாழ்த்திடக் கருணைசெய் தஞ்சை யுத்தமனே. (உ)

திருப்பெயரொன்றிடவதுவேதனக்குகந்தநாமமதாய்ச்சிறக் குமன்பர், விருப்பமுறுமெவ்வடிவோ அவ்வடிவே தன்வடிவாய் விருப்பங்கொண்டு, இருப்போனுய் நிர்ப்போனுய்ப் படுப்போ னுய் நடிப்போனுயெல்லாந்தானுய், திருக்கோல மமர்ந்துநின்ற திருக்கோஷ்டிக்கண்ணனை யான்தெரிசித்தேனே. (ங)

கண்ணபிரானடிநிலத்தில் நடனஞ்செய்யக்கதம்பமுனிசேவிக்க சேஷசாயி, நிண்ணதிருக்கோலத்தையமரரோற்ற நித்தியசூரிகள் பரவவிற்றிருந்து,பண்ணவர்மாதவர்முதலோரொருங்குபோற்றப் படிமிசையே திருக்கோஷ்டியூரில்நின்ற, அண்ணலெனதுளத்திரு ந்துயெங்குந்தானுய் அரசாளுமற்புதங்கண்டருள்பெற்றேனே. (ச)

சத்தியம் அடிமை சாஸனம் சுருதி சாட்சி ஞானிகளென யீசன், நித்தியம் நானுனெனவனுபவிக்க நீயெங்கேயொளித்தனை நினக்குப், பத்திரம்செல்லா தகமகமென்னும் பாவியேனெனைத் தடுத்தாண்ட, முத்தனே சௌமியமூர்த்தியே கோஷ்டி முதல் வனே சரணம் யானுனக்கே. (ரு)

சீமானும் சௌமியனே நரகநாசன் தேவபிரான் கோவிந் தன் சேஷசாயி, நாமாதியைம்பெயராய்ப் பிரிந்துநின்று நவநவ மாய் விஷ்ணுசித்தன் முதலோர்சொன்ன, பாமாலையணிந்துதிருக் கோஷ்டியூரில் பாகவதருய்வதற்குப் பதியாய்க்கொண்ட, கோமா னைத்திருமகட்கு மெனக்குந் தெய்வக்குழாங்களுக்கு மிறைவனைக் கைகூப்பினேனே. (சா)

கைகூப்பித்திருமகள்கோன்கருணைபெற்றுக் கருங்குளநாரண வணிகன்கவலைதீர்த்துச் சையமனைமனைவிதனபுத்ரராதி சௌபாக்கியமென்மேலுந் தழையவாழ்த்தி, மெய்யனருட்பிரவாக விருத்தாந்தத்தைவிரித்துவந்தேன் திருக்கோஷ்டியூரில்மேவி, வையமதில்சம்பூரணரகசியத்தின்மகிமைவளர்ந்தோங்கிநித்தம்வாழிதானே

திருமகள்கணவன்றிருவருள்மகிமையால், பெருமையுஞ்சிறுமையும்பேதமுமுணர்ந்து, பெரியவர்பணிவையே பெருமையிற் பெருமையாய், சிறியவருயர்வையே சிறுமையிற் சிறுமையாய், பெருமையுஞ்சிறுமையும்பேதமுமுணரா,திருமையுநிறைந்தவோரிறைவனுற்றமுவிய, இந்திரைகொழுனனோ டின்புறமகிழ்ந்து, தொந்துவரகிதச் சுடரொளிபரப்பி, வானம்பூமி வழுவறவிழுங்கி, ஞானசாந்தம் நயம்பெறவோங்கி, ஈனவிருளையிடரறக்கடிந்து, பானுவாய்நின்ற பரமனைப்பரவி, ஊனமேயில்லா துயர்பணிசெய்து மோனவிராசமாய் முடிபெறவாழியே.

ஸ்ரீராஜ ராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



உ

ஹரி ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



## துவிதீயம் சாஸ்திரவிதாயகம் சாஸ்திரம்.

வேதவாத அங்கோபாங்க உபநிஷத உபவேத ஸ்மிருதி புராண உபபுராண இதியாச சாக்தீய பாஞ்சராத்திர லௌகிக வைதிக அவைதிக நிஷேத ஆத்தியாத்மீக ஆதிமார்க்கிக சித்தாந்தாதி அநேகாகாரமாக அதிகார பேதத்தால் விரிந்திருக்கின்ற சாஸ்திரங்களின் பூருவசித்தாந்த ஸ்தாபனகண்டிதம் இதுவென்பது சற்றேனுந்தெரியாத மிகவும் அவிற்பன்னபேதைகளான அஸ்மதாதிகள்நிமித்தம் பூருவம் மன்னுராரிய சேஷாத்திரிதேசிக வசிஷ்ட நாராயணுதி தேசிகோத்தமர்கள் சர்வத்திர சாராற்சாரமாகவிளங்கிய பரப்பிர்மதத்துவத்தை தங்கள் தங்கள் சுவாநுபவரூபமாகத்தெளிந்து வர்த்தமானத்தில் தங்களையாசிரயிப்பவர்கள்

யாவரானாலும் அவர்கள் அதிகாரி அநதிகாரிகளெனப்பாராமல் அவர்கள் ஆசிரயித்ததே போதுமானவதிகாரமாகக்கைக்கொண்டு அதிகாரானுரூபமாய் சாஸ்திரவுபாயத்தினோடு சர்வவிதவுபாயத்தினாலும் அவர்களைக்கிருதார்த்தராக்கிப் பௌஷதியில் அஸ்மதாதிகளை யுஜ்ஜீவிப்பித்தற்பொருட்டு சத்தப்பிரகரண அந்தாதிக்கிரம அமலராமாயண கைவல்யநவநீதாதி சாஸ்திரரூபமாய் தத்தம்வரைகடவாது நிறுத்தப்படுவது.

வேதம்.—ருக்கு எசுர் சாம அதர்வணமென்னச் சதுர்விதம் இவைகள்சுயம்புவென்றும் கல்பங்கள்தோறும் வெளியிடுவதனால் ஈஸ்வரனாற் சொல்லப்பட்டவைகளென்றும் சொல்லப்படும். ருக்குவேதம்: இருபத்தொருபேதம். எசுர்வேதம்: நூற்றொருபேதம். சாமவேதம்:சகஸ்திரபேதம். அதர்வணவேதம்: நவபேதமாம்

வேதவாதம்.—விதிவாதம் அர்த்தவாதம் மந்திரவாதம் நாமதேயமென்னச் சதுர்விதம்.— இராசாவாக்கினையைப்போல மனிதனை நிஷேதகர்மஞ்செய்யாமல்த் திருப்பிச் சுகர்மஞ்செய்யவேண்டுமென்பதே: விதிவாதம்.-பட்டுக்களைப்போல ஸ்துதிக்கிறதே: அர்த்தவாதம். — ஆசாரியனைப்போலச் செய்யத்தக்கவைகளைக் காட்டுகிறதே: மந்திரவாதம்.— பிதாவைப்போல யாகாதிகளுக்குப் பெயரிடுகிறதே: நாமதேயமாம்.

வேதாங்கம்.—அந்தவேதத்துக்குப் பாதம் அஸ்தம் முகம் கிராணம் நேத்திரம் சுரோத்திரமென்னும் அனுக்கிரமத்தில் சந்தசு கற்பம் வியாகரணம் சிக்ஷை சோதிஷம் நிருத்தியமாகிய ஆறும்: அங்கங்களாம். அவற்றுள். சந்தசு. — மந்திரசுலோகாதிகளுக்கு அக்ஷரகணிதஞ்செய்யும். கற்பம்.—ஆசுவலாயன போதாயன ஆபஸ்தம்பாதி சூத்திரங்களில் யக்கியப்பிரயோகாதிகளைக் கற்பிக்கும். வியாகரணம். — வைதீகசாஸ்திரார்த்த சித்தியைச் சமர்ப்பிக்கும். சிக்ஷை. — உதாத்த அனுதாத்த ஸ்வரித பிரசயமென்னும் சதுர்வித ஸ்வரகரண பூர்வகமான பத பாளிக்கிரம வேதாத்தியயனாதிகளைச் சொல்லும். சோதிஷம்.—லக்கின திதி வார நக்ஷத்திர யோக கரணாதிகளால் வைதீக கர்மங்களுக்குக் காலந்தெளிவிக்கும். நிருத்தி. — வைதீகசப்த நிர்வசனத்தைதெரிவிக்கும்.

வேதோபாங்கம்.—அந்தவேதத்துக்கு ஸ்மிருதி புராணநியாய மீமாம்சமென்னும் இந்தநான்கும் உபாங்கமென்னப்படும்.

வேதோபநிஷதம்.— அந்தவேதத்தில் சிருத்திரம் பிரகதாரண்ணியம் சுவேதாசுவதரம் கைவல்யம் காலாக்கினி கடம் வல்லி காத்தியாயனம் பிர்மம் நாராயணம் அம்சம் பரமாம்சம் பாஸ்கரம் பிர்மபிந்து ஆருணி அமிர்தபிந்து சுரசபிந்து பிர்மசுபாலம் தேஜோபிந்து வாசசனேயம் போதாயனீயம் ஆசுவலாயநீயம் சாங்கியாயநீயம் வாசியாயநீயம் சௌனகியம் சிவசங்கற்பம் சிரவணம் பராக்கிரமம் புரோஷ்யம் முத்கலம் முண்டகம் மைத்திராயநீயமென்னும் (௩௨) உபநிஷத்துக்களும் பிர்மக்ஞானநிதி மூர்த்திக்கிரோயமுத்தாத்ம சற்குருசேவாமகிமைகளை விவகரிக்கும்.

உபவேதம்.—அந்தவேதத்துக்கு ஆயுள்வேதம் அர்த்தவேதம் தனுர்வேதம் காந்தருவவேதமென உபவேதம் சதுர்விதம். அவற்றுள். ஆயுள்வேதம்.— வியாதிநிதானம் வியாதிச்சின்னம் மந்திரௌஷதாதி சிகிச்சைகளால் ஆயுராரோக்கியாதிகளைக்காட்டும். அர்த்தவேதம்.—தக்ஷணை ஆச்சியம் சருமுதலான உபகரணங்களால் தர்மாதிசதுஷ்டயத்துக்குச் சாதனமாம். தனுர்வேதம்.—சத்துருக்ஷயார்த்தமான மந்திராஸ்திரப் பிரயோகங்களைக் கற்பிக்கும். காந்தர்வவேதம்.— சாமவேதாதிகளின் ச ரி க ம ப த நி என்னும் சத்தஸ்வர கீதப்பிரபந்திகளை விவகரிக்கும்.

ஸ்மிருதி.-மனு அத்திரி ஔரிதம் விஷ்ணு யாஞ்ஞவற்கியம் உசனம் ஆங்கிரசம் யமம் ஆபஸ்தம்பம் சம்வர்த்தம் காத்தியாயனம் பிரகஸ்பதி பராசரம் வியாசம் சங்கலிதம் தக்ஷம் கௌதமம் சாதான்மம் வசிஷ்டமென அந்தந்நாமதேயமுள்ளவர்களாற் சொல்லப்பட்ட தர்மசாஸ்திரம் (௰௯)ல் கிரேதாயுகத்தில் மனுஸ்மிருதி தர்மமும் திரேதாயுகத்தில் கௌதமஸ்மிருதிதர்மமும் துவாபரயுகத்தில் சங்கலிதஸ்மிருதிதர்மமும் கலியுகத்தில் பராசரஸ்மிருதி தர்மமும் முக்கியமாம் இந்தஸ்மிருதிகளில் வர்னவிவகாராதி சமஸ்தமான தர்மங்களையும் விவகரிக்கும்.

வர்னம். — பிர்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரெனச் சதுர்விதம். அவற்றுள். பிராமணதருமம்.—கர்ப்பாதானம் பும்சவனம் சீமந்தம் உன்னயனம் சாதகர்மம் நாமகரணம் உபநிஷ்கிரமணம்

அன்னப்பிராசனம் சௌளம் உபநயனம் மகாநாமியம் மகாவிரதம் உபநிஷத்து சோபனம் உத்துவாகனம் மிருதியென்னும் சோடச கர்மங்களுடனே யசன யாசன அத்தியயன அத்தியாபக தானப் பிரதிக்கிரகமென்னும் சட்கர்மமும் பிர்மக்ஞாதி சகலசற்குண ங்களுடனே கூடினவன்: பிராமணன்.

க்ஷத்திரியதருமம்.— பிரஜாபாலன யசன அத்தியயன துர்ச் சனதுஷ்டமிருக சத்துருசங்காரம் அன்னதானம் வஸ்திரதானம் கன்னிகாதானம் பூதானம் கோதானம் உபயமுகிதானம் இரண்ய தானம் மகிஷதானம் அஸ்வதானம் சுவேதாஸ்வதானம் காலதா னம் காளாமுகிதானம் மகாமேருதானம் கற்பகவிருக்ஷதானம் வித்தியாதானம் மகாதானந்தரார்த்தமாகி கால தேச பாத்திர பரீக்ஷை விஷ்ணுபக்தியாதி கர்மயுக்தனானவன்: க்ஷத்திரியன்.

வைசியதருமம்.-பிரதமஸ்தானாதி (௩௬)ஸ்தானபரியந்தமான யக்கம் தசம் சதம் சகஸ்திரம் தசசகஸ்திரம் லக்ஷம் தசலக்ஷம் கோடி தசகோடி சதகோடி அற்புதம் நிற்புதம் கர்வம் மகாகர்வம் பத்மம் மகாபத்மம் க்ஷோணி மகாக்ஷோணி சங்கம் மகாசங்கம் க்ஷிதி மகாக்ஷிதி க்ஷோபம் மகாக்ஷோபம் நிதி மகாநிதி சாகரம் மகா சாகரம் அரி மகாஅரி சங்கை மகாசங்கை பணி மகாபணி கிருது மகாகிருது இலக்கங்களும் யக்கம் ஏகம் ரூபம் பூமியாதிசமிக் ஞை (௧) துவே துவவ் துவந்துவ துவித துவய விதிய யுக்கும யுகள யுக உபய பாகு பாத பட்ச நயனாதி சமிக்ஞை(௨) திரி திரய திரிதிய ஹரநயன அக்கினி புராதிசமிக்ஞை (௩) சௌள சதுர்த்தி வேத வர்ன ஆச்சிரமாதிசமிக்ஞை (௪) பஞ்ச ஹரவக்திர கஷாய விருத இந்திரிய விஷய பாணி பாண்டவ பூதாதிசமிக்ஞை (௫) ஷடு பாவ ராஜாங்க ருது ரச ஸ்கந்தமுக வேதாங்க வர்ன கர்ம தரிசனாதி சமிக்ஞை (௬) சத்த முனி கிரி தானங்க ராஜாங்க துரக தாது சாபாங்க ஸ்வர சாகராதி சமிக்ஞை (௭) அஷ்ட வசு திக்கு கஜ மத விகார காமாதிசமிக்ஞை (௮) நவ திரவிய நிதி கிரக ரத்னாதி சமிக்ஞை (௯) தச பிந்து சூன்ய நாஸ்தி அவதார ககனாதிசமிக் ஞை (ம) இவை முதலான சமிக்ஞையுமறிந்து கிரமுகாதிவஸ்துக் களெண்ணிபறிந்து பத்தரைப்பணத்தினிறை கழஞ்சு கழஞ்சு (௪)

கூடினது கரிஷம் கரிஷம் (ச) கூடினது பலம் பலம் (சய) கூடினது விசை விசை (ரு) கூடினது துலாம் துலாம் (கூஉ) கூடினது பாரம் பாரம்(ய) கூடினது அஸ்தமென்று கற்பூராதிதூக்கியறிந்து ஒருசிட்டிநிகுஞ்சம் நிகுஞ்சம் (ச) கூடினது குடுவம் குடுவம் (ச) கூடினது பிரஸ்தம் பிரஸ்தம் (உ) கூடினது வாகம் வாகம் (உ) கூடினது ஆடகம் ஆடகம் (ச) கூடினது துரோணம் துரோணம் (ரு) கூடினது கரியென்னும் தான்யாதி யளந்தறிந்து சுவர்னத்தின் மாற்று பிரவாளத்தின் கழஞ்சு மணியின் சவ்வு ரத்தினத்தின்சூத்திர பரிக்ஷை வச்சிரத்தின்மஞ்சாடி பச்சையின்ரதிய முதலியவறிந்து கிரயம் வட்டம் வட்டிமுதலியவறிந்து செய்கிறவாணிச்சியம் கிருஷி கௌபாலிக யசன அத்தியயன தானமுடன் சூரியாதிபக்தி கருமயுக்தனுனவன்: வைசியன்.

சூத்திரதருமம். — பிராம்மணுதி வர்னத்திரயசேவை க்ஷேத்திரரக்ஷை சகலதேவதாபக்திமுதலான கர்மயுக்தனுனவன்: சூத்திரன்.

விவகாரம். — கடன்கோடல் உபநிதி கூடிமேம்படல் நல்கியதைநல்காமை ஒப்பிப்பணிசெய்யாமை கூலிகொடாமை உடயனல்லான்விற்றல் விற்றுக்கொடாமை கொண்டுள்ளமொப்பாமை கட்டுப்பாடுகடத்தல் நிலவழக்கு மாதராடவர்தருமம் தாயபாகம் வன்செய்கை சொற்கொடுமை தண்டக்கொடுமை சூது ஒழிபு யென்னும் விவகாரங்கள் அஷ்டாதசபேதமாம்.

புராணம். — பிர்மம் பதுமம் விஷ்ணு சைவம் பாகவதம் நாரதீயம் மார்க்கண்டேயம் ஆக்கினேயம் பௌஷியம் பிர்மகைவர்த்தம் இலிங்கம் வராகம் ஸ்காந்தம் வாமனம் கூர்மம் மச்சியம் காருடம் பிர்மாண்டமென தெய்வப்பிரசாதத்தால் வியாசரிஷீஸ்வரர் சொன்ன வேதநிஷ்டாசாரார்த்தப் பிரதிபாதகமான நாலுலக்ஷம் சங்கியையுள்ள அஷ்டாதசபுராணங்களில் சைவ ஸ்காந்த லிங்க கூர்ம வாமன வராக பௌஷிய மச்சிய மார்க்கண்டேய பிர்மாண்டமென்னும் இவை (யம்) சிவபுராணம். நாரதீயம் பாகவதம் காருடம் விஷ்ணுவென்னும் இவை (சம்)விஷ்ணுபுராணம். பிர்மம் பதுமமென்னும் இவை (உம்) பிர்மபுராணம். பிர்மகைவர்த்தம் சூரியபுராணம். ஆக்கினேயம் அக்கினிபுராணமென்னப்படும் இந்தப்

புராணங்களில் சர்க்கப் பிரதிசர்க்க வம்ச மனுவந்தர வம்சானு சரிதமென்னும் பஞ்சலக்ஷணங்களும் வைதீக தாந்திரீக கருமமும் சொல்லும்.

உபபுராணம்.— சனற்குமாரம் நாரசிம்மம் நந்தி சிவதருமம் தூர்வாசம் நாரதீயம் கபிலம் மானவம் உசனம் பிர்மாண்டம் வாருணம்காளிவாசிஷ்ட லிங்கம் சாம்பவம் சௌரவம் பராசரம் மாரீச்சியம் பார்க்கவமென்னும் இந்நாமதேயமுள்ளவர்களால் நிர்மிதமான அஷ்டாதச உபபுராணம் வைதீகதர்மமே பிரதிபாதிக்கும்.

இதியாசம்.—பாரத இராமாயணாதிகள் வியாச வான்மீகாதிகளாலுண்டான இதியாசங்கள் சத்துவாதிகுணபேதங்களும் தேவத்திரயலக்ஷணங்களும் தேவதானவாதிகள் ஜநனக்கிரமமும் யுதிஷ்டிரராமச்சந்திராதிகள் சரித்திரங்களும் வைதீகாதிதர்மங்களும் திரிடீகரித்துச்சொல்லும்.

சாக்தீயம்.—சக்திதத்துவ வாசியென்னும் ஒருஆத்மனாற்பிரதிபாதிக்கப்பட்டது சடாசடப்பிரபஞ்சமெல்லாம் சக்திபரிணாமம் ஆனந்தப்பிராப்தியே மோட்சமென்பது முதலாக மதவிஸ்தாரம் செய்யும்.

பாஞ்சராத்திரம்.—ஸ்ரீவாசுதேவனாற் பிரதிபாதிக்கப்பட்டது பிருதிவியாதி மானசாந்தமான சதுர்விம்சதிதத்துவத்துக்குமேல் குணதத்துவாத்மக வாசுதேவனால் சக்திதாதாத்மீகமாயுண்டான கிருஷ்ண அநிருத்த மகரத்துவச ஸௌளகிணேயனென்னும் நால்வராலுற்பத்திமுதலான கிருத்தியம் ஆத்துமன் நாடிமத்தியகதனாய் அணுப்பிரமாணமாகவே இருப்பன் வாசுதேவாத்மகப் பிரகிருதியில் சொரூபத்துக்கு ஆனியில்லாது அடங்குவதே மோக்ஷமென்பது முதலாக விவகரிக்கும்.

லௌகீகசாஸ்திரம்.—தன்மந்திரியாதிகளாற் சொல்லப்பட்ட ஆயுள்வேத தண்டநீதிமுதலான சாஸ்திரம் ஆத்துமன் தேகபுத்திரகளத்திராதிரூபன் இகலோகத்தில் புத்திரதாராதிகளுடன்கூடி வியாதியாதிதுக்கமில்லாமல் சுகத்திலிருக்கிறதே மோக்ஷமென்பதுமுதலான திருஷ்டபலன்களைப் பிரதிபாதிக்கும்.

வைதீகசாஸ்திரம்.— ஜைமுனி அட்சபாத கணாதனென்னும் ரிஷீஸ்வரர்களால் கிரமத்திற்சொல்லப்பட்ட பூர்வமீமாம்ச நியாய

வைசேடிகமென திருஷ்டாதிருஷ்டபலன்களைப் பிரதிபாதிக்கிற சாஸ்திரம் திரிவிதம். அவற்றுள். பூர்வமீமாம்சம்.— உபக்கிரம முதலான சட்விதலிங்கதாற்பரியத்தால் வேதவாக்கிய விசாரபூர்வகமாய் சோதிஷ்டோம யாகாதிகருமங்களை விதியுக்தமாகச் சொல்லிஆத்மன் ஸ்வதப்பிரமாணமான ஞானசொரூபன் சுவர்க்கலோகப்பிராப்தியே மோக்ஷமென்பது முதலாக விவகரிக்கும். நியாயம்.— பிரமாணப் பிரமேய சம்சயப் பிரயோஜன திருஷ்டாந்த சித்தாந்த அவயவ தர்க்க நிர்ணய வாத செல்ப்ப விதண்டா ஏதுவாபாச சல சாதி நிக்கிரகஸ்தானமென்னும் சோடசபதார்த்தமுஞ்சொல்லி பிரபஞ்சத்துக்கு ஈஸ்வரனே கர்த்தா ஆத்துமன் ககனம்போல மகத்பரிமாணனாய் பாஷாணம்போலச் சடரூபனானாலும் மனசுசம்யோகத்தால் சித்து சம்யுக்தனாயிருப்பன் சரீரேந்திரியாதி இருபத்தொருதுக்க ஆத்தியந்தநாசத்தால் ஆத்துமன் பாஷாணம்போலிருப்பதே மோட்சமென்பது முதலாக விவகரிக்கும். வைசேடிகம். — திரவிய குண கர்ம சாமான்ய விசேஷ சமவாய அபாவமென்னுஞ் சத்த பதார்த்தப் பிரதிபாதகத்தால் பிரபஞ்சசொரூபத்தை விவகரித்து ஆத்துமலட்சணம் மோட்சலட்சணம் நையாயிகத்தைப்போல நிரூபகம்பண்ணும்.

அவைதீகசாஸ்திரம்.— பிரகஸ்பதி ஆரிஹ சுகதரென்னும் இவர்களாற் கிரமத்திற்சொல்லப்பட்ட சாருவாக ஜைன பௌத்தமென்னத் திரிவிதம். அவற்றுள். சாருவாகம்.—பிருதிவியாதி சதுர்விதபூதவிகாரமான ஜகத்துள் சுகமே சுவர்க்கம் துக்கமே நரகம் இவையன்றி வேறேசுவர்க்கநரகமில்லையென்றும் ஆத்துமன் தேகமென்றும் சிலர் இந்திரியமென்றும் சிலர்பிராணனென்றும் மரணமேமோக்ஷமென்றும் பிரதிபாதிக்கும். சைனம்.-சித்தபத்தநாரகிகளென்னும் புருஷத்திரய லக்ஷணங்களையும் ஒட்டீச ஒட்டாமிலேச சுவாலினகற்ப பதுமாவதிகற்ப சாரதாகற்ப குக்குடனாதி கற்பாதிகளையும் மந்திரௌஷதாதிப் பிரியோத்திருக்களான பரமசித்தர்களையும் லூனகேச திகம்பர பாணி பாத்திர மயூர பிஞ்ச பஞ்சமல தாரணாதிகளின் கொலை களவு கள் காமம் பொய் களில்லையான பஞ்சானுவிரதங்களில் மதுக பலண்டு முதலான நிஷேததிரவியங்களைவர்ச்சித்து தப்தசிலாசயனாதி உக்கிரதபசா

சரிக்கிற முனிவிருத்திகளையும் ஏமசந்திர நாகசந்திர நேமிசந்திர ஏகிசந்திர மாகசந்திர அருகந்தி ஆதிநாத அசகள பாரிஸ்வநாத சௌகத சுருதிகீர்த்தி ஸ்ரீமத்காமரகித முனிஸ்வாமிமுதலான உச. தீர்த்தகரருடைய சரித்திரங்களையும் சாதாஸ்தி சாதாஞாஸ்தி முதலான சத்தபங்கிகளையும் சீவ சற்சீவ நிர்ச்சீவ நிர்ச்சர ஆசிர்வ பந்த மோட்சமென்னும் சத்தபதார்த்தங்களையுஞ்சொல்லி ஆத்துமன் தேகாதிவிலக்ஷணனாய் தேகபரிணமிதனாய் பரிணமிதமத்தியைப்பிற் சங்கோசவிகாச தர்மயுக்தனாயிருப்பன் ஆகாசமத்தியத்துள் உத்தரோத்தரகமனமே மோக்ஷமென்பதுமுதலாக விவகரிக்கும். பௌத்தம்.—சௌத்திராந்திகம் வைபாடிகம் யோகாசாரம் மாத்தியமிகமென நான்குபிரகாரமாய் பிருதிவியாதி புத்தியாந்தமான (உரு) தத்துவாத்மகமான பிரபஞ்சம் தீபச்சுவாலையைப்போல க்ஷணிகமாத்திரமென்றும் புத்தியே ஆத்மனென்றும் சுகதுக்காதிகளால் மயக்கப்படாமலிருக்குஞ் சுத்தபுத்தி சந்ததியே மோட்சமென்றும் விவகரிக்கும்.

நிஷேதகர்மசாஸ்திரம்.-சத்தியநாதர் சதோகநாதர் ஆதிநாதர் அநாதிநாதர் வகுளிநாதர் மதங்கநாதர் மச்சேந்திரநாதர் கடேந்திரநாதர் கோரக்கநாதரென்னும் நவநாதசித்தர்களால் கற்பிதமான கௌள யாமளாதி இம்சை மைதுனாதி நிஷேதகர்மமுள்ள சாஸ்திராந்திரங்கள் அபிசார கர்மவசனித வியாதியாதியால் அகாலமிருத்துருபமான மரணசுழுத்தி விஷமூர்ச்சாதிரூப மோகனமும் அக்கினிஸ்தம்பனை ஜலஸ்தம்பனை இந்திரியஸ்தம்பனை கட்கஸ்தம்பனை சிங்குவைஸ்தம்பனை கதிஸ்தம்பனாதி ஸ்தம்பனமும் பூர்வசுகாசிரம நிரசனாத்மகமான உச்சாடனமும் வஸ்திராபரண வனிதாதி வஸ்துக்களை நிஜஸ்தானத்திலிருந்து அழைப்பிக்கும் ஆகருஷணமும் பிராணசிநேகமானவிடத்தில் அந்நியொன்னியவிரோதமுண்டாக்குகிற வித்துவேஷணமும் ராஜவசியாதி வசியங்களையும் சுராசுரபூதக் கிரகாவேசங்களையும் பாதுகாசித்தி அஞ்சனசித்தி குடிகாசித்தி மூலிகாசித்தி ரசவாதங்களையும் பிரதிபாதித்து ஆத்துமன் ஆனந்தரூபி ஆகாசகமனாதி சித்திப்பிராப்தியே மோக்ஷமென்பதுமுதலாக விவகரிக்கும்.

ஆத்தியாத்மீகசாஸ்திரம். — கபில பதஞ்சலி வியாசரொன்னும் முனிவர்களால் கிரமத்திற்சொல்லப்பட்ட சாங்கிய பாதஞ்சல வேதாந்தமென ஆத்மக்ஞானபலன்களுள்ள ஆத்தியாத்மீகசாஸ்திரம் திரிவிதம். அவற்றுள். சாங்கியம்.-நித்தியநிர்மலமான ஆத்தும சந்நிதானத்தில் குணத்திரயாத்மகப்பிரகிருதியே பஞ்சவிம்சதி தத்துவாத்மகசகத்தாய் விவகரிப்பதே சம்சாரபந்தமென்றும் சத்துவாதி குணத்திரயானுக்கிரமத்தால் சேத்மப்பிரகிருதி பித்தப்பிரகிருதி வாதப்பிரகிருதியிலுள்ள சாந்தி குரோதமூடாதிகுணயுக்தமான உத்தம மத்திம அதம புருஷத்திரய வர்னநீதிமுதலானவைகளுண்டாமென்றும் ஆத்மன் அசங்கசின்மாத்திரமென்றும் பிரகிருதிபுருஷ விவேகத்தால் அவித்தையாநாசமானதே மோக்ஷமென்றும் விவகரிக்கும். பாதஞ்சலம். — இயம நியமாதி அஷ்டாங்கயோகத்தால் மனோநிச்சல சித்தியாமென்றும் ஆத்மன் அசங்கசின்மாத்திரமென்றும் யோகாப்பியாசபலத்தால் மனோலயமாகி அந்த மனோலயத்துவாரத்தால் அஞ்ஞானமழிந்ததே மோக்ஷமென்றும் விவகரிக்கும். வேதாந்தம்.—உபநிஷதர்த்தப் பிரதிபாதகமான வேதாந்தம் பிரபஞ்சத்துக்கு மித்தையாத்துவஞ்சாதித்து அதனுல் பிர்மாத்தும ஐக்கியத்துவம் வர்ணிக்கப்பட்டும் பாஸ்கரீயம் மாயாவாதம் சத்தப்பிர்மவாதம் கிரீடாப்பிர்மவாதமென நான்குபேதமாய் ஆத்மன் ஞெப்திமாத்திரமென்றும் பிர்மாத்மவைக்கியஞான த்தால் விவகாராதி சம்சாரபந்தநிவர்த்தியே மோட்சமென்றும் விவகரிக்கும்.

ஆதிமார்க்கிகசாஸ்திரம்.— மாயாதத்துவ வித்தியாதத்துவவாசிகளான ருத்திரராற்சொல்லப்பட்ட பாசுபத காபாலிக மாவிரதமென சாஸ்திரந் திரிவிதம் அவற்றுள். பாசுபதம்.—மாயாகர்மாதிகளைச்சொல்லி ஆத்துமன் நித்தியவியாபக சைதன்யனென்றும் பிரபாகேஸ்வரத்தால் ஈஸ்வரத்துவம் அந்நியருக்குக்கொடுத்து ஆத்துமன் ஞெப்திமாத்திரமாயிருப்பதே மோக்ஷமென்றும் விவகரிக்கும். காபாலிகம்.— நரகபால பிக்ஷாடனுதிகளைச்சொல்லி ஆத்துமன் நித்தியவியாபகசைதன்யனென்றும் கர்த்துருத்துவமான சம்சாரபாவத்தைவிட்டு ஞெப்திமாத்திரமாயிருப்பதே மோக்ஷமென்றும் விவகரிக்கும். மாவிரதம். — அஸ்திதாரணுதிகளைச்

சொல்லி ஆத்மலக்ஷணம் மோக்ஷலக்ஷணம் காபாலிகனைப்போல நிரூபிக்கப்படும்.

சித்தாந்தசாஸ்திரம்.—மாந்திரசமிக்ஞாசித்தாந்தம் ஆத்மன் நித்தியவியாபக ஞானக்கிரியா சொரூபனென்றும் அவ்வாத்துமன் சடத்துவாதீத சிவசமானத்துவமாவதே மோக்ஷமென்றும் விவகரிக்கும்.

## சத்தப்பிரகரணம்

கவி. இராகாதிசோடசத்திற் கொள்வது தள்ளுவது, மியல்கின்ற சாதனமோர் நான்குமதின்வகையும், போகாதிசீவனுக்குத் தூலமொடுசூக்கம், பொருந்துமுடலிரண்டினொடு காரணமாமவித்தை சாகாதிசாகைகளாய்ப் பிரிந்துமதன்வடிவைச், சத்தசத்தென்றறியவொண்ணு தவாச்சியமாமாயை, ஏகானுபவமுளைக்கும் நிசானந்தமென்ன, ஏழுபிரகரணமன்னு ரியன்றதெடுத்துரைப்பாம்.

இராகாதிசோடச சாதனசதுஷ்டய ஸ்தூல சூட்சும காரண மகாகாரண நிசானந்தமென்னச் சத்தவிதமாய் நிரூபிப்பது.

## ராகாதிசோடசம்.

முமூட்சுக்களுக்கு அவஸ்யம்வேண்டும் வைராக்கியாதி குணங்களுக்கெதிர்த்தட்டாக விருக்கும் இராகத் துவேஷ காமக் குரோத லோப மோக மத மச்சர ஈரிஷை அசூயை டம்ப தர்ப்ப அகங்காரமென்கின்ற பதின்மூன்றுகுணங்களுந் தள்ளத்தக்கதென்றும் இச்சை பக்தி சிரத்தைமூன்றும் கொள்ளத்தக்கதென்றும் நிரூபிக்கப்படுவது. அவற்றுள். இராகம்.— பரதாரப்பிரீதி. துவேஷம்.—அபகாரப் பிரதியபகாரம். காமம்.—புத்திரமித்திர தன தான்யாதி யார்ச்சிதசிந்தனுவிருத்தி. குரோதம்.—சொப்பிரயோஜன விக்கினதரனிடத்தில் வியாக்கிரரூப கோபாவேஷவிருத்தி. லோபம்.-ஆர்ச்சித்தபதார்த்தத்தில்திரணுதானவிருத்தி. மோகம் ஆர்ச்சித்தபதார்த்தத்திற்பிரியமோதப்பிரமோதவிருத்தி. மதம்.- ஐஸ்வரிய பாகுள்ய கெருவத கிருத்தியாகிருத்திய அவிவேக விருத்தி. மச்சரம்.-தனக்குச்சமானுதிக சம்பத்தையுடையவனேப் பார்த்துச் சகிக்கக்கூடாதவிருத்தி. ஈரிஷை.—தனக்குவந்த துக்கம் போல பராளுக்கும் வரலாகாதோவென்னும் விருத்தி. அசூயை.- தனக்குவந்த சுகம்போல பராளுக்கும் வரலாமோவென்னும் விரு

த்தி. டம்பம்.-சருவரும் ஸ்தௌத்தியம் பண்ணுவதற்காக தருமஞ் செய்யச்சிந்திக்கும் விருத்தி. தற்பம்.— புத்திர மித்திர களத்திர தனதான்யாதி சம்பத்துக்களில் தனக்குச்சமானம் ஒருவருமில்லையென்கிற சித்தவிருத்தி. அகங்காரம்.—பாவங்களுக்கெல்லாமூலமாய் ஒருவரையுமதிக்காமல் சுதந்தராகிருதியாகத் தடிப்புற்றிருக்கும் சித்தவிருத்தி. இந்தப்பதின்மூன்றும் இகபர மோட்சப்பிரயோஜனங்களுக்கு அத்தியந்தவிரோதமானதால் முமுட்சுவானவர்கள் அவசியம் விசர்ச்சனம் பண்ணத்தக்கது.

சற்குருசாஸ்திர விஸ்வாசமே: சிரத்தை.—சற்குருசொரூபபாவனாயோக பூசாவிதானதியே: பக்தி.—கைங்கிரியார்த்தமாக சௌசாசமன தேகபோஷணப்பிரீதியே: இச்சை.—இம்மூன்றும் கைக்கொள்ளத்தக்கது.

சாதனசதுஷ்டயம்.— விவேக விராக சம்பத்து முமுக்ஷுத்துவமென்ன நான்குபிரகாரமாக நிருபிப்பது அவற்றுள்.—நித்தியரூபமான சரீரியையும் அநித்தியரூபமான சரீரத்தையும் அதன்யதாப்பிரகாரம் விவேகித்துணர்வது: விவேகம்.—அநித்தியரூபமான இகபரபோகங்களில் இச்சையற்றிருப்பது: விராகம்.—ஞான சக்தி பல ஐஸ்வரிய வீரிய தேஜசாதி சகலகுணசம்பூரணனான ஸ்ரீசற்குருவை சமதமாதிகுணங்களால் சரணமடைவது: சம்பத்து.— முத்திப்பொருளை ஸ்ரீசற்குருமுகமாயுணர்ந்து சர்வபந்தநிவர்த்தகமான மோக்ஷத்தைமாத்திரம் அபேக்ஷிக்கப்படுவது:முமுக்ஷுத்துவம்.

ஸ்தூலம்.— பஞ்சீகிருத பஞ்சமகாபூதோற்பவம் கர்மஜென்யம் சுகதுக்காயதனம் பஞ்சவிம்சதிதத்வாத்மகம் கடரூபசமான வேத்தியமென்றும் இதனோடுகூடியிருப்பவன் விஸ்வசீவனென்றும் சற்குருகிருபையினாலுணரப்படுவது. அவற்றுள். பஞ்சவிம்சதிதத்துவம்.—அஸ்தி மாம்சம் சர்மம் நாடி உரோமம் பிருதிவியின் பஞ்சகிருதி. — லாலா மூத்திர சுவேத சோணித சுக்லம் அப்புவின்பஞ்சகிருதி. — க்ஷுத்து பிபாச ஹாலஸ்ய நித்திரா சங்கமம் தேயுவின்பஞ்சகிருதி.-தாவன வல்க்கன குஞ்சனப் பிரசாரண சயனம் வாயுவின்பஞ்சகிருதி.—இராகத் துவேஷ பய லஜ்ஜா மோகம் ஆகாசத்தின் பஞ்சகிருதி.—இதேபஞ்சவிம்சதிதத்துவம்.

சூட்சுமம்.—மனமாதி சுரோத்திராதி வியானாதி வாக்காதியென்னும் இருபது தத்துவங்களுக்குள்ளும் புறம்பும் இருந்து அதனது புறக்கிரிகை அகக்கிரிகைகளை நடத்துபவன் தைசத சீவனென்றும் ஸ்ரீசற்குருகிருபையினாலுணரப்படுவது. புறக்கிரிகை.—சீவனானவன் ஆகாசத்தினம்சமான உள்ளத்தையெழுப்பி அதற்கினமான வியானவாயுவினோடுகூடி சுரோத்திரேந்திரியவழியாய் சத்தவிஷயங்களையறிவன்.— வாயுவினம்சமான மனத்தையெழுப்பிஅதற்கினமான பிராணவாயுவினோடுகூடிதொக்கிந்திரியவழியாய்ப் பரிசவிஷயங்களையறிவன்.— அக்கினியினம்சமான புத்தியையெழுப்பி அதற்கினமான அபானவாயுவினோடுகூடி சட்சிந்திரியவழியாய் ரூபவிஷயங்களையறிவன்.—அப்புவினம்சமான சித்தத்தையெழுப்பி அதற்கினமான சமானவாயுவினோடுகூடி சிங்குவேந்திரியவழியாய்ரசவிஷயங்களையறிவன்.-பிருதிவியினம்சமான அகங்காரத்தையெழுப்பி அதற்கினமான உதானவாயுவினோடுகூடி கிராணேந்திரியவழியாய் கந்தவிஷயங்களையறிவன்.

அகக்கிரிகை. — சீவனானவன் கந்தவாசனையையெழுப்பி கிராணவாசலில்ப்புகுந்து அகங்காரத்தினோடுகூடி உபஸ்தக்கிரிகையைச்செய்வன்.—ரசனவாசனையையெழுப்பி சிங்குவை வாசலில்ப்புகுந்து சித்தத்தினோடுகூடி பாயுக்கிரிகையைச்செய்வன்.-ரூபவாசனையையெழுப்பி சட்சுவாசலில்ப்புகுந்து புத்தியோடுகூடி பாதக்கிரிகையைச்செய்வன்.-பரிசவாசனையையெழுப்பி தொக்குவாசலிற்புகுந்து மனதோடுகூடி பாணிக்கிரிகையைச் செய்வன்.—சத்தவாசனையையெழுப்பி சுரோத்திரவாசலிற்புகுந்து உள்ளத்தோடுகூடி வசனக்கிரிகையைச்செய்வன்.

காரணம். — ஸ்தூல சூட்சும பவபந்தபீஜம் அந்தகாரசூன்ய அவித்தையாரூபமென்றும் ஸ்ரீசற்குருகிருபையினால்த் தெரிந்து விவேகசமாதியினால் பிராக்ஞசீவனானவன் சொச்சொரூப சின்மாத்திர நிஷ்டையைச் சாதிக்குமிடத்து சுத்தப்பொய்யாய்க் கட்டோடு நசிக்கப்படுவது. விவேகம். — ரூபம் திரிசியம் கண்திருக்கு அக்கண்திரிசியம் மனந்திருக்கு அம்மனந்திரிசியம் ஆத்மாதிருக்கு அவ்வாத்மா திரிசியமாகமாட்டாது. இதுபோலமற்றதுமறிக.

சமாதி. — ஆந்தர்திரிசியானுவித்தம் பாகியதிரிசியானுவித்தம் ஆந்தர்சத்தானுவித்தம் பாகியசத்தானுவித்தம் ஆந்தர்நிருவிகல்பம் பாகியநிருவிகல்பமெனச் சட்பிரகாரமாக விருப்பது. — பிரத்தேகமாகநின்று தூலாதியொன்பதும் சடமாகப் பார்ப்பது: ஆந்தர்திரிசியானுவித்தம். — பிரத்தேகமாக நின்று விராட்டாதியொன்பதும் சடமாகப்பார்ப்பது: பாகியதிரிசியானுவித்தம். — தூலாதிவாச்சியத்தைவிட்டு அதற்கு லக்ஷியசாக்ஷியே தானுகவிருப்பது: ஆந்தர்சத்தானுவித்தம். — விராட்டாதிவாச்சியத்தைவிட்டு அதற்கு லக்ஷியசாக்ஷியே தானுகவிருப்பது: பாகியசத்தானுவித்தம். — தூலாதிக்கிப் பிரத்தேகசாக்ஷியே விராட்டாதிக்கிப் பிரத்தேகசாக்ஷி விராட்டாதிக்கிப் பிரத்தேகசாக்ஷியே தூலாதிக்கிப் பிரத்தேகசாக்ஷியென்று ஒருப்படக்காண்பது: ஆந்தர்நிருவிகல்பம். — அதுவிதுவென்னும் பேதமற பரப்பிர்மதத்துவத்தை ஏகோகநிஷ்டையாலச் சாதித்தடைவது: பாகிய நிருவிகல்பம்.

மகாகாரணம். — சிற்பாவத்தாலுளதாயும் சடபாவத்தாலிலதாயும் சருவஜகத்காரணமாயிருக்கின்ற மாயை இதனை சற்குருகிருபையினுல் விவேகம்பண்ணி விஸ்வக்கிரிகையை வைசுவானறனுலும் தைசதக்கிரிகையை சூத்திராத்மாவினுலும் பிராக்ஞக் கிரிகையை அந்தரியாமியினுலும் நடத்தக்கண்டு கிரியாநிவர்த்தனுய்ச் சீவச்சேஷ்டைகளற்று ஞானுத்மாவாகத்தெளிந்து அதிஷ்டான பிர்மசாக்ஷாத்காரத்தால் ஆரோபகற்பித ஸ்தூல சூக்ஷும காரண மகாகாரண அத்தியாச வனர்த்தமுழுதும் வர்ச்சிக்கப்படுவது.

நிசானந்தம். — ஸ்ரீசற்குருவானவர் உபதேசசமிக்ஞையினுல் தூஷ்ணீம் பூதாவஸ்தையைமுன்னிட்டு நடுநிலைப்பொருளாகிய நிசசொரூபத்தை வெளிப்படுத்தி அந்தநிசானந்தவழியாய் சர்வானந்தங்களையும் நவநவமாய் நாளுக்குநாளபிவிர்த்திபண்ணி சர்வஸ்தூல சர்வசூட்சும சர்வகாரண பரமேஸ்வர பரப்பிர்ம அபரிச்சின்ன நிரதிசயானந்த அனுபூதிவாழ்விலடையச்செய்வது.



## அந்தாதிக்கிரமம்.

கவி. சொந்தமதாயெமக்காகப்பலசீவவாதத்தொகுதியினை, சேஷாத்திரி சொன்னதையுட்கொண்டு, அந்தமதைமுதலில்வைத்து முத்தரதுபாவம், ஆவரணம் விட்சேபம் அவித்தையொடுமாயை, விந்துவெனும் பிரகிருதி பிர்மமெனவேயுழு, விஷயமதாய்த் தொகுத்திதனை விளம்புதற்குக் குருவாய், சுந்தரமாயெனதுளத்தில்ச் சதாநடனஞ்செய்யும், சொரூபவசுதேவின்மலர்த் துணையடிகள் தொழுவாம்.

சேஷாத்திரிசிவதேசிகரருளிய நானாசீவவாதக்கட்டளையின் அந்தத்தை முதலில்வைத்து முத்தபாவம் விட்சேபம் ஆவரணம் அவித்தை மாயை பிரகிருதி பிர்மமென சத்தவிஷயமாகத்தொகுத்து அதனை நாடிசாட்சாத்காரரூபமாய்ப் பரிபூர்த்திபண்ணுவது.

முத்தபாவம்.—நியதிசமஸ்காரவிதிப்படி சடபாவமாகத் தெரிசித்த முப்பத்தைந்துதத்துவங்களையும் பூர்த்திசமஸ்காரவிதிப்படி சிற்பாவமாகத்தெரிசித்து சர்வமும் பிர்மமயமாகத் தெளிந்திருக்கின்ற பரமசிரோஷ்டனுக்கு சிவன்முத்தன் திடப்பிரக்ஞன் பகவத்பக்தன் குணாதீதன் முதலியநாமங்களை வேதசாஸ்திரங்களால்விதிக்கப்பட்டும் அந்தவிதிநிஷேதங்களுக் கதீதமாகவேயிருப்பது.

விக்ஷேபம். — ஸ்தூல சூட்சும பூதமென்னும் முப்பத்தொரு தத்துவமாயும் அகங்காரிக்கு அநித்தியக்கருவியாயும் முமுட்சுவுக் கனுகூலக்கருவியாயும் அனுபவிக்கத் தோற்றுமாத்திரமாயும் ஆரூடனுக்குத் தன்மயக்கருவியாயும் விதேகமுத்தியில் நீக்கப்படுவதாயுமிருப்பது.

ஆவரணம். — வாச்சியவாசகங்களைக்கடந்து லட்சியாதீதமாகப் பிரகாசிக்கின்ற ஆத்மஞானிகளிடத்தும் விநோதகாரணமாக மாயையைவசமாக்கிக்கொண்டு அதற்கதுவாகக் கலந்துநிற்கின்ற ஈஸ்வரனிடத்திலுமொத்துண்டு அந்தகாரக்குகையில் வசிக்கும் பிராந்தாளாகிய சீவர்களுள்ளத்தில் வேறான்றி காமாதி அரிசட்டுவர்க்கங்களால் மறைப்பித்து சிற்பெயரைமாற்றிச் சிதாபாசப் பெயரை நாட்டிவைப்பது.

அவித்தை. — சீவேஸ்வர அவித்தை வித்தை பிர்மமென்னும் காரணசரீர தத்துவ பஞ்சகத்தில் அஞ்ஞானபீஜமாய் ஒவ்வொரு

தத்துவத்தில்சுதந்தராகிருதியாகச்சுட்டி எண்பத்துநான்குலட்சம் அச்சுப்பேதங்களாகப்பரவிநிற்பது.

மாயை.—லோகாந்தரப்பிராப்தனுக்குச்சகிதமாயும் ஆத்மஞானிகள் அதற்குரகிதமாயும் பற்றுதல்விடுதலிரண்டும் விளையாட்டாகவுடைய ஈஸ்வரனுக்கு விநோதமாயும் விளங்குவது.

பிரகிருதி. — சுத்தசத்துவம் மிசிரசத்துவம் சத்துவசூன்யமென்னத் திரிவிதரூபமாய்ப் பரவிநிற்பது.

பிர்மம். — சுத்தப்பிர்மம் பரப்பிர்மம் சகுணப்பிர்மம் சபளிதப்பிர்மம் சர்வம்பிர்மமென்ன சொரூபபந்திகளால்ப்பிரிக்கப்பட்டும் பிரிவில்லாததாய் நிஷ்டாரூபமாய்த் தெரிசிக்குமிடத்து அவை யாவும் இன்பரசமா யனுபவப்படுவது. அவற்றுள். — சர்வசாக்ஷியாய் சர்வபூதவிலட்சணமாயிருப்பது: சுத்தப்பிர்மம்.—அகோசர சுயம்புவாயும்பின்னையபின்னைமுதலியசத்திசம்பந்தத்தால்மூர்த்த அமூர்த்தமூர்த்தாமூர்த்தமுதலிய சர்வலட்சணங்களையுடையதாயுமிருப்பது: பரப்பிர்மம்.—சுத்தசத்வாத்துமகமான முத்தாத்மாக்களிடத்தும் உபசாந்தசின்மயரான நித்திய சூரிகளிடத்தும் பரஸ்பரம் அன்னியொன்னியமாய்க்கலந்துநிற்பது: சகுணப்பிர்மம்.— ஜெகசீவபரங்களின் விருத்தியின்வழியாய்ப் பிரதிபலித்திருப்பது: சபளிதப்பிர்மம். —தரங்கபேனங்களை யுடையாமல் சலாகிருதியாகப் பார்ப்பதுபோல வர்ணுதிசட்ஜ ஜெகசீவபரங்களிருந்தபடியேயிருக்க பூர்த்திசமஸ்காரத்தால் அவையாவும் பிர்மமயமாகத் தெரிசிக்கப்படுவது: சர்வம்பிர்மம்.

## நாடிசாக்ஷாத்காரம்.

பிர்மம் ஈஸ்வரன் மாயை அவித்தை சீவன் மனம் இந்திரியம் பிராணன் கன்மம் ஸ்தூலம் மார்க்கமென்ன ஒன்றிலொன்றுகோர்த்துநிற்கின்ற ஏகாதசநாடியின்வழியாய் மமதகங்காரம் நீங்கிய சீவன்முத்தர்கள் பரமம் பிர்மமென்கின்ற உபயலட்சணங்களையும் ஆரோகண அவரோகணரூபமாய் சாக்ஷாத்காரம்பண்ணுவது.

பிர்மம். — முத்தானுபாவியமாய். திரித்துவ திரியேகவஸ்துவாய் அவாங்மனோகோசரமாயிருப்பது.

ஈஸ்வரன்.—பரப்பிர்மமென்கின்ற தத்துவநாடிக்குவேறுகாமல் அகிலமங்களகுணசொரூபனான பரமேஸ்வரன் சர்வபரிபூரண

ஞகவிருந்தும் லோகரக்ஷகார்த்தம்காருண்யமிகுதியினால் பரவியூக விபவ அந்தரியாமி அர்ச்சாவதாரமென் றைந்துபேதமாய்ப்பிரிந்து வேறுவேருகவிருக்கின்ற பரிச்சின்ன சீவனுடிகள்முழுதும் பரவி அந்தந்தநாடிபின்வழியாய்ச் சஞ்சரிப்பது.

மாயை.—சர்வேஸ்வரனுக்கு கிரீடாபரிகரமாய் சாயையைப் போல சற்றேனும் அந்த ஈஸ்வரநாடியை விட்டுப்பிரியாமல் அவனது திருநோக்கப்படி அமைந்து நிற்பது.

அவித்தை.—சர்வேஸ்வரபரப்பிர்மமே இதோநமக்கெதிரிவிருக்கின்ற சாக்ஷாத்கார சற்குருவென நிர்ச்சந்தேகமாய்த் தெளிந்து அன்பினேடு அவனது அடிக்கமலங்களில் நம்முடையமுழு மனதையுஞ்செலுத்தி அவனதுகடாக்ஷத்தால் கேவல சகல சூன்யமென்கின்ற சாட்டியப்பற்றுமுழுதும்நழுவி இதராந்தரவர்ச்சிதஞய் சரண்யப்பற்றுனது நாளுக்குநாளபிவிர்த்தியாகி சர்வசிரேஷ்டமான குருநாடியின்வழியாய் மேல்வீடுபெற்று நித்தியானந்த வாழ்வை யடைந்திருக்கின்ற முத்தசீவர்களைத்தவிர மற்றய பரிச்சேதசீவர்களுக்கு பிரதிவிம்பரூபமான வெதிரிக்தவுணர்வையுண்டு பண்ணுவது.

சீவன்.—மனுதிபுலன்வழியில் சஞ்சரித்துழல்கின்ற சீவப்பிராணனை தத்தம் வாசனுமூலத்தினேடு ஈஸ்வரநாடியினுல் சிக்ஷாரூபமாய்க்கிரகிக்கப்பட்டு அந்தஈஸ்வரானுக்கிரகத்தால் தத்தங்கருமத்துக்கீடான தேகத்தைப்பெற்று ஜெனனமரணுதி தொந்துவச்சுழக்கில் சற்றேனும்ஓய்வில்லாது குலாலசக்கரம்போல சுத்திக்கொண்டிருப்பது.

மனம்.-சீவனுடியைவிட்டுப்பிரியாமல் சித்தசாந்தியையுடைய விம்பசேதனருக்கு இன்புருவாகவிருந்தும் பிரதிவிம்பசிவருக்குத் துன்புருவாய் உள்ளம் மனம் புத்தி சித்தம் அகங்காரமென் றைந்து தத்துவமாய் அந்தச்சீவனுக்கு பௌஷதியில் அளவற்ற ஜென்மத்தைக் கொடுக்கும் சஞ்சிதரோகத்தை சத்தாதிபுலன் வழியாய்க் கிரகித்து நாள்தோறும் இதயபொட்டகத்தில் சேர்த்துவைப்பது.

இந்திரியம்.—மனேநாடியைவிட்டுப்பிரியாமல் சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்குவை ஆக்கிராணமென்றைந்து தத்துவமாய்

தத்தம்நாடிவழியிற்சென்று சத்த பரிச ரூப ரச கெந்தமென்கின்ற ஐம்புலக்காக்ஷியையுண்டு அகத்திலும்புறத்திலுஞ் சஞ்சரிப்பது.

பிராணன்.—மனாதிகரணங்களோடு சம்பந்தித்து வாக்காதி இந்திரியங்களைத் தொழில்ப்படுத்தி காரியதேகத்தைத் தரிப்பிப்பதற்காக வியான பிராண அபான சமான உதானனென்னைந்து தத்துவமாய் மனாதி உதிப்பைத்தடுத்து யோகமகிமையினால் அந்த வாயுவைச் சிதரவிடாமல் ஒருவழிப்படுத்தி வாமநாடிவழியிற்செல்லுபவனை தெக்ஷணாயன யோகியென்றும் பிங்கலாநாடிவழியிற் செல்லுபவனை உத்தராயனயோகியென்றும் சுழிமுனாநாடிவழியிற்சஞ்சரிப்பவனை பிர்மீகயோகியென்றும் பிராணனை அபானன் விழுங்க அபானனைப் பிராணன்விழுங்க பிராணாபானசம்யோகத்தால் போக்குவரவைத்தடுத்து ஆயுசைத்தீர்க்கம்பண்ணி ஆகாசகமனாதிகளைச்செய்பவனை ஐக்கியயோகியென்றும் இன்னும் பலவாறான விநோதகாரணமாயிருப்பது.

கன்மேந்திரியம்.—பிராணநாடியைவிட்டுப்பிரியாமல் வாக்கு பாணி பாதம் பாயுரு உபஸ்தமென்னைந்துதத்துவமாய் பிராண பந்தனத்தால் நாடிகளூறப்பட்டு வசனாதிக்கிரிகைகளைச் செய்யப் படுவது.

ஸ்தூலம்.—பூர்வகர்மத்தொடர்பாய் புருஷகற்பத்தில் ஈஸ்வர நாடியினால்ப் பூரித்த சிவப்பிராணசம்யோகமான சுக்லபீஜத்தை சோணிததானத்திற் பதித்தவுடன் நாடித்துவாரா பூதாவரணங்களால் மூடப்பட்டு சர்ம உதிர மாம்ச நரம்பு அஸ்தி மச்சைகளோடுங்கூடிய சர்வாவயவசகிதமான பௌதீகதேகம் நாளுக்குநாள்பரிபூர்த்தியாகி அகமுகதிருஷ்டியை மறந்து கெற்பகோளகையை விட்டு அதோமுகதிருஷ்டியினால் பூபதனமாகி பாகியவாசல்கள் திறந்து பகிர்முகமாகவெளியிட்டு சுகதுக்கரூபமான தொந்துவகர்மங்களையனுபவித்து முடிவில் ஈஸ்வரநாடியினால் சிவப்பிராணனைக் கிரகித்தோடும்போது பௌதீக கட்டடங்குலைந்து பாஞ்சபூதமயமாய் நசிக்கப்படுவது.

## மார்க்கம்.

யோகிகள் யதார்த்தநிலையைத்தெரிந்து மனச்சட்சுராதிகளையடக்கி அறிவுருவாய் குருநாடிவழியிற்சென்று சமாதிரூபத்தைப்

பெறுதற்கும் ஞானிகள் தத்துவநிலையைப்பிசகாமல் சகஜானுபவ ரூபமாய்த் திருவிளையாடல்களைச்செய்தற்கும் முமுட்சுக்கள் சதா வாசுதேவநாட்டமுடையராய் பகவதடிகளில்த்தாழ்ந்து சரண்யத் துவாரா மேல்வீடுபெற்று நித்தியானந்தவாழ்வையடைதற்கும் கருமானுரூபமாய் எண்பத்துநான்குலட்சம்அச்சுப்பேதங்களாகப் பிரிந்திருக்கின்ற பரிச்சின்னசீவர்களை சரீராந்தத்தில் ஈஸ்வர நாடியினால் கிரகித்து ஒன்றையொன்றாகப் பேதித்துவைத்தற்கும் சாட்டியமுழுதும்வர்ச்சித்து சர்வமும்பிர்ம ரசமாயனுபவிக்கின்ற நிருவாணநிஷ்டர்கள் லோகரட்சகார்த்தம் உத்தரோத்தரகமனு திகளை கிரீடாப்பிரவர்த்தகராக நடத்துதற்கும் நாடியானது மகத் தான ரோட்டுமார்க்கமாயிருப்பது.



## அமலராமாயணம்.

பாசுரம். சுயம்புவாய் நாரணன் முற்சிதாகாசத்திற் றோன்றி யவன், அயன் வசிஷ்டனிராகவர்க்குச் சொன்ன, வியம்பொருளைக் காஸ்மீரன்மூலத்தைத்தழுவி, வேறுபடப்பிரித்தெடுத்து விளம் பியவாசிஷ்டம், பயன்றெரிய வெளைப்பொருளாய்க் குறிப்பிட்டுக் கேட்ட, பாலருக்கும் பொருள்தெரிந்து பாக்கியத்தையடைய, ஜெயம்பெருகமூலகுரு நாரணனென்னுளத்தில்த், தினமும்நடம் புரியுமலர்ச் செழுங்கழல்கள் பணிவாம். (க)

பாசுரம். சற்பத்திவயிராக்கமுமுட்சுத்துவமாதி, சமைந்துநின்ற விராமனுக்குச் சகவிரிவைவசிஷ்டன், உற்பத்தி திதிசாந்தத்தொடு க்கி நிருவாணர், ஒப்பில்லாநிஷ்டையினையுபதேசித்ததி, கற்பத் தில் விஷ்ணு அயன் வசிஷ்டனிராமர்க்குக், கழரியதாய்க்காஸ்மீரக் கவியுரை வாசிஷ்டம், விற்பத்திசற்சாரப்பொருளுரையைத் தமி யேன், விளம்புதற்குப்பரமகுருவிணையடிகள்துணையே. (உ)

வசிஷ்டவிராமவுபதேசம் வால்மீகபரத்துவசம்வாதம் வேத சார இதிகாசயிருதயம் வைராக்கிய முமூக்ஷுத்துவ உற்பவ ஸ்திதி உபசாந்த நிருவாணப் பிரகரணசட்கநிரூபிதம் அமலராமாயணம்.

வேதசாரம்.- கேவலபூரணத்தைவிஷயமாக்கி தெய்வீக மனு ஷீக மிரண்டையும் ஒருப்படத்துலக்கி அனர்த்தநிவர்த்தி ஆனந் தாவாப்தியென்னும் உபயமோக்ஷத்தையும் ஒருங்கேசாதிப்பது.

இதிகாசஇருதயம்.— வாசிஷ்டபகவற்கிதையிரண்டும் இராமாயணபாரதமென்னும் இதிகாசத்திலிருந்து பூர்வாசாரியர்களால் பிரத்தேகமாயெடுத்து ஆசிரயிப்பவர்க்குப் போதமாக்குவது.

இராமாயண இதிகாசம்.— சங்கராதிசாதுக்கள் நிச்சயத்தைத் தெளியுகிறபரியந்தம் இந்தச்சரீரம்நழுவினும் ஸ்நான தான ஆகார வியவகாராதி சரீரபோஷணத்தைச் செய்யேனென்னும் தீர்க்க வைராக்யமுடைய விராமன் வசிஷ்டோபதேசத்தினால் சங்கராதி நிச்சயத்தைத்தெளிந்து தாடகையை வதஞ்செய்து ஜானகியை விவாகம்பண்ணி பிதிர்வாக்கியத்தைப் பரிபாலித்து இராவணாதி துஷ்டர்களைத்தொம்சம்பண்ணி ராச்சியாதிபட்டாபிஷேகத்தைப் பெற்று புத்திரபௌத்திராதிகளை யபிவிர்த்திபண்ணி க்ஷத்திரிய தர்மத்தை நிலைநிறுத்தி தன்னுடைச்சோதிக் கெழுந்தருளுவது.

பாரத இதிகாசம்.— குருபூமியிற் சருவசேனைமத்தியையிற் கிருஷ்ணசாரத்திய ரதாரோகணை யுத்தசன்னத்த தனுர்த்தண்டதாரியாய் நின்ற அர்ச்சுனன் பிதா பிராதா குரு மாமன்முதலிய சர்வ ஜனப்பிரீதியினால் அவர்களோடு யுத்தஞ்செய்தற்கஞ்சி அஸ்திர சஸ்திரமுழுதுந்நழுவி மிருதசிவியாய்ப் பதைப்பற்றுக்கிடந்தவனை ஸ்ரீபகவான் கீதாமிர்த சஞ்சீவியானுயிர்ப்பித்து தத்துவோபதேசத்தால் தெளிந்து சத்துருமுழுதுஞ்செயித்து சருவராச்சியாதிபத்தியத்தையுமடைந்து க்ஷத்திரியதர்மத்தைநிலைநிறுத்தி பௌத்திர பரீக்ஷித்துவுக்கு மகுடம் சூட்டி பரமபதநாட்டுக்கெழுந்தருளுவது

போதம்.—வாசிஷ்டபகவற்கிதையிரண்டும் முதலில் கரும க்ஞான பக்தி வைராக்கியாதியைச்சாதித்து முடிவில் இல்லொழுக்கத்தை நிலைநிறுத்துமென்றும் சிலர் துறவொழுக்கத்தை நிலைநிறுத்துமென்றும் பரஸ்பரம் வாதிப்பதனால் சந்தேகம்பிறந்து நமக்கு அனுபவரசந் தடைப்படாமல் நமது ஆசாரியன்முகமாய்த் தேர்ந்து தெளிவது.

இல்லொழுக்கம்.-பூர்த்திசமஸ்காரவிதிப்படி சருவமும் பிரமமயமெனத்தெளிந்து தற்பதவாழ்வில் அமர்ந்துநிற்கும் அற்புத நிஷ்டர்களாலனுபவிப்பது.

துறவொழுக்கம்.—ஸ்ரீபாரப்பிர்மதத்துவத்தை நியதி சமஸ்காரவிதிப்படி ஆப்தவாக்கிய சாப்தப்பிரமாண பரோக்ஷவுணர்

வினால் தெரிசித்து திடஞானமுடையனாய் அபரோக்ஷவுணர் வினால் தெளிவுற்று முடிவில் அனர்த்தநிவர்த்தியென்னும் ஒரு வகையான மோக்ஷத்தையடையப்படுவது.

## வைராக்கியப்பிரகரணம்.

பரமாத்மாவாகிய ஸ்ரீராமன் தனது நித்தியவிபூதிக் கெதிர்த் தட்டாய் அதியல்ப்பமாகத் தோற்றிமறையும் வித்தம் ஆயுள் அகங்கரம் சித்தம் ஆசை தனு பாலியம் எவ்வனம் சுததி வயோதிகம் காலமென்னும் ஏகாதசபேதமான கிரீடாபந்திகளைத் திரணீகரித்து விஷயாக்கினியில்விழுந்தும் வருத்தம் குற்றம் உபாதி சந்தேகம் மோகமென்னும் பஞ்சக்கிலேசவர்ச்சிதராய்த் தாக்கற்றிருக்கும் பரமசாதுக்களி னிச்சயமெதுவோ அதைத்தெளியுகிறபரியந்தம் ஸ்நான தான அன்னபானாதி தேகபோஷண நித்தியநியமாதிகளைச் செய்யேனென்னும் வைராகமௌனமுடையனாய் விஸ்வாமித்திர வசிஷ்டப்பிரபுருதிகள்சந்நிதியில் ஓவியம்போலசைவற்றிருப்பது.

## முமுக்ஷுப்பிரகரணம்.

சுகோபாக்ஞானத்தை நிதரிசனமாக்கி சற்குரு அதிகாரப் பிரயோஜன உபதேசத்தை யுணர்த்தப்படுவது.

சுகோபாக்ஞானம்.—இந்தவிராமனைப்போலப் பூர்வம் வியாச புத்திரனாகிய சுகன் இயற்கைஞானத்தையுடையனாய் மாயையி னுற்பத்தியும் அதனது லயத்தையும் அதற்குமூலகாரணமாயுதயா ஸ்தமின்றிச் சதோதிதமாய்விளங்கிய அதிஷ்டானப்பிர்மத்தையும் யதாப்பிரகாரமறிந்தும் ஜனகபிதாவினிடத்திற்கேட்டும் ஜனக பிரானையாசிரயித்தும் சந்தேகமுழுதும் நிவர்த்திபண்ணிச் சருவ சிரேஷ்டனானதுபோல ஸ்ரீராகவனை விஸ்வாமித்திரமுனீந்திரன் வசிஷ்டகுருவுக்கு மாணாக்கனாக்கி இவனைக் கிருதார்த்தனாக்கவே ண்டுமென்று பிரார்த்திக்கப்படுவது. நிதரிசனம்.— கண்ணுக்குத் தெரியாத செவிசிரவதனத்தைக் கண்ணாடியாய்நின்று கண்ணுக் குத் தோற்றிவைப்பது.

சற்குரு.-மெய்ஞ்ஞானசொரூபத்தில்நின்று ஸ்ரீவிஷ்ணுபகவான் வெளியிட்டு அவனது மனக்கமலத்திலிருந்து பிர்மாவைப்பிறப்பி த்து அவனதுமனோவிகல்பத்தாற் சமஸ்தலோகங்களையுஞ் சிருஷ் டித்து அவ்வுலகம் உஜ்ஜீவித்தற்பொருட்டு வசிஷ்டனாகியவென்னை

லோககுருவாகப்பிறப்பித்து நான் அந்தப்பிர்மாவினால் இதோப
தேசத்தைப்பெற்று அவனதாக்ஞையால் அன்றுமுதற் ஜெம்பு
பத்திற்பிரவேசித்து என்னையாசிரயிப்பவர்களின் அதிகாரனுரூப
மாய்ச் சரிதாதி ஞானாந்தமாக வுபதேசித்துவருகிறேனென்று
ராமனுக்கு வசிஷ்டனுபதேசித்தபடி வால்மீகர் பரத்துவாசனு
குணர்த்தப்படுவது.

அதிகாரி. — சாந்தி விசார சந்தோஷ சாதுசங்க சற்குண
சதுஷ்டயங்களோடு தத்துவஞானத்தை யப்பியசித்து மகத்தான
பேரின்ப மோக்ஷத்தை யடைபவன்.

சாந்தி. — நம்புதல்விஷயத்தில் நல்லவர் தீயவரொன்கின்ற
சருவப்பிராணிகளுக்குந்தாயாய் தேவாமிர்தத்தைப் புசிக்கின்ற
தேவர்களுக்கும் ஸ்ரீகாந்தனுகிய விஷ்ணுதேவுக்கும் எட்டாத
அதிசிரேஷ்டமகிழ்ச்சியைத் தருவதாய் மரணம்வரினும் செல்வம்
வரினும் மரணத்தைத்தருவதாகிய யுத்தம்வரினும் அசையாததாய்
இந்திரியத்துவாரா சுகாசுகவிஷயங்களை யனுபவித்தும் வாட்ட
மகிழ்ச்சியில்லாத சமசித்தமாய் பூர்வஞானிகள் எக்ஞசிலர் முனி
வர் மொய்ம்பர் தூயர் மற்றியாவரிடத்தும் பிரகாசிப்பதாய் ஆரி
யர்க்குரியதாய்ப் பூரியர்க்கரியதாயிருக்கின்ற சாந்தியமுதத்தை
யருந்தி மேலோர்கள் சிறப்பான மோக்ஷத்தைப்பெற்றார்கள் நீயு
மப்படியே சாந்தியாதி சற்குணங்களோடு தத்துவஞானத்தை
யப்பியசித்து சருவசிரேஷ்டமான மோக்ஷத்தைப்பெறுவாயென
நிரூபிப்பது.

விசாரம். — சத்சாஸ்திரங்களாற்றெளிந்த சுத்தபுத்தியினாலே
பூர்த்திசெய்வது கூர்மையாகியபுத்தியினாற் பேரின்பமோட்சத்
தையுணர்த்துவது கொடிதான பவரோகத்துக்கு ஔஷதமாக
விருப்பது கங்குலில்மறையாதது கதிர்க்குமட்காதது காண்டர்க்
கரிய வர்த்தங்கள்முழுமையும் பிரத்தியட்சத்திற்காட்டப்படுவது
தெளிவுபொருந்த நானரிவ்வுலகம்வந்ததெவ்விதம் இந்தப்பிறவி
யாருக்குரியதென வுசாவுதல்செய்வது ஆபத்தாகியவிஷத்துக்கு
ஔஷதமாகவிருந்து நிவர்த்திபண்ணுவது.

சந்தோஷம். — இன்பரசத்தில்முழுகாமல் வந்தபொருளை
யனுபவிப்பது வராப்பொருளையபேட்சித்துத் துன்பப்படாமல்

மகிழ்ச்சியாக்குவது சந்தோஷவமுதத்தை யமையப்பெற்றால் நெடிதானபோகமும் விஷத்தைப்போலுவட்டுவது அழுக்குக்கண்ணாடியிலாநகம்போல் ஆசாமிருதியினால் விவிதவிஷயங்களிற் ருஷியோடுகிறமன திலைலறியப்படாதது சந்தோஷகுணங்களைப்பொருந்திய புருஷோத்தமனை தவேந்திர நரேந்திரர்களையும் வணங்கச்செய்வது.

சாதுசங்கம்.—பிரபஞ்சமாயையைச் செயிப்பதற்கு மற்றைய உபாயங்களைப்போலத் தவராமல் யெவ்வகைப்பட்ட முமூட்சுக்களுக்குஞ் சற்றேனுந்தப்பாத சகாயமாகவிருப்பது மிகவும்அபூர்த்தியைப்பூர்த்திபண்ணுவது ஆபத்தைச்சம்பத்தாக்குவது அசுபத்தைச்சுபமாக்குவது சாதுசங்கமென்கின்ற கெங்காஜலத்திற்படிந்தவர்க்கு எக்ஞ தான தபோ தீர்த்தமுதலிய சருவபுண்ணியகிருதப் பிரயோஜனரூபமாயிருந்து சமஸ்தமானபாவங்களையும்நிவர்த்திசெய்வது இடராகியபந்தத்தை விசர்ச்சனம்பண்ணுவது சருவாத்மாக்களுக்கும் இனிமையாய்ப்பிறவிக்கடலைத் தாண்டுபவர்க்குத் தெப்பமாகவிருப்பது இவ்வகைப்பட்ட ஞானபூரணுளாகிய சாதுசங்கத்தை இவ்விதம் அவ்விதமெனயோசிக்காமற் சருவவிதங்களாலும் ஆசிரயிக்கவேண்டுமென நிரூபிப்பது.

பிரயோஜனம். — சாந்தியாதி சற்குணங்களோடு பொருந்திய ஞானந் தந்திரியுமிசையும்போலப் பிரிவற்று குளமும்மலரும்போல விகசித்து மிகவும் அற்புதமாகவிருக்கும் விரக்தியினாற்றனிமையாக அப்பியசிக்கிற ஞானம் ஒருவகைப்பிரயோஜனத்தையிழந்துபோகும் தத்துவஞானத்தையும் சாந்தியாதி சற்குணங்களையும் ஒருமையாகவப்பியசித்து அறம் பொருள் இன்பங் கீர்த்தியென்கின்ற இம்மைப்பிரயோஜனமும் சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்கின்ற நித்தியரூபமான மறுமைப்பிரயோஜனமும் பெற்று நிர்மலமனதினாற் பேரின்பமோட்சத்தைப் பெறுவதே ஸ்ரீராமா உனக்குத்தகுதியென நிரூபிப்பது.

## உபதேசம்.

புருஷப்பிரயெத்தனம் அநகப்பிராப்தி லோகரட்சகம் அதிகாரசமத்துவம் உபசாந்தம் மௌனநிச்சயம் ஆசீர்வாதம் பரமபதமென்னும் அஷ்டபேதமாக நிரூபிக்கப்படுவது. புருஷப்பிர

யெத்தனம். – அசாஸ்திரீகமான அசுத்தவாசனையை நிவர்த்தித்து சாஸ்திரகமான சுத்தவாசனையை நாளுக்குநாளபிவிர்த்திபண்ணு வது. அநகப்பிராப்தி.-மேலாம்பதமாகிய பரமசுபாவத்தைக் கல கமறத்தெளிந்து பிர்மோகம் ஆத்மோகம் தேகோகமென்னும் சுத்தவசுத்தவகங்கரமுழுதும் விடுபட்டிருப்பது. லோகரட்சகம். தேயத்தியாகபரனாய் நீதிமார்க்கத்தில்நின்று நிக்கிரகபாலனங் களைச் செய்யப்படுவது. அதிகாரசமத்துவம். — இதயசீதளத் தால்பற்றுதல் விடுதலிரண்டையு மனத்தின்றொழிலெனக்கண்ட தேயத்தியாகிகளையும் ஞேயத்தியாகிகளையும் சமானத்துவமா விதிக்கப்படுவது. உபசாந்தம். — பயனிலி வந்திதமென்கின்ற பழ றறுதியைத்தெளிந்து சர்வாத்மப்பிரியனாய்ப் பிரமாணநிதமா நின்று அளவைக்களவையாகக் காட்டப்படுவது. மௌனநிச்ச யம்.—சருவமும் பிர்மமயமென்னும் அழுத்தத்தால் நனவிற்சுழு தியைப்பொருந்தி விவிதபரிச்சேதத்தை நிவர்த்தித்திருப்பது ஆசீர்வாதம். – பிர்மநிச்சயத்தையுணர்த்தி சிவபெருமான் முதலிய தேவர்களிடத்தும் நாரதர்முதலான ரிஷிகளிடத்தும் விளங்கிய நிச்சிதசுவாநுபவமெதுவோ அதுவே ஸ்ரீராமா உனக்குமுண்டா கக்கடவதென்று ஸ்ரீவசிஷ்டகுருவினால் வாழ்த்தப்படுவது. பரம பதம். — உற்பத்தி ஸ்திதி உபசாந்த நிருவாணகாரண மனமென் பதைச் சுவாநுபவரூபமாய்த்தெளிந்து ஞானபூமியின் மார்க்க மாய்த் துரியாதீதவாழ்வைப்பெற்றுக் கிருதகிருத்தியனாகத்தடை யற்று விளங்குவது.

## உற்பத்திப்பிரகரணம்.

விமல வாகிய சீவ பாவனா தீர்க்க சலன சூனிய விசித்திர மென்னுந் தனுவஷ்டரூபத்தை ஆகாசசு லீலா கற்கஷி ஐந்தவ கிருத்திமேந்திர சித்த பால சாம்பரிகனென்னும் அஷ்டவிதபுரா க்ஞானத்தால் நிதரிசனமாக்கி அஞ்ஞானபூமி ஞானபூமிமார்க்க மாய் சுழுத்திநிலையைப்பொருந்திய சேதனாசேதனருடைய உற் பவபேதத்தை யுணர்த்தப்படுவது.

விமலதனு. — மெஞ்ஞானசொரூபத்தில்நின்று கரசரணாதி சருவாவயவ சகிதமாய் வெளியிட்டுக் கருமத்தொடக்கில்லாமை யால் மெஞ்ஞானமயமாகப் பிரகாசிப்பது. வாகியதனு. — யோக

பூர்த்தியினாற் பௌதிகதேகத்தை விசர்ச்சித்துப் பத்துப் பன்னிரண்டு பதினாறென்னும் அங்குலவளவையுடையதாய் சுவர்ணச் சாயலாய்ச் சாந்தியாதி சற்குணங்களைப்பொருந்தி ஆனந்தானுபவம் பண்ணுதற்குச் சாதனமாகவிருப்பது. சிவதனு.—அணுரூபமாகச்சிறுத்து ஆசையபிமானாதிகளாற் பெருத்துப் பிரியமோதப் பிரமோதரூபமாய்ச் சோதிக்கப்படுவது. பாவனாதனு.—தனதிஷ்டமான தேவினிடத்தி லனவரதபாவனையைப்பண்ணிப் பாவனாதீர்க்கந்தால் அந்தத்தேவரூபத்தைப்பெற்று அதற்குரிய தேவகிருத்தியத்தை நடத்தப்படுவது. தீர்க்கதனு.— உள்ளமானது சித்தைப் பாவித்தால் சித்தாயுஞ் சடத்தைப்பாவித்தால் சடமாயும் அழுத்த நிச்சிதமாய் எத்தைப்பாவிக்கிறதோ அத்தையே யடையப்படுவது. சலனதனு.— ஒன்றினுமழுத்தமில்லாமல் சரீராந்தத்தில்ச் சிந்தித்தரூபத்தைப்பெற்று சற்றேனும் நிலையில்லாமற் குலாலசக்கரம்போலக் கீழதுமேலது மேலதுகீழதாய்ச் சுழன்று திரிவது. சூனியதனு.—இதாகிதங்களைத்தெரியாமற் சுயபுத்தியின்றி விவேகசூனியனாய் அந்தக்ஷணம் ருசிகரமாம்படி பின்னீடுவருத்தத்துக்கேதுவா யொருவர்சொற்புத்தியைக் கொண்டடையப்படுவது.

விசித்திரதனு.— நாசம் உற்பத்தி மூர்ச்சை நனவு கனவு சுழுத்தியென்னும் ஆறவஸ்தைகளும் ஒன்றிலொன்று கலக்காமல் தனித்தனியே யனுபவிக்கற்கேதுவாய வர்த்தமானசரீரத்தை மரண மூர்ச்சை யோக வபேக்ஷை சுழுத்தியாதியினா லிவ்விடத்திலிருந்திப்போட்டு மானதக்கிரீடையினா லனவற்றசரீரங்களை எடுத்துக்கொண்டு கனவாதியானதையும் ஒருமையாக்கிக் கணத்தைக் கல்பமாய்க் கல்பத்தைக் கணமாய் ஒளியையிருளாய் இருளையொளியாய்த் துன்பத்தையின்பமாய் இன்பத்தைத் துன்பமாய் இன்னம்பலவாறான லீலைகளை நடத்தி வர்த்தமானசரீரத்திற் பிரவேசித்தெழுப்பிப் பகவன்மாயை இத்தன்மையதென்றுணர்த்தி அவாச்சியரூபமாய் அகடிதகடித சமர்த்தையாய்ப் பகவதாக்ஞையாற்பிராப்தமாகாததையும் பிராப்தமாகச்செய்கின்றமாயாரூபம்.

## ஆகாசசன் கதை.

கல்பாதியில் மெஞ்ஞானசொரூபத்தில்நின்று கரசரணாதி சர்வாவயவசகிதமாய்வெளிப்பட்டு அயன் மால் சங்கரன் இந்திரன்

அருக்கன் சதாசிவன் முதலான விவிதமூர்த்திகளாகப் பிரிந்து லோகோபகாரார்த்தம் சிருஷ்டியாதி கிருத்தியங்களைச்செய்து கல்பாந்தத்தி லவைபாவையும் நிவர்த்தித்து உபசாந்த சின்மயராகவிளங்கி இப்படியே கல்பகல்பங்கள்தோறும் திருவிளையாடல்களைச் செய்துகொண்டிருக்கின்ற பிர்மாதிகடவுளர் சரித்திரத்தை விமலதனுவுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## லீலை கதை.

லீலையென்னும் ஒரு ஸ்ரீ பத்மனென்னும் ஓரரசனுக்குப்பாரிகையாகி சரஸ்வதிகிருபையினால் இறந்துபோன பத்மனை தன் புருஷனுடைய சவசரீரத்தைப் பத்திரப்படுத்தி யோகமகிமையினாலாதிபௌதிக சரீரத்தை விசர்ச்சித்துப் பத்தங்குலவளவையுடைய ஆதிவாகியதனுவை எடுத்துக்கொண்டு சரஸ்வதிதேவியினோடு இந்தவண்டத்தைத்தாண்டிப் பத்மனுந்தானும் வசிஷ்டனருந்ததியாகவிருந்த பூர்வஜன்ம புத்திர பௌத்திராதிகளைத் திருப்திபண்ணி வர்த்தமானத்திற் பத்மனனவன் றன்னைப்பிரிந்து புதிய லீலையோடு விரோதவரசனை பௌஷீகஜென்மத்தைத்தெரிசித்து அந்தவிரோதனுவியைக்கொணர்ந்து பத்மசரீரத்திற்சேர்ப்பித்துப் பழையலீலையாகியதானும் பத்மவரசனும் புதியலீலையும் சரஸ்வதிதேவி கடாக்ஷத்தால் எண்பதினாயிரவருஷம் சீவன்முத்தர்களாகவிருந்து விதேகமுத்தியைப் பெற்றார்களென்கின்ற திவ்வியசரித்திரத்தை ஆதிவாகியதனுவுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## கற்கஷி கதை.

கற்கஷியென்கின்ற ஓரரக்கி உதராக்கினிக்கிச் சகிக்கமாட்டாமல் பிர்மாவின் வரப்பிரசாதத்தால் விடூசிகாரூபமான ஓர்சீவதனுவைப்பெற்றுப் பாதகருடற்குட்பிரவேசித்து அதனதுசாரசத்தையைச்சுவைத்தருந்தி அருவிருப்புடையளாய் ஓரிடத்திற்போய்த் தனிமையாகவிருந்து தபோமகிமையினாற் சமஸ்தபாவங்களையும் நிவர்த்தித்துக் கரணபரிசுத்தமுடையளாய் நிருவிகற்பசமாதியைப்பொருந்திபோதககுருவாகிய பிர்மாவின்ஆக்ஞாவிதிப்படிசகஜானுபவத்துக்குவெளியிட்டு அரக்கர்குலத்தொழிலாகிய நரமாம்சாதிகளை விருப்புவெறுப்பில்லளாய் வர்த்தமானத்திற் கிட்டியதைப் புசித்து கிருததலைவனை ஓரரசனு மமைச்சனுமெதிரிட அவர்களை

அறிவிலரோ அறிவுளரோவென் றுராய்தற்பொருட்டு லக்ஷியபிர் மத்தைச் சிலலக்ஷண சமிக்ஞைகளால் வினவ மந்திரியரசனிருவரு மதற்குச் சமான உத்தரஞ்சொல்லப் பரஸ்பரமன்புடையர்களா யரசனுமரக்கியு மெப்போதும்பிரியாதகட்பாறென்கின்றஅரக்கி சரித்திரத்தைச் சிவதனுவுக்கு நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

அரக்கிவினா.-பரமா யணுவாய்ஆகாயமாய் நிராகாயமாய் உளதா யிலதாய்ச் சரிப்பதாய்ச் சரியாததாய் நிற்பதாய் நில்லாததாய்ச் சித்தா யசித்தாய்ச் சித்திரிகமா யநன்னியமாய் அபின்னமா யத்து வயமாகவிருக்கின்ற சோடச லக்ஷணங்களுக்கும் லக்ஷியமாகிய பொருளியாதென்று கேட்கப்படுவது.

மந்திரியுத்தரம்.—பலவாறான அண்டசராசரங்க ளனைத்தி னுக்குள்ளும் ஏகரூபமாக நிலைபெற்றிருப்பது: பரம்—அவ்வண்ட சராசரங்களனைத்தையுந் தோற்றிவிரித்தொடுக்குதற்கு மூலகார ணமாயிருப்பது: அணு—பரிச்சேதரகிதமாயெல்லையற்றிருப்பது: ஆகாயம்—கேவலஞ்சாக்ஷிமாத்திரமாய்ப் பிரகாசிப்பது: நிராகா யம்-சத்பாவத்தால்: உள்ளது.-சுட்டியறியக்கூடாததால்: இல்லது.- அனந்தவஸ்துக்களோடுங்கலந்திருப்பதனால்: சரிப்பது. — வேறி டமில்லாது சருவபரிபூரணமாயிருப்பதனால்: சரியாதது. — ஜக சிவபரமுழுதுந் தன்மயமாகவிளங்குவதால்: நிற்பது.—அவையா வுக்கும் விலக்ஷணமாய் விருத்திபேதத்தா லறியக்கூடாததால்: நில்லாதது.—சொச்சமாய்ப்பிரகாசிப்பதனால்: சித்து.-எதிரிட்டறி யக்கூடாததால்: அசித்து.-ஜகசிவபரமென்னுஞ் சித்திரத்தை சந்நி திமாத்திரத்தா லெழுதப்படுவதால்: சித்திரிகம்.—அன்னியமாகக் காணப்படாது ஜகசிவபரமுழுதுந் தனதுபிரகாசமாக விளங்குவ தால்: அநன்னியம்.-நீரும்நெகிழ்ச்சியும்போலப் பிரிவற்றிருப்பத னால்: அபின்னம். — நீநானென்கின்றவிருமையும் பிர்மவிலாசத்தி லொருமையாகக் காணப்படுவதாலத்துவயமென்னும் அரக்கிவினா விய சோடசலக்ஷணங்களுக்கும் பொருள்விரித்து அதனதுலக்ஷிய ப்பொருளாகிய பரப்பிர்மசொரூபத்தை நிரூபிக்கப்படுவது.

அரசனுத்தரம்.—லக்ஷியப்பொருளாகிய அவ்வதீதப்பிர்மத் தைப்போதகரூபத்தாற் சிற்பரந் தற்பரமென் றிருவகையாகப் பிரித்தும் பிரித்தறியக்கூடாத அவாச்சியப் பொருளென்றுணர்த்

தப்படுவது. அவற்றுள். சிற்பரம்.— சடிந்திரியங்களுக்கெட்டா ததாய்ப் பிரத்தியேகாத்மாவாகவிளங்கிய சின்மாத்திரசொரூபம்.

தற்பரம்.— பிர்மப்பிராப்தி திதிலயோற்பவம் வாக்கியநிஷ்டை லக்ஷியாதீதம் மத்தியகதம் சன்மாத்திரம் திருவிளையாட்டம் பரிபூரணமென்னும் அஷ்டவிதமாக நிரூபிக்கப்படுவது.—சங்கற்ப விகற்பங்களைக் கைவிடுவது: பிர்மப்பிராப்தி.—நித்தியமாகின்று சங்கற்பசத்தையினாற் ஜீவேஸ்வரஜகங்களைத் தோற்றுவித்தொடுக்குவது: திதிலயோற்பவம்.—வேதவேதார்த்தங்களை உறுதியிடுவது: வாக்கியநிஷ்டை.—அனுபூதிவஸ்துவாய்விளங்குவது: லக்ஷியாதீதம்.— சாக்ஷிபூதமாகநின்று சடாசடங்களை விளக்குவிப்பது: மத்யகதம்.—அவ்விரண்டுக்குந் தாரகமாயிருப்பது: சன்மாத்திரம்.—மகாமனத்தினாற் சராசரங்களைப்பிறப்பித்து அதனோடுகலந்திருப்பது: திருவிளையாட்டம்.— ஜகத்துருவாய்நின்றும் புராதன ஒருமையிற் பிரிவற்றிருப்பது: பரிபூரணம்.

## அயிந்தவர்கதை.

இந்துபுத்திரராகிய பத்துப்பேர் பிர்மாவினுருவத்தைப் பாவனைபண்ணி அந்தப்பாவனையழுத்தத்தால் இந்த தேகத்தைக் கட்டோடுமறந்து பாவனாரூபமானது பிரத்தியக்ஷமாகி பத்துப் பேர்களும் பத்துப்பிர்மாவாகவிருந்து பத்து அண்டத்தைச் சிருஷ்டித்தார்களென்கின்ற அயிந்தவர்சரித்திரத்தைப் பாவனை அறிவுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுகிறது.

## கிருத்திமேந்திரன்கதை.

இந்திரத்துய்மனென்னும் ஓரரசனுடைய பாரிகை அகலிகையென்னும் ஒருஸ்ரீ வஞ்சவிந்திரனென்கின்ற ஒருதூர்த்தனோடு கூடி மானாவமானங்களுக்கஞ்சாமல் பலவாறான சிக்ஷைகளை இராசனாலேசெய்வித்தும் பயப்படாமல் பரஸ்பரப்பிரீதியைச் சகிற்றேனுமாறிருக்கின்ற சிற்றின்பவழுத்தத்தை நீக்குதலுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுகிறது.

## சித்தத்தின்கதை.

சுவர்க்கமத்தியபாதாளமென்கின்ற மூன்றுலோகங்களும் மூன்றுவனங்களாயும் அதிற்சஞ்சரிக்கின்றமனதை நேத்திர அம்புகள் நினைவுவடிவங்க ளநேகமாகவுடைய புருஷனையும் உத்தமன் மத்தி

மன் அதமன் சருவானந்தியென்பதே அப்புருடனுக்குத் தான பேதத்தால் விதிக்கின்ற நாமங்களாயும் அங்கத்தறைதல் பரந்தோடல் கிணற்றில்வீழ்தல் காட்டிற்பதைத்தல் வனத்தில்மகிழ்தல் பலதாருசுழற்றல் தகைதற்கிளைத்தல் தன்னைநோக்குதல் அழுதல் சிரித்தல் மகிழ்தலொருப்படலென்கின்ற பன்னிரண்டு லக்ஷணங்களும் அதனது சனவியாபாரங்களாயும் விஸ்தரித்திருக்கின்ற மானதசரித்திரத்தைச் சனதனுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

விவிதகற்பனைகளால் மொத்துண்டுழல்வது: அங்கத்தறைதல்.- வாசனாசத்தினுற் சிதறிப்படுவது: பரந்தோடல்.—தீயவினையினால் நரகத்திழிவது: கிணற்றில்வீழ்தல்.—தாபத்திரயத்தினால் வருந்த முறுவது: காட்டிற்பதைத்தல்.—சுவர்க்கசுகியாய்ச் சந்தோஷிப்பது: வனத்தில்மகிழ்தல்.—சுவர்க்க மத்திய பாதாளவுலகங்களில் மாறிமாறிச்சுழற்றுவது: பலதாருசுழற்றல். — விவேகதண்டத்தினால் நடிக்கப்படுவது: தகைதற்கிளைத்தல்.-ஆத்மாசுகதுக்கபாத்தியமென்னத் தெரிந்துகொள்வது: தன்னைநோக்குதல்.—ஆசையைச் சிதைத்தற்காகத் துன்புறுவது: அழுதல்.—ஏகானந்தத்திற் சந்தோஷிப்பது: சிரித்தல்.—சருவசாக்ஷியானந்திப்பது: மகிழ்தல்.—மகாமனத்தினால் விஸ்ராந்தியடைவது: ஒருப்படல்.

## பாலன்கதை.

மெய்யறிவில்லாத ஒருசிறுவன் விருப்புற்றுத்தாயே நீயெனக்கொருகதைசொல்லாயென்றுகேட்க அவள்பித்தையாகிய ஒரு கதையைச்சொல்லுவாள். ஒருராசனுக்கு மூன்றுகுமாரர்களுண்டு அதிலிருவர்பிறக்கவில்லை ஒருவன் கருவிலுமில்லை இம்மூவருமாகாயவனத்திற்சென்று கற்றருபலாதிகளைப் பூரணமாகப்புசித்துத் திரும்பும்வழியில் மூன்றுநதிகளைக்கண்டு அதிலிரண்டு ஜலமில்லாததாயும் ஒன்றுவெண்மணலாயுமிருக்கின்ற இம்மூன்றுநதியிலும் மூவருஞ்ஸ்நானபானங்களைச்செய்து இனிமேலுண்டாகப்போகிற நகரத்தைச்சேர்ந்து மூன்றுவீட்டைக்கண்டு அதிலிரண்டில்லாததாயும் ஒன்றுசுத்துச்சுவர் மேல்மரமில்லாததாயுமிருக்கின்ற இம்மூன்றுவீட்டில் மூவருங்குடியேறி மூன்றுகனபாத்திரத்தைக் கண்டு இரண்டோடாயும் ஒன்றுதூளியாயுமிருக்கின்ற இம்மூன்று

பாத்திரத்திலும் மூன்றுதுரோணத்தில் மூன்றுதுரோணம் நீங்கிய மிதவரிசியைப்போட்டுச் சமைத்து வாயில்லாத அளவற்ற பிராமணருக்குப் படைத்து அவர்கள்பூரணமாகச்சாப்பிட்டு மிஞ்சின பிரசாதத்தை மூவரும்புசித்து வேட்டையாடிக்கொண்டவ்விடத்திலிருக்கின்றார்களென்றுரைத்த அசத்தியகதையைச் சத்தியமாக நம்பின பாலன்சரிதத்தைச் சூனியதனுவுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## சாம்பரீகன்கதை.

சம்பரமாயையைக்கற்ற இந்திரஜாலனை ஒருசித்தன் ஆந்தரரூபமாக இராஜசூயயாகத்தைப்பூர்த்திபண்ணிய லவணராசனை தனதுசம்பரமாயையால் மூர்ச்சிக்கப்பண்ணஅந்தவிராசன்மானதரூபமாய் இந்திரதுரகத்திலேறிக்கொண்டு வெகுதூரத்திற்போய் கொடியானது கழுத்திற்பிணிக்க குதிரையானது விட்டிட்டோட அக்கொடியையறுத்துக் கீழேயிறங்கி பசிப்பிணிக்காற்றாமல் அப்பசியைநீக்கிய நீசகன்னிகையை விவாகம்பண்ணி அவள்வயிற்றிற் புத்திரர்களைப்பெற்று பஞ்சங்கருப்புக்காற்றாமல் அந்தநீசச்சேரியைவிட்டு மற்றொருதேசத்திற்குபோக நடுவழியில் பசியால்வருந்திப் பாரியாபுத்திரர்கள் சோகத்துக்காற்றாமல் காடாக்கினியிற்பிரவேசிக்கப் பதைப்புடையனாய் லவணசரீரத்தை யுயிற்பித்தெழுந்து மாயாமகிமையைத் தானுந்தெரிசித்து தன்னையாசிரயிப்பவர்களுக்குந்தெரிவித்தானென்கின்ற லவணசரிதத்தை விசித்திரதனுவுக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## அஞ்ஞானபூமி.

வித்துநனவு நனவு மகாநனவு சாக்கிரசொப்பனம் சொப்பனம் சொப்பனசாக்கிரம் சுழுத்தியென் றேழுபேதமாயுணர்த்தப்படுவது அவற்றுள். வித்துநனவு.--சித்தசீவாதிகளுண்டாவதற்கு மூலபீஜமாய் ஓரறிவு சித்திலேநின்றுதயமாவது. நனவு.-அநகமாய் சித்திலேநின்றுதயமான அவ்வறிவு இவனென் இதுவெனதென்ன பண்டில்லாதபேதத்தைச் சூட்சுமமாக வடையப்படுவது. மகாநனவு.— இவனினிது வெனதென்னும் வாசனையானது தடிப்புற்று சித்தசீவாதிகளாய்ப் பரிணமித்து ஜென்மஜென்மங்கள்

தோறும் அகமமதுருவை யபிவிருத்திபண்ணுவது. சாக்கிரசொப்பனம்.—சித்தம் அறிந்ததாகினும் அறியாததாகினும் அழுத்தமுறத் தானதுவாக வழுந்திநின்று சாக்கிரத்தில் மனோராச்சியஞ்செய்வது. சொப்பனம்.-மித்தையாய்ச் சாக்கிரத்தில் பார்த்ததையும்பாராததையுங் கல்பித்துக்கொண்டு நித்திரிக்கும்போது பயனின்றி வீணாக மனோராச்சியஞ்செய்வது. சொப்பனசாக்கிரம்.—நான்குவகைப்படும். முதலாவது: அற்பகால சொப்பனத்தில் அநேககாலச்செய்கையைக்கண்டு விழித்து முற்பட சொப்பனத்திற்கண்டபடியே சாக்கிரத்தில் சிந்திக்கப்படுவது. இரண்டாவது: முன்னே சொப்பனமாகக்கண்டதை நெடுங்காலஞ்சென்றபிறகு சாக்கிரத்தில்பார்க்கப்படுவது.மூன்றாவது:சொப்பனத்திற்கண்ட பொருளைமறந்து நெங்காலஞ்சென்று அதனைச்சாக்கிரத்திலுணர்ந்தவிடத்து முன்கண்டசொப்பனம் ஞாபகப்படுவது. நான்காவது: விழித்த அந்தக்ஷணம் சொப்பனத்திற்கண்டபடியே சாக்கிரத்தில் பார்க்கப்படுவது. சுழுத்தி.—சடாகாரபீஜமாய் அறுவகையவஸ்தையும் நீங்கியசீவன் இனிமேல்த் துன்பத்தையடைதற்கு மூலமாயொடுங்கிநிற்பது.

## ஞானபூமி.

ஏழுபேதமாகச்சொல்லும் ஞானபூமியில்முற்படச்சொன்ன மூன்றுபூமிக்கி சாக்கிரம் நாலாம்பூமிக்கி சொப்பனம் ஐந்தாம்பூமிக்கி சுழுத்தி ஆறும்பூமிக்கித் துரியம் ஏழாம்பூமிக்கித் துரியாதீதமென்னப் பெயரிட்டு அந்தந்தப்பூமியில் வசிப்பவருடைய நிஷ்டாபேதத்தை யனுபவரூபமா யுணர்த்தப்படுவது.

முதல்ப்பூமியநுபவம்.-சதாஉள்ளே உதாரத்தொழிலை முயற்சித்துச் சந்தோஷிப்பன் கிராமிய கருமங்களை அருவிருப்பன் விதானகருமங்களை விருப்பொடுசெய்வன் தான்செய்த சற்கருமங்களை டம்பநிமித்தம் பிறருக்குச்சொல்லாதிருப்பன் யாவரும்வெறுவாமல் இதுதருமம் இதுதருமசூட்சுமமென்பதைத் தெரிந்து மிருதுவாகக் கருமங்களைச்செய்வன் பாவத்துக்கஞ்சுவன் பந்திக்கும்போகத்தைவெறுப்பன் நேயமாய் நயமாய் நிபுணமாய் இடம்பொழுதுக்கேற்க வசனிப்பன் இத்தியாதிகுணங்களோடு முதற்பூமியையடைந்திருக்கும் யோகி திரிகரணமுமொத்து சருவசிவோ

ஷ்டரான பரமசாதுக்களினடிப்பிரகே தொடர்ந்து மேலானசத் சாஸ்திரங்களை விருப்பொடுகொண்டுவந்து அப்பியசித்து பிறவித் துன்பத்தைப்போக்கும் விசாரம்படைத்து இவனே ஆரியனும் முழுதுபூமிக்கும் அதிகாரியாவனென்றுணர்த்துவது.

இரண்டாம்பூமியநுபவம்.— விருத்திப்பொருளையுணர்க்கும் பண்டிதசிரோஷ்டரை யாசிரயித்து சுருதி ஸ்மிருதி ஆசார தாரணை தியாநுதிசத்கருமங்களைக்கேட்பன் பதார்த்தப்பிரிவைத்தெரிந்து இதுசெய்காரியம் இதுதவிர்காரியமென்பதறிவன் மதம் மாச்சரியம் அபிமானம் உலோபமுதலிய துற்குணங்கள் முன்னிலையுற்றி யொருகால்வரினும் அதைஅல்பமாகவிசர்ச்சிப்பன். இத்தியாதி குணங்களோடு இரண்டாம்பூமியை யடைந்தயோகி சற்குருசாஸ்திரசாதுக்களால் சர்வசாஸ்திரார்த்தசாரமாயும் அறியத்தக்கதாயுமிருக்கின்ற ரகசியார்த்தங்களைத் தெரிந்து அவையாவுக்குமுடிவான நிச்சயத்தைக் கலக்கமறத் தெளிவனென்றுணர்த்துவது.

மூன்றாம்பூமியநுபவம்.-சாஸ்திரார்த்தஅநுஷ்டானம் மெய்ஞ்ஞானகதாசிரவணம் சிலாசைலவாசம்அரண்யப்பிரவேசம் ஏகாடனவிரதம் சத்சாஸ்திரபரிசயம் சாமான்யம் உபசாமான்யம் சேஷ்டம் உபசேஷ்டமென்னும் பற்றின்மைநிஷ்டை இத்தியாதி லக்ஷணங்களால் மூன்றாம்பூமியை யடைந்தயோகியின் [illegible] மனம் நசித்து மனதிற்குரிய சுத்தசத்துவாதி நிர்மலகுணங்கள் அபிவிர்த்தியாகி வாஸ்தவமாக வஸ்துநோக்க முண்டாகப்படுவது.

சாமான்யப்பற்றின்மை.-பொருள்தனிச்செல்வமும் போகங்கள்புசிப்பவனுந் தெளியுஞ்சிஷ்யனும் சொல்லுங்குருவுங் காலமும் வர்த்தமானத்திலனுபவித்தற்கெதிரிட்ட சுகாசுகதொந்தமுழுதும் பழவினைப்பகுதியால்வரும் ஆனதால் சத்கருமத்தைப்பண்ணி அனுக்கிரகதேவுக்கற்பிதமாகவமைக்கின்ற கர்த்தா நானெப்படியாவேனென்று சுவாகங்காரத்தை நிவர்த்திக்கப்படுவது.

உபசாமான்யப்பற்றின்மை.—சுபேக்ஷாமுதிர்ச்சியினுல் விசாரமுதித்து அந்தவிசாரணைநீர்க்கத்தால் சிரவிந்த வாக்கியார்த்த லக்ஷியசொருபஅழுத்தமனமுடைய யோகிக்கு போகப்பரப்பெல்லாம் விஷமாய் செல்வமுழுதும் ஆபத்துக்குத்தானமாய் மதிப்

மில்லாதுகழிந்து அகங்காரபரிச்சேதமுழுதும் வர்ச்சித்து சித்திர விளக்குக்கொப்பாகி விண்ணில்வெறுங்குடம்போல சமுத்திரத்தில் நிறைகுடம்போல சர்வபரிபூரணனாய் உள்ளிலும் புறம்பிலும் நிறைந்திருப்பன்.

ஏழாம்பூமியனுபவம்.-இல்லதாயும் உள்ளதாயும் ஆறாம்பூமியில் நிற்கின்ற சீவன்முத்தனான இவனே யேழாம்பூமியையடைவன் இந்தயேழாம்பூமியே தேகமில்லாத விதேகமுத்தி இந்த சாந்தக் கிராகியமான விதேகமுத்தியே வசனித்தற்கெட்டாது ஞானபூமியின் முடிவாய்விளங்கிய துரியாதீதநிலையென் றுணர்த்தப்படுவது.

## ஸ்திதிப்பிரகரணம்.

கோர மூட சாந்த சுத்த சுபாவமென்னும் விருத்திபேதத்தால் பரிச்சேதிக்கும் ராசத தாமத சத்துவ புவன சகஜமென்னும் ஸ்திதிபஞ்சகரூபத்தை சுக்கிர தாம வீம தாரூர கசனென்னும் பஞ்சவித உபாக்ஞானத்தால் நிதரிசனமாக்கி சத்துவமூர்த்திகளின் அற்புதகுணங்களை சத்துவாதி பதினேழுலக்ஷணங்களாலுணர்த்தப்படுவது. அவற்றுள். ராசதஸ்திதி.-சலனரூபமாய் அநேகஜனனபரம்பரையை யடைதற்கேதுவாய் விவிதவிஷயங்களிற் றுவியோடுகிற கோரவிருத்தி. தாமதஸ்திதி.—சடத்துவமிருதியினாற் சுழுத்தியைப்போலப் பிரக்ஞையற்றுத் தாவரஜனனத்தை யடைதற்கேதுவாய மூடவிருத்தி. சத்துவஸ்திதி.—சுகரூபமாய்ச் சீலரூபகுணவிலாசாதிகளைப்பொருந்தி ஞானநிகமாகவிருக்கின்ற சாந்தவிருத்தி.

புவனஸ்திதி.—சேர சோழ பாண்டியாதி அன்பத்தாறு தேசங்களோடுகூடியது ஒருகண்டம், பரதகண்டமாதியாக ஒன்பதுகண்டங்களோடுகூடியது ஒருதீவு, ஜம்புதீவுமுதலான ஏழு தீவோடுகூடியது ஒருலோகம், பூலோக மாதியாகப் பதினான்கு லோகங்களோடுகூடியது ஒரு அண்டம், பிரமாண்டநீதமான சருவாண்டபந்திகளையும் பாகியரூபத்திற்றொகுத்து நிற்பது விராட்டுருவம், அவ்வண்டசராசரங்கள்முழுமையும் ஆந்தரரூபமாய் கர்ப்பவாசத்தி லடக்கியிருப்பது இரண்யகற்பம், பாகியாந்தரங்களைப் பீஜரூபமாய் கிரகித்திருப்பது அவ்வியாகிருதம், வெளிப்பட்டுச்

சிருஷ்டிக்குவராத அளவற்றசீவர்களை சூனியாகிருதியாக அடக்கி வைத்திருப்பது அவ்வியக்தம், ஈஸ்வரதிருஷ்டியினால் அவ்வியக்தத்தில்நின்று மகதாதிவிகாரங்களைப்பிறப்பித்தொடுக்குவது காலதத்துவம், தத்தங்கருமானுரூபமாய்க் காலதத்துவவழியாகத் தனுவண்டபுவனபோகாதிகளைப்பெற்றுச் சுகிதுக்கிகளாய்மாறிமாறிச் சுழன்றுதிரிபவர் சீவர்கள், சீவர்களிடத்துக்காருண்யமிகுதியினால் திதி லயோற்பவாதிகளைச்செய்து அவற்றோடு பந்தப்படாமல் விலக்ஷணவிக்கிரகயுக்தனாக விளங்குபவன் ஈஸ்வரன், அதிஷ்டானமான பிர்மத்தையும் ஆரோபிதமான ஜகசீவபரத்தையும் ஆசிரயிப்பவர்க்கு மத்தியஸ்தனாய் நின்று விளக்கிவைப்பவன் சற்குரு, காரியகாரண பேதவபேதமுழுமையும் விழுங்கி அவாங்மனோகோசரமாக எல்லையற்றிருப்பது பிர்மமென்றும் ஆதியோடந்தமாயுணரப்படுவது.

சகஜஸ்திதி.—அதீதம் சுத்தம் அபின்னம் சருவசாக்ஷி பரப்பிர்மம் சருவானந்தம் சருவப்பிரகாசம் சருவவியாபகம் சருவசூனியம் விராடம் விஸ்வமென்கின்ற ஏகாதச சொரூபத்தையும் ஆரோகணரூபத்தாலபேதமாயும் அவரோகணரூபத்தால் பேதமாயும் பேதவபேத வபேதபேதமாய் மாறிமாறித்தெரிசித்து சருவமும் பிர்மமயமாய்த்தெளிந்து பிர்மரசமாயனுபவிக்கப்படுவது.

## சுக்கிரன்கதை.

தபோநிஷ்டனாகவிருக்கின்ற பிதாவுக்குச் சிசுருஷைபண்ணிக்கொண்டிருந்த பிருகுமுனிபுத்திரனான சுக்கிரன் ரம்பை யூர்வசி முதலான தேவஸ்திரீகளைக்கண்ணுக்குத்தோற்றக்கண்டு அவர்களிடத்து அதிமோகியாய் இந்தசரீரத்தை விசர்ச்சித்து சுவர்க்கலோகத்திற்சென்று திவ்வியதேகத்தை யுடையனாய்த் தேவஸ்திரீகளோடு கிரீடித்து புண்ணியக்ஷயத்தாற் சுவர்க்கபோகத்தை விசர்ச்சித்து அதோமுகப்பிரவர்த்தனாய்ப் பனியாய் நெல்லாய் அரிசியாய் அன்னமாய் ரசமாய்ச் சுக்கிலமாய்க் கருவா யுயிராய்ப் பாலனாய்க் குமாரனாய்க் கிழவனாய் மரணமாய்த் தேவனாய் நரகனாய் மனிதனாய் ஜனனமாய் மரணமாய்ச் சற்றேனும்நிலைபெறாது மாறிமாறிச்சுற்றி அநேகவவஸ்தைகளையடைந்து வாசுதேவனென்னும் ஒருயோகபுருஷனாக வவதரித்துத் தவசுபண்ணிக்கொண்டிருந்த

பிருகுமுனிவன் தவசுபூர்த்தியாகி கண்ணைவிழித்துப்பார்க்க அருகிலிருந்த புத்திரனைக்காணுமல் தசையில்லாத கங்காள உருவத்தைக்கண்டு அதிகோபாவேஷமுடையனாய் நமது புத்திரனாவியை காலமில்லாத வகாலத்திற்கொண்டுபோன யமனை இதோ சபிக்கிறேனென்று சாபஜலத்தைக்கையிலெடுக்க யமதர்மன் சமாதித்தியமாகி முனிகோபத்தை யுபசமனம்பண்ணி இதோபதேசத்தைச்செய்து பிருகுவும் யமனும் வாசுதேவயோகியைச்சேர்ந்து அவனுக்குத் தங்களைத்தெரியும்படி ஆக்ஞாபித்து வாசுதேவபிராணனைக் கொண்டுவந்து கங்காளரூபமாய்க்கிடந்த சுக்கிரதேகத்திற் சேர்ப்பித்து தபோமகிமையாலுயிர்ப்பித்தெழுப்ப சுக்கிரனெழுந்து இருவருக்கும் நமஸ்காரம்பண்ணி அஞ்சலிபந்தனாக நின்று ஸ்தோத்தியம்பண்ண அவனுக்கு ஞானோபதேசத்தைப் பண்ணி ஆசுரகுருவாக ஆக்ஞாபனம்பண்ண அன்றுமுதல் அசுரர்களுக்கெல்லாம் ஆசாரியனாக இருக்கின்ற சுக்கிரசரித்திரத்தை ராசதஸ்திதிக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

தாமன்கதை.—சம்பரனென்கின்ற ஓரசுரன் தனக்குச் சத்துருவாகிய இந்திராதிதேவர்களைச் செயிக்குநிமித்தம் தனதுமாயையினால் தாம வியாள கடனென்னும் மூன்று அதிவீரர்களைச் சிருஷ்டித்துத் தேவர்களோடு யுத்தத்திற்கனுப்ப அவர்கள் கடுத்துவமிகுதியால் நிர்ப்பயராக நின்றெதிர்ப்பதைத் தேவர்கள்கண்டு பயந்து பிர்மாவையாசிரயிக்க அவரதனுக்கிரகத்தால் தாம வியாள கடருக்கு உபாயபூர்வகமாக தேகப்பிரக்ஞையை யானாவட்டத்திலுண்டுபண்ணத்தேகோகபுத்தியினால் பயம்வந்துபீடித்து தேவர்களோடு யுத்தஞ்செய்தற்கஞ்சியோடித் தேவர்களாலபஜெயத்தையடைந்து நசித்துப்போனார்களென்கின்ற அக்ஞசரித்திரத்தை தாமதஸ்திதிக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

விமன்கதை.— தாமாதிமூவரும் அதிவீரராகையால் அவர்களால் நமக்கபஜெயம்வந்ததென்று சம்பரன்வருத்தமுற்றப்பினுந் தனதுமாயையினால் விம பாச திடனென்னும் மூன்றசுரமூர்த்திகளைச்சிருஷ்டித்து தேவர்களோடு யுத்தஞ்செய்தற்கனுப்ப அவர்கள் சத்தியம் தயை சௌரியம் பராக்கிரமம் பொறுமை சாந்திமுதலான சிரேஷ்டகுணங்களைக்கண்டு இந்திராதிதேவர்கள்

அவர்களோடு யுத்தஞ்செய்தற்காற்றாமல் விஷ்ணுதேவை அடைக்கலமாக ஆசிரயிக்க அவர்களுக்கு அபயப்பிரதானம்பண்ணி அவர்களோடு யுத்தத்துக்குவந்த வீம பாச திடனைச் சிரகண்டனம்பண்ண அம்மூவரும் ஜோதிரூபமாய் ஸ்ரீவிஷ்ணுபகவானோடு ஐக்கியம் பெற்றார்களென்கின்ற சாந்தமூர்த்திகள் சரித்திரத்தை சத்துவஸ்திதிக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

தாரூரன்கதை. — பரமாகாசத்திலிருந்துண்டான பிரதம சங்கற்பத்துக்குத் தெளிந்த ராசனென்று நாமந்தரித்து சாத்துவித ராசத தாமதமென்கின்ற மூன்றுகுணங்களும் அவ்வரசனுக்குத்தேகங்களாயும் மும்மூர்த்திமுதலிய சமஸ்ததேவர்களும் அவயவங்களாயும் சுவர்க்க மத்தியபாதாளம் நகரங்களாயும் பதினான்கு லோகமும் அந்நகரத்துக்கு வீதிகளாயும் சருவப்பிராணிகளின் சரீரமே கிரகங்களாயும் சந்திரசூரியர்களே தீபங்களாயும் சத்த சாகரமே தடாகங்களாயும் அகங்காரப்பேய்களே காவல்க்காரர்களாயும் இப்படியே அண்டசராசரங்களாய் விளங்கிய ஜகசீவபர முழுமையுஞ் சங்கல்பசூத்திரத்திற் கோர்வையிட்டு சரலோமாவின் புத்திரனை தாரூரமுனிவன் தனதுவரப்பிரசாதமகிமையால் வனதேவதையினிடத்துப் பிறந்து தன்னையாசிரயித்திருக்கின்ற மாணாக்களுக்கு சற்குருவல்லபத்தாற் சருவத்திரமூலமான சங்கல்பசூத்திரத்தையறுத்து அந்தச்சூத்திரத்திற் கோர்வையிட்டிருந்த அண்டசராசரங்களாகிய ஜகசீவபரமுழுமையுந் தானாக்கி நானென்னும் பேதத்தைத்தவிர்த்துச் சருவமும் பிர்மமயமாகத் தெளிவிக்க உபதேச சரித்திரத்தைப் புவனஸ்திதிக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

சுகன்கதை. — சமாதியிலிருந்து வெளியிட்டு சாக்ஷாத்காரமான சுத்தமனதிருந்தெறிசிக்குமிடத்துச் சர்வமும் பிர்மமயமாக விளங்குமென்றுணர்த்திய தேவகுருபுத்திரனை சுகமுனிசரித்திரத்தைச் சகஜஸ்திதிக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## சத்துவாதிலக்ஷணம்.

சத்துவஜென்மசிரேஷ்டம் தாராதலசந்திரோதயம் சுகதுக்க விகசிதம் பருதகிருத்தியம் மகாத்மசரிதம் அசஞ்சலசித்தம் குணசம்பூரணம் இயற்கைசற்குணம் இருவினைத்தூய்மை சமுத்திர

சாமியம் மோகவர்ச்சிதம் வழுவாநியதி மானதகிருத்தியம் சடத்துவநீக்கம் பரமதெரிசனம் ஏகசின்மாத்திரம் சுத்தசத்துவாத்மகமெனப் பதினேழுவகை.

சேதனகோடிகளினது தபோபலத்தா லவதரிக்கப்படுவது: சத்துவஜென்மசிரேஷ்டம். — பரமபதவாழ்வைப் பூலோகத்தில் நிரூபிக்கப்படுவது: தராதலசந்திரோதயம்.- பூதபௌதீகக்கிரிகையைநீக்கி வர்த்தமான சந்தோஷியாயிருப்பது: சுகதுக்கவிகசிதம்.- விவேகபூரணனைத் தொழிற்செய்வது: பகுதகிருத்தியம். — சத்துக்கள்நடையை யனுசரித்து நடப்பது: மகாத்மசாரிதம்.—இதயபூர்த்தியினாற் சஞ்சலரகிதராயிருப்பது: அசஞ்சலசித்தம்.-கிருபைமுதலியகுணங்களாற் பிரகாசிப்பது: குணசம்பூரணம். — கருவிலே திருவுடையராயிருப்பது: இயற்கைசற்குணம்.—சுகதுக்கசமத்துவமுடையராய்ப் புண்ணியச் செய்கையை நடத்தப்படுவது: இருவினைத்தூய்மை. — வர்ணச்சிரமவிதிப்படி வனைகடவாதிருப்பது: சமுத்திரசாமியம். — ராகத்துவேஷாதிகளைத்தியச்சித்திருப்பது: மோகவர்ச்சிதம். — சாக்ஷிபூதமாகநின்று மனுநீதி தெய்வநீதிகளை நிறுத்தப்படுவது: வழுவாநியதி.-அகங்காரவர்ச்சிதமுதலிய அப்பியாசக்கிரமத்தைச் சாதிக்கப்படுவது: மானதகிருத்தியம்.—அநார்த்தாதிதோஷகுணங்களை நிவர்த்திக்கப்படுவது: சடத்துவநீக்கம்.— அகண்டேகசொரூபத்தைச் சாக்ஷாத்கரிப்பது: பரமதெரிசனம்.- சூரியாதிகீடபரியந்தம் பிரகாசிப்பது: ஏகசின்மாத்திரம்.—பிராகுணங்கள்விடுபட்டு பரமாத்மசொரூபமாயிருப்பது: சுத்தசத்துவாத்மகம்.

## உபசாந்தப்பிரகரணம்.

கருமக்ஞானசமத்துவம் புண்ணியபாவசமத்துவம் சித்தசித்தின்சமத்துவம் சத்துருமித்துருசமத்துவம் தீர்க்கவதீர்க்கசமத்துவம் துரியவதீதசமத்துவம் துறவில்லசமத்துவம்பாசவிபாசசமத்துவம் சகளநிஷ்களசமத்துவமென்னும் நவவிதஉபசாந்தத்தை சனகபுண்ணிய பலி பிரகலாத காதி உத்தாலக சுரகு வியாச வீதகவ்வியனென்னும் நவவிதஉபாக்ஞானத்தால் நிதரிசனமாக்கிச் சட்சங்கைகளாகத் தொகுத்து உத்தரரூபமாக நிரூபிக்கப்படுவது.

கருமக்ஞானசமத்துவம். — சலனரூபமாகவிருப்பது கர்மம் நிர்ச்சலரூபமாகவிருப்பது ஞானம் நிர்ச்சலசலனமிரண்டும் சித்த வியாபாரமெனத்தெரிந்து சித்தத்தினுருவமான சங்கல்பத்தைத் தவிர்த்துச் சருவதுக்கோபசமனமுடையனாய் ஞானகர்மமிரண் டுஞ் சமமாகவனுஷ்டித்துச் சருவமும்பிர்மமயமென்னும் அழுத் தத்தால் சகலகுணசம்பூர்த்தியையுடைய சீவன்முத்திப்பதத்தி லிருந்து அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற விதேகமுத்தியை யடையப்படுவது.

புண்ணியபாவசமத்துவம். — ஞானசக்தியாதி சகலகுணசம் பூரண புண்ணியரூபரானசற்குரு தன்னையாசிரயித்த அக்ஞான அசக்தித்துவாதி பாவரூபனானசிஷ்யனை ஞானசக்தியாதிகளாற் பூர்த்திபண்ணி அவனது சங்கல்பம் நிவர்த்தியாகுமிடத்துத் தமதுசங்கல்பமும் நிவர்த்திக்கப்பட்டுச் சருவதுக்கோபசமன முடையராய்ச் சர்வமும்பிர்மமயமென்னும் அழுத்தத்தால்ச் சகல குண சம்பூர்த்தியையுடைய சீவன்முத்திப்பதத்திலிருந்து இப் படியே அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற விதேகமுத்தியை யடையப்படுவது.

சித்தசித்தின்சமத்துவம்.—மனச்சக்ஷுராதி அசித்துருவத் தையுஞ் சித்துருவாகத்தெரிசித்து சித்தசித்தென்னுஞ் சித்தசங் கல்பத்தைத்தவிர்த்து சருவதுக்கோபசமனமுடையனாய்ச் சிற் சுடராகிய ராசசந்நிதியில் மனமானது அமைச்சனைப்போல விரு ந்து நிக்கிரகபாலனாதி சமஸ்தவிவகாரங்களும் நடத்தி வெதிரிக்த மில்லாது சர்வமும் பிர்மமயமெனத் தெளிந்து சகலகுணசம்பூர்த் தியையுடைய சீவன்முத்திப்பதத்திலிருந்து அவாங்மனோகோசர மாகவிருக்கின்ற விதேகமுத்தியை யடையப்படுவது.

சத்துருமித்துருசமத்துவம்.—உரவர் பகைவரென விகல்ப் பித்துழல்கின்ற சித்தசங்கல்பத்தைத் தவிர்த்து உள்ளும் புறம் பும் சமமாக்கி ஸ்ரீபகவானாகியசற்குருவை அகத்திலும்புறத்திலும் பூசித்து அவனதுசாக்ஷாத்காரமகிமையால் சர்வதுக்கோபசமன முடையனாய்ச் சருவமும் பிர்மமயமெனத்தெளிந்து சகலகுணசம் பூர்த்தியையுடைய சீவன்முத்திப்பதத்தில்நின்றும் அவாங்மனோ கோசரமாகவிருக்கின்ற விதேகமுத்தியை யடையப்படுவது.

தீர்க்கவதீர்க்கசமத்துவம். - கல்பப்பிரளயரூபமாய் நீடித்துத் தோற்றியொடுங்குகின்ற நாமரூபப்பிரபஞ்சத்தைஈஸ்வரானுக்கிரகத்தால் ஒரு க்ஷணிககாலத்திற் றோற்றியொடுங்கக்கண்டு இந்த தீர்க்கவதீர்க்கப் பிரபஞ்சத்துக்கு மூலமான மாயையொன்றுண்டென் றனுமானித்து அந்த மாயையினுருவே மனம் மனத்தினுருவே சங்கல்பமென நிச்சயித்து அந்தச்சங்கல்பத்தை நிவர்த்தி பண்ணி சருவதுக்கோபசமனமுடையனாய்ச் சர்வமும்பிரமமய மெனத்தெளிந்து சகலகுணசம்பூர்த்தியையுடைய சீவன்முத்திப் பதத்தில் நின்றும் அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற விதேக முத்தியை யடையப்படுவது.

துரியவதீதசமத்துவம்.—அயன் மால் சங்கரன் அருகன் சதாசிவன் முதலிய துரியாதீதவாசிகளான நித்தியருபிகளனுபவம் துரியநிலத்திலனுபவிக்கப்பெற்று துரியதுரியாதீதமென்னுஞ் சித்தசங்கல்பத்தைத்தவிர்த்து மகாநிருஷ்டியை யுடையனாய்த் துரியாதீதவாழ்வை யடையப்படுவது.

துறவில்லசமத்துவம்.—சற்குருமுகமாய்க்கேட்ட சிரவண வாக்கியத்தை மனனயூகத்தால் நிச்சயித்து நிதித்தியாசனரூபமாய்க் காக்ஷிப்படுத்தி வர்ணதிகிருத்தியங்களோடு தேகாதிபிரபஞ்சமுழுமையும் நிவர்த்தித்து லயம் விக்ஷேபம் கஷாயம் ரசாஸ்வாதமென்கின்ற பிரதிபந்தக சதுஷ்டயமில்லாத நிருவிகல்பசமாதியிலொருமையாக்கி சகஜானுபவரூபமாய்ச் சுயம்பிரகாச சருவவியாபக சுபாவசைதன்யத்தைச் சாக்ஷாத்காரமாக்கி அந்நிலையை விட்டு விகல்பித்தெழும்பும் மனோவிருத்தியை உணர்ச்சியுடனே யிருந்து உதிக்குந்தோறும் நிவர்த்தித்திருக்கின்ற துறவிக்கும். வித்யாசக்தி பிரக்ஞாமாந்தம் குதர்க்கம் விபரீதம் துராக்கிரகங்களையென்னும் விரோதிபஞ்சகங் கலக்காமல் ஈஸ்வரானுக்கிரகத்தால் மனன தியான சமாதி சாக்ஷாத்காரநான்குஞ் சிரவணத்திலேதானே ஒருமைப்பட்டு வர்ணதிகிருத்தியங்களை யனுசரித்து நற்குணநற்செய்கை யுடையனாய் நீதிமார்க்கத்தில்நின்று நிக்கிரகபாலனாதிகளைச் செய்கின்ற கிரகஸ்தனுக்கும் நிவர்த்தி பிரவர்த்தியென்னும் மானதகிருத்தியம் வெவ்வேறாகவிருக்கினும் அவ்விருவருக்கும் இதயசீதளம் பொதுமையென்பதை நிச்சயித்துத் துறவில்ல

மென்னுஞ் சங்கல்பத்தை நிவர்த்திபண்ணி சித்தசாந்தியினால் இதயசீதளத்தை நாளுக்குநாளபிவிர்த்தியாக்கிச் சருவதுக்கோப சமனமுடையனாய் சருவமும்பிர்மமயமெனத்தெளிந்து சகலகுண சம்பூர்த்தியையுடைய சீவன்முத்திப்பதத்தில்நின்று அவாங்மனோ கோசரமாகவிருக்கின்ற விதேகமுத்தியை யடையப்படுவது.

பாசவிபாசசமத்துவம்.-வீடுபெற்றிருக்கின்ற விபாசன்பூர்வ சிநேகத்தாற் பந்தித்திருக்கின்ற பாசனோடு சம்பந்தித்துப்போதக ரூபத்தாற் பாசனையும் விபாசனாக்கி பாசவிபாசமென்னுஞ் சித்த சங்கல்பத்தை நிவர்த்தித்துச் சருவதுக்கோபசமனமுடைய ராய்ச் சருவமும்பிர்மமயமெனத்தெளிந்து சகலகுணசம்பூர்த்தி யையுடைய சீவன்முத்திப்பதத்தில்நின்று அவாங்மனோகோசர மாய் விளங்கிய விதேகமுத்தியை யடையப்படுவது.

சகளநிஷ்களசமத்துவம்.—சமாதிரூபத்தால் நிஷ்களவடிவை யும் சகஜரூபத்தாற் சகளவடிவையும் சகள நிஷ்கள நிஷ்களசகள மாய் மாறிமாறியனுபவித்து சகள நிஷ்களமென்னுஞ் சித்தசங் கல்பத்தைத்தவிர்த்து சருவதுக்கோபசமனமுடையனாய்ச் சரு வமும் பிர்மமயமெனத்தெளிந்து சகலகுணசம்பூர்த்தியையுடைய சீவன்முத்திப்பதத்தில்நின்று அவாங்மனோகோசரமாய்விளங்கிய விதேகமுத்தியை யடையப்படுவது.

## சனகராசன் கதை.

சாந்தியாதி சற்குணசம்பூரணனான சனகர்பிரான் உத்தியான வனத்திற்றனித்திருக்க சூக்ஷ்மதேகிகளான சித்தர்கணங்கள் பாடிய வாக்கியபோத சங்கீர்த்தனத்தைக்கேட்டு அந்தவாக்கிய சிரவணத்தை அரண்மனையி னுப்பரிக்கையின்மேற் றனியனாகி விருந்து உசாவுதல் செய்து விவேகபூர்த்தியினால் தேகபோகாதி மாயாப்பிரபஞ்சமுழுதிலுந் தோஷதிருஷ்டியையுடையனா யவை யாவையும் விசாரமுகத்தால் நியதித்துசமாதியுக்தனாக நெடுநேர மிருந்து சகஜானுபவத்துக்குவெளியிட்டு நாமரூபப் பிரபஞ்சத் துக்குமூலம் மாயை மாயாமூலம் மனம் மனத்தினுருவஞ்சங்கல்ப மெனத்தெளிந்து அந்தச்சங்கல்பத்தை நிவர்த்திபண்ணி சருவ துக்கோபசமனமுடையனாய் நிக்கிரகபாலனாதிகளைச்செய்து சரு வமும் பிர்மமயமென்னும் அழுந்தத்தா னுபசாந்தவாழ்வைப்

பெற்றிருக்கின்ற சனகசரிதத்தை கருமக்ஞானசமத்துவ வுபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## புண்ணியன்கதை.

தீர்க்கதவனென்கின்ற ஒருமுனிபுத்திரர் புண்ணியன் பாவனனென்றிருவரில்ப் புண்ணியன் சுக்ஞானியாய்த் தெளிந்திருக்க பாவனன் அப்பியாசியாய்த்தெளிவில்லாதிருக்க பிதாவாகிய தீர்க்கதவமுனி விதேககைவல்யத்தையடைய அதனாற்பாவனன் றுக்கசாகரத்திலழுந்திக்கிடக்கப் புண்ணியன் பிதாவினுக்குரிய அபரக்கிரிகைகள்முழுதுஞ் சீக்கிரமாகமுடித்து துக்கசாகரத்திலழுந்திய தம்பியைப் பூர்வக்ஞானத்தால் துக்கோபசமனம்பண்ணி தன்னைப்போலத் தம்பியையும் கிருதார்த்தனாக்கி இருவரும் உபசாந்தநிஷ்டராய் சீவன்முத்திப்பதத்தில்நின்றும் விதேகமுத்தியைப் பெற்றார்களென்கின்ற புண்ணியன்சரிதத்தைபுண்ணியபாவசமத்துவ வுபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## மாபலிகதை.

ஆத்மாவையரசனாயும் மனதையமைச்சனாயும் அவற்றின் வல்லமையைப்பலவாறுயும் அதனைச்செயிக்கும் யுக்தியை நான்குபேதமாயும் வர்ணித்துப் பூர்வம் பிதாவாகிய விரோசனன் சொன்னதை மாபலி தனியனாகவிருந்தாலோசித்து நிர்ச்சந்தேகனாகும் பொருட்டுப் பூரணவன்பினாற் குருவாகிய சுக்கிரபகவானை சாட்சாத்கரித்து இவ்விடத்துள்ளதெது? இவையாவுக்கும் பிரத்தியேகமாயிருப்பதெது? பிரமாணமாய் சொல்லப்பட்டதெது? பிரமாணாதீதமாயிருப்பதெது? நானார்? நீயார்? இந்தநிலைபெற்ற பிரபஞ்சம் யாதென்றுவினவ இவ்விடத்திலுள்ளதுஞ்சித்துஇதற்குப்புறம்பாயிருப்பதுஞ்சித்து, பிரமாணமாய் சொல்லப்பட்டதுஞ்சித்து, பிரமாணாதீதமாயிருப்பதுஞ்சித்து, நானுஞ்சித்து, நீயுஞ்சித்து, இந்தநிலைபெற்ற பிரபஞ்சமுஞ்சித்து, சருவமுஞ்சிற்சொரூபமென்று உணர்த்தப்பெற்று சிரவணத்திற்றனே மனன தியான சமாதி சாக்ஷாத்கார நான்குமொருப்பட்டு விஸ்ராந்தியையுடையனாயுபசாந்தவாழ்வைப்பெற்றுக்கிருதகிருத்தியனாகத் தடையற்றுவிளங்கினனென்கின்ற பலிசரிதத்தை சித்தசித்தின் சமத்துவோபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## பிரகலாதன்கதை.

சத்துருமித்துருவென விகல்ப்பித்தெழுகின்ற சித்தசங்கல்ப்பத்தைத் தவிர்த்துச் சருவசமத்துவமுடையனாய்த் தன்பிதாவாகிய இரண்ய சத்துருவான நாராயணனைப் பூரண அன்பினால் அகத்திலும் புறத்திலும் பூசித்து அவனது சாக்ஷாத்கார வரப்பிரசாத மகிமையால் விசாரபூர்வகமாக தத்துவார்த்தமுழுமையுந்தெரிந்து அநேககாலம் நிருவிகல்ப்பசமாதியிலிருக்க ஸ்ரீபகவானாகிய நாராயணன் இந்திராதிதேவர்களோடு பிரத்தியக்ஷமாகி நிருவிகல்ப்ப சமாதியிலிருக்கின்ற பிரகலாதனனைச்சகஜானுபவத்துக்கு வெளிப்படுத்தி அவனைப் பாதாளவுலகத்துக்கரசனாக்கித் தீர்க்காயுஷைக் கொடுத்து ரக்ஷிக்கின்ற பிரகலாதசரிதத்தை சத்துருமித்துரு சமத்துவோபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## காதிகதை.

ஸ்ரீவிஷ்ணுதேவினிடத்தில் மாயாலக்ஷணந் தெரியவேணுமென்று வரப்பிரசாதம்பெற்ற காதியென்னும் நாமதேயத்தையுடைய கோசலதேசத்துப் பிராமணன் ஒருநாள் தாமரைத்தடாகத்தில்மூழ்கி நீராடுதற்குரிய மந்திரதியானாதிகளைமறந்து தன் மனையில்த் தான்வியாதியாலிறந்து ஊனதேசத்து நீசஸ்திரிக்குப் பிள்ளையாய்ப்பிறந்து ஒருநீசகன்னிகையைவிவாகம்பண்ணிப் புத்திரபௌத்திராதிகள் அநேகமாகஅபிவிர்த்தியாகி அவர்களனைவரும் மிறந்துபோனதற்குச் சகிக்கமாட்டாமல் தனியனாய்க்கிரதேசத்துக்குப்போக அந்தக்கிரதேசத்தரசனிறந்து அவ்வரசாங்கத்தை ஆளுதற்கொருவருமில்லாது யானையின்கையில்மாலையைக்கொடுக்க அந்தமாலையை யானையானது இவன்கழுத்திற்போட்டு தன்பிடரியிலேற்றச்சருவாலங்காரசகிதமாய் சகலவாத்தியங்களோடு அரண்மனைக்குட்பிரவேசித்து மந்திரி பிரதானிமுதலிய சுமஸ்தரும் வணங்கப் பாவைமார்களுபசரிக்கக் கவலனென்னும் அந்தவரசமரபினுக்குரிய நாமத்தைப்பெற்று எட்டுவருஷம் ராச்சியாதிபதியாகவிருந்து செங்கோல்நடத்தி புறமுத்தத்தில் ராசவேடத்தைநிவர்த்தித்து நீசவேடத்தோடுலாவ பூர்வவுறவினர்களாகிய நீசர்களாலிந்தக்கவலன் முன்னேநீசனென்கின்றமரபுவெளிப்படபுனிதனாதற்பொருட்டுத் தேவிமாரும் மந்திரிமுதலியதேசத்தாரும் அக்கினிப்

பிரவேசமாகத் தானுமவர்களோடக்கினியில்விழக் காதியுடலிற்பதைப்புற்றெழும்பி மகாமாயையின் வருத்தத்தை இரண்டுமுகூர்த்தத்திற்றீர்ந்து தடாகத்தைவிட்டுக் கரையேறி தன்கிரகத்தில் வந்திருக்க ஓரதிதியினாற்றான்கண்ட மாயாலக்ஷணத்தை யதார்த்தமாகத்தெரிந்து ஈஸ்வரானுக்கிரகத்தால் மாயாமூலமான சித்தசங்கல்பபத்தைத்தவிர்த்துச் சருவதுக்கோபசமனமுடையனாய்ச் சிவன்முத்திப்பதத்தைப் பெற்றானென்கின்ற காதிசரிதத்தைத் திர்க்கவதிர்க்க சமத்துவோபசாந்தத்துக்கு நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

## உத்தாலகன்கதை.

இயம நியமாதி அங்கயோகசாதகத்தால்த் துரியாதீதவைபவத்தைத்துரியபூமியிலடையப்பெற்றுத் துரியாதீதாரிகளாகிய அயன் மால் சங்கரன் அருக்கன் சதாசிவன் முதலிய நித்தியசூரிகளைப்போல மகாதிருஷ்டியையுடையனாய் அதீதபதத்தை யடைந்திருக்கின்ற உத்தாலகமுனிசரிதத்தைத் துரியவதீத சமத்துவவுபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## சுரகுகதை.

மாண்டவியமுனியினாற் றத்துவஞானத்தைப்பெற்று சகலகுணசம்பூர்த்தியையுடைய சீவன்முத்திப்பதத்திலிருந்து லோகோபகாரார்த்தம் நிக்கிரகபாலனாதிகளைச் செய்கின்ற சுரகுராசனிடத்துப் பன்னுதமுனியென்கின்ற ஒருதுறவிபரலும் ஒருவருக்கொருவர்பக்திசெய்து ஒருவரையொருவர் பூசித்துப் பரஸ்பரமன்புடையர்களாய் பரஸ்பரசந்தேகத்தை நிவர்த்தித்து இதயசீதளமிகுதியால் இல்லறதுறவறத்துக்காக ஏற்பட்டிருக்கும் நியதியைத்தெரிந்து அவரவர்பணிதவி னின்றார்களென்கின்ற சுரகுசரிதத்தை துறவில்ல சமத்துவோபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## விபாசன்கதை.

பாச விபாசனென்னும் பெயரையுடைய இரண்டுமுனிபுத்திரர்கள் பாலிய சிநேகிதராகவிருந்து கருமவசத்தாற் சிலகாலம் வேறுபட்டு ஈஸ்வரகிருபையால் ஓரிடத்திலொருப்படச்சேர்ந்து

பூர்வசிநேகிதத்தால் விபாசனுகிய சுக்ஞானி பாசனுடைய அக்ஞானத்தை நிவர்த்திபண்ணி பாசவிபாசனென்கின்ற சித்தசங்கல்பத்தைத்தவிர்த்து ஒருவருக்கொருவர் சங்கைசமாதானங்களாற்றெளிந்து முத்தியைத்தருதற்கான சத்தியக்ஞானத்தைப் பெற்றூர்களென்கின்ற விபாசசரிதத்தைப் பாசவிபாச சமத்துவோபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## வீதகவ்வியன்கதை.

சகள நிஷ்கள நிஷ்களசகளமாய் மாறிமாறியனுபவித்து நிஷ்கள சகளமென்னுஞ் சித்தசங்கல்பத்தைக்கெடுத்துச் சருவமும் பிர்மமயமென்னும் அழுத்தத்தால் சகலகுணசம்பூர்த்தியையுடையசிவன்முத்திப்பதத்தில்இருபதினுயிரம்வருஷமிருந்துசர்வசாஸ்திரார்த்த சித்தாந்தமாயும் சருவத்திரதிருஷ்டியாயும் சருவராலும் ஆராய்ச்சிபண்ணுவதாயும் பார்ப்பவன் பார்ப்பவைமுதலிய சருவமுமாயும் சமஸ்தபிரபஞ்சத்துக்கு முறைவிடமாயும் யாதோரசைவுமில்லாத நல்லதாயும் பிரகாசத்துக்கெல்லாம் பிரகாசத்தைத்தருவதாயும் தனதுசுவாநுபூதியில் ஏகரூபமாய்த்தெரிசிப்பதாயும் ஏகமாகவிருந்தும் அநேகாகாரமாய்ப் பிரகாசிப்பதாயும் சருவத்தையும் படைத்தும் படையாததாயும் சருவமுமாயும் சர்வமுமிலதாயுமிருக்கின்ற விதேககைவல்யத்தை பெற்றுஅவாங்மனோகோசரமாய்விளங்கிய வீதகவ்வியசரிதத்தை சகள நிஷ்கள சமத்துவவுபசாந்தத்துக்கு நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## ஷட்சங்கை.

முதல்க்கேள்வி.— அசிபதநிஷ்டையினுல் திரிபுடியற்று அவ்வநிதப்பிர்மத்தை இடையருதனுபவிக்கும் சிவன்முத்தர்களுக்கெல்லாம் ஆகாயகமனமுதலிய சித்திகளேனில்லை? உத்தரம்.— பெத்தநிலையில் ஆசாவசத்தராலடையப்பட்ட சித்திகளில் ஆசாவிசர்ச்சனரான சிவன்முத்தர்களுக்குப் பிரயோஜனமில்லை.

இரண்டாங்கேள்வி.-சித்தயோகிகளுக்கெல்லாம் ஆயுள்விருத்தி எப்படியுண்டாயிற்று? உத்தரம்:-ரேசகாதி பிராணுயாமயூகத்தால் பிராணனைப் புறம்போகாது தடைப்படுத்தி அந்தப்பிராணபந்தன மகிமையால் ஆயுஷையபிவிருத்திபண்ணி அந்த ஆயுள்விருத்தியி

னால் நானாவிதசித்திகளையப்பியசித்து அவ்வப்பியாசபூர்த்தியினால் யோகசித்தர்களாகப் பிரசித்தியானார்கள்.

மூன்றாங்கேள்வி.-மனமானது நாசவத்துவத்தையடைந்தால் மைத்திரியாதிகுணங்களெங்கே பொருந்தியிருக்கும்? உத்தரம்.—அருவநாசப்பேறான விதேகமுத்தியை யடைதற்கு ஆயத்தமாய் மனமானது உருவநாசத்தைப்பெற்று அகங்காரமுழுதும் நிவர்த்தித்திருக்கின்ற சீவன்முத்தர்களிடத்து அநகலக்ஷணத்துக்குரிய உத்தமகுணங்கள்முழுதும் சம்பூரணமாக நிறைந்திருக்கும்.

நாலாங்கேள்வி.—நால்வகை வித்துக்கும் மூலமாய்விளங்கிய சிதாத்மாயெது? உத்தரம்.—மாயாமூலஞ்சரீரம் சரீரமூலமனம் மனோமூலம் வாசனாபிராணன் வாசனாமூலந்திரிசியம் திரிசியமூலஞ் சேதனஞ் சேதனதிரிசியங்களைவிழுங்கிய உணரா நிசசொரூபமே சிதாத்மாவென்றுபீஜாங்குரநியாயத்தை யனுசரித்துணர்த்துவது.

ஐந்தாங்கேள்வி.-சருவாதாரசத்தையாய் விளங்கிய பரமாத்மாயெது? உத்தரம்.-சத்தென்றும், சித்தென்றும், ஆனந்தமென்றும் பிரிக்கக்கூடாது. சத்தாசாமான்யமுடிவாய்விளங்கிய சத்தாகாரசொரூபமே: பரமாத்மா. சத்தென்பதுயாது? ஏகமென்றும் அநேகமென்றும் சொரூபபந்திகளால்ப் பிரிக்கப்பட்டும் பிரிவில்லாததாய் காலசத்தை கலாசத்தை வஸ்துசத்தைமூன்றும் ஒழிந்து ஏகாகாரமாகவிருக்கின்ற பரமார்த்தசொரூபமே: சத்து.

ஆறாங்கேள்வி,—அதனை யடைதற்கேதுவாய சத்தியோன் மார்க்கங்கிரமமார்க்கமென்னு மார்க்கத்துவயமெது?உத்தரம்.-சத்தாசாமான்யமுடிவாய்விளங்கிய சத்தாகாரப்பேற்றினால் மனோநாச வாசனாக்ஷய தத்துவக்ஞானமூன்றும் ஒருங்கேசித்தித்து முத்திப்பேறாகிய பரமபாக்கியத்தை க்ஷணப்போதில் நிர்ச்சந்தேகரா யடையப்படுவது: சத்தியோன்மார்க்கம். — மனோநாச வாசனாக்ஷய தத்துவக்ஞானமூன்றும் தனித்தனியேபழகி தெய்வகதியினால் ஒருப்படுமிடத்துத் துவம்பத தற்பத அசிபதமென்னும் நிஷ்டாபேதத்தை ஸ்ரீசற்குருமுகமாய்ச் சாதித்தடைவது: கிரம மார்க்கம்.

துவம்பதநிஷ்டை.—சாக்கிர சொப்பன சுழுத்தி துரிய துரியாதீதமென்னும் அவஸ்தாபஞ்சகரூபமாய்ச் சாதிக்கப்படுவது. அவற்றுள். — மனோவிருத்தியானது பகிர்முகநாட்டமாய் வெளியிட்டு அளவற்ற பரிச்சேதரூபமாய்ப் பரவிநிற்பது: சாக்கிரம்.—அளவற்ற பரிச்சேதரூபமான ஜகசீவபரமுழுதையும் ஒருவனுடைய அகமுகவிருத்தியில் தெரிசிக்கப்படுவது: சொப்பனம். — சாக்கிரசொப்பனபீஜமாய் அறிவறியாமையா யனுபவப்படுவது: சுழுத்தி.—அஞ்ஞானகாரியமான சாக்கிரசொப்பனபீஜம் நசித்து அறிவறியாமைக்குச் சாக்ஷியாய்நின்று அகிலலோக ஜெகசீவபர முழுதும் உதித்தொடுங்குதற்கு மூலமான அகண்டாத்மதேவை விருத்திசோதனையினால் நமதுளத்தி லனுபவரூபமாயுணரப்படுவது: துரியம்.—பிண்டாத்மா அண்டாத்மா அகண்டாத்மா பரமாத்மாவென்கின்ற பேதசதுஷ்டயம்வர்ச்சித்து பரிபூரணவியாபியாய் எல்லையற்றிருப்பது: துரியாதீதம்.

தற்பதநிஷ்டை. – அவ்வாங்மனோகோசரமாகவிருக்கின்ற அதீதப்பிர்மத்தை விராட்டு இரண்யகற்பம் அவ்வியாகிருதம் சர்வேஸ்வரம் பரப்பிர்மமென்னும் சொரூபபஞ்சகநிஷ்டையினால் அனுபவிக்கப்படுவது: அவற்றுள். விராட்டு. — விஸ்வசீவனை வைசுவானரனென்னும் ஈஸ்வரனுக்கனன்னியமாய்க்கண்டு ஆட்டுவானும் ஆடுவானும்போலப்பிரிவற்று அவ்வதீதப்பிர்மத்தை நிஷ்டாரூபமாயனுபவிப்பது. இரண்யகற்பம்.—தைசதசீவனை சூத்திராத்மாவென்னுமீஸ்வரனுக்கனன்னியமாய்க்கண்டு பிரபையும் பிரபாவானும்போலப்பிரிவற்று அவ்வதீதப்பிர்மத்தை நிஷ்டாரூபமாயனுபவிப்பது. அவ்வியாகிருதம். — பிராக்ஞசீவனை அந்தரியாமியென்னும் ஈஸ்வரனுக்கனன்னியமாய்க்கண்டு பிரக்ஞையும் பிரக்ஞாவானும்போலப்பிரிவற்று அவ்வதீதப்பிர்மத்தை நிஷ்டாரூபமாயனுபவிப்பது. சருவேஸ்வரம். — வைசுவாநரன் சூத்திராத்மா அந்தரியாமியென்கின்ற பேதத்திரயம் வர்ச்சித்து அகிலமங்கள குணசொரூபனாய் அகிலலோக சராசரங்களால் பூசிக்கப்படுவது.

பரப்பிர்மம்.—சீவசாக்கிரம் பரசாக்கிரம் குருசாக்கிரம் சீவசொப்பனம் பரசொப்பனம் குருசொப்பனம் சீவசுழுத்தி பர

சுழுத்தி குருசுழுத்தி சீவதுரியம் பரதுரியம் குருதுரியமென்ன ஆத்மவர்க்கங்கள் தத்தம்விருத்திபேதத்தால் நவநவமாயநுபவித் தற்குக்காரணபூதையாகவிருந்தும் அவையாவுக்குமெட்டாத நம் அனுபூதிவஸ்துவாய் எல்லையற்றிருப்பது.

அகமமதுருவாய்வெளியிட்டு நாசம்உற்பத்தி மூர்ச்சை நரை கனு சுழுத்தியென்னும் அறுவகையவஸ்தையிற்கட்டுண்டுபிரபஞ்ச சாலங்களை விருத்திபண்ணுவது: சீவசாக்கிரம். — அருவுருவாக வெளியிட்டு அகம் ரக்ஷக கங்கண சகிதமாய் நிக்கிரகபாலனங்களைச் செய்யப்படுவது: பரசாக்கிரம். — லீலாகாரணமாகவெளியிட்டு அறிவுருவாய் அனுபூதிவஸ்துவாய் விளங்குவது: குருசாக்கிரம்.— விஷயபோகக்கட்குடித்து மதிமயங்கி மருளுருவாகக் கற்பிதஞ் செய்வது: சீவசொப்பனம்.—சராசரப்பகுதியையுள்ளடக்கி ரக்ஷக காரணமாக மனோராச்சியம்பண்ணுவது: பரசொப்பனம்.—பூத பௌஷீக சுபாவ பிரத்தியக்ஷமென்னத் தெரிசனசதுர்விதம்: குருசொப்பனம்.—அநேககாலச்செய்கையை க்ஷணகாலத்திலநு பவித்து விழிப்பது: பூதகாலதெரிசனம்.—சொப்பனபலத்தைக் கணிதப்பிரகாரம் பிந்தினகாலத் தனுபவிப்பது: பௌஷீகதெரி சனம்.—மறந்துபோன அநேகஜென்மங்களை ஞானதிருஷ்டியினால் பார்க்கப்படுவது: சுபாவதெரிசனம்-சொப்பனத்திற்கண்டபடியே சாக்கிரத்திற்றெரிசிக்கப்படுவது: பிரத்தியக்ஷதெரிசனம்.-அனந்த ஜென்மபீஜமாக ஒடுங்கிநிற்பது: சீவசுழுத்தி.—அவ்வியயசொரூப மாய்க் கற்பாதியிலுற்பவித்து பிரளயாந்தத்தொடுங்கிநிற்பது: பர சுழுத்தி.—சங்கற்பசாலங்களைத்தவிர்த்து அகண்டேகரசமாக ரமித் திருப்பது: குருசுழுத்தி.—சஞ்சிதரோகம்நசிந்து சுத்தசைதன் ஞகவிளங்குவது: சீவதுரியம்.-பிரளயகற்பதெரிசியாய்ப்பிரபோத நிஷ்டராகவிளங்குவது: பரதுரியம்.-பதார்த்தப்பிரிவுகளற்று உப சாந்தசின்மயராக விளங்குவது: குருதுரியம்.

அசிபதநிஷ்டை. — அற்புதசாக்கிரம் அற்புதசொப்பனம் அற்புதசுழுத்தி அற்புததுரியம் அற்புததுரியாதீதமென்னைந்து பேதமாக வரைகட்டிக்கொண்டு நிருவாணநிஷ்டர்களால் விளையா டப்படுவது. அவற்றுள்.—புசுண்ட தேவபூசாகதையை புலமித்து குருபதேசத்தாலுணரப்படுவது: அற்புதசாக்கிரம். — வில்வபல

கதையை யுவமித்துக் குருபதேசத்தா லுணரப்படுவது: அற்புத சொப்பனம்.—இலக்கதையையுவமித்துக் குருபதேசத்தா லுணரப்படுவது: அற்புதசுழுத்தி.—சதருத்திரன்கதையையுவமித்துக் குருபதேசத்தா லுணரப்படுவது: அற்புததுரியம்.—அருச்சுனன் கதையையுவமித்துக் குருபதேசத்தாலுணரப்படுவது: அற்புத துரியாதீதம்.

## நிருவாணப்பிரகரணம்.

பரப்பிர்ம பரமேஸ்வரனான ஸ்ரீராமன் காலாதீதவஸ்துவாயிருக்கின்ற தனது நிசசொரூபத்தை வைராக்கியப் பிரகரணரூபமாய் சூசிப்பித்து சிருஷ்டி திதி சம்மார அவதார அனுக்கிரகாதி தமது அற்புதலீலாமகிமையை வசிஷ்டாதிமுனீந்திரர்களுக்கு ஞாபகப் படுத்தி ஆசாரிய சிஷ்யக்கிரமத்தை மாறுடிக்கொண்டு அவர்களோடு கல்ப கல்பங்களாகவிளையாடும் அற்புதத்தைத் தெரிசன பூசித ஆந்தர்ப் பாகிய அவதார சாரூப்பிய சொரூப பவித்திராசிய பரித்தியாக அகங்கார விரத ஆராத்திய அபாவமென்னும் லீலாசதுர்த்தச ரூபமாகத்தொகுத்து புசுண்ட தேவ வில்வபல சிலார்ச்சுன சதருத்திர வேதாள பகிரத சிகித்துவச கச மித்தையாபுருஷ பிருங்கீச இக்ஷ்வாகு நவ்விக்கிராதனென்னுஞ் சதுர்த்தச வுபாக்ஞானத்தால் நிதரிசனமாக்கி மௌனபஞ்சகரூபமாக நிரூபிக்கப்படுவது.

நித்தியனாகவிருந்து கல்பப்பிரளயங்களையும் அதில்நடக்கும் அற்புதமகிமைகளையுந் தெரிசிக்கப்படுவது: தெரிசனலீலை.—பரப்பிர்மத்தை சகளரூபமாயும் நிஷ்களரூபமாயும் அபேக்ஷிதப்பிரகாரஞ் சாக்ஷாத்காரமாக்கி மிகவுமன்பினோடும் ஆராதிக்கப்படுவது: பூசிதலீலை.— அண்டசராசரமுழுமையும் அகமுகத்திலடக்கிக்காட்டுவது: ஆந்தரலீலை.— அவ்வண்டசராசரங்கள்முழுமையும் பகிர்முகத்தில் விரித்துக்காட்டுவது: பாகியலீலை.—ஆசாரிய சிஷ்யனிருவரும் எக்காலமும்பிரிவற்றிருந்து திரிலோகவனையை நிலைநிறுத்திச் சருவரக்ஷைகளையும் பண்ணப்படுவது: அவதாரலீலை.—சருவேஸ்வரன் ஒரதிகாரிபூர்வமாய்ச் சாக்ஷாத்காரமாகி பக்குவாபக்குவங்களைப்பாராது நிர்ஹேதுவாக அவனதம்சபூதர்களை யொருப்படுத்தி தானவர்களுக்குப் பற்றுக்கோடாகநின்று தனதுலோகத்

தைக்கொடுத்து தனதுசமீபத்தைக்கொடுத்து தனதுசொரூபத்தைக்கொடுத்து தன்னுடைக்கம்பண்ணிக்கொள்வது: சாரூப்பியலீலை.—சிதாகாசசொரூபத்திலாரோபிதமாகவிருக்கின்ற ஜெகசீவபரகல்ப்பிதத்தை ஆசிரயிப்பவர்க்கு சிற்சுடராகநின்று விளக்கிக்கொடுப்பது: சொரூபலீலை. — ஆசிரயிப்பவர்க்குக் கெங்காஜலமாகநின்று பாவச்சேற்றைச்சுத்தீகரிப்பது: பவித்திரலீலை.—பணியாளாகநின்று ஆசிரயிப்பவரைக் கிருதார்த்தனாக்குவது: தாசியலீலை. – அநகமூர்த்தியா யகங்கரத்தைத் தியச்சித்திருப்பது: பரித்தியாகலீலை. — அபினிவேஷத்தா லகமமதுருவாய் விநோதிக்கப்படுவது: அகங்கரலீலை.—மாகர்த்தன் மாபோகி மாத்தியாகியென்கின்ற மூன்றுலக்ஷணங்களோடு பிரகாசிக்கப்படுவது: விரதலீலை.- முத்தாத்மாவாகவிருந்து சர்வராலும் பூசிக்கப்படுவது: ஆராத்தியலீலை.—பரப்பிர்மம் சர்வவியாபியாயிருந்தாலும் கிரியாதர்மத்தை நித்தியபூமியிலும் நித்தியதர்மத்தைக் கிரியாபூமியிலும் ஒன்றோடொன்றுகலக்காமல் அன்னியொன்னியவபாவத்தால் நடுவணையைவைத்துக்கொண்டு அதற்கநுவாகவிருந்து நித்திய முத்தர்களால் விளையாடப்படுவது: அபாவலீலை.

புசுண்டன்கதை.—தீர்க்காயுஷையுடையனாய் பிரளயகல்ப்பங்களையும் வசிஷ்ட வால்மீக நாரத பாரத்துவாசாதி நிருவாணநிஷ்டர்களினது திருவிளையாட்ட மகிமையையும் பஞ்சகிருத்திய தசாவதார புவனபேத விசித்திரத்தையும் இன்னம்பலவாறான அற்புதங்களையுந் தெரிசிக்கின்ற புசுண்டயோகிசரிதத்தை தெரிசனலீலைக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

தேவபூசைகதை.—வசிஷ்டருக்கு உமாமகேஸ்வரர் சாந்நித்தியமாகி ஆதிமத்தியாந்தரகித சுயம்பு சாஸ்வத பரிபூரணபரமாத்மதேவை சந்தோஷ சுக்ஞான சமபாவனைமலர்களால் அதற்குரிய பூசாதிரவியங்களோடு அர்ச்சிக்கவேண்டுமென்றுணர்த்திய தேவபூசாசரிதத்தைப் பூசிதலீலைக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

வில்வபலகதை.—அண்டசராசரமுழுதுந்தோற்றியொடுங்குதற்கு மூலமா யவ்வண்டங்களனைத்தையு முள்ளடக்கி நிற்கும் அவாச்சியசொரூபத்தையுவமித்து சொல்லிய வில்வபலசரிதத்தை ஆந்தரலீலைக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

சிலைக்கதை.—பிர்மத்திற்றேற்றிய பிரபஞ்சம் சிலையிற்றேற்றிய சித்திரம்போலவென் றுவமித்துக்காட்டிய சிலாசரிதத்தை பாகியலீலைக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

அர்ச்சுனன்கதை. — சர்வேஸ்வரன் லோகரக்ஷகார்த்தம் கிருஷ்ணார்ச்சுனனாக வவதரித்து சங்கவிசர்ச்சன சந்நியாச ஈஸ்வரார்ப்பண பிர்மார்ப்பண யோக க்ஞானமென்னுஞ் சடுலக்ஷணங்களால் ஏகமேவசுபாவசொரூபத்தை தெளிந்து சருவரக்ஷக தரும ஸ்தாபனம் பண்ணுநிற்கும் பௌஷீகசரிதத்தை அவதாரலீலைக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

நிர்ச்சங்கனாய் கற்பனாதீத பரமாத்மாவைத் தெளிந்துநிற்பது:சங்கவிசர்ச்சனம்.—வர்ணாச்சிரம கோத்திரசூத்திரவிதிப்படி சற்கருமத்தைச்செய்து அதனால்வரும் பலப்பிரயோஜனத்தைத் தியச்சித்திருப்பது:சந்நியாசம்.—சத்திவிசேஷங்களால் மாறுபடினும் சருவயிதயப்பிரதேசத்தில்வசிக்குஞ்சத்தனொருவனேயெனத்துணிந்து தொய்தவிருத்தியைக் கெடுக்கப்படுவது: ஈஸ்வரார்ப்பணம்.—சிவேஸ்வரஜகத்தாய்விளங்கிய உலகமுஞ் சித்துருவாக விளங்கிய ஆத்மாவும் பிர்மசொரூபமெனத்தெளிந்து திரிபுடியற்றிருப்பது: பிர்மார்ப்பணம்.—பரத்துவசாமானியத்தைத்தெளிந்து அப்பியாசபூர்வகமாய்ச் சாதிக்கப்படுவது: யோகம்.—அப்பியாசதீர்க்கத்தால்த்தெளிந்தபடியே நிலைபெற்றிருப்பது:ஞானம்.

சதருத்திரன்கதை. — சமாதியுக்தனாகவிருந்த ஓர்சந்நியாசி சகஜானுபவத்தாற்கு வெளியிட்டுத் தனதுசங்கல்பத்தால்ச் சிவடன்முதல் ருத்திரபரியந்தமான நூறுஜென்மத்தை யெடுத்து அந்தருத்திரரூபத்தில்நின்று சந்நியாசிபரியந்தமான தனதம்சபூதர்கள் நூறுபேர்களையும் ஒருமுகமாகச்சேர்த்து அந்த நூறுபேர்களுக்குந் தமது ருத்திரசக்தியைக்கொடுத்து சரீரமுள்ளபரியந்தம் சீவன்முத்திப்பதத்திலிருத்தி சரீராந்தத்திலவர்களனைவரும்சதருத்திரமூர்த்திகளாகவிதேகபதத்தைப்பெற்றார்களென்கின்ற சதருத்திரசரிதத்தை சாரூப்பியலீலைக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

வேதாளகதை.—சூரிய வனிலப் பிரகாச கதலி யணுத்துவ வில்வபலாதிகளையுவமித்து பரமாத்ம சொரூபத்தை ஓரரசனை

முன்னிட்டு விளவிய வேதாளசரிதத்தைச் சொரூபவிலக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது. — அவையாவன — சிற்கிரணத்தாற் பிர்மாண்டங்களென்னும் பரிச்சேதவிருளைச்சிதைக்கின்ற ஞானசூரியனும் சொரூபசுபாவத்தாற் காலசத்தை வியோமசத்தை முதலிய நித்தியசத்தைகளை அணுத்துகளாகச்செய்யும் பரமானிலமாயும் ஜகத்தென்கின்ற தீர்க்கசொப்பனத்திற் சங்கற்பமாகிய சொப்பனம் நானாவிதமாகத்தோற்றியும் அவற்றில்மறைபாது சாந்தப்பயிர்ச்சியினால் பிரிவற்றிருக்கின்ற பிரகாசசொரூபமாயும் வேறு வேறாகப்பிரித்தவிடத்தும் அவையாவுந்தானாக விளங்குவதாற் கதலிரூபமாயும் பிர்மாண்டங்களெல்லாந் தோற்றியொடுங்குவதற்குமூலமா யவ்வண்டங்களனைத்துந் தமதுசொரூபவியாபகத்தில் அணுத்துகளாயிருந்தும் அறிதற்கரியதாய்ப் பிரமாணாதீதமாயிருப்பதால் அணுரூபமென்றும் சர்வாவயவங்களுக்கும் அவயவியாயிருந்தும் ஞானவிகாசத்தால் பரிச்சேதரகிதமாயிருப்பதால் வில்வபலஞ் சிலாபங்கயமென்றும் நிரூபிக்கப்படுவது.

பகீரதன்கதை.—திரிதுலகுருவைச்சேர்ந்து சித்தோபசமனார்த்தம் ராச்சியாதிபத்தியத்தைத் தியச்சித்து சாந்தி சந்தோஷ சமபாவனைசம்பூர்த்தியால் ராச்சியபட்டாபிஷேகம்பெற்று ஈஸ்வரானுக்கிரகத்தால் ஆகாசகங்கையை ஆகரிஷித்து க்ஷீரணித்துக்கிடந்த வம்சத்தாரை க்ஷீரனோத்தாரணம்பண்ணி அவ்வாகாசகங்கையை சர்வசன பாவபரிகாரார்த்தம் பூலோகத்தில் நிலைநிறுத்தித் திரிபுவனகீர்த்தியை நாட்டினானென்கின்ற பகீரதசரித்திரத்தைப் பவித்திரவிலக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

சிகித்துவசன்கதை.-சுவர்ணதேக சுவேதாம்பர முத்துமாலை முப்புரிநூலாதியே தேசிகச்சின்னமென்றும் பூசிக்கத்தக்கவர்கள் புத்தியீனர்களாயிருந்தால் எவ்விதவுபாயத்தினும் அவர்களைத் திருத்தி உஜ்ஜீவிக்கப்பண்ணலாமென்றும் ஸ்ரீகளுக்கு பதியே பரப்பிர்மமென்றும் சித்தத்தியாகமே சகலத்தியாகமென்றும் சர்வமும் பிர்மமயமென்றும் இத்தியாதிலக்ஷணங்களை நிலைநிறுத்திய சூடாலையென்னுந் தனதுபாரிகையான தேசிகசிகாமணியால் பேறுபெற்ற சிகித்துவசுவரசனதுசரிதத்தை தாசியவிலக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

கசன்கதை.—விவிததிருஷ்டியிற்றோற்றிக் கொண்டிருக்கும் அகங்கரம் சசவிஷாணம்போலப் பிரமதிருஷ்டியி லெக்காலமு மில்லையெனத்தெளிந்து சித்தத்தியாகபரனாய் விஸ்ராந்தியடைந்திருக்கின்ற கசமுனிசரிதத்தைப் பரித்தியாகலீலைக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

மித்தையாபுருஷன்கதை.—அபிமானபேதத்தாற் ஜெனனபரம்பரையைவிருத்திபண்ணி அதனால்வரும் லாபாலாபத்தைச் சுமக்கின்ற அகங்காரத்தைப் புருஷனாகவர்ணித்துக்கூரிய மித்தையாபுருடசரிதத்தை அகங்காரலீலைக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

பிருங்கீஸ்வரன்கதை.— கைலாசேஸ்வரனது அனுக்கிரகத்தால் துண்டுதுண்டாகக்கூறுபடுத்திய அகங்கரத்தைச்சிதைத்து மாகர்த்தன் மாபோகி மாத்தியாகியென்கின்ற விரதத்திரயசம்பன்னனாய்ப் பரிச்சேதரகிதனாகத் தடையற்றுவிளங்கிய பிருங்கீசசரிதத்தை விரதலீலைக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

இக்ஷுவாகுகதை -பிரமதிருஷ்டியினா லகங்காராதிகள் வர்ச்சித்து ஏயகுணப்பிரத்தேக மைத்திரியாதி குணவிசிஷ்டனாய் விளங்குகின்ற முத்தாத்மாவே சருவராலும் ஆராதிக்கதற்குரியனென பகவன் மனுவினாலனுக்கிரகிக்கும் இக்ஷுவாகுசரிதத்தை ஆராத்தியலீலைக்கி நிதரிசனமாகச்சொல்லப்படுவது.

நவ்விக்கிராதன்கதை.—விமலதிருஷ்டியில் விவிததிருஷ்டியும் விவிததிருஷ்டியில் விமலதிருஷ்டியும் இல்லையெனத்தெரிவிக்கும் முனிவரத மானுவேட சம்வாதசரிதத்தை அபாவலீலைக்கி நிதரிசனமாகச் சொல்லப்படுவது.

## மௌனபஞ்சகம்.

வாக்குமௌனம் மனோமௌனம் காஷ்டமௌனம் சுழுத்திமௌனம் மகாமௌனமென்றைந்துபேதமாய் ஞானபூமியின் முடிவாய்விளங்கிய துரிய துரியாதீதவவஸ்தையை நிரூபிக்கப்படுவது. அவற்றுள்.-வாக்குமௌனம்.—தர்ம அர்த்த காம மோக்ஷ பிரதிபந்தகமாகிய அதர்ம வ்யர்த்த துக்க பவபந்த அரிஷ்ட சம்பந்தமான அப்பிரயோஜன வாசகங்களைத் தடைசெய்வது.

மனோமௌனம்.— பஞ்சேந்திரியத்துவாரா விவிதவிஷயங்களிற் றுவியோடுகிற பகிர்முக விருத்தியைத்தடுத்து அவற்றையகமுகமாக்கி அதிஷ்டானப் பிரமத்திற் சதாநாட்டம் வைத்திருப்பது. காஷ்டமௌனம்.— அசத்தியம் அநிர்தவாதம் தோஷதிருக்கு மாயோபாயகம் நிர்த்தயை நிஷ்காரணவைரம் பாபசரிதம் பிரஜாக்ஷயம் துரிதாலயம் சுரதாபேக்ஷை தவிர்ச்சென்னியம் துராசாரம் துரார்ச்சிதம் நரகசாதனமென்னும் அகங்காரபந்திகளாகிய சிவச்சேஷ்டைகளை நிவர்த்தித்து அதிஷ்டானமாத்திரமாக நிலைபெற்றிருப்பது.

சுழுத்திமௌனம்.-நியாசநிஷ்டை அப்பியாசநிஷ்டை சின்மயநிஷ்டை உபசாந்தநிஷ்டை நிருவாணநிஷ்டையென்னும் நிஷ்டா பஞ்சகரூபமாக விதிக்கப்படுவது. அவற்றுள். நியாசநிஷ்டை.— சர்வபரங்களையும் சர்வேஸ்வரன்பக்கலிலேபுகவிட்டு நிர்ப்பரத்துவனாக அனுசந்திப்பது. அப்பியாசநிஷ்டை.- சுதந்தரவிருத்தியை லேசாலேசமாக்கி கற்பூரம்போல உலர்த்தி அருட்டிறுகியப் படுத்துவது. சின்மயநிஷ்டை.— நாஸ்திகனைப்போலச் சூனியாகிருதியாக லயப்படுத்தாமல் மூட கோர சாந்த சுத்த சுபாவமென்னும் பஞ்சவிருத்தியைச்சோதித்துப் பரப்பிரமசாக்ஷாத்காரம் பண்ணுவது. அவற்றுள். மூடவிருத்தி.—மடமையாய்ச் சற்றேனும் பிரக்ஞையற்றுச் சுழுத்தனைப்போலச்சடத்துவமிகுதியாய்ப் பீஜரூபமாகவடங்கியிருந்து ஓர்காலத்திற் பிரக்ஞையானது சற்றே அங்குரமாகிற் பார்ப்பதற்குப்பயங்கரமாம்படிக் கோரரூபமாய்த் தடிப்பாரற்றுதயமாவது. கோரவிருத்தி.—சலனரூபமாய் மிகுதியானபாரத்தைச்சுமந்துகொண்டு குலாலசக்கரம்போலச் சற்றேனும் ஓய்வில்லாது சஞ்சரித்துப் பிரயாசமிகுதியால் வருத்தமுற்று விவிதவிஷயங்களிற்றுவியோடி விஷயாக்கினியால் தகிக்கப்பட்டுத் துக்கத்துக்காற்றுமல் ஓய்ந்தவிடத்துச் சற்றேசாந்தமுறிப்பது. சாந்தவிருத்தி.—சீதோஷ்ணசமமாய் ஏற்றத்தாழ்வுகளை விசேஷிக்காமல் அதைப்பற்றியெழும்பும் விருத்தியை நசிப்பித்துத் துக்கோபசமனமாத்திரத்திற் சேதனர்நின்றநிலைக்கி இன்பத்தைக் கொடுப்பது. சுத்தவிருத்தி.—நஞ்சினைநஞ்சால் இரும்பினையிரும்பால் அம்பினையம்பாற்கெடுப்பதுபோல ஆசிரதரனுர்தாதிகுணாங்

களைப் போக்குதற்கெதுமறையாய்ச் சத்தாதிகுணங்களாகப் பிரிந்தெழுந்து அனுர்தாதிகளைநிவர்த்திபண்ணி ரக்ஷித்தும் சற்றேனும் பிரிவில்லாத சகலகுணசம்பூரணமாகவொருமித்திருப்பது. சுபாவ விருத்தி.—சூனியவாதிகளுக்குச் சூனியமாய் பிர்மவாதிகளுக்குப் பிர்மமாய் விக்ஞானவாதிகளுக்கு விக்ஞானமாய் சாங்கியர்க்குப் புருடனு யோகியருக்கீஸ்வரனுய்ச் சைவருக்குச்சிவமாய்க் காலவாதியளுக்குக்காலமாய் மத்தியர்க்குமத்தியமாய் சமதிருஷ்டியையுடையர்க்குச் சகலமுமாகநின்றுஞ் சற்றேனும் மனமானது விகற்பித்தெழாமல் ஏகாகாரமாக க்ஷமித்திருப்பது.

உபசாந்தநிஷ்டை.—சுத்தவசுத்தங்களுக்குமூலமான சித்த சங்கல்ப்பம் வர்ச்சிக்குமிடத்து சர்வமும்பிர்மமயமென்னும்அழுத்தத்தாற் சர்வதுக்கமும் நிவர்த்தித்து அற்புதசுவாநுபவங்கள் தினேதினேயபிவிர்த்தியாகவிளங்குவது.

நிருவாணநிஷ்டை.-திதிலயோற்பவ பந்தமோக்ஷ தொந்துவ பேதமுழுதும் வர்ச்சித்து பிர்மசாக்ஷாத்காரமகிமையால் மாயையைச்சுவாதீனமாக்கிக்கொண்டு ஆசிரதரபேக்ஷிதப்பிரகாரம் விளையாடப்படுவது.

## மகாமௌனம்.

அயன் மால் சங்கரன் அருக்கன் இந்திரன் சதாசிவன்முதலிய நித்தியசூரிகள் சேர்த்திப்பிரிவோடும்விளங்கியஅற்புதசுவாநுபவ மகிமையை வசிஷ்டனிராமனுக்குபதேசித்தபடி வால்மீகர் பரத்துவாசனுக்கனுக்கிரகம்பண்ணி வசிஷ்டோபதேசமான அமல ராமாயணத்தைச் சம்பூர்த்திபண்ணுவது.



## கைவல்ய நவநீதம்.

பாசுரம். திருமகள்கொழுணன் றேசிகபெருமான், திருவுளங்கனிந்து நான்முகனுக், கருள்செயவசிஷ்டன் சத்திநற்பராச, னவன்வியாசன் சுகர்க்கருளிப், பரவியமுன்னூல்ப்பண்டிதர்க்கல்லால்ப், பாலருக்கடாதெதன்றெண்ணிக் கருணையாலெவர்க்குங் காரணகுரு நம், கமலநாரணன்றனையிறைஞ்சி. (க)

அன்றுளோர்சித்தி அறமொடுதிரமும், ஆயுளும் அருந்தவ வலியும், இன்றுளோரிழிவும் மெண்ணிவேறெண்ணு, தேசிகநாய கன்றனைநோக்கிக், கன்றுபோல்க்கதறி அயர்ந்ததாண்டவன்றன், கனவினில் கருமுகில்நீலக், குன்றுபோலெழுந்து குறையெலா மகற்றிக் கோயிலாயவனுளத்திருந்தே. (२)

ஆரணப்பொருளை அருந்தமிழ்க்கவியால், அன்றுளோர்சித்தி நீற்றேதுங், காரணங்குறையா துரைத்தகைவல்யக் கருத்தினைத் தொகுத்தெனதுள்ளம், பூரணமாக்கத் தென்திருக்கோஷ்டிப், புவனிமேலருள்சுரந்தெழுந்த, நாரணன்கமலை நாதன்கைவல்ய, ஞானதேசிகனருளாலே. (௩)

அருமறைப்பொருளாயமைந்த கைவல்ய, மன்றிமற்றொன் றையும்நாடேன், கருணைநாரணனென் றெய்வமேயல்லால்க், கனவிலும் வேறொன்றைக்கருதேன், இருவகைவினையா லேது வந்துறினும், இசைந்திடேன் சச்சிதானந்தப், பரமஞானிகள்தன் னடியவர்க்கடியாய்ப், பரவுவேன்பாதபங்கயமே. (௪)

இருநூற்றித்தொண்ணூர் மூன்றே, டிசைத்த பாசுரத்தி னுள்ளே, ஒருநூற்றியெட்டால்த் தத்துவம், ஒருப்படவிளக்கிப் பின்னே, தருநூற்றியெண்பத் தைந்தால், சந்தேகந்தெளிவித் தாண்ட, குருமூர்த்தி தாண்டானுள்ளக், குரிசில் நாரணைக்குதள் போற்றி. (௫)

அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற பரப்பிர்மதத்துவத்தை ஏகநாயகனெனக்கோசரித்து ஹரி சிவ விதி இந்திராதி அனந்த மூர்த்திகளாகப்பணிந்து ஸ்ரீபரமசற்குரு ஈஸ்வரசற்குரு ஞானசற் குருவெனத்துதித்து தாண்டவப்பிரபுநிமித்தம் நன்னிலத்தின் கண் ணெழுந்தருளிய ஸ்ரீமந்நாராயணசற்குருவென வாழ்த்தி நம திஷ்டதெய்வமான கோஷ்டிநாதனெனப்பணிந்து இப்படிக்கோச ராகோசரமுழுதும் ஒருப்படுத்தி நாரதசுகராதி தற்பரநிஷ்டர் களாலனுபவிக்குந் தடையற்றவானந்தமென்னும் முத்திப்பிரயோ ஜனத்தை நதிநதாசரணம் மண்டூகதாவனம் சராசனநியம் நவ்வி நோக்கம் பக்ஷிக்கிராகியமென்னும் வியாக்யானபஞ்சகருபமாய் நிருபிக்கப்படுவது.

## நதிநதா சரணம்.

நதியாசரணம் நதாசரணமென்னத்துவிபாகமாய். அவற்றுள்: நதியாசரணம்.—பூருவோத்தரமென் றிரண்டுபிரிவாய் அவற்றுள் பூருவம்.— ஸ்ரீமுக உபதேச ஆரம்ப அவஸ்தை மோக்ஷமென் றைந்துபேதமாயிருப்பது.

## ஸ்ரீமுகம்.

பொன்னிலமாதி ஏழுபாசுரங்களால்க் கைவல்யநவநீதத்தின் இருதயரூபமாகவிருக்கின்ற அதீதப்பிர்மத்தை ஏழுபிரகாரமாகப் பிரித்துவணங்குவது.

முதலாவது.—சருவசிவசாக்ஷியாய்ப் பொன்னிலமாதியெந் நிலங்களினுஞ் சிரேஷ்டமாகிய எழுநிலம் அந்தயெழுநிலத்திலுஞ் சிரேஷ்டமாகியநன்னிலம்அந்தநன்னிலமாகியதுரியபூமியை மருவி சருவபூமியும் வியாபித்திருக்கும் ஏகநாயகன்பதங்கள்போற்றி. இரண்டாவது.— திதிலயோற்பவ கிருத்தியகாரணமாய் மாலாய் ஈசனாய் அயனாய்த் தானேயளவற்றமூர்த்தியாயமர்ந்தும் பூரண முத்தனாய்நின்றும் இன்பப்புணரியாதவனாய் சதாஉதயஞ்செய் யும் விமலபோதசொரூபத்தைப்பணிகின்றேன். மூன்றுவது. — யானே யெங்குமாம் பிர்மமென்றும் என்னிடத்தில்க் கவருடைப் புவனமுழுதுங் கல்ப்பிதமென்றும் அறிந்து சுவர்மத்திய ககனம் போல எவருடையகிருபையினால் யானேசொரூபசுபாவமானேன் அவருடையபத்மபாதந் தினந்தோறும்பணிகின்றேன். நான்கா வது.— என்னுடைய மனோபுத்தி இந்திரிய சரீரங்களென்னும் பனியை என்னுடையஞானரவிக்குமுன்னிலையாக்கினானும் என்னு டையஅம்சபூதனைநீயும் ஏகமென்றைக்கியமாக்க என்னுடைய குருவாகத்தோன்றிய ஈஸ்வரனைவணங்கினேன். ஐந்தாவது. — அந்தமும் நடுவுமில்லாததாய் அநாதியாய் ஆகாயத்தைப்போல சதாபிரகாசிக்கும் ஞானசற்குருபாதம்போற்றி இதுபந்தம் இது மோக்ஷமென்பதைத்தெரியப் பரந்தநூலைப்பார்க்கமாட்டாமைந் தருங்கூட உணரும்படி வஸ்துதத்துவத்தைச்சொல்லுவேன். ஆறு வது.— விஸ்தாரமான வேதாந்தக்ஷீராப்தியில்மொண்டு ஆசாரியர் கள் அத்துவித தொய்த விசிஷ்டமென்னுஞ் சாஸ்திரத்திரயகடங் களில் நிரப்பிவைத்திருக்கின்ற பால்முழுதையுங்காய்ச்சிக் கடைந்

தெடுத்துத்திரட்டிக் கைவல்யநவநீதமாகக்கொடுத்தேன் இத்தை யடைந்தவர் பசியில்லாதவர்களாகையால் விஷயமண்ணைத்தின்று அலையார்கள். ஏழாவது.—முத்தனையென்னையடிமைகொண்டகர்த்தாவாகிய வேங்கடேசமுகுந்தனைவணங்கிச்சொல்லுங் கைவல்ய நவநீதத்தைத் தத்துவவிளக்கஞ் சந்தேகந்தெளிதலென்று நாமம் வைத்து இருபடலமாகப்பிரித்து உரைசெய்கின்றேன்.

## உபதேசம்.

நித்தியமாதி பதினேழுபாசுரங்களால் ஞானசற்குருவையாசிரயித்த சாதனசதுஷ்டயசம்பன்னனான ஓரதிகாரியின் பக்குவசமஸ்காரத்தைப்பண்ணி பிர்மோபதேச பிர்மாபரோக்ஷ பிர்மசகஜ பிர்மசாக்ஷாத்கார சருவசம்பூரண சருவசம்பூர்த்தியை யடைதற்குக் காரணபூதையாயும் திரித்துவத்திலொன்றாயு மிருக்கின்ற தேகியை அவ்வதிகாரிக்கி அனுபவரூபமாயுணர்த்தப்படுவது.

முதலாவது.-நித்தியமாகியசரீரியையும் அநித்தியமாகியசரீரங்களையும் நிச்சயித்தறிகிற விவேகமும் மத்திய இக பர வருபோகப் பிராப்திகளில் விராகமுஞ் சத்தியந்திரநிலையாகவிருக்கவேண்டும் சமம் தமம் உபரதி திதீக்ஷை சமாதானம் சிரத்தையென்னுஞ் சட்பேதமான சம்பத்தும் மோக்ஷமாத்திரம் அபேக்ஷித்திருக்கின்ற முமுக்ஷுத்துவமும் சாதனசதுஷ்டயமென்று சத்துக்கள் சொல்லுவர்.

இரண்டாவது.—சமம் தமம் விடல் சகித்தல் சமாதானஞ் சிரத்தை என்கின்ற ஆறில் அகக்கரணத்தைச்சிக்ஷித்து எற்றவற்றங்களை ஒக்கப்படுத்துவது: சமம்.-விவிதவிஷயங்களிற்றாவியோடுகிற புறக்கரணங்களைச் சிக்ஷபண்ணுவது: தமம்.-லக்ஷியத்திலமரும்படி மனோவிவகாரங்களைத்தியச்சித்திருப்பது: விடல்.-சகதுக்காதிபோராடினும் பிராரத்வபீடிதமென்றனுபவிப்பது: சகித்தல்.

மூன்றாவது.—சிரவணார்த்தத்தை மாத்திரஞ் சித்தத்தைச் சரசமாகச் சிந்திக்கவைப்பது: சமாதானம். சிரேஷ்டமான சாஸ்திர சற்குருவைச் சிநேகமாகப்பற்றுவது: சிரத்தை சிரேஷ்ட மிகுந்த ஆறுபேதமான சமதமாதிச்சொற்கு அர்த்தமிதுவென்று மேலோர்சொல்லுவர்.

நான்காவது. — சாதனமில்லாமல் ஒருகாரியத்தைச் சாதிப்பவர்கள் உலகத்திலில்லை ஆகையாலிந்தச் சதுஷ்டயசாதனம் அடைந்தவர்க்கே பிர்மக்ஞானம் உண்டாகும் சாதனசதுஷ்டயமில்லாமல் நூதனவிவேகியுள்ளத்தில் அந்தப்பிர்மக்ஞானம் நுழையாது நுழையுமாகில் அவன் பூதஜென்மங்களில் அளவற்ற புனிதனாகிய புருடனாகும்.

ஐந்தாவது. — அதிகாரியான இவன் ஆதியாத்மீக ஆதிதெய்வீக ஆதிபௌதீகமென்கின்ற தாபத்திரயத்தையடைந்து வெய்யில் சகிக்காப்புழுவைப்போல் வெம்பிப் பவத்தைப்போக்கும் ஞானதீர்த்தம் படிதற்பொருட்டுப் பதட்டமுற்றான்.

ஆறாவது.—இப்போ அமைந்த மனைவி மக்கள் அர்த்தமென்னும் ஈஷணாத்திரயத்தைவிலக்கி வெயினர்வலையிற்சிக்கி கைக்கி அகப்படாமல் முட்டாக்கினேடுஓடியமானைப்போலப்பஞ்சகோசவலையில்ச்சிக்கி அதற்குவசமாகாமல் அதனையறுத்தற்கசக்தனாகப் போனவன் வெறுங்கையோடுபோகாமல் அவ்வண்ணமாகவே சென்று ஞானாசாரியனைக்கண்டு தீர்க்கமாகவணங்கினான்.

ஏழாவது.-கூப்பியகரங்களையுடையனாகநின்று அழுதுகொண்டு சொல்லுவான் தாருமாறாகச்சேர்ந்து நாடகசபையைப்போல தத்தங்கருமானுரூபமாய்ப்பிரிந்தோடும் மாயவாழ்வென்னுஞ்சோகத்தால் வாடினேன் ஐயனே என்னுள்ளமானதுகுளிரும்படி மாறாகப் பிணங்கிய கோசபாசப் பின்னலைச்சிதைத்து நேராகயிணங்கிய குருவே என்னைரக்ஷிக்கவேண்டும்.

எட்டாவது.—ஐயன் சிசுப்பிரவர்த்த மாதாவைப்போன்று ஆமையைப்போல அகத்தில்க்கருதி மீனைப்போலக் கண்ணினால் நோக்கிபக்ஷங்களாலறவணைக்கும் பறவையைப்போலக்கைகளால் தடவி சமீபத்திலிருத்தி உனதுபிறவிமாற்றும் ஒருபாயமிருக்குது சொல்வேன் சொன்னபடிகேட்டையாகில் தொடர்ந்துவந்தபவம் உன்னைவிட்டுத்தொலைந்துபோகும்.

ஒன்பதாவது. — தொடர்பவந்தொலையுமென்ற வாக்கியங் கேட்டமாத்திரம் விசாலமடுவில் மூழ்கினவனைப்போலச் சரீரமுங்குளிர்ந்து உள்ளமும் ஆறி அன்பானது அடர்ந்தொழுகுவது

போல ஆனந்தபாஷ்பத்தைக்காட்டி மடன்மலர்ப்பாதத்தைப் புனராவர்த்தி வணங்கி எழுந்துநின்று ஈதுசொல்லுகிருன்.

பத்தாவது.-சுவாமி தொண்டன்சொன்னது கேட்கமாட்டாதவனானுலும் நின்னுடையகிருபையினுலே நீரேயென்னையாளலாம் உன்னதுபிறவியைமாற்றுதற்கு ஒருபாயமிருக்குமென்று சொன்னீர் அந்தஉபாயம் இன்னதெனக்காட்டி ஈடேற்றவேண்டும்.

பதினேருவது.—அடங்கியவிருத்தியையுடையன் இவனென்னத்தெரிந்து பின்பு நெருங்கியமட்கூட்டுக்குள்ளிருக்கும் புழுவைக் குழுன்சத்திக்கும் குளவியின்கொள்கையொத்து ஆத்மசொரூபத்தைமருவவேண்டித் தொடங்கியகுரு உடம்புக்குள்ளிருக்கின்ற சீவனைத் தன்முகமாகத்திருப்பி அவனைப்பார்த்து உபதேசம் ஓதுகிருர்.

பன்னிரெண்டாவது.-என்மகனேவாராய்த் தன்னைமறந்தவன் ஜனனமரண மரணஜனனமுடையனுய்ப் போதமாராயுந்தன்னைத் தானென்றறியுகிற பரியந்தம் நீங்காதசுழல்க்காற்றில் அகப்பட்ட செத்தையைப்போலக் கீழதுமேலது மேலதுகீழதாய்ச் சுழன்று சுழன்று ஓயாது காலச்சக்கரப்பிர்மையில்ச் சஞ்சரிப்பன்.

பதின்மூன்ருவது. — முன்புதன்னைக்கண்டு தலைவனைத்தெரிசிப்பானுகில்ப் பின்பு அந்தத்தலைவன் தானுயும் பிர்மமாயுமிருந்து பிறப்பை நீக்குவன் நீயுன்னையறிவையாகில் உனக்கொருபயமேதியுமில்லை என்னை நீ கேட்டபடியால் நான் உனக்கு இத்தைஉபதேசித்தேன்.

பதினுன்காவது. — ஐயா! என்னை நானறியாதவனுக நினைத்தோ சொன்னீர் நானென்பது படுத்துவமில்லாமல் மமதுருவாகவிருக்கின்ற ஊர்வன ஜலசர மிருக பக்ஷி தாவரமென்கின்ற பஞ்சப்பிராணிகளைப்போல தன்னைத்தானென்றறியாத மனுஷியாள் தரணியிலும் ஒருவரிருப்பரோ பின்னைத்தானவர்கள்முழுதும் பிறந்தும் இறந்துஞ்சுழல்வதேன் நின்னைத்தானேநம்பிய எனக்கு நிச்சயத்தை யருளுவீர்.

பதினைந்தாவது. — ஊர்வன ஜலசர மிருக பக்ஷி தாவர மனுஷிய தேவமென்றேழுபேதமாகவிருக்கின்ற இதுதேகம் தனித்தனியே இந்தத்தேகாதங்களுக்கதிஷ்டாதாவாய் தானுகவும் வேறு

கவுமிருந்து சத்துலக்ஷணத்தாற்காப்பாற்றியும் சரீரம் அவஸ்த்தை அபிமானிகளுக்குப் பிரத்தேகனாய்நின்று அவற்றில்முழுகாமல் சித்துலக்ஷணத்தால் அதன் இதாகிதங்களைப்பகுத்துணர்ந்தும் மம துருவம்நீங்கிய ஆனந்தலக்ஷணத்தால் அகம்அகமென்று சுவதச் சுகியாயினைப்பாற்றியும் சச்சிதானந்தமூன்றும் ஒருப்படுமிடத்து சகலகுணசம்பூரண நித்தியசாம்பிராச்சிய சருவாதிபத்தியத்தை யடைந்தும் அவாச்சியரூபனாகவிருக்கின்ற இவன்தேகியென்றும் விஸ்தாரப்பொருளை யுள்ளடக்கி இன்னதுதேகந்தேகி இவனென உணர்வன்யாவன் அன்னவன்தன்னைத்தானென் றறிந்தவனாகு மென்று சஞ்சேபரூபமாய்ச்சொன்ன சற்குருவாக்கியத்தையுபே க்ஷித்து பின்னையுந்தேகியார் இந்தத்தூலமல்லாமலென்றுகேட்ட அறியாவினாவுக்குப் பீடைகொண்டவர் உடனேஅறிவினாவென்ப தைக் குறிப்பினாற்றெரிந்து புன்சிறிப்புடையரானார்.

பதினாறுவது. — தேகத்தையல்லாமல் யார்தேகி அவனைக் காணேனென்றாய் தேகமில்லாவிடத்து மோகமானசொப்பனத் தில்வந்து முளைத்திடுமவன்யார் சோகமானசொப்பனம் நீங்கிய விடத்து சுழுத்தியைப்பார்த்தவன்யார் நீயாகச் சாக்கிரத்தில் சிந்திக்கும் அறிவுதான்யாது அதைச்சொல்வாய்.

பதினேழாவது.-சாக்கிரத்தைப்பார்த்ததும் அதிலுள்ளநினைவு நீங்கி சொப்பனத்தைப்பார்த்ததும் சாக்கிரசொப்பனமிரண்டும் நீங்கியவிடத்துச் சுழுத்தியைப்பார்த்ததும் நான் தினமனுபவிப் பதனால் தேகியொருவனுண்டென்பதொக்கும் தெரியவுமில்லைச் சற்றே மனதினிலுதிக்கும் பின்புமறைக்கும் அதையருளுவீர்.

பிர்மோபதேசம். — அதிகாரி சற்குரு ஐக்கிய சொரூபமென் கின்ற திரித்துவப்பொருளையும் உணர்வொளிநிறைவாய் ஏகமாய்ச் சமமாயிருக்கின்ற திரியேகப்பொருளையும் தத்தம் அதிகாரானு ரூபமா யுணர்த்தப்படுவது. பிர்மாபரோக்ஷம். — ஆசாரியருப தேசித்த பரோக்ஷவாசகத்தை அனுபவரூபமாய்க்காணப்படுவது. பிர்மசகஜம். —நிறைவா யொளியாய் உணர்வாய் ஏகமாய்த் துவய மாய்ச் சமமாய் ரூபமாய் நாமமாய்ச் சாட்டியபாகம்விடவிட நிறை நிறையே தன்மயமாக அனுபவப்படுவது. பிர்மசாக்ஷாத்காரம்.— பாஞ்சபூத பௌதிக நாம ரூப சம துவய ஏக உணர் வொளி நிறை

வாதி சர்வமும் பிர்மரூபமாய்ப் பிரத்தியக்ஷமாவது. சருவசம்பூரணம்.— அத்துவித தொய்த சுபாவ விசிஷ்ட சைவ வைஷ்ணவ சுவாத்ம சௌராதி சமஸ்தமதங்களும் ஆசிரயிப்பவர்க்குத் தந்தம் அதிகாரானுரூபமாயுணர்த்தியும் அவையாவுஞ் சற்றேனுமாறுபடாது தங்கள்சுவாநுபவத்துக்கொத்திருப்பது. சர்வசம்பூர்த்தி.- ஹரிசிவப்பிர்மாதிகளைப்போல மகாதிருஷ்டியையுடையனாய் உதயாஸ்தமின்றி எக்காலமும் விளையாடப்படுவது.

## ஆரம்பம்.

சாதனசதுஷ்டயசம்பன்னனான ஓரதிகாரி தாபத்திரயதுக்கத் துக்காற்றாமல் ஈஷணாத்திரயங்களைத்துறந்து ஞானசற்குருவையாசிரயிக்க அவர்பக்குவசமஸ்கார வாக்கியபோதமகிமையால் தாக்கோபசமனமாக்கி தேகதேகியைவிவேகித்து தேகத்துக்குள்ளிருக்குந் தேகியைப்பார்த்து நியாயத்துவயரூபமாய்ச் சொல்லத் தொடங்குவது.

சாதனம்.— விவேக விராக சம்பத்து முமுக்ஷுத்துவமென்னச்சதுர்விதரூபமாயிருப்பது. அவற்றுள். விவேகம்.-சரீரம் அநித்தியம் சீவன் நித்தியம் சரீரசீவன் அநித்தியம் ஈஸ்வரன் நித்தியம் சீவேஸ்வரஜகமூன்றும் அநித்தியம் அதற்குமூலகாரணமான பரசொரூபம் நித்தியம் நித்தியசாஸ்வதமான அந்தப்பரசொரூபமே குருசொரூபம் இந்தக்குருசொரூபமே அந்தப்பரசொரூபமென நிச்சயித்தறிவது. விராகம்.— அநித்தியரூபமான இகபரபோகங்கள் முழுதிலும் அருவிருப்புடையனாய் இச்சையற்றிருப்பது. சம்பத்து.— நித்தியரூபரான பரமசற்குருவை யடைதற்கேதுவான சம தம உபரதி திதிக்ஷை சிரத்தை சமாதான சாட்குண்ய சம்பூர்த்தியை யடைந்திருப்பது. முமுக்ஷுத்துவம்.— மமதகங்கர தொந்துவரூப மிசிரசத்துவாதி அசுத்தகுணங்கள்முழுதும் வர்ச்சித்து சுத்தசத்துவகுணசம்பூரண சுசீலப்பிரபுக்களாலனுபவிக்கின்ற சீவன்முத்தியினிடத்தும் லிங்கசரீரம் அடங்கும்போது அந்தச்சுத்தசத்துவ சுசீலசற்குணங்கள் முழுதும் அடங்கி அற்புதரூபமாகப்பிரகாசிக்கின்ற விதேகமுத்தியினிடத்தும் அத்தியந்தம் விருப்பமுடையனாயிருப்பது.

தாபத்திரயம்.—ஆதிஆத்மீகம் ஆதிதெய்வீகம் ஆதிபௌதீகமென்னத் திரிவிதம்.—பிர்மத்துக்கு அபின்னமான ஆத்மசொரூபத்தைமறந்து மனச்சக்ஷுராதிஅநாத்மவர்க்கங்களை ஆத்மபுத்திபண்ணி அதற்குரிய வியாதியாதிபீடைகளினால் வருகின்ற மனோதுக்கம்: ஆதியாத்மீகம்.—பரதெய்வத்தைமறந்து புவனதெய்வங்களாகப்பேதித்து நரக சுவர்க்க சீதோஷ்ணாதிகளால் வெப்பமுற்று அதனால்வருகின்ற மனோதுக்கம்: ஆதிதெய்வீகம்.—தேவோகம் மனுஷியோகம் சித்தோகமென்னச் சுதந்தரித்து அதற்குரிய லாபாலாபங்களைச்சுமந்து அதனால்வருகின்ற மனோதுக்கம்: ஆதிபௌதீகம்.

துறவு.-பூசாசேவைக்கருகமாயும் முமுக்ஷுக்களுக்கு அநருகமாயுமிருக்கின்ற காஷாயாதிவேடத்தைக் கௌணமாய்க்கொண்டு துறவுக்கு நிராசையே பிரதானகாரணமென்றுணரப்படுவது.

சற்குரு.—பரசொரூபமே குருசிஷ்யனெனப்பிரிந்து தமதம்ச பூதனான சிக்ஞாசுவுக்கு சுக்ஞானியாய்நின்று நியதி பூர்த்தியென்னும் உபயசமஸ்காரத்தாலுணர்த்தப்படுவது. நியதிசமஸ்காரம்.—அகம்பிர்மம் சிவம்பிர்மம் விஷ்ணுபிர்மமென்று சேதனர் நின்ற நிலைக்கி யோகசமாதியினொலொடுக்கிக்காட்டுவது. பூர்த்தி சமஸ்காரம்.-சமத்துவயேகபரிபூரணராயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்மதத்துவத்தை எனதிடத்தும்உனதிடத்தும் விஷ்ணுவினிடத்தும் பிர்மாவினிடத்தும் சருவப்பிராணிகளிடத்தும் சகஜானுபவத்தால் இன்புருவாகநிறைவுற்றுக் காண்பது.

பக்குவசமஸ்காரம்.-சிந்தன திருஷ்டி அபயப்பிரதான சமீபத்திருக்கை வாக்கியபோதமென்னும் பஞ்சசமஸ்காரரூபமாய்ஆசிரயமான அதிகாரியின்பக்குவா பக்குவத்தைப்பரீக்ஷிக்கப்படுவது.

துக்கோபசமனம்.-தேகபுளக சித்தசிராந்த ஆனந்தபாஷ்ப புனர்ச்சேவித அசக்தித்துவ தயாபாத்திர அபவர்க்கவாஞ்சித சந்நிதிப் பிரார்த்தனையென்னும் அஷ்டப்பிரீதியை அவ்வதிகாரி சற்குருமுன்னிலையில் வெளிப்படக்காட்டுவது.

நியாயத்துவயம்.-முன்னேதாலத்திலிருக்குமரங்களைக்காட்டி அதன்முடிவில்த் தனித்திருக்கு மூன்றும்பிறையைத்தெரிசிக்கச் செய்பவர்போலும் சுற்றிலுமிருக்கும் உடுக்களைக்காட்டி அதன்

மத்தியப்பிரதேசத்தில் நித்தியசுமங்கலியாய் சதாவசிஷ்டரோடு கூடிக்கொண்டிருக்கும் அருந்ததியைத்தெரிசிக்கச்செய்பவர்போலும் அத்தியாச சத்தியோற்பவரூபமாய் விஸ்வவிராட தூலத்தை முன்னேகாட்டி அதற்குமூலமாய் அதன்முடிவில்த் தனித்திருக்கும்சமத்துவயேகபரிபூரணரான பரப்பிர்மத்தையும்விஸ்வவிராட ரிருதயகமலமத்தியையில் எக்காலமும் அந்தப்பிர்மத்தை விட்டுப் பிரியாது சதாகூடிக்கொண்டிருக்கும் ஆத்மாவையும் முனிசிரேஷ்டரான ஆசாரியருணர்த்தத்தொடங்குவது.

அத்தியாசோற்பவம். — உணர்வொளிநிறைவாய் நாமரூபதொய்தமில்லாமல் சமமாயும் ஏகமாயுமிருக்கின்ற அநீதப்பிர்மத்தினிடத்தில் காலத்திரயத்துமில்லாத ஜெகஜீவபரகல்ப்பிதத்தைப் போதகார்த்தம் ஆரோபயுத்தியினலேற்றிவைத்து அபவாதயுத்தியினல் நிவர்த்திபண்ணி இவ்விரண்டுக்கும் அதிஷ்டானமாயும் சிருஷ்டிக்குமுன்னம் சத்தாமாத்திரமாயுமிருக்கின்ற அந்தஅநீதப்பிர்மத்தை ஆசிரயிப்பவர்க்குப் போதமாக்குவது.

சத்தியோற்பவம்.— அவ்வியக்தசுழுத்தியி லடங்கியிருக்கின்ற சீவர்கள் நிமித்தம் அகிலகாரணசொரூபனை ஈஸ்வரன் திருவுள்ள நோக்கத்தால் மூலசுபாவத்தைவிட்டு முக்குணங்கள் வியக்தமாகி சத்துவகுணத்தில் ஈஸ்வரனும் ரசோகுணத்தில் சீவர்களும் தமோகுணத்தில் ஆவரணவிக்ஷேபமும் விக்ஷேபத்தில் பாஞ்சபூதபௌதிகமும் உண்டானவிதிப்படி பௌதிகத்தைப் பாஞ்சபூதத்திலும் பாஞ்சபூதத்தை விக்ஷேபத்திலும் ஆவரணவிக்ஷேபத்தைத்தமோகுணப்பிரகிருதியிலும் சீவர்களை ரசோகுணப்பிரகிருதியிலும் ஈஸ்வரனைச் சத்துவகுணப்பிரகிருதியிலும் முக்குணங்களை மூலசுபாவத்திலும் கிரமமாகவொடுக்கி ஸ்ரீ சற்குருநாதர்களையாசிரயிப்பவரை அகிலமங்களகுணசொரூபனை பரமேஸ்வரகிருபைக்குப் பாத்திரமாக்குவது.

## அவஸ்தை.

அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் பரோக்ஷம் அபரோக்ஷம் துக்கநிவர்த்தி தடையுற்றவானந்தமென் றேழுபேதமாய் ஆரோகணக்கிரமமாக விசுவாவஸ்தையைக்கடந்து நிற்கும் அதிகாரிக்கு அவரோகணக்கிரமமாயுணர்த்தப்படுவது. அவற்றுள்-

ஆதாரமான அதிஷ்டானப்பிர்மத்தை மறந்தது: அஞ்ஞானம்.—அதிஷ்டானப்பிர்மத்தைபுணர்ந்தஞானியீசனை மறைக்காமல் நான் சிவன் நான்பரனென்னும் ஆரோபப்பிராந்தானுடையஞானசட்சுவைக்குருடாக்கிப் பிர்ம ஈச கூடஸ்த சிவாதிபேதந்தெரியாமல் மறைக்கப்படுவது: ஆவரணம்.—ஜெகசிவபரமாய் கல்ப்பாதியிலுதித்து முத்திசேர்வார்க்கனுகூலமாகக் கல்ப்பமுழுதுமிருந்து உண்டானவிதிப்படி கிரமமாகக் கல்ப்பாந்தத்தி லொடுங்கப்படுவது: விக்ஷேபம்.— ஆசிரயிப்பவர்க்கு ஆரோபஜெகசிவபரத்தை நியதித்துஆதாரமான அதிஷ்டானப்பிர்மமே நீயென்றுணர்த்துவது: பரோக்ஷம்.-நிர்க்கவிசாரத்தால் அதிஷ்டான தத்துவத்தைத்தெளிவித்து நிர்ச்சந்தேகனாய்ப் பரிணாம ஆரம்ப விருத்தி விவர்த்தமென்னும் அத்துவிதசொரூபமே தானாயிருப்பது: அபரோக்ஷம்.

காரியரூபஜெகசிவபரமுழுது மித்தையாகக்கண்டு அதைப் பற்றியெழும்பும் விருத்தியை நசிப்பித்து நிரந்தரம் காரணபூத சருவவியாபக ஞானஸ்மரணையினால் அக்ஞானமறதியைக்கெடுக்கப்படுவது: பரிணாமபக்ஷம். — காரியகாரணங்களைவிவேகித்து நனவிற் சுழுத்தனாய்ச் சுட்டுதலற்று காரியகாரணமுழுதும் இருந்தபடியேயிருக்க காரணபூதசமேகப்பிர்மதிருஷ்டியினால் ஆவரணகோசத்தைப் பேதிக்கப்படுவது: ஆரம்பபக்ஷம். — காரணபூத பரமாத்மாவினிடத்துண்டான காரியரூபஜெகசிவபரமுழுதும்காரணபூதபரமாத்மாவுக் கநன்னியமாகத்தெரிசிப்பித்து சருவமும் பிர்மமயமென்னும் அழுத்தத்தால்ஆரோபமாய்த்தோற்றிய சித்தசிவாதி விவிதவிக்ஷேபத்தை நிவர்த்திக்கப்படுவது:விருத்திபக்ஷம்.-ஜகசிவபரமென்னும்ஆரோபப்பிராந்திநீங்கிசருவமும்அதிஷ்டானபிர்மமாய்த்தெளிந்த ஞானிக்கு தேசகாலாவஸ்தைகளின்றி சர்வதேச சருவகால சருவாவஸ்தைகளிலுந்தடையற்று சருவானந்த சம்பூரணமா யனுபவிக்கச்செய்வது: விவர்த்தபக்ஷம்.

செய்யவுந் தவிரவும் மற்றொன்றாக்கவுமான கருமத்திரயமும் அவிச்சின்ன பிரதிவிம்ப அத்தியாசமென்னும் உபாதித்திரயமும் அகம் ஒருமனுஷன் ஒருகர்த்தா ஒருசிவனென்னும் அகங்காரத்திரயமும் ஆதியாத்மீக ஆதிதெய்வீக ஆதிபௌதீகமென்கின்ற தாபத்திரயமும் இன்னம்பலவாறாய்ப் பூருவம்பரிச்சேதவிருத்தி

யினு லுண்டான சமஸ்தமான வனர்த்தமும் நிவர்த்திக்கச்செய்வது: துக்கநிவர்த்தி.

விண்ணுலகதேவாகவிருக்கின்ற மானவசுவம் சுகனமாகிறபரியந்தம் மனுஷனுகவிவகரிக்கப்படுவதுபோல் பிரதிவிம்ப சிதாபாசரூபம்நசித்து பிர்மரூபமாய்விளங்கியசீவன் சிதாபாசகாரியநாமரூபதேகமுள்ளபரியந்தம் முன்னம்போல விவகரிக்கப்பட்டு வித்து வரன் வரியான் வரிஷ்டனென்கின்ற சீவன்முத்தனுய் செய்தல் செய்வித்தல் அறிதல் சுகித்தலென்னும் விவகாரசஅநுஷ்டானமுடையனுய்ச் சத்துவாபத்தி அசம்சத்தி பதார்த்தாபாவனை துரியமென்னும் நான்குபூமியில்வசிப்பவனுய் விதேகப்பிராப்த சருவசமானத்துவ துரியாதீதப்பிரயோஜனத்தை யடையப்படுவது: தடையற்றவானந்தம்.

விசுவாவஸ்தை.-சாக்கிர சொப்பன சுழுத்தி துரிய துரியாதீதமென்னும் அவஸ்தாபஞ்சகநிஷ்டையினுல் சீவப்பிராந்திமுழுதும் வர்ச்சிக்கப்படுவது. அவற்றுள். — விருத்தியுருவங்களநேகமாய்த் தோற்றுவது. சாக்கிரம்.-ஒருவிருத்தியி லநேகரூபமாய்த்தோற்றுவது: சொப்பனம்.—விருத்திதோற்றுது சாக்கிர சொப்பனபீஜமாயொடுங்கிநிற்பது: சுழுத்தி. — பிரத்தேக சாக்ஷியாய்நின்று தூலாதிகாலபரியந்தமுணரப்படுவது: துரியம். — சுத்தமாத்திரமாய்த் தூலாதியைப்பற்றியெழும்பும் விருத்தி நசித்துச் சுயஞ்சோதியாகவெல்லையற்றிருப்பது: துரியாதீதம்.

## மோக்ஷம்.

பிர்மஞானத்தைப்பெற்ற வித்து வரன் வரியான் வரிஷ்டனென்னுஞ் சதுர்வித சீவன்முத்தர்களின் நிஷ்டாபேதத்தால்த் தாரதம்மியமும் அஷ்டகத்தியாக சொரூபவியாபக மென்னும் விதேகமுத்தியில்ச் சமானத்துவமுமாயிருப்பது. — சத்துவசேடனுய்நின்று விதிவத்தான தர்மங்களைப் பரோபகாரார்த்தமாய்நடத்துபவன்: வித்து. — சமாதியுக்தனுகநின்று சரீரசஞ்சாரநிமித்தந் தானுகஉண்ணுபவன்வரன். —வேற்ருேரா லுணர்பவன்: வரியான். தனதன்னியங்களைமறந்துசதாசுகியாகரமித்திருப்பவன் வரிஷ்டன்

அஷ்டகத்தியாகம்.—ஆசாவிசர்க்கத்தால்: ஆகாமியங்கெடும்.-ஞானுக்கினியினுல்: சஞ்சிதங்கெடும்.—பிராரத்துவம்: அனுபவித்

தாற்றீரும்.—புண்ணியபாவம்: பூஷணை தூஷணையினால் போகும்.—அறிவுதயமானால்: அவித்தை மாயை நீங்கும். — துரியவிபுவில்: சூக்குமமிறக்கும்.—காலமுடிவில்: தூலம் போகும். இவையேஅஷ்டகத்தியாகம்.

சொரூபவியாபகம்.—சீவன்முத்தர்கள் தேகமென்னும் உபாதி நீங்கியமாத்திரம் அகம்புறமென்பதற்று அடிநடுமுடிவில்லாததாய்க்கடோபாதிநீங்கிய ககனத்தைப்போல போக்குவரவற்று எப்போதும் இருந்தபடியேயிருக்கின்ற விதேகமுத்திப் பதத்தையடைந்திருப்பது.

## உத்தரம்.

தத்துவம் சத்துவம் லிங்கம் ரக்ஷகம் சாமியம் தாரதம்மியம் ஆத்மசித்தி நிரசனம் ஆனந்தம் பரிபூரணமென்ன தசபேதமாயிருப்பது. அவற்றுள்: தத்துவம். — அகோசரசுயம்புவாயிருப்பதை ஞானவான்கள் ஏகநாயகனெனக்கோசரித்து இதயப்பிரிவற உதயாஸ்தமின்றிஎக்காலத்தும்அநுபவிக்கின்றபரப்பிர்மம்.சத்துவம்—தத்துவரூபத்தினின்று லிங்கசூக்குமம் வெளியிடும்போது வெளியிட்டு லிங்கசூக்குமம் அடங்கும்போது தத்துவரூபத்திலடங்கியிருப்பது. லிங்கம்.—கர்த்த போக்தத் தியாகியாய் கல்பாதியிலுதித்து கல்பமுழுதும்விளையாடி கல்பாந்தத்திலடங்கியிருப்பது.—ரக்ஷகம். — ஆசிரதர்பவபந்தத்தைப்போக்கி அயிகபூர்த்தியைப் பண்ணி மறுமையில்ப் பற்றுக்கோடாகநின்று மேல்வீடுகொடுப்பது. சாமியம்.—பிர்மக்ஞானத்தில்சமத்துவமுடையராய்தேவன் மனுஷன் சித்தனென்னும் மமதகங்காரம்வர்ச்சித்திருப்பது. தாரதம்மியம். — தேவ மனுஷிய சித்தனெனப்பிரிந்து பிர்மக்ஞானிகளாயிருந்தும் மாயாசம்பத்தில் ஏற்றத்தாழ்வுடையராய் வாழ்ந்துகொண்டிருப்பது. ஆத்மசித்தி. — காரியரூபமான மாயாப்பிரபஞ்சம் காரணரூபரான பரமாத்மாவினிடத்தில் கட்டோடுமில்லையென்றுறப்படக்காண்பது. நிரசனம். — சத்திமாகிய பரிபூரணபரமாத்மாவைத் தவிர சத்தியாகிய மாயையை ஒரு தனிமுதலாகவெண்ணும் மயக்கத்தைப் போக்கி சர்வமும்பிர்மமென் றுணரப்படுவது. ஆனந்தம். — பிர்மக்ஞானம் சத்துவப்பேறு விரதபலம் ஆசிரதரக்ஷகம் ஈஸ்வரசாமியம் மாயாதாரதம்மியம் பரமாத்ம

சித்தி மாயாநிரசனம் தடையற்றவானந்தமென்ன நவவிதபலப்பிர தமும் சற்குருமுகமாய்ச்சித்தித்து சற்குருவாகவெழுந்தருளிய ஸ்ரீ பகவான்நாராயணபரப் பிர்மத்தை சதாஸ்தெளத்தியம்பண்ணிக் கொண்டிருப்பது. பரிபூரணம்.—ஒருமைப்பட பூருவம் ஜீதாபலப் பிரதரூபமாயடைந்த பரமபாக்கியத்தைத் தனித்தனியேபிரித்து கைவல்பபலப்பிரதரூபமாய் அனுபவித்து அதனைநவநவமாக பரி பூர்த்திபண்ணுவது.

## நதாசரணம்.

உத்தரபடலத்தின் அந்தத்தில் தொடங்கி அதிகாரி ஆத்மா மாயை ஈஸ்வரன் பரப்பிர்மம் லக்ஷணை அவஸ்தை ஆரோபம் ஆதாரமென்றென்பது விஷயமாகத் தொகுத்து நித்திய முத்தர் களனுபவத்தை தலைகடையாகநிரூபிப்பது.

அதிகாரி.—சுக்ஞானி சிக்ஞாசுவென்றிருவகை. அவற்றுள். சுக்ஞானி.—சத்துவாபத்தி அசம்சத்தி பதார்த்தாபாவனை துரிய மென்னும் ஆரூடபூமியில் வசிப்பவனாய் வித்துவரன் வரியான் வரிஷ்டனென்னும் நாமசதுஷ்டயசீவன்முத்தனாய் ஆசிரயிப்பவர் களின் சந்தேகமுழுதையும் நிவர்த்திபண்ணி அவர்களை ஆரூடபூமி யிலேற்றிவைக்கும் பரசமர்த்தித பரமதயாளுவாய் ஏகநாயகன் பதங்களை சர்வாராதன சம்புக்தனாகநின்று வாழ்ந்தி துரியாதீத பூமியை யடைதற்கு ஆயத்தமாகயிருப்பவன். சிக்ஞாசு.—தத்துவ சிந்தனவமுத்தத்தால் மாயாசத்தியின் வேதனையைப்போக்கி சிற் சொரூபத்துக்குவேறாக யாவராலும் காணப்படாதாய் அறியப் படாதாய் சொல்லப்படாதாய் பிரிக்கப்படாதாய் ஏருவமுமாய் சர்வஜெகத்பீஜமாய் சர்வதர்மநியந்தாவாயிருக்கின்ற சிற்சத்தியை சித்துவிலாச சிற்சொரூபமாகத்தெரிசித்து ஏகரூபத்தைப்பற்றி நின்று அதனநுசத்தியினால் சுபேக்ஷை விசாரணை தனுமானசி யென்னும் அப்பியாசபூமியில்நின்றும் ஆரூடபூமியையடைதற்கு ஆயத்தமாகயிருப்பவன்.

ஆத்மா.—ஆனந்தரூபராகவிருந்தும் இதயவாயிலாகப்பிரிந்து அவ்வானந்தங்களை நவநவமாகவனுபவித்தும் அவ்வாத்மாவின் ஏக ரூபத்துவம் சர்வகால சர்வதேச சர்வாவஸ்தைகளிலும் மாறு படாதிருப்பது.

மாயை.—சிற்பாவத்தால் பரமாத்மாவுக்கனன்னியமாகவிருந்தும் சடபாவத்தால் சத்து அசத்து சதசத்து பின்னம் அபின்னம் பின்னுபின்னம் அவயவம் நிரவயவம் அவயவாஅவயவமென்ன நவவிதரூபத்தி லின்னதென நிச்சயித்தறியக்கூடாத அவாச்சியரூபமாயிருப்பது.

ஈஸ்வரன். — சர்வாதிஷ்டான சமத்துவ ஏக பரிபூரண பரமாத்மதேவாகவிருந்தும் சத்து அசத்து சதசத்து பின்னம் அபின்னம் பின்னுபின்னம் அவயவம் நிரவயவம் அவயவாஅவயவமென்னும் நவலக்ஷணங்களையுடையதாயும் அநேகபேதவாத விசித்திரரூபமாயுமிருக்கின்ற தமதுசிற்சத்திகளையதிஷ்டித்து ஹரி சிவ விதி இந்திராதிஅநேகமூர்த்திகளாகப்பிரிந்துநின்றும் தலைமைகெடாது சருவரக்ஷைகளையும் பண்ணுபவன்.

பரப்பிர்மம்.—நியதிசமஸ்காரவிதிப்படி சுருதிப்பிரமாணத்தாலுணர்த்திய பிர்மசாக்ஷிகளை யொருப்படுத்தி அநுபூதிநிஷ்டையினல் அபரோக்ஷமாக்கி அந்தஅபரோக்ஷஞானத்தால் யிதயப்பிரிவற ஏகபரிபூரணமாய்த்தெளிந்த பரப்பிர்மத்தை சிற்பிரதிபலன சிதாபாசசிவ சாயாபலத்தை நிராகரித்துநிற்கும் ஊர்த்துவ விருத்தியினல்த் தெரிசிப்பித்து சுத்த சுபாவ சத்துவமனதினுக்கனுபவமாக்குவது.

சாக்ஷி. — அதுவிதுவென்னுஞ் சடங்களும் அறிவாக அறிவைத்தருவதாய் விட்டலக்ஷணையினு லுணர்த்தும் விஸ்வவிராட்ப்பிரபஞ்சத்துக்குப் பிரத்தேகாத்மாவாய் சத்துவரூபஜெகத்காரணமாய் சாந்தவிருத்தியினு லுணரப்படுவதாய் சத்தாதி ஒன்பதுலக்ஷணங்களை யுடையதாய் துவம்பதலக்ஷியராக விருக்கின்ற கூடஸ்தனை விடாதலக்ஷணவிதிப்படி சுருதிகுருவாசகத்தால் யூகித்து அனுர்தாதி தோஷத்தைப்பரிகரித்து அதுவேநமதுநிசசொரூபமென் றபரோக்ஷமாக்குவது.

பிர்மம். — அவித்தை மாயாசகித துவம்பதவாச்சியரான சிவேஸ்வரனைவேறுபடுத்தி அவித்தையாநிரசன மாயாரகித தற்பதவாச்சியரான சிவேஸ்வரனையும் அவ்விருவரும் பெயர் இடம் உபாதி உடல் உணர்வென்னும் ஐந்துபிரிவுகளினல் பரஸ்பரம் ஒவ்வாது அதிதூரஸ்தராயிருப்பதையும் அவர்கள் ஐக்கியவிரோத

உதயாஸ்தகாரணமென்பதையும் விவேகித்து எப்போதும் பந்தமில்லாது அவ்விரண்டிடத்தும் ஒருவனாகவேயிருக்கின்ற பரமாத்மாவை விட்டும்விடாத லக்ஷணையினாலுணர்ந்து அவரோதப்பத லக்ஷியரான பிர்மமென நிச்சயித்து சர்வதேச சர்வகால சர்வாவஸ்தைகளிலும் அனுபவரூபமாயுணரப்படுவது.

ஒருமை. — விலக்ஷணை சலக்ஷணை வாச்சிய லக்ஷிய கோசரவகோசரமுழுதும் குருவுபதேசத்தாலொருப்படுத்தி அனுபூதி நிஷ்டையினால் ஒன்றாய்நின்ற பூரணத்தை அபரோக்ஷமாக்குவது.

விருத்தி. — சாயாபலத்தைவேறுபடுத்தி மூட கோர சாந்த சுத்த சுபாவமென்றைந்து வகையாகத்தொகுத்து ஆத்மாவின் சத்தாதிலக்ஷணங்களை யுணர்த்தப்படுவது. அவற்றுள். மூடவிருத்தியில்: சத்தும். — கோரவிருத்தியில்: சத்தும் சித்தும். — சாந்தவிருத்தியில்: சத்துச்சித்தானந்தமும். — சுத்தவிருத்தியில்: சச்சிதானந்த ஒருமையானயேகமும். — சுபாவவிருத்தியில்: ஏகபரிபூரணமுமாக வுணர்த்துவது.

சுத்தசத்துவம். — கோசரமான உள்ளத்தையும் அகோசரமானபிர்மத்தையும் ஐக்கியமாக்கி கோசரவகோசரமுழுதும் ஆனந்தரூபமாய்த்தெரிசித்து ஆனந்தசமர்த்திதராகவிருக்கும் சீவன்முத்தர்களாலனுபவிப்பது.

சுபாவசத்துவம். — பூதசரீரத்தைவிட்டு லிங்கசரீரம் பிர்மரூபத்திலடங்கும்போது சொரூபானுசம்பந்தமான சுத்தசத்துவமும் பிர்மசொரூபத்திலடங்கி நிர்ச்சேஷ்டிதராகவிருக்கும் விதேகமுத்தர்களாலனுபவிப்பது.

லக்ஷணை. — விட்டலக்ஷணையினாற் பிரத்தேகாத்மாவைத்தெரிசித்து விடாதலக்ஷணையினால் அதுவிதுவென்னும் எடங்களும் அறிவாக அறிவைத்தருவது: ஆத்மலக்ஷணை. — தமோகுண ரசோகுணத்தையும் தமோவிருத்தி அஞ்ஞானவிருத்தியையும் விட்டலக்ஷணையினால் வேறுபடுத்தி சாந்தவிருத்தியினால் சத்தாதியென்பதோடுங்கூடிய கூடஸ்தசொரூபமே தானாயிருந்து விடாதலக்ஷணையினால் சத்துவாதிசத்தியசற்குணங்களால் சரீராதி ஜெகத்ரக்ஷணம்பண்ணப்படுவது: ஈஸ்வரலக்ஷணை. — விட்டும்விடாத லக்ஷணையினால் சீவேஸ்வரபேதத்தைவிட்டு அவ்விரண்டிடத்திலும்

அதிபதியாகவிருக்கின்ற ஒருவனே பரமாத்மாவெனத்தெரிந்து அவனைசர்வதேச சர்வகால சர்வாவஸ்தைகளிலும் அனுபவரூபமா யுணரப்படுவது: சொரூபலக்ஷணை.

அவஸ்தை.— தசமன் திருஷ்டாந்தத்தினுல் தூலாதியொன் பதோடுகூடிநின்ற அவித்தையா பாகத்தைவிலக்கி அறிவுருவே தானுயிருப்பது: சீவாவஸ்தை.— விராட்டாதி யொன்பதோடுகூடி நின்ற மாயாசகித பிரபஞ்சாபாசத்தைவிலக்கி மாயாரகித பிரத் தேகாத்மாவே தானுயிருப்பது: ஈஸ்வராவஸ்தை.— அனுர்தாதி தோஷத்தைப் பரிகரிக்கும்பொருட்டு அதுக்கெதிர்த்தட்டாகப் பிரிந்துநின்ற சத்தாதியொன்பதையும் ஒருப்படுத்தி கூடஸ்த சொரூபமேதானுயிருப்பது: சொரூபாவஸ்தை.

ஆரோபம்.— நாமாநாம ரூபாரூப சமாசம துவயாத்துவய ஏகவநேக உணர்வுடல் ஒளியிருள் நிறைவுகுறைவென ஒன்றொன் றை தனித்தனியேபிரித்து ஒன்றினும்பலசித்தியில்லாமல் பிராந்த சீவர்களால் சுழலப்படுவது.

ஆதாரம்.—அகோசரசுயம்புவாகவிருக்கின்ற பரப்பிர்மத்தை நாமம் ரூபம் சமம் துவயம் ஏகம் உணர்வு ஒளிவு நிறைவென்னும் அஷ்டவிஷயமாகக்கோசரித்து அவையாவும் பிர்மசொரூபமென சாந்தவிருத்தியினுல்த்தெளிந்துதடையற்றசுகிகளாலனுபவிப்பது

## மண்டூகதாவனம்.

இடைவிட்டுபின்னும்முன்னுந் தத்தியோடு தவளையைப்போல பத பதார்த்தங்களைவிட்டுப் பின்னதுமுன்னது முன்னதுபின்ன தாகவிருக்கின்ற அர்த்தசாரங்களை அந்நுவயப்படுத்தி பூருவோத் தரபடலங்களைக் கிரமமாகவுணர்த்தப்படுவது. அவற்றுள் பூருவ படலம்.—சாஸ்திரானுபந்தம் சற்குருபோதம் அவஸ்தாநிரசனம் அகண்டைகவைக்கம் சொரூபதெரிசனம் நிச்சிதசுவாநுபவமென் னச்சட்பிரகாரமாகநிரூபிப்பது.

## சாஸ்திராநுபந்தம்.

சாஸ்திரம் அனுபந்தமென்னத் துவிபாகமாய் அவற்றுள். சாஸ்திரம்.— இராகவிராகரிருதயசர்க்ஷியாய்ச் சருவசிரேஷ்ட மான துரியபூமியை மருவி சருவபூமியும் வியாபித்திருக்கும் ஏக

நாயகன்பதங்களைப்போற்றி அவ்வநீதப்பிர்மசுகோததியில் விமலபோதபாஸ்கரராய் சதோதயமாகப்பிரகாசிக்கும் ஹரிசிவப்பிர்மாதி நித்தியசூரிகளுக்கும் முத்தாத்மாக்களுக்கும் நமஸ்கரித்து இவரவரெனப் பிரிக்கக்கூடாது என் அகத்திலும் புறத்திலுந் தானாகின்று எனதுகல்ப்பித வநர்த்தத்தைப்போக்கி சொரூபசுபாவமாக்கிய ஸ்ரீபரமசற்குருவைப்பணிந்து எனக்குஞானசட்சுவைத்தந்து சரீரேந்திரியமனோபுத்தியாதி பரிச்சேதபந்தகத்தை நிவர்த்திபண்ணித் தம்மோடைக்கியஞ் செய்தற்கெழுந்தருளிய ஈஸ்வரசற்குருவை ஸ்தௌத்தியம்பண்ணி ஆசிரயிப்பவர் பந்தமோக்ஷ தொந்துவபேதமுந்தெரிந்து அதைவர்ச்சிப்பதின்பொருட்டு ஆதி மத்தியாந்தரகித சதோதயமாய்விளங்கிய ஞானசற்குருவைப்போற்றி நமதுதனையர்களாகிய ஏழைஜனங்கள் வஸ்துதத்துவத்தையுணரும்பொருட்டு பரமபண்டிதரான பரம்பராசாரியர்கள் வேதாந்தக்ஷீராப்தியில் மொண்டு சாஸ்திரத்திரயகடங்களில் நிறைப்பிவைத்திருக்கின்ற பாலைக்காய்ச்சிக் கடைந்தெடுத்துத் திரட்டி கைவல்யநவநீதமாக்கித்தந்து முத்த முகுந்த கர்த்தனென்னும் நமதிஷ்டதெய்வமான விஷ்ணுதேவைப்பிரார்த்தித்து தத்துவவிளக்கம் சந்தேகந்தெளிதலென்னும் படலத்துவயரூபமாக சம்பூரணமாக்குவது.

அநுபந்தம்.-விஷய சம்பந்த பிரயோஜன அதிகாரமென்ன நான்குபிரகாரமாக நிருபிக்கப்படுவது. அவற்றுள்.-சமஸ்தமாயேக பரிபூரணராயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்மதத்துவம் இந்தநூல்க்கு: விஷயம்.—எந்தப்பரப்பிர்மதத்துவத்தை சாஸ்திரமுகத்தால் நிருபித்திருக்கிறதோ அந்தப்பரப்பிர்மதத்துவமேசாஸ்திரமுழுதிலும்நிருபிக்கப்படுகிறது. சாஸ்திரமுழுதிலும் எந்தப்பரப்பிர்மதத்துவத்தை நிருபிக்கப்படுகிறதோ அந்தப்பரப்பிர்மதத்துவமே சாஸ்திரமுகத்திலும் நிருபித்திருக்கிறதென்று பரஸ்பரமேகிகப்படுத்துவது: சம்பந்தம்.—சமஸ்தமான அநர்த்தமும் நிவர்த்தித்து ஆசிரயிப்பவருக்குத் தடையற்றசுகத்தைக் கொடுக்கப்படுவது: பிரயோஜனம்.

அதிகாரம்.-ஊர்த்துவமுகத்தால் சரீராந்தத்தில் சர்வேஸ்வர பதவியைப்பெற்று சம்பந்தானு சம்பந்தங்களையுடையனாய் அழி

வில்லாதபணிசெய்யப்படுவது நித்தியமென்றும் அதோமுகத்தால் ஜெனனமரண மரணஜெனனமுடையனாய் கீழதுமேலது மேலது கீழதாய் சற்றேனும்நிலைபெறாது தொந்துவரூபமான கருமச்சுழக்கில் சுற்றப்படுவது அநித்தியமென்றும் நிச்சயித்தறிகிற: விவேகமும்.—அகண்டேகப்பிராப்திக்கு விரோதமான ஐகம் ஆமுஷ்டிகமிரண்டிலும் சற்றேனும் அபேக்ஷையில்லாதிருக்கின்ற: விராகமும்.—அகக்கரணத்தை: சிக்ஷித்தல். புறக்கரணத்தை: சிக்ஷித்தல். துற்சங்கமான மானதவியாபாரங்களைக் கட்டோடு: தியச்சித்தல். தள்ளாது அநுபவித்தற்கேதுவாய் தொந்துவபிராரத்துவத்தால் வந்த சுகதுக்காதிகளில் சமசித்தமுடையனாய்: திதீக்ஷித்தல். கடினமுயற்சியைப்பண்ணி சித்தத்தைவருத்தாமல் விநோதமாக சரசசமாதானத்தோடுசிரவணார்த்தங்களைமாத்திரம்:சிந்தித்தல். அகண்டேகப்பொருளை வர்த்தமானத்தில் சத்தியபலமாய்க் கொடுக்கும் சற்குரு சாஸ்திர சாதுக்களைத் தஞ்சமாகச் சினேகித்தலென்னும். சட்பேதமான: சம்பத்தும்.—இதராந்தரங்களைத்தியச்சித்து மோக்ஷமாத்திரம் அபேக்ஷித்திருக்கின்ற: முமுக்ஷுத்துவமென்னும். சதுஷ்டயசாதன சம்பூர்த்தியாகவிருப்பது.

சற்குருபோதம்.-சற்குருவென்னும் போதகமென்னுந்துவிதம். அவற்றுள். சற்குரு.—ஆசிரயிப்பவரின் பக்குவசமஸ்காரத்தைப் பண்ணி திரித்துவ திரியேகப்பொருளைத்துலக்கி திரித்துவத்தில் ஒன்றானதேகியைஅனுபவரூபமாய்த்தெளிவித்து அந்தத்தேகிக்கு சாகாசந்திர ஸ்தூலாஅருந்ததி ஞாயத்தையனுசரித்துபுறம்பிலிருக்கின்றபிர்மத்தையும்எக்காலமும் அதைவிட்டு பிரியாமல்அகத்திலிருக்கின்ற ஆத்மாவையும் அதன்யதாப்பிரகாரம் உணர்த்துபவன்.

போதகம்—சத்தியோற்பவமான கிரமசிருஷ்டியை தூலமுதல் சுபாவபரியந்தம் உண்டானவிதிப்படி யொடுக்கி பரமேஸ்வரகிருபைக்குப் பாத்திரமாக்கி அவரதுகிருபையினால் சாட்டியபாகம் வர்ச்சிக்குமிடத்து அத்தியாசமயக்கத்தைப்போக்கி சர்வமும் பிர்மமயமென் றுணர்த்தப்படுவது.

அவஸ்தாநிரசனம்.— அவஸ்தை நிரசனமென்னத்துவிபாகமாய் அவற்றுள். அவஸ்தை.—அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் பரோக்ஷம் அபரோக்ஷம் துக்கநிவர்த்தி தடையற்றவானந்தமென்

ரேழுபேதமாய் அவற்றைத் தசமன்திருஷ்டாந்தத்தாலும் ரச்சு சர்ப்ப திருஷ்டாந்தத்தாலும் உறுதிப்படுத்துவது.—பிர்மமாகும் ஆத்மாவைப் பேதமையாகமறந்தது: அஞ்ஞானம். —பரனில்லைப் பரனைக்காணேமென்று பகர்வது: ஆவரணம். — அகம் ஒருமனுஷன்ஒருகர்த்தா ஒருசீவனென்ன மாறுபாடாய்முளைக்கப்படுவது: விக்ஷேபம்.—லக்ஷணரூபமாய்ச்சொன்ன சற்குருவாக்கியத்துக்கு லக்ஷியப்பொருளாகிய ஆத்மாயிதுவென்றுறுதிகொள்வது: பரோக்ஷம்.— தத்துவவிசாரணையால் சந்தேகமுழுதையும் நிவர்த்தித்து அத்துவிதசொரூபமே தானாயிருப்பது: அபரோக்ஷம். — அகம்பாவமான சீவபேதம் வர்ச்சிக்கப்படுவது: துக்கநிவர்த்தி.—முத்தனாயிருந்து செய்யவேண்டியதெல்லாஞ் செய்துமுடிந்தது: தடையற்றவானந்தம்.

தசமன்திருஷ்டாந்தம் — பிரயாசமிகுதியால்நீந்தி உதகநீரத்தேறிய பதின்மரி லொன்பதுபேரைக்கண்டவொருவன் பிராந்தியினால் பத்தாவானாகிய தன்னைத்தானென்றறியாதிருப்பது: அஞ்ஞானம்.-பத்தாவானில்லைப் பத்தாவானைக்காணேமென்பது: ஆவரணம். -பத்தாவானைக்காணேமென்று வருத்தங்கொண்டழுவது: விக்ஷேபம்.—குறிகுணங்களோடு நெறியாளன்சொல்லப்படி ஒன்பதுபேரையெண்ணிய தான் அந்த நெறியாளனைத் தருசமாக நோக்குவது: பரோக்ஷம்.—பின்னும் அந்தப் புண்ணியனான பதிகன் ஒன்பதுபேரையெண்ணிய நீயே பத்தாவானென்ன அப்படியே நானேபத்தாவானென்று நிச்சயமாகக்காணப்படுவது: அபரோக்ஷம். — பத்தாவானைக்காணே மென்றுருகிய சித்தசோகம் நிவர்த்திக்கப்படுவது: துக்கநிவர்த்தி.—மகத்தானமனதில் சந்தேகந் தெளிவது: தடையற்றவானந்தம்.

ரச்சுசர்ப்பதிருஷ்டாந்தம்.—சொச்சொரூபத்தைமறந்து பழுதை பாம்பென்னும் உதிப்பற்றிருப்பது: அஞ்ஞானம்.-பழுதை மறைந்து பாம்புருவாய்த்தோற்றியும் சுபாவீகமாய்ப் பயமற்றிருப்பது: ஆவரணம். — பாம்பு கடிக்குமென்றஞ்சி பயகம்பனாதிகளால் பீடையுற்றழுவது: விக்ஷேபம். - கேள்வியினால் பழுதையிலக்கணமிது பாம்பிலக்கணமிதுவென்றுணருமிடத்து அஞ்ஞானமறதிநசிக்கப்படுவது: பரோக்ஷம். — நிஷ்டாரூபமாய் பழுதை

யைப்பழுதையாக அறியுமிடத்து ஆவரணகோசம் பேதிக்கப்படுவது: அபரோக்ஷம்.— முன்னம் சித்தப்பிராந்தியினால் பழுதையினிடத்துப்பாம்பாகத்தோற்றிய விவிதவிக்ஷேபம் வர்ச்சிக்கப்படுவது: துக்கநிவர்த்தி.—நிர்ச்சந்தேகனாய்ப் பழுதையைப்பழுதையென்றறிந்து சுபாவசொரூபமாய்க் கலக்கமற்றிருப்பது: தடையற்றவானந்தம்.

நிரசனம்.-அஞ்ஞானம் ஆவரணம் விக்ஷேபமென்னும் மூன்றவஸ்தைகளையும் பரோக்ஷ அபரோக்ஷ துக்கநிவர்த்தி யென்னும் மூன்றவஸ்தைகளால் சாக்ஷித்துவ சமேகத்துவபூரணத்துவமென்னும் மூன்றுலக்ஷணத்தைக்கொண்டு நிவர்த்தித்திருக்கின்றஞானி சர்வ சிரேஷ்டமான தடையற்றசுகத்தையனுபவிக்கப்படுவது.

அகண்டைகவைக்கியம்.— அகண்டைகம் ஐக்கியமென்னத் துவிபாகமாய். அவற்றுள். அகண்டைகலக்ஷணம். — சீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் தேச கால நாமரூப தேகவுணர்வாதிகளில் அளவற்ற தாரதம்மியமிருப்பினும் கண்டமில்லாது அவ்விரண்டிடத்துஞ் சமமாகவிருக்கின்ற பரமாத்மா ஒருவனே யென்றுணர்த்துவது. ஐக்கியலக்ஷணம்.— ஆகாயதிருஷ்டாந்தத்தால் சீவேஸ்வர கூடஸ்தபிர்மமென்னுங் கல்பனா நாமத்தையகற்றி தற்பத துவம்பத சாக்ஷி சைதன்யங்களை யொருப்படுத்தி சருவமும் சைதன்ய சிதாகாசமாய்த்தெரிசிப்பது,

சொரூபதெரிசனம்.-சொரூபம்தெரிசனமென்னத் துவிபாகமாய் அவற்றுள்.சொரூபலக்ஷணம். — அநிர்த சட துக்க அசம அத்திர அபிமான அநேக அநித்திய அபூரணமென்னும் நவதோஷங்களையுடைய பஞ்சகோச குத்திரக் குகையிலிருக்கின்ற சரீரியை அதைவிட்டுப்பிரத்தேகனும்படி ஆகரிஷித்து சத்து சித்து ஆனந்தம் சமந் திரஞ் சாக்ஷி ஏகம் நித்தியம் பூரணமென்னும் நிர்த்தோஷமான நவலக்ஷணங்களோடுங்கூடிய ஆத்மாவைத் தாரகமாக்கி அதுவே உனது சொரூபமென்றுணர்த்தப்படுவது.

தெரிசனலக்ஷணம்.—சற்குருவாக்கியப்படி தத்துவமார்க்கத்தைப்பிசகாமல் சரீர பிராண மனோ புத்தி சிவனென்கின்ற பஞ்சகோசத்தைக்கடந்து அதன்முடிவிலிருக்கின்றபாழானயிருட்டைத்தள்ளிபஞ்சகோசசூனியங்களையுணருங்கிஞ்சித்துவயிருப்பும்விட்டு

கூடஸ்தம் பிர்மமென்கின்ற நடுவணேகழுவி ஒன்ருய்நின்ற பூரணத்தையுணரப்படுவது.

நிச்சிதசுவாநுபவம்.-நிச்சிதம் சுவானுபவமென்னத் துவிதம். அவற்றுள். நிச்சிதலக்ஷணம். — வித்து வரன் வரியான் வரிஷ்டனென்கின்ற நாமசதுஷ்டயமும் செய்தல் செய்வித்தல் அறிதல் சுகித்தலென்கின்ற விவகாரசதுஷ்டயமும் சத்துவாபத்தி அசம்சத்தி பதார்த்தாபாவனை துரியமென்கின்ற பூமிசதுஷ்டயமும். சற்சங்கசம்பூர்த்தியானமனதில்அதிஷ்டானஞானம்உதயமாவது. அவ்வதிஷ்டானவழுத்தத்தால் ஆரோபிதகல்ப்பிதத்தைமறந்திருப்பது. அத்துவிதானந்தசம்பூர்த்தியிஞல் திரிபுடிநிவர்த்தமாவது. இருந்தபடியேயிருக்கின்ற வஸ்துசொரூபத்தை மௌனசுபாவத்தால் இருந்தபடியே அனுபவிப்பதென்கின்ற அனுபவசதுஷ்டயமும். இந்தப்பதிஞறுபேதமான சீவன்முத்திலக்ஷணமும் துரியாதீதவாசிகளான ஹரிசிவப்பிர்மாதி நித்தியசூரிகளாலனுபவிக்கும் விதேகமுத்திலக்ஷணமும் அதன்யதாப்பிரகாரம் உணரப்படுவது.

சுவாநுபவலக்ஷணம்.-அதிகார சற்குரு ஐக்கிய ஞானமென்கின்ற திரித்துவத்தைத் துலக்கி திரியேகப்பொருளாகிய உனது நிசசொரூபத்தை மறவாதேயென்று ஆணைவைத்துநிறுத்தி வாக்கியானுசந்தானம் அர்த்தானுசந்தானம் சொரூபானுசந்தானமென்னும் அனுசந்தானத்திரயரூபமாய் சருவசந்தேகங்களையும் நிவர்த்திபண்ணி ஸ்ரீபகவானுகியசற்குருகிருபையிஞல் ஆனந்தசம்பூர்த்தியை யடைந்திருப்பது.

## உத்தரபடலம்.

நியாயத்திரயம் பிர்மஞானம் ஆரூடலக்ஷணம் ஈஸ்வரசாமியம் மாயாரூபம் ஆத்மரூபம் பூமித்துவயம் விராகத்திரயம் சாஸ்திர சம்பூரணமென்னும் நவவிஷயமாகநிரூபிக்கப்படுவது.

நியாயத்திரயம்.-தூணுகம்ப மற்கடயெந்திரஸ்தாபனமென்னத்திரிவிதம். அவற்றுள். தூணுகம்பநியாயம்.—பூர்வபடலத்தில் பரப்பிர்மதத்துவத்தைவிளக்கி அதில்ப்பற்றிநிற்கும் அதிகாரியின் மனேவிருத்தியை அழுக்கமுறவற்புறுத்தி சற்றேனும் அசையாது திரநிலைபெறுதற்பொருட்டு சந்தேகந் தெளிதலென்னும் உத்தரபடலத்தைச் சொல்லப்படுவது. மற்கடநியாயம். — கல்ப்

பித ஜனகமான பாஞ்சபூதவிகாரந்தொடங்கி நிர்க்குணரூபமான விதேகமுத்திபரியந்தம் அனுக்கிரகித்த ஸ்ரீசற்குருவை விடாமல் சற்சிந்த ஞான சதாசார பாதந்திர சிநேகத்துவ சம்பந்தமென்னுஞ் சடிலக்ஷணங்களாலப்பிரிவற்று சதா அனுசரித்துநிற்பது.

யெந்திரஸ்தாபனநியாயம்.— அக்ஞானவிபரீதங்கள் போனாலும் இனிமேல் வருமோவென்றெண்ணும் அதிகாரியின்சந்தேகத்தை சுருதிகுருசுவாநுபவரூபமாய் எக்காலமும் வாராதபடி நிவர்த்திக்கப்படுவது.

பிர்மக்ஞானம்.-விலக்கு விதியென்னும் உபபலக்ஷணங்களுக்கும் லக்ஷியப்பொருளாகிய பரப்பிர்மதத்துவத்தை ஆசிரயிப்பவர்க்கு ஸ்ரீசற்குருவானவர் வேதாந்தசமிக்ஞாவிதிப்படி மௌன சுபாவத்தாலுணர்த்த அந்தச்சிரவணார்த்தத்தை சித்தசீவாதிகளாகப்பிரிந்து விவிதவிஷயங்களிற் றுவியோடுகிற பகிர்முகவிருத்தியைத்தடுத்து அகமுகமாக்கிய இதயஞானத்தாற்றெளிந்து சமாதி சகஜமென்னும் அனுபவரூபத்தாலறியப்படுவது.

விலக்குலக்ஷணம்.—அசலம் நிரஞ்சனம் அமிர்தம் அப்பிரமேயம் விமலம் வசனாதீதம் அசடம் அநாமயம் அசங்கம் அதுலம் நிரந்தரம் அநணு நிரூபம் அகண்டம் அசம் அனந்தம் அவிநாசி நிர்க்குணம் நிஷ்களம் நிரவயவம் அநாதி அசரீரம் அவிகாரம் அத்துவிதமுதலிய வேதநாமங்களையனுசரித்து ஆசிரயிப்பவர்க்கு ஸ்ரீ சற்குரு நியதிசமஸ்காரவிதிப்படி தோஷரூபமான பிரபஞ்ச லக்ஷணங்களை விலக்கி நிர்த்தோஷரூபமான பரப்பிர்ம தத்துவத்தையுணர்த்தப்படுவது.

விதிலக்ஷணம்.—நித்தியம் பூரணம் ஏகம் பரமார்த்தம் பரப்பிர்மம் நிதானம் சாந்தம் சத்தியம் கேவலம் துரியம் சமம் திருக்கு கூடஸ்தன் சாக்ஷி போதம் சுத்தம் லக்ஷியம் சநாதனம் சிவன் தத்துவம் ஆகாயம் சோதி ஆத்மா முத்தம் விபுத்துவம் சூக்ஷமமென்னும் வேதநாமங்களுக்குப் பொருளாகிய பரப்பிர்ம தத்துவத்தை ஸ்ரீசற்குருகடாக்ஷத்தைப்பெற்ற சகஜானந்த நிஷ்டனால் நவ நவமாக அனுபவிக்கப்படுவது.

சமாதியனுபவம்.—வேதாந்தசமிக்ஞாவிதிப்படி சற்குருமுகமாய்க்கேட்ட சிரவணார்த்தத்தை சாஸ்திரபூர்வமாய்வற்புறுத்தல்

மனனயுத்தியால் உசாவுதல்செய்தல் நிதித்தியாசனமாக்ஷிப்படுத்தல் சமாதியிலொருப்படநிற்றல் இந்தநான்குபிரகாரத்தாலும் சாக்ஷாத்காரபரியந்தம் பிர்மாப்பியாசிகளாற் சதா அனுஷ்டிக்கப்படுவது.

சகஜானுபவம்.—அதிஷ்டானபரப்பிர்மம் சாக்ஷாத்காரமாகி ஆரோபித ஜகசீவபரத்தை மறந்து அதிஷ்டான ஆரோபமென்னும் பதார்த்தப் பிரிவுகளற்று இருந்தபடியேயிருக்கின்ற வஸ்து சொரூபத்தை மௌனசுபாவத்தாலனுபவித்து விதேகப்பிராப்தியில் துரியாதீத வாழ்வையடையப்படுவது.

ஆரூடலக்ஷணம்.—மாகர்த்த மாபோகி மாத்தியாகி யென்னும் விரதத்திரயசம்பன்னனாய் வர்ணாதிபிகிருத்தியமும் யாகாதி பரகிருத்தியமும் சிரவணாதி மோக்ஷகிருத்தியமும் லோகோபகாரமாகச்செய்தும் அதனோடுபந்திக்காமல் சிருஷ்டியாதி கிருத்தியங்களால்வரும் புண்ணியபாவங்களை ஈஸ்வரனடையாதது போலத் தாக்கற்றிருப்பது. அவற்றுள், மாகர்த்தவிரதம்.—சரீரவிவகாரத்துக்கும் சமாதிவிவகாரத்துக்கும் சாக்ஷிபூதனாகவிருந்து சமஸ்தமான விவகாரங்களையும் சந்நிதிமாத்திரத்தால் நடத்தப்படுவது. மாபோகிவிரதம். — ரசாரசங்களைப்பாராமல் வர்த்தமானத்தில் முன்னிட்டவைகளைப்பிர்மரசமாய்ப் புசிக்கப்படுவது. மாத்தியாகி விரதம்.—சிறிது வலிது தனதன்னிய நன்மைதீமைகளொதுவந்து சேறினும் தெளிந்தபடியேயிருக்கின்ற விமலசித்தத்தினிடத்தில் சற்றேனுஞ் சேஷ்டிக்காமல் சுபாவவொளியினாற் பிரகாசித்துக் கொண்டிருப்பது.

ஈஸ்வரசாமியம்.—சிருஷ்டி ஸ்திதி சம்ஹார நிக்கிரக வனுக்கிரக சருவக்ஞ சருவசக்தித்துவாதி மாயாவல்லபத்தில் பரஸ்பரம் தாரதம்மியமுடையராகவிருக்கின்ற தேவசேதனருக்கும் தீர்க்கபிராண தீர்க்கதெரிசன திரிகாலக்ஞான தபோரூப அணிமாதிசித்தி முதலியவைகளிற் பரஸ்பரம் தாரதம்மியமுடையராக விருக்கின்ற சித்தசேதனருக்கும், கிருத்தியோபாசக வர்ணாதிபேதராசதாசாதிகளிற் பரஸ்பரம்தாரதம்மிய முடையராகவிருக்கின்ற மனுஷியசேதனருக்கும். ஞானத்தையடைந்தும் பரஸ்பரம் ஒவ்வாத அளவற்றவேறுபாடாயிருப்பதுபோல தேவமனுஷியசித்த

ரான முத்தாத்மாக்களுக்கும் ஈஸ்வரனுக்கும் மாயாகாரியங்களிற் றாரதம்மியமிருப்பினும் பிர்மக்ஞானத்திற் சமானத்துவமுடைய ராயிருப்பது.

மாயாரூபம்.—அவித்தையாமாயை விபுத்துவமாயை ஸ்தம்பனமாயை விசர்ச்சனமாயையென்னச்சதுர்விதரூபமாயிருப்பது. அவற்றுள். அவித்தையாமாயை.-சசவிஷாண வந்தியாபுத்திரனைப் போலக் காலத்திரயத்திலுமில்லாத அறியாமை விவேகசூனியரான பரமமூடரிடத்து ஜென்மபரம்பரையாக வேறான்றிநிற்பது. அந்தமோகப் பிராந்தனை மந்தவதிகாரிக்கி ஸ்ரீசற்குருவானவர் முன்னே அனுர்தாதிபஞ்சக தோஷலக்ஷணத்தைத் தெரிசிப்பித்துப் பின்னேசத்தாதிபஞ்சக நிர்த்தோஷநிஷ்டையால் அவனது மோகப்பிராந்தியைநிவர்த்தித்து அனுர்தாதி சத்தாதி தொந்துவ பேதத்தைப்போக்கி விசாரபூர்த்தியினு லவனது அக்ஞானத்தை கட்டோடும் நாசம்பண்ணுவது. விபுத்துவமாயை.—ஈஸ்வராக்ஞையால் பிரளயகாலத்தி லவ்வியக்தவவஸ்தையையடைந்து கல்பாதியில் மகதாதிவிகாரத்தைப்பிறப்பித்து நாமரூபாத்மகமான விஸ்வ விராடாதி சர்வாண்டபந்திகளையும்இடைதருசில்லாதுபரப்பிசிராந்தாளுக்கடிமையாகி பிராந்தாளையடிமையாக்கி முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கின்னரர் கிம்புருடர் கருடர் காந்தருவர் சித்தர் வித்தியாதரர்முதலிய சராசரப்பகுதிகளுக்குள்ளே திரோதாரூபமாய்நின்று வேறுவேறான பரிச்சின்ன திரையைப்போட்டு ஈஸ்வராதிகளுக்குத் திருவிளையாட்டஞ்செய்தற்கேதுவாய் விநோதார்த்தகாரணதாசபூதையாகநின்றுஇன்னம் பலவாறான விசித்திரகோலாகலகதிகளை நடத்தப்படுவது. ஸ்தம்பனமாயை. — மாயாகாரணமான சச்சிதானந்தபரிபூரண பரமாத்மாவினிடத்தி லழுத்தம்வைத்து அதன்காரியமான நாமரூபாத்மகத்தை எவ்வளவும்சிந்திக்காதிருப்பது. விசர்ச்சனமாயை.—காரிய காரண உருவ உரிய உற்பவ ஹேது அத்துவய ஆதாரமென்னும் அஷ்டலக்ஷண விவேகத்தால் சருவமும் சத்தன்மயமாகத்தெரிசித்து மாயையைஅடியோடும் நிவர்த்திக்கப்படுவது.

விவேகம்.-நாமரூபாத்மகமாகத் தோற்றியொடுங்குவது:மாயாகாரியம்.—சச்சிதானந்தபரிபூரணபரமாத்மாவே:மாயாகாரணம்.—

பின்னவபின்னமுதலிய வொன்பதுபிரகாரத்தாலும் நிச்சயித்தறியக்கூடாத அவாச்சியவடிவம்:மாயாரூபம்.—இதுவெனக்குள்ளது தேகம்யான் ஜெகஞ்சத்தியமென்றிருப்பவர்கள்:மாயைக்குரியர்.- இப்படிவந்ததென்றொருவராலும்நிச்சயித்தறியக்கூடாதது:மாயாவுற்பவம்.—தீர்க்கவிசாரம்பண்ணாத அவிவேகமே விதனரூபமான மாயைவருதற்கு:ஹேது.-சத்தனைத்தவிர சத்தியென்றொருவஸ்து வேறுபடப்பிரிக்கக்கூடாததால் வஸ்துத்துவயம் சொல்லப்படாதது:மாயாவத்துவயம்.-சத்திகாரியமில்லாவிடத்துஞ் சத்தன்மாத்திரஞ் சேடித்திருக்கையால் சத்திமானாகிய பரிபூரணபரமாத்மாவே: மாயைக்கி: ஆதாரம்.

ஆத்மரூபம். — அதிகாரானுரூபமாய் வேதத்திற்சொல்லிய புத்திராத்மா தேகாத்மா சீவாத்மா வென்கின்ற கௌணபக்ஷத்தைநிவர்த்தித்து இவ்விடத்தில் ஞானாத்மாவாகிய சரீரியையே சுருதி குரு சுவானுபவரூபமாய் ஆத்மாவென்னநிரூபிக்கப்படுவது.

சுருதிகுருசுவானுபவம்.—நான்குவேதங்களிலுள்ள நான்கு மகாவாக்கியங்களும்நாசச்சரீரத்திலிருக்கும்அவிநாசியானசரீரியைப்பார்த்து நீயேசச்சிதானந்தமென்றும் ஆசிரியர் நீயேபிர்மமென்றும் உணர்த்தியபடி சத்தோகம் சித்தோகம் ஆனந்தோகம் பூரணோகமென் றனுபவரூபமாயுணரப்படுவது.

சத்தனுபவம்.-பூர்வகர்மத்துக்கீடாக வர்த்தமானத்தில் தாரித்திரன் சம்பன்னன் மேல்மகன் கீழ்மகன் செவிடன் ஊமன் உருப்பிலி அந்தகன் முதலான அநேகதாரதம்மிய சரீரத்தைத் தருவதாலும் வர்த்தமானத்தில் தனதனைய சரீரேந்திரிய சித்த சீவாதிகளுக்கபாயம்வரினும்அதற்குப்பயப்படாமல் பௌஷதியில்நமக்கு ஞாயங்கிடைக்குமென்று சற்சனராகிய மகத்துக்கள் சற்கருமசதாசார நிஷ்டைகளைச் சற்றேனும் வழுவுதலில்லாது சாதிக்கிறபடியாலும் இப்போது செய்யுகிற புண்ணியபாவத்துக்குத் தக்கதான நரகசுவர்க்கத்தை பௌஷதியிலனுபவிப்பதாலும் தேவநரகமனுஷிய திரியக்காதி அநித்தியசரீரங்கள் மாறிமாறியுற்பவித்தழியினும் நித்தியனாய் எப்போதுமாறுபடாது ஒருதன்மையவாகவிருப்பதாலும் அனுபவரூபத்தாற் சரீரியாகிய நமக்கு சத்துரூபஞ்சித்திக்கப்பட்டது.

சித்தனுபவம்.— மனச்சக்ஷுராதி சாதனாந்தரங்களில்லாத சுழுத்தியவஸ்தையிலும் மனச்சக்ஷுராதிசாதனங்களிருந்தும்வல்லிருளால் வஸ்துக்குப்புலப்படாத இராத்திரிகாலத்தும் சூரியப்பிரகாசத்தைக் கடமடவுபாதிகளால் மறைத்திருக்கின்ற மூடாவரணத்தும் சற்றேனுமயக்கமில்லாமல் இது இருள்வஸ்து இதுபொருள்வஸ்துவென்றறியப்படுகையால் அனுபவரூபமாய் சரீரியாகிய நமக்குசித்துரூபஞ் சித்திக்கப்பட்டது.

ஆனந்தானுபவம். — சருவப்பிராணிகளுக்கும் பிரியமான அன்னபானாதி சுகசாதனங்களைப்போற் கொள்ளுதற்குந் தள்ளுதற்குமெட்டாத சுயமேவ நமது ஆனந்தரூபமாயும் தனதனைய சரீரேந்திரிய சித்தசிவனென்னும் ஒன்றுக்கொன்று தாரதம்மியமுடைய பிரியரூபங்களைக்காட்டிலும் இவ்வளவென்று பிரமாணித்தற்கெட்டாத நமது அத்தியந்தப்பிரியரூபமாயும் தனதனைய சரீரேந்திரிய சித்தசிவாதிகளைப்போல விருப்புற்றால்க்கொள்ளவும் வெறுப்புற்றால்த்தள்ளவுங்கூடாது விருப்பு வெறுப்பு உதாசினத்திலுங் கைவிடப்படாத அதிவிருப்பமுடைய நமது சந்தோஷரூபமாயும் தானேதானாகவிருந்து ஆனந்தம் ஆனந்தத்திரயம் ஆனந்தபஞ்சகம் ஆனந்தாஷ்டகம் ஆனந்தபூரணமென்ன நவ நவமாக அனுபவிப்பதாலும் அனுபவரூபமாய் சரீரியாகிய நமக்கு ஆனந்தரூபஞ் சித்திக்கப்பட்டது.

ஆனந்தம். — மனுஷ மனுஷகந்தர்வ தேவகந்தர்வ பிதிர்த்தேவ ஆஜானஜ கர்மஜ தேவ இந்திர பிரகஸ்பதி பிரஜாபதித்துவ விராட்புருஷனென்னும் ஒன்றுக்கொன்று நூறுபங்குயர்வுள்ள ஏகாதசவானந்தங்களும் நுரைகுமிழிலேசங்களாய்ப்பிரளய வெள்ள சாகரத்தைப்போல சுகாகாரசுகோததியுருவாய் எல்லையற்றிருப்பது. அவற்றுள்.—சார்வபௌம ஏகசக்கிராதிபதியாயிருப்பது: மானவபதம்.—சித்தனாய் அணிமாதிசித்தியைப்பெற்று பூலோகசஞ்சாரியாயிருப்பது: மனுஷகந்தர்வபதம். — பூமியந்தரசுவர்க்கமென்கின்ற திரிலோகசஞ்சாரியாயிருப்பது: தேவகந்தர்வபதம்.—பிதா பிதாமகன் பிதிர்பிதாமகன் மூவரும் அக்கினிஸ்வத்தாமுதலிய பிதிரர்கள்வசிக்கும் பிதிர்லோகத்திலிருக்க சந்ததிபரம்பரையாய்ப் பிதிர்கர்மத்தைச்சாதித்து பின்னேன்பிதிர்லோகத்தைச்

சேர முன்னேன் சுவர்க்கலோகத்தையடையப்படுவது: பிகிர்த் தேவபதம்.- தேவனுடையகிருபையினால் தேவஸ்திரீகளிடத்தில் சுயமாகப்பிறந்து தேவபோகத்தையடையப்படுவது: ஆஜானஜ தேவபதம்.- சோதிஷ்டோம யாகாதிகிருதுக்களைப்பண்ணி யக்ஞ சீலனாக விண்ணுலகபோகத்தை யடையப்படுவது: கர்மஜதேவ பதம்.—கற்பாதியிலுதித்து முப்பத்துமுக்கோடி தேவர்களாகப் பிரிந்து பிரளயாந்தத்தொடங்கிநிற்பது:தேவபதம்.—திரிலோகத் துக்கும் இராஜனாகவிருந்து லோகாதிபத்தியஞ் செய்யப்படுவது: இந்திரபதம்.-குருபீடமாகவிருந்து இந்திராதிதேவர்களால் பூசிக்க ப்படுவது: பிரகஸ்பதிபதம்.— சிருஷ்டிகர்த்தாவாயிருந்து அண் டாதிபத்தியஞ் செய்யப்படுவது:பிரஜாபதிபதம்.— பாகியரூபத் தில் சருவாண்டபந்திகளைத் தொகுத்துநிற்பதனால்: விராட்புருஷ னென்றும். அவ்வண்ட பந்திகளை கற்பவாசத்தில் வைத்திருப்பத னால் இரணியகருப்பனென்றும். நாமம்பெற்று சர்வாண்டபந்தி களையும் பாகியாந்தரங்களில் வசிக்கப்படுவது :விராட்புருஷபதம்.

ஆனந்தத்திரயம்.-பிர்மானந்தம் வாசனானந்தம் விஷயானந்த மென்னத்திரிவிதம். அவற்றுள். — ஞானப்பிரகாசமாய்ப் பிரிவற் றிருப்பது: பிர்மானந்தம். —சொச்சொரூபத்தைமறவாது கிரீ டாப்பிரவர்த்தியினால் பிரிந்துநிற்பது: வாசனானந்தம். — அகமுக விருத்தியினால் ஞானானந்த சத்தியசொரூபத்தை ஒருமித்தடை வது: விஷயானந்தம்.

ஆனந்தபஞ்சகம். — விஷயானந்தம் பிர்மானந்தம் வாசனா னந்தம் நிசானந்தம் முக்கியானந்தமென்ன ஐந்துபேதமாகவிருப் பது. அவற்றுள்.- அநன்னியமாகவிருக்கின்ற பரப்பிர்மசுகம் அக முகவிருத்தியிற்றோற்றப்படுவது: விஷயானந்தம்.-அநன்னியப்பிர மத்தோடொருமித்து அகம்புறம்முதலியவேறுபாடற்று விளங்கு வது: பிர்மானந்தம்.—வாசனாசுகியாய் அநன்னியப்பிர்மத்தைமற வாமல் எதிரிட்டதொழில்களைச்செய்யப்படுவது: வாசனானந்தம்.- நடுநிலைப்பொருளாகியபரப்பிர்மம் நீ நானென்னும் சீவிஸ்வரவகங் கரம்நிவர்த்தித்திருக்கும் உபேக்ஷாமௌனத்தாலநுபவப்படுவது: நிசானந்தம். — துயில்செறியாது திரிசியமறியாது தேககம்பித மற்று புத்தி சமநிலையாகவிருந்தனுபவிப்பது: முக்கியானந்தம்.

ஆனந்தாஷ்டகம். — விஷயானந்தம் பிர்மானந்தம் வாசனானந்தம் ஆத்மானந்தம் முக்கியானந்தம் நிசானந்தம் அத்துவிதானந்தம் வித்தையானந்தமென்னும் அஷ்டரூபமாய்ச் சாதிக்கப்படுவது அவற்றுள். —போகலாபத்திற்றோற்றுவது: விஷயானந்தம். — நித்திராதிசுழூத்தியிற்றோற்றுவது: பிர்மானந்தம். — நித்திரைதெளிந்தும் தெளியாவிடத்திற்றோற்றுவது:வாசனானந்தம்.- இதரமில்லாதுமுழுவதும்பிரியரூபமாகத்தோற்றுவது: ஆத்மானந்தம்.-யோகதிருஷ்டியிற்றோற்றுவது: முக்கியானந்தம்.-உபேக்ஷாபுத்தியிற்றோற்றுவது: நிசானந்தம். — விசாரமுகத்தால் நாமரூபகற்பிதம்நீங்கிய ஏகதிருஷ்டியிற்றோற்றுவது: அத்துவிதானந்தம்.— வாக்கியஜென்னியமான சத்தியஞானத்தாற்றோற்றுவது: வித்தையானந்தம்.

ஆனந்தபூரணம்.—அகண்டேகவிருத்தியிலுற்பவித்து விஸ்வவிராடபேனங்களைக் கொப்பளித்து கால தேச வஸ்துவென்னும் பரிச்சேதத்திரயங்களை விழுங்கி பிரளயவெள்ள சாகரசொரூபமாய் மகிழ்வுற்று அவாங்மனோகோசரமாய் விளங்குவது.

பூரணனுபவம். — வன்னியே லோகிதோஷ்ணப்பிரகாசகுணங்களுக்குப்பொருளாவதுபோல ஏகமேவப்பிர்மமே சத்தாதிகுணங்களுக்குப்பொருளென்று சுருதியுக்தியனுபவங்களாலுணர்த்திய சற்குருவாக்கியப்படி சச்சிதானந்த ஒருமையை சுவாநுபூதியிற்றெளிந்து சகஜானந்தநிஷ்டனாய் தடையற்று விளங்குவது.

## பூமித்துவயம்.

வித்துநனவு நனவு மகாநனவு சாக்கிரசொப்பனம் சொப்பனம் சொப்பனசாக்கிரம் சுழுத்தியென்ன அஞ்ஞானபூமியை ஏழுவகையாயும் சுபேக்ஷை விசாரணை தனுமானசி சத்துவாபத்தி அசம்சத்தி பதார்த்தாபாவனை துரியமென்ன ஞானபூமியைஏழுவகையாயும் அந்தஞானபூமியை சாக்கிர சொப்பன சுழுத்தி துரியம் துரியாதீதமென்கின்ற அவஸ்தாபஞ்சக ரூபமாயும் நிரூபிப்பது.

அஞ்ஞானபூமி. — அகண்டேகசொரூபத்தில்நின்றும் ஓரறிவுருவாகப்பரிணமிப்பது: வித்துநனவு. — அகங்கரத்துருவாயங்குரிப்பது:நனவு.-ஜெனனபரம்பரையை அகமமதுருவாய்விருத்தி

மண் பெண் பொன்னென்கின்ற ஈஷணாத்திரயப்பித்தேறி ஆசா மிகுதியினால் மண்ணையும் பெண்ணையும் பொன்னையும் பலவாறாக அசாஸ்திரீகவழியிற் சேகரித்து ஓரிடத்திற் பாஷண்டகுடும்பமாய்ச் சேர்ந்துகொண்டு மூடகோரவனாற்றில் புதைந்துகிடக்கின்ற மனதைவெளிப்படுத்தி சாந்தியாதிசற்குணநீராற் சுத்திகரித்து ததேகப்பிர்ம பாரத்திற் சேர்க்காமலும் சத்துலக்ஷணத்தால் கல்பாதியில் மனச்சக்ஷுராதிகளோடுங்கூடிநின்று அதற்குரிய நரகசுவர்க்கபந்தமோக்ஷ இஷ்டாநிஷ்ட சுகதுக்காதிகளையனுபவித்தும் சித்துலக்ஷணத்தால் மனச்சக்ஷுராதி கல்பப்பிரளயங்களுக்குப்பிரத்தேக சாக்ஷியாய் அதனோடுபந்திக்காமல் விலக்ஷணரூபமாய்த் தாக்கற்றிருந்தும் ஆனந்தலக்ஷணத்தால் சலக்ஷணமாகவிருக்கின்ற சத்தே விலக்ஷணமாகவிளங்கிய சித்தென்றும் விலக்ஷணமாகவிளங்கிய சித்தே சலக்ஷணமாகவிருக்கின்ற சத்தென்றும் சமயுத்தியாலொருப்படக்கண்ட பரமசாதுக்களினிடத்து சாந்தாகாரமாய் மூர்த்திகரித்திருப்பதாயுமிருக்கின்ற சச்சிதானந்த ஒருமையாகிய நம் ஆத்மாவை நீயே சச்சிதானந்தமென்னும் சுருதிவாக்கியப்படி நிஷ்டாரூபமாய்ச் சாதித்து நிச்சந்தேகராய்த் தெளியாமலும் நீயே பிர்மமென்னும் ஆசாரியவாக்கியப்படி சமத்துவயேகபரிபூரணராய்விளங்கிய பரமாத்மாவே சச்சிதானந்த ஒருமையாகிய நம் ஆத்மாவென்றும் சச்சிதானந்த ஒருமையாகிய நம் ஆத்மாவே சமத்துவயேகபரிபூரணராய் விளங்கிய பரமாத்மாவென்றும் சுவாநுபவரூபமாய்த்தெளிந்து சகஜானந்த சிரேஷ்டராய்ப் பிரகாசியாமலும் பவித்திரமாகாமல்ப் பாவபூர்த்தியினால் பரிணமித்து ழல்கின்ற மனச்சக்ஷுராதிகளை நியதிரூபத்தாற் பிரத்தேகமாக்கி சத்துரூபியாகிய தன்னைச் சுட்டுதலோடு லக்ஷியமாகக் குறிப்பிட்ட ஓமெல்லையிலொருப்படுத்தி நெடுநேரஞ் சமாதியிலிருந்து அதுவே நமதுநிசசொரூபமெனத் திடப்படுத்தி சகஜானுபவத்துக்கு வெளியிட்டுமுன்னம் நியதிரூபத்தால் பிரத்தேகமாக்கிய பாவபூர்த்தியான மனச்சக்ஷுராதிகளோடுஞ் சம்பந்தமுடையனாய் அசத்தியம் அநார்த்தவாதம் தோஷதிருக்கு மாயோபாயகம் நிர்த்தயை நிஷ்காரணவைரம் பாபசரிதம் பிரஜாக்ஷயம் துரிதாலயம் சுரதாபேக்ஷை துவிர்ச்சென்னியம் துராசாரம் அநார்ச்சிதம் நரக சாதனமென்

னும் நித்தியநரகத்தைத்தருவதான அசுத்தலக்ஷணங்களை இம்மையிலேயே நாளுக்குநாளபிவிர்த்திபண்ணி அவையாவும் மனச்சக்ஷுராதிகளின் றலையிலேற்றிவைத்து அதனோடு மறுமையிலும் இப்படியே மீளாதநரகத்தை யனுபவித்துக்கொண்டிருப்பது.

தீவிரவிராகம்.-தனதாரபுவிபுத்திராதிகளை இந்தச்சரீரமுள்ளபரியந்தம் திரிகரணத்தும் பரிசிக்காத தீர்க்கநிராசையையுடைய சத்தியவிரதிகளாய் குடீசகம் பகூதகமென்னும் நிஷ்டாபேதத் தாற்றுவிபாகமாய் சௌசாசமன ஸ்நான பூசாதி நித்திய நைமித்தியக் கிரிகைகளையும் சாந்தானிகபிக்ஷை கணபிக்ஷை மாதுகரபிக்ஷை அயாசகபிக்ஷையென்னும் க்ஷுத்துவாரணத்துக்காக பூர்வாசாரியர்களாலேற்படுத்திய ஆகாரநியமங்களையும் மற்றைய சமஸ்தமானகருமங்களையும் சாஸ்திரீகமாயும் சிட்டாசாரமாயுமிருக்கின்ற நிஷ்டாநியமத்தை சரீரமுள்ளபரியந்தஞ்சாதித்து சரீராந்தத்தில் அதற்குரிய லோகாந்தரப்பிராப்தியை யடையப்படுவது.

தீவிரதரவிராகம்.—அம்சம் பரமாம்சமென்னத்துவிதம்.—அவற்றுள்.அம்சசந்நியாசம்.—அதிவிரக்தியினால் விவிதப்பிரபஞ்சத்துக்கு மூலபீஜமாகவிருக்கின்ற சித்தத்தைச்செயித்து உள்ளும்புறம்புஞ் சமமாக்கி ஞானதீரராய் இப்போது இந்தச்சரீரத்தோடு மனுபவிப்பது: முத்தப்பிராயமென்றும். சரீராந்தத்தில் நித்தியமாகவிருக்கின்ற சத்தியலோகத்தை யாசிரயித்து இப்படியே சர்வாவயவசகிதமான தேஜோரூபத்தைப்பெற்று அவ்விடத்தில் நித்தியமுத்தனாகவிளங்குவதே: முத்தாத்மகமென்றும்.நிரூபிக்கப்படுவது.பரமாம்சம்.—சுக்ஞானி சிக்ஞாசுவென்றிருவகையாய் இவ்விடத்திலேயே சசரீரமுத்தியைச்சாதித்து அந்தமுத்திப்பிரயோஜனமாகிய பரமபாக்கியத்தை ஞானமாத்திரத்தா லடையப்படுவது. சுக்ஞானி.— சிவன் ஈஸ்வரன் பிர்மமென்னும் தத்துவத்திரயத்தையுணர்ந்து சருவமும்பிர்மமயமெனத்தெளிந்து சிவன்முத்தனாய் ஆரூடபதத்திலிருந்துகொண்டு சதா ஆசிரதரக்ஷணாம் பண்ணிக்கொண்டிருப்பவன்.

சிவதத்துவம். —அநாதியாய் கர்மோபாசகஞானமென்னும் லக்ஷணத்திரயரூபத்தாற் பிரகாசிப்பது. அவற்றுள். கர்மம்.-பாகியம் ஆந்தரமென்னத்துவிதம். பாகியகர்மம்.— புண்ணிய பாவ

மிசிரமென்னத்திரிவிதரூபமாய் அதனையாசிரயிப்பவர்கள் தேவ மனுஷிய நரக திரியக்காதிவிவிதரூபத்தைத்தரித்துக்கொண்டு சற்றேனும் நிலைபெறாது மேலது கீழது கீழது மேலதாய் மாறிமாறி சுழற்றிக்கொண்டுதிரிவது. ஆந்தரகர்மம்.—தூலசூக்ஷ்ம காரணமென்கின்ற சரீரத்திரய சாட்டியபாகத்தை யோகமகிமையினாற் பிரத்தேகமாக்கி சைதன்னியபாகமாகவிருக்கின்ற தொண்ணூற்றாறு அங்குலவளவையுடைய தூலதேகத்தையும் பத்துப்பன்னிரெண்டுபதினாறென்னும் அங்குலவளவையுடைய சூக்ஷ்மதேகத்தையும் அங்குஷ்டவளவையுடைய காரணதேகத்தையும் நிஷ்டாரூபமாய்த் தனித்தனியேசாதித்தும் இம்மூன்றும் ஒருங்கேசாதித்தும் ஈஸ்வரானுக்கிரகத்தால் பரிபூர்த்தியானவிடத்து நித்தியமாகவிருக்கின்ற திவ்வியரூபத்தோடு பிரசன்னமாவது.

உபாசகம்.—வேதவிதிப்படி யார் யார் எந்தத்தேவை யதாப்பிரகாரம் உபாசிக்குகிறார்களோ அவர்கள் அந்தத்தேவினுடைய திருநோக்கத்தால் சரீரமிருக்கும்போதே தனதபீஷ்டசித்தியைப் பெற்று சரீராந்தத்தில் பவபந்தவிசர்ச்சனராய் அந்தத்தேவினுக்குரிய சாலோக சாமீப சாரூப சாயுச்சிய முத்திசதுஷ்டயரூபமான நித்தியரூபத்தைப்பெற்று அதற்குரிய நியதகைங்கிரியத்தைப் பண்ணிக்கொண்டிருப்பது.

ஞானம்.—நியதிசமஸ்காரத்தால் சரீரேந்திரியமனோபுத்தியாதி பூதவிகார ஜனகமான சாட்டியபாகம்நசித்து சைதன்யவியாபகத்திலமர்ந்திருக்கின்ற அநர்த்தநிவர்த்தியும் சாட்டியபாகமிருக்கும்போதே பூர்த்திசமஸ்காரத்தால் சர்வமும் சுகாகார சுபோததியுருவாய்ரமிக்கச்செய்கின்றஆனந்தாவாப்தியும் ஆசிரயிப்பவர்க்குக் கொடுக்கப்படுவது.

ஈஸ்வரதத்துவம்.-அதிஷ்டானமாத்திரமாகவிருந்தும் தனது சத்திகளையதிஷ்டித்து சோபாதிக நிருபாதிக சர்வாதிபமென்னும் லக்ஷணத் திரயரூபமாக சருவரக்ஷைகளையும் பண்ணப்படுவது. அவற்றுள். சோபாதிகலக்ஷணம்.-சர்வப்பிராணிகளுக்கும் காரணபூதையாய்நின்று அதனது ஸ்திதிலயோற்பவ நிக்கிரகவனுக்கிரகாதிகளைச் செய்யப்படுவது. நிருபாதிகலக்ஷணம்.—ஞானசக்தியாதி சகலகுணசம்பூரணராகவிருக்கின்ற ஸ்ரீபகவான் ஆசிரதரக்ஷகார்த்

தம் பரமம்சாமானியமென்கின்ற இரண்டுவடிவத்தைத்தரித்துக்கொண்டு ஆசிரயிப்பவர்க்குப் புருஷார்த்தம் பரமபுருஷார்த்தமென்னும் உபயமோக்ஷத்தையும் ஒருங்கேகொடுத்து ரக்ஷிக்கப்படுவது. சர்வாதிபலக்ஷணம்.-சர்வத்துக்கும் அதிபதியாய்பரத்துவ வியூக விபவ அந்தரியாமி அர்ச்சாவதாரமென் றைந்துபேதமாகவிருந்து சர்வரக்ஷைகளையும் பண்ணப்படுவது.

பிர்மதத்துவம்.— சமத்துவயேகபரிபூரணராய் பெரிதுக்கெல்லாம்பெரிதாய் அதனதுமகிமையை யாவராலும்அளவிட்டறியக்கூடாத அவாங்மனோகோசரமாயிருப்பது. சமத்துவம்.—முத்தாத்மாக்கள் சாட்டியசைதன்யபாகத்தால் தேவ மனுஷிய தேகவியவகாராதிகளிற் றாரதம்மியமிருக்கினும் அவ்விரண்டிடத்தும் ஒருதன்மயவாகவிளங்குவது. ஏகம்.—முத்தாத்மாக்கள் அளவற்றபேதமாகவிருக்கினும் அவர்களனைவரிடத்தும் சற்றேனும் பரிச்சேதிக்கக்கூடாதஅனுபூதிவஸ்துவாகவேயிருப்பது. பரிபூரணம்.-ஆகாசத்தைப்போல சிவிஸ்வர ஜகத்தினுக்குள்ளிலும் புறம்பிலும் நிறைவுற்று அவாங்மனோகோசரமாயெல்லையற்றிருப்பது.

சிக்ஞாசு.— சுபேக்ஷை விசாரணை தநுமானசியென்னும் அப்பியாசபூமியில் வசிப்பவனாய் தேவ ஆசுர மானவ முமுக்ஷு வென்னுங் கிருத்திய சதுஷ்டய விவேகியாய் இல்லறந் துறவறமிரண்டில் ஒன்றையே தீர்க்கமாகச்சாதித்து ஞானநீரத்தால் இம்மையிலேயே பவபந்தங்களம் வர்ச்சித்திருக்கின்ற அபவர்க்க நிலையைச் சாதித்தடைபவன்.

தேவகிருத்தியம்.— மனுஷனாகவிருந்தும் வேதவிகிதமான சத்கருமங்களை நிர்ச்சலரூபமான தீர்க்கபுத்தியால் சாதித்து அதனால் திவ்வியரூபத்தைப்பெற்று அதற்குத்தக்கதான தேவபோகத்தை யனுபவிக்கப்படுவது.

ஆசுரகிருத்தியம்.— மனுஷனாகவிருந்தும் இதரஜனங்கள் நடுங்கும்படி பாவபயங்கரமான கொடுந்தொழில்களை நிர்ச்சலரூபமான தீர்க்கபுத்தியினாற்செய்து அதனால் யாதனாசரீரத்தைபெடுத்துக்கொண்டு அதற்குத்தக்கதான நரகானுபவத்தைப் பண்ணிக்கொண்டிருப்பது.

மானவகிருத்தியம்.—மனுஷனுக்விருந்தும் விஸ்வம் விராடம் பரம் வியோமம் வியோமாதீதமென்கின்ற சொரூபபஞ்சகத்தில் ஒன்றையாகிலும் வரையாகச்சாதித்து அதனுல் காலச்சக்கரத்தைத்தடுத்துதனக்குரியமனுஷீகத்தன்மையை நிறுத்திக்கொள்ள மாட்டாமல் சஞ்சலரூபமான அத்திரபுத்தியினுல் வந்த வந்தபடி விவிதகருமங்களைச்செய்து அதனையனுபவித்தற்கேதுவாக ஊர் வன ஜலசர மிருக பக்ஷி தாவர மனுஷிய தேவமென்னும் விவித ரூபத்தைத்தரித்துக்கொண்டு சற்றேனும்நிலைபெருது குலாலசக்கரம்போல மாறிமாறிச்சுற்றிக்கொண்டுதிரிவது.

நிர்ச்சலரூபமான தீர்க்கபுத்தியினுல் தனக்குரிய வர்ணுதி வரையைநிறுத்தப்படுவது: விஸ்வவரை. — அநித்தியரூபமான சாட்டிபசம்பந்தத்தைவேறுபடுத்தி நித்தியரூபமானஈஸ்வரசம்பந்தத்தைத்தெளிந்துஅதனைவிராட்புருஷரூபமானஸ்ரீசௌல்ப்பிய சற்குருவினுலடையப்படுவது: விராடவரை.- ஒன்றேயிரண்டாய் இரண்டேயொன்ருய் ஒன்றிரண் டெனப்பிரிக்கக்கூடாத அவாச்சியரூபத்தை நிஷ்டாரூபமாய்சாதித்தடைவது: பரத்துவவரை.- சாக்ஷிபூதமாய் விஸ்வ விராட பரமென்னும் சொரூபத்திரயத்துக் குள்ளிலும் புறம்பிலுஞ் சதாஜொலித்துக் கொண்டிருப்பது: வியோமவரை. சைதன்யவியாபியா யெல்லையற்றிருப்பது:வியோமாதீதவரை.

முமூக்ஷுகிருத்தியம்.—அனந்தஜென்மபரிபாகத்தால் விவேக புருஷனுக அவதரித்து ஈஸ்வரகிருபையினுல் பூர்வத்தொடர்பாய் வந்த பாவசுகிர்தத்தை அனுதாப அர்ப்பணரூபமாக விசர்ச்சித்து புண்ணியபாவத் தொடக்கில்லாத சுத்தபுத்தியினுல் பகவானுகிய ஸ்ரீ சற்குருவை சாக்ஷாத்காரமாக்கி அந்தசாக்ஷாத்கார சற்குரு மகிமையினுல் சீவன் யீஸ்வரன் பிர்மமென்னும் தத்துவத்திரயத்தையுணர்ந்து அந்த தத்துவக்ஞானபூர்த்தியினுல் சர்வமும் பிர்மமயமெனத்தெளிந்து பிர்மரசமாக வனுபவிக்கும் முத்திப்பிரயோஜனத்தை சதா இம்மை மறுமைமுதலிய எக்காலத்தும் அனுபவித்துக்கொண்டிருப்பது.

இல்லறம். — இல்வாழ்க்கை வாழ்க்கைத்துணை நலம் புதல் வரைப்பெறுதல் அன்புடைமை விருந்தோம்பல் இனியவை

கூறல் செய்நன்றியறிதல் நடுவுநிலைமை அடக்கமுடைமை ஒழுக்கமுடைமை பிறனில்விழையாமை பொறையுடைமை அழுக்காறாமை வெஃகாமை புறங்கூறாமை பயனில்சொல்லாமை தீவினையச்சம் ஒப்புரவறிதல் ஈகை புகழ்முதலியவறங்களால் வர்ணாதிதர்மத்தையனுசரித்து உண்மைஞானத்தை யடையப்படுவது.

துறவறம்.—தேயம் ஞேயம் வாஞ்சிதம் சிரேஷ்டம் விரதம் ஞானமென்னப் பலவாறாகவிருக்கின்ற தாரதம்மியங்களை விவேகித்து தன்னாற்சாதிக்கத்தக்க துறவினைக்கைக்கொண்டு அந்த நிலையில் சற்றேனும் பிசகாதிருந்து தத்துவக்ஞானத்தை யடையப்படுவது. அவற்றுள். தேயத்துறவு.-சாதிசமயக்கிரியையாதி புறத்துறப்புக ளிருந்தபடியேயிருக்க அதற்குமூலமாகவிருக்கின்ற சித்தத்தைச்செயித்து அந்தச் சித்தத்தியாகமே சர்வத்தியாகமென்றுணர்த்துவது. ஞேயத்துறவு.—அகப்பற்று புறப்பற்று இரண்டையும் கிரமம் கிரமமாகவிடப்பட்டு உள்ளும்புறம்புஞ்சமமாக்கிவிடப்பட்டபந்தகம் பிடிக்காமல் தனியனாய் அரண்யப்பிரதேசத்தில் வசித்துக்கொண்டிருப்பது. வாஞ்சிதத்துறவு.—தூரதேசத்திலிருக்கின்ற புருஷன் அதிசீக்கிரத்தில் வந்துசேர்ந்து தனது விரகாக்கினியை நிவர்த்தித்தற்பொருட்டு அவனதுமனோரதத்திற்காக அங்கீகரித்த மஞ்சள் குங்குமம் சந்தனம் புஷ்பம் தாம்பூலமுதலிய தேகபோஷணங்களைக்கௌணமாக்கி அவனையடைதற்கான தீர்க்கவிரதத்தைச்சாதிக்கின்ற ஒரு ஸ்த்ரீயைப்போல பகவானாகிய ஸ்ரீசற்குருவையடைந்து தாபத்திரயாக்கினியை நிவர்த்திக்கும்பொருட்டு அதற்குப்பிரதிபந்தகமாகவிருக்கின்ற ஈஷணாத்திரயத்தைத்துறந்து ஏகாக்கிரசித்தத்தாலொருப்பட்டுநிற்பது. சிரேஷ்டத்துறவு.—வேதவிதிப்படி தண்டுகமண்டலு காஷாயாதி விசித்திர சின்னதாரிகளாய் இதராந்தரவர்ச்சித நாராயணபரப்பிர்மசிந்திதராய் முனிபுங்கவதீரரான அக்கிரவர்ணசிரேஷ்டராலநுஷ்டிக்கப்படுவது. விரதத்துறவு.-அருளுடைமை புலான்மறுத்தல் தவம் கூடாவொழுக்கம் கள்ளாமை வாய்மை வெகுளாமை இன்னாசெய்யாமை கொல்லாமைமுதலிய சாதகத்தால் சகலபாவங்களையும் விசர்ச்சித்து அந்தக்கரணங்களைப் பரிசுத்தமாக்குவது. ஞானத்துறவு.-நிலையாமை துறவு மெய்யுணர்தல் அவாவறுத்தல்

முதலியசாதகத்தால் அதனது சாத்தியமானஅபவர்க்கசுகத்தைக் கொடுக்கப்படுவது.

## சாஸ்திரசம்பூரணம்.

வாக்கியஜென்னியமான வித்தையானந்தத்தையும் அதனையடைதற்கேதுவாயவிருத்திநீக்கத்தையும் விருத்திநீக்கத்தாலுண்டான கிருதகிருத்திய ஆனந்தாவேஷத்தையும் அவ்வானந்தாவேஷம்வருவதற்குக் காரணபூதையாகிய மாதா பிதா குரு தெய்வம் ஊர் பேர்முதலானவைகளின் திவ்விய சிரேஷ்டத்தையும் நிறைநிறையே பந்திபந்திகளாகச்சிராக்கித்து இப்படியேவிதேகப்பிராப்தியிலும் நித்தியவாழ்வைக் கொடுப்பதற்குத்தாதாவாகிய ஸ்ரீமன்நாராயணனை ஸ்தௌத்தியம்பண்ணி கைவல்யநவநீத சாஸ்திரத்தை சம்பூர்த்தியாக்குவது.

வித்தையானந்தம்.-ஆதியாய் அந்தமாய் ஆதியந்தமில்லதாய் எப்போதும் ஒருதன்மயவாகவிருக்கின்ற பிர்மசொரூபமெதுவோ அதுவேநமதுசொரூபமென்னுந் தத்துவார்த்தத்தை நிர்ச்சந்தேகமாய்ச் சுவாநுபூதியிற்றெளிந்து ஆனந்தாவேஷ நிர்த்தனனாய்த் தமதிஷ்டதெய்வமான விஷ்ணுதேவையும் சமஸ்தமானவேதாந்ததேசிகர்களையும் ஞானசற்குருவையும் ஈஸ்வரசற்குருவையும் பரமசற்குருவையும் அயன் மால் சங்கரன் அருக்கன் பூரணன்முதலான நித்தியசூரிகளையும் சருவசிரேஷ்டமானதுரியபூமியைமருவி சருவபூமியும் வியாபித்து சருவசிவசாக்ஷியாய் ஏகபரிபூரணராகவிருக்கின்ற ஸ்ரீபரப்பிர்மதத்துவத்தையும்நிறைநிறையேவணங்கி பவரோக வௌஷதமான கைவல்யநவநீதத்தை சுவாநுபவரூபமாய்த் திரட்டி ஆசிரயிப்பவர்க்குப் பூரியாகக்கொடுக்கப்படுவது.

விருத்திநீக்கம்.-முதலாவது ஞானவரசனான பரப்பிர்மசந்நிதியில் மனச்சக்ஷுராதிகள் தாசபூதர்களாகநின்று நியதகைங்கிரியத்தைச்செய்யுமிடத்து சற்றேனும் அக்ஞான சந்தேக விபரீதமில்லாததால் அதைப்பற்றி யெழும்பும் விருத்தி: யுதித்தற்கிடமில்லை. இரண்டாவது. — விவிதவழியிற்செல்லுஞ் சித்தத்தைப் பிராணாயாமயூகத்தாற்றடுத்து சுகசமாதியைச் சாதிப்பதனாலும்: விருத்திநீங்கும். மூன்றாவது.— குருமுகமாய்க்கேட்ட அம்சோக மந்திரவிதிப்படி பிராணன் சுவாதீனமாகிறபரியந்தம் தான் அத

னோடுபோக்குவருத்துடையனாய் சுவாதீனமான மாத்திரம் பிரயாசமில்லாமல் அப்பிராணனை சுகாகாரமாக அடக்கினும்: விருத்திநீங்கும். நான்காவது.-அக்ஞான சந்தேக ஆவரண விக்ஷேபாதிகளுக்குப் பீஜமாகவிருக்கின்ற அவித்தையை வேரோடுபிடுங்கி அறிவாகாரநிஷ்டையைச்சாதிப்பதனாலும்: விருத்தியடங்கும். ஐந்தாவது.-அவித்தையாரூபமான காரணசரீரத்தைமூலத்தோடுபிடுங்கி அகிலலோகசராசரசித்திரங்களை மறைப்பின்றியொருங்கேதோற்றிய பரிபூரணவியாபகநிச்சிததாரணையாலழுத்தமுற்றிருக்கினும்: விருத்திநீங்கும். ஆறாவது.—நான் ஜகசீவபரம் உதித்தொடுங்குதற்குமூலமான பரிபூரணசொரூபம் எனதிடத்துத்தோற்றிவிரிந்திருக்கின்ற ஜகசீவபரங்களிடத்து நான் தோற்றியொடுங்குபவனல்லவென்னும் நிச்சிததாரணையால் அவித்தையா நிரசனமானவிடத்தும்: விருத்திநீங்கும். ஏழாவது.— பரப்பிர்மதத்துவத்துக்கன்னியமாக ஒருவஸ்துவுமில்லையென்னும் நிச்சிதவழுத்தத்தால் சித்தசீவாதிகள் அளவற்றவிவகாரங்களைச்செய்யினும் பரப்பிர்மரசமாக அநுபவப்படுவதாலும்: விருத்திநீங்கும். எட்டாவது.— அகம் சிற்சொரூபி அகம்பரிபூரணனென்கின்ற தீர்க்கதிடவிரதனாயவற்றைமறவாமல்நின்று தேகேந்திரிய மனாதிகரணங்களால் எவ்வளவுவிவகாரத்தைச் செய்யினும் விரோதமில்லாது சொப்பனாவிசர்ச்சன சுகாகாரநிஷ்டனாயிருப்பதாலும்: விருத்திநீங்கும்.

ஆனந்தாவேஷம். — ஸ்ரீ பகவானாகியநாராயணன் நன்னிலத்தின்கண்ணெழுந்தருளியது சகேதுபுண்ணியமோ நிர்ஹேதுபாக்கியமோவென்பதுதெரியாமல் அவனது கிருபையினால் தான் கிருதார்த்தனானதும் தனக்குச்சகாயபூதையான கரணேந்திரிய கரசரணாதி அவயவமுழுதும் அதற்குரியசித்தியைப்பெற்று தானே உத்தரீயத்தைவீசி நித்தியகைங்கிரிய நித்தியதாண்டவத்தைச் செய்யும் அற்புதசந்தோஷத்தையும் சிலவற்றைச்சொல்லி வசனித்தற்கெட்டாது சருவானந்தசம்பூரணனாகமகிழ்வுற்றிருப்பது.

கைவல்யநவநீதம். — சருவதீர்த்தப் பிரயோஜனத்தையுங் கொடுக்கும் சருவசிரோஷ்டசற்குரு பாதோதகம்போல சருவசாஸ்திர சிரோஷ்டமான கைவல்யநவநீதசாஸ்திரம் ஒன்றைமாத்திரங் கற்பவர்கள் சருவசாஸ்திரபண்டிதரான மகாத்மாக்கள் அடையு

கிற பிரயோஜனமெதுவோ அந்தப்பிரயோஜனமுழுதும் பெற்று உதயாஸ்தமின்றி ஊழிபேரூழியாக வாழ்ந்துகொண்டிருப்பது.



## சராசனதீபம்.

அம்புகளைநடுக் கொதையில் வைத்தெய்யும் நாணேற்றியவில்லைப்போல சமஸ்தமானமதங்களையும் ஒருப்படச்சேர்த்து ஒதுக்கமில்லாமல் அவையாவுக்கும் நடுநிலையாகநின்று இந்தசாஸ்திரமாகிய கைவல்யநவநீதத்தைப் பிரயோகம்பண்ணுவது. அதாவது.—அவாங் மனோகோசரமாயும் நம்மனுபூதிவஸ்து வாயுமிருக்கின்ற பரப்பிர்ம தத்துவத்தை சொரூபானு சந்தானத்தால்ப் பணிந்து அர்த்தானுசந்தானத்தால்த்திரட்டி வாக்கியானுசந்தானத்தால்ப் பாசுரரூபமாகப் பிரயோகம் பண்ணுவது.

சொரூபானுசந்தானம்.— ஹரி: ஓம் ஸ்ரீபரமார்த்தகுருவே நம: பிதாபுத்திரப்பிரகாசகாயநம: ரூப வரூப ரூபாரூப சகேஸ்வர சௌலப்பியகுரவேநம: மாயாமேகநிரசன சண்டமாருத சந்தெரிசனயநம: கோடிசூரியப்பிரகாச மோகாந்தகார நிரசனயநம: சிருஷ்டித்துவாதிரக்ஷக திரிமூர்த்திஸ்வரூபாயநம: நன்னிலப்பிரதேச சொப்பனசாநித்திய ஸ்ரீமன்நாராயணயநம:வென்று பலவாறுகஸ்தௌத்தியம்பண்ணுவது.

## அர்த்தானுசந்தானம்.

அத்துவித தொய்த விசிஷ்டமென்னும் சாஸ்திரத்திரயத்திலுள்ள அர்த்தசாராம்சத்தையெடுத்துக் கைவல்யநவநீதமாகத் திரட்டப்படுவது. அவற்றுள்.அத்துவிதம்.—ஸ்ரீசற்குருகடாக்ஷத்தால் சரீரசரீரியைவிவேகம்பண்ணி சரீரவிலக்ஷணனான சரீரிக்கி சரீரத்தைப்பற்றியெழும்பும்விஸ்வகல்ப்பிதமான ஆகாமியகர்மத்தைநசிப்பித்து சரீரிக்கிநீதலோசனத்தைக்கொடுத்து நியதிபூர்வகமாய்விராடப்பிரபஞ்சத்துக்குப்பிரத்தேகனுக்கிஅதிலடங்கியிருக்கின்ற சஞ்சிதபீஜத்தை இனிமேலங்குரமாகாதபடிக்கி சாக்ஷிபூத்திடவிரத ஞானக்கினியினாற்சுட்டு இனிமேலங்குரமாகாத வருத்தவிரையைப்போல பொசித்தற்கு மாத்திரம் உபயோகமாய்

வர்த்தமானத்திலெதிரிடும் பிராரத்துவ போகத்தை சமசித்த முடையனுயனுபவித்து ஜீவன்முத்திப் பதத்திலிருந்து அவாங் மனோகோசரமாகவிருக்கின்றவிதேகமுத்தியையடையப்படுவது. தொய்தம்.—யக்ஞ தான தபோ விரதாதி சர்வலோகசாதனமான தூமாதிமார்க்கத்தாலும் பரம்பராவிதிப்படி மானவகுருமுதல் அமானவகுருபரியந்தமாகச்சாதிக்கும் அர்ச்சராதிமார்க்கத்தாலும் விஸ்வவிராடப்பிரத்தேகமானசரீரிக்கி முத்திபூமியிலுங் கனிஷ்ட சிரேஷ்டத்தைவிதிக்கப்படுவது. விசிஷ்டம்.— நியமனர்த்தமாக வர்ணதிகிருத்தியங்களைச்செய்கின்ற சகேதுவத்துவஅதிகாரிகளும் திவ்விய தேசங்களிலெழுந்தருளியிருக்கின்ற தேவப்பெருமான் விஷயமாகச்செய்யும்கைங்கிரியமே பௌஷதியிலடையப்போற நித்தியகைங்கிரியமெனச்சாதிக்கும் நிரோதுவத்துவஅதிகாரிகளும் உபயப்பிரகாரமாகக் கிரியாபூமியைக் கடந்து அர்ச்சராதிமார்க்க விதிப்படிசரண்யத்துவாராவிஸ்வவிராடப்பிரத்தேகமானசரீரிக்கி பிர்மம் சிலபாகத்தால் சமமாயும் சிலபாகத்தால் சிரேஷ்டமாயும் நிரூபிப்பது.

சாராம்சம்.—பரிபூரணராகவிருக்கின்ற பிர்மம் ஏகம் அதற்க நன்னியமாகவிருக்கின்ற சத்திகளநேகமென்னச் சாதிப்பது: அத்துவிதம்.—ஒன்றுக்கொன்று அநேகதாரதம்மியமுடைய ஆத்மாக்களிடத்து சர்வசமன்னுகவிருக்கின்ற பிர்மம் ஏகமென்னச்சாதிப்பது: தொய்தம்.—பிர்மம் ஏகம் அதனது சிலரூபகுணவிலாசாதிகளநேகமென்னச்சாதிப்பது: விசிஷ்டாத்துவிதம்.

கைவல்யநவநீதம்.—திரிமதசித்தாந்தப்பொருளாயும் சமத்துவயேகபரிபூரணராயும் அவாங்மனோ கோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்மதத்துவத்தை ஒருங்கே நிரூபிக்கப்படுவது.

வாக்கியானுசந்தானம்.— நன்னிலத்தின் கண்ணெழுந்தருளிய ஸ்ரீமன்நாராயணபரப்பிர்மமென்னும் சற்குருவாக்கியப்படி தாண்டவப்பிரபுவான அற்புதமூர்த்திதானே ஆசாரியனுமாய்த் தானே சிஷ்யனுமாகநின்று தத்துவவிளக்கஞ்சந்தேகந்தெளிதலென்னும் படலத்துவயரூபமாகத்தொடங்கி கைவல்யநவநீதத்தை சாஸ்திர பூர்வகமாக சம்பூரணமாக்குவது.

## தத்துவவிளக்கம்.

இந்நூலாசிரியர் அதிகார சற்குருவாக்கிய போதங்களை சாஸ்திரபீடமாகயேற்படுத்திக்கொண்டு தேகதேகி சர்வதேகியையும் சிவதேக சர்வதேகங்களையும் சிவதேக சர்வதேகங்களுக்கு மூலமாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்மதத்துவத்தையும் அந்தபரப்பிர்மதத்துவத்துக் கநன்னியமாய் சிவதேக சர்வதேகங்களுக் குள்ளிலும் புறம்பிலுஞ் சதாஜொலித்துக்கொண்டிருக்கின்ற ஆத்மாவையும் அவ்வாத்மா அந்த அநன்னியப்பிர்மத்தைமறந்துஅதனோடைக்கியமாகிற பரியந்தம்மத்தியிலிருக்கின்ற அவஸ்தைகளையும் அவ்வாத்மாவுக்கு வாச்சியார்த்த லக்ஷியார்த்த அகண்டார்த்தமென்கின்ற போதத்திரயத்தைத் துலக்கி அதனை அவ்வநிதப்பிர்மத்தோடைக்கியமாக்கின்ற விசித்திரமும் அநார்தாதி நவதோஷங்களையுடைய பஞ்சகோசக் கூட்டிலிருக்கின்ற தேகியை ஆகரிஷித்து நிர்த்தோஷமான சத்தாதி நவலக்ஷணங்களோடுகூடிய ஆத்மசொரூபமே நீயென்றுணர்த்தியதும் சற்குருவாக்கியப்படிபஞ்சகோசத்தைக்கடந்துபாழான இருட்டைத்தள்ளி பஞ்சகோசசூனியத்தை அதோதிருஷ்டியினால்ப்பார்த்த கிஞ்சித்துவ யிருப்பைவிட்டு கூடஸ்தம்பிர்மமென்கின்ற நெஞ்சம் நழுவி ஒன்றாய்நின்றபூரணத்தைத்தெரிசித்து சகஜானுபவத்துக்கு வெளியிட்டவன் பரப்பிர்மபரதத்துவமே அகத்திலும் புறத்திலுமிருக்கின்ற சௌலப்பிய சற்குருவெனத்தெளிந்து பலவாறாகஸ்தௌத்தியம் பண்ணியதும் அந்தஅதிகாரிக்கு ஸ்ரீசற்குரு அக்ஞான சந்தேக விபரீதமூழுநும் வர்ச்சித்து அதிஷ்டானஞானத்தைத்தெளிந்த சீவன்முத்தர்களின் விவகாரதாரதம்மியத்தையும் முத்தசேவையினாலுண்டான பிரயோஜனத்தையும் நவநவமாயுணர்த்தி பாஞ்சபூதவிகாரமான தேகவிவகாரம்நீங்கி அந்தச்சீவன் முத்தர்கள் சர்வசமானத்துவமாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற விதேகமுத்திப்பதத்தை அடையுகிற சருவசிராக்கியத்தையும் உணர்த்தப்படுவது.

## சந்தேகந்தெளிதல்.

உத்தரபடலத்தின் அர்த்தசாரங்களையொருபிரகாரஞ்சங்கிரகித்து இருபத்துநான்குவிஷயமாகத்தொகுத்து அதனை பிரதமம்

துவிதியம் திரிதியமென்ன மூன்றுபாகப்படுத்தி ஆசிரயிப்பவர்க் குணர்த்தப்படுவது.

பிரதமம்.— பரப்பிர்மம் நிவாததீப நிலயம் இதயாகாரம் குணத்திரயம் மனோநாசம் அவதானம் விரதம் விவகாரமென்றஷ்டபேதமாகவிருப்பது. அவற்றுள். பரப்பிர்மம்.—வாக்குமனதுக் ககோசர கோசரமென்றுணர்த்தப்படுவது. நிவாதநீபநிலயம்.— அசஞ்சலசித்த அகண்டபூரண நிருவிகல்ப்ப ததாகார சுவாநுபூதி நிலேயில் அசைவற்றிருப்பது: இதயாகாரம்.—பரப்பிர்மதத்துவத் துக் கநன்னியமாயும் சர்வேந்திரியங்களுக்குத் தலைமையாயும் அகத்திலும்புறத்திலுஞ் சஞ்சரிக்கின்ற மனோபுத்தியெண்ணங் களுக்கு மூலமாயுமிருப்பது. குணத்திரயம்.— சத்துவரூபத்தால் தெய்வசம்பத்தும் தமோரூபத்தால் ஆசுரசம்பத்தும் ரசோ ரூபத்தால் தேகலோகசாஸ்திரவாசனைகளையும் உண்டாக்குவது. மனோநாசம்.—உருவநாசம் அருவநாசமென்னத்துவிதம் ஜீவோ பாதிகெட்டு ஏகப்பிர்மசாக்ஷாத்காரமுடையனாய் நித்தியசம்பந்த மான சுத்தசத்துவசாந்தியாதி குணபூர்த்தியினால் பிராரத்வநியத ரூபமான தேவ மனுஷ சித்தபேதாதி தேகவிவகாரங்களில் பற் றற்று லோகோபகாரார்த்தம் நடத்தப்படுகின்ற ஜீவன்முத்தியே: உருவநாசம்.—தேகோபாதிநசித்து லிங்கசரீரம் அடங்கும்போது அந்தச்சுத்தசத்துவமும் அடங்கி ஏகபரிபூரணராயிருந்தபடியே யிருக்கப்படுகின்ற விதேகமுத்தியே: அருவநாசம். அவதானம்.— ஜீவன்முத்தர்கள் பரப்பிர்மநிச்சிதவழுத்தத்தால் சற்றேனும் அவ னைவிட்டு மாறுபடாது பிரிவறநின்று தத்தம்நியதகாரியங்களைச் செய்யப்படுவது. விரதம்.—தேகேந்திரியாதி திரிசியவியவகாரத் துக்கும் திரிசியம் நீங்கிய சமாதிவியவகாரத்துக்கும் சாக்ஷியே நானென்னும் துணிவோடிருக்கின்ற: மாகர்த்தமகிமையையும்.— தோஷ நிர்த்தோஷ சுத்தவசுத்த பத்தியவபத்தியமெனப்பாரா து வர்த்தமானத்தில் முன்னிடுவதைப் பொறுமையோடுபொசிக் கின்ற: மாபோகிமகிமையையும்.—சிறிது பெரிது தனதன்னிய நன்மைதீமைகளைதுவந்துசேரினும் விமலசித்தத்திற் பற்றுது படிகம்போலிருக்கின்ற: மாத்தியாகிமகிமையையும் உணர்த்துவது

விவகாரம். — கிருதகிருத்தியனாகவிருக்கின்ற ஆரூடன் பலாபேக்ஷையைக்குறிக்காமல் உழவு தொழவு வனைவு வாணிப வித்தை சிற்பாதி இககிருத்தியமும் யாக தான தபோ விரதாதி பரகிருத்தியமும் சிரவண தியானாதி மோக்ஷ கிருத்தியமும் பரோபகாரார்த்தஞ்செய்யப்படுவது.

துவிதீயம்.—பேத சாமிய சொரூப பரிச்சேத ஞான தவ விவேக விசாரமென்றஷ்டபேதமாக விருப்பது. அவற்றுள். பேதம்.—கிருதகிருத்திய ஆரூடப்பிரபுகளாகவிருந்தும் சிலர் தியானாதிகள் செய்வதென்னென்னில் பிராரத்துவ நியதமெப்படியோ அப்படியே முத்தரும் வெகுவிதமாவாரென்றுணர்த்துவது. சாமியம்.—சொப்பிரயோஜனத்தைக்குறிக்காமல் லோகோபகாரார்த்தம் விவகாரஞ்செய்கின்றஞானி சருவானுக்கிரக தாரியாய்நின்று சிருஷ்டியாதி கிருத்தியங்களைச் செய்கின்ற ஈஸ்வரனைப்போல புண்ணியபாவத்தொடக்கில்லாதவனாய் மமதகங்காரம் வர்ச்சித்திருப்பதால் ஞானியும் ஈசனும் சமத்துவமாவனென்றுணர்த்துவது. சொரூபம்.—உபாதிக்கட்டவிழ்ந்து விம்பாகார பிர்மப்பிராப்பியனான ஞானிக்கிப் பிரதிவிம்ப ஜெகசீவபரமுழுதுந் தானாக விளங்குவது. பரிச்சேதம்.-சிருஷ்டியாதி கிருத்திய திரிகாலக்ஞான சருவக்ஞ சருவவிபுத்துவ மாயாவல்லப அணிமாதி சித்திகளால் நிறைந்திருக்கும் நாராயணாதி தேவர்களுக்கும் சித்த முனிவ விராசதாசாதி மனுஷியசேதனருக்கும் சற்றேனும் ஒவ்வாது ஒன்றுக்கொன்று அளவற்ற தாரதம்மியங்களாகவிருப்பது. ஞானம்.—மாயாகாரியத்திற் றாரதம்மியமிருப்பினும் பிர்மபாவனையால் இவரவனொன்னும் பேதமற்று சர்வத்திரசமானமாயிருப்பது. தவம்.—பூருவம் நிஷ்காமியத்தை அனுஷ்டித்தவர்க்கு முத்தியையும் நிஷ்காமிய காமியமிரண்டையும் அனுஷ்டித்தவர்க்கு முத்திசித்தியையும் பிரகிருதம் நிஷ்காமியம் ஒன்றைமாத்திரம் அனுஷ்டிப்பவர்க்கு முத்தியையும் கொடுக்கப்படுவது. விவேகம்.—பரகதிக்கிவிலக்கான பாகியகருமத்தையும் பரகதியைத் தருவதான ஆந்தரகருமத்தையும் அகந்தை அபிமான ஆசை கோபாதிகளால்ப் பந்தப்படுத்துகின்ற சீவசிருஷ்டியையும் முத்திசாதனமாய் சராசரப் பொருள்முழுதையும் சருவப்பிராணிகளுக்கும் பொதுமையாகப்

படைத்த ஈஸ்வரசிருஷ்டியையும் அச்சுவத்த விருக்ஷத்தில் வாழு கின்ற சிவேஸ்வரானே பக்ஷிரூபமாகவகுக்கின்ற சுருதியையும் காமாதியாறும் சீவச்செயலெனத்தெரிந்து மோக்ஷமடைபவரை யும் ஈஸ்வரசிக்ஷை ரக்ஷககாரணமென்றும் கற்பகவிருக்ஷாதி யைப்போலஆசிரயிப்பவர்க்கு ஈஸ்வரன் அருள்செய்பவனென்றுந் தெரிந்து ஈஸ்வரவாசகமான சுருதியையும் அவனனுஷ்டித்துக் காட்டிய சாஸ்திரங்களையும் அனுசரித்துநடந்து சர்ச்சனுளுக்குப் பின்னே அடிக்கடியாகத்தொடர்ந்து துஷ்டசங்கநிவர்த்தகவிவே கியாய் ஜெனிப்பித்தமாயையைவிலக்கி ஞானத்தையடைந்தவர் பவங்கள்போகும் இதுவேநிச்சயமென்றுணரப்படுவது.விசாரம்.- சிற் சட பந்த மோக்ஷ மெதுவென்று யூகபுத்தியால் உசாவுதல் செய்து ஜெனிப்பித்த மாயாமோகத்தைத்தள்ளி சத்தியக்ஞானத் தைத்தெளிவித்து ததாகாரப்பொருளை யுணர்த்தப்படுவது.

திரிதீயம்.—வேதம் துணிவு அபிப்பிராயம் நிரசனம் நிச்சயம் அத்துவிதம் ஆனந்தம் சுவாநுபூதிகமென்றஷ்டபேதமாக விருப் பது. அவற்றுள். வேதம்.--சீவபேத செய்கைபேதங்களுக்களவில் லாமையால் அவரவரதிகாரபக்குவத்தைப்பார்த்து புஷ்பமானது விகசித்து பின்னேபலத்தைக்காட்டுவதுபோல பூருவசித்தாந்த மிரண்டையும் நம்மைக்காப்பாற்றுதற்பொருட்டு காண்டத்திரய ரூபமாய் வசனிக்கப்படுவது.

துணிவு.—பாவிகள்பண்ணிய பாவத்துக்குத்தக்க நரகத்தை அவசியம்அனுபவிக்கவேண்டுமென்ற சுருதியைக் கௌணமாகப் பூருவப்படுத்தி அந்தப்பாவங்கள் எவ்வளவானாலும் அது தான மந்திர விரத ஹோமங்களால்த் தவிர்க்கப்படுமென்ற சுருதியைச் சித்தாந்தமாய்க்கொண்டு அதனைஉறுதியாகப்பற்றுவது: பூருவ வேதத்துணிவு.—தன்னால்செய்யப்பட்ட சஞ்சிதகர்மம் தப்பாது அனுபவித்துத்தீரவேணுமென்ற சுருதியைக்கௌணமாகப்பூருவ ப்படுத்தி அந்தவிவிதரூபமானசஞ்சிதகர்மங்கள் எவ்வளவானாலும் அதுஞானாக்கினியினால்க் கெடுமென்ற சுருதியைச் சித்தாந்தமாய்க் கொண்டு அதனைஉறுதியாகப்பற்றுவது: உத்தரவேதத்துணிவு.

அபிப்பிராயம்.—மதுமாம்சவிருப்புற்றால் மகங்கள்செய்துண் ணென்றசுருதி பின்புமணந்துபாரென்றுசொல்வதையும் காமத்

தில்மனம்செல்லுமாகில் கொண்டபெண்டிரோடு கலவிசெய் யென்றசுருதி பின்பு புத்திரோற்பத்தியால் விரும்பென்றுசொல் வதையும் யாகாருகமில்லாத மதுமாம்ச பரதாரயிச்சையை விலக் கியவேதவிதி பூருவநியமமென்பதையும் சகலமுந்தவிர்வதே வேத யிருதயமென்பதையும் யாகபோகநிவர்த்தரான யதீந்திர நைஷ் டிக வர்ன்னி யிகழ்ச்சியற்றிருப்பதையுமறிந்து சாதியாசாரவிதிப் படி செய்கிறதவமேசுகமென்கின்ற சுருதியை பூருவப்படுத்திசுகந் தருவது ஞானமேயென்கின்றசுருதியை சித்தாந்தமாய்க்கொண்டு ஆசாகர்மத்தையொழித்து ஆனந்தத்தையடையச்செய்வது.

நிரசனம்.—புருஷதந்திரத்தால் சித்தசீவாதிகளோடு பகிர் முகத்திற்செல்லும் சித்தவிருத்தியைத்தடுத்து அகமுகமாக்கி திரிகரணசுத்தியாக சற்கருமத்தைப்பண்ணி அந்தக்கர்மப்பிர யோஜனத்தை ஈஸ்வரார்ப்பணஞ்செய்து அந்தஅர்ப்பணவிசேஷ த்தால் சித்தசுத்தியைப்பெற்று அந்தச்சித்தசுத்தியினால் தியான யோக பாவன பரோக்ஷ விவேகமுண்டாகி அந்தவிவேகநீர்க்கத் தால் அக்ஞானகருமத்தை நிரசிக்கின்ற சத்தியவிசாரமுதித்து அந்தவிசாரபூர்த்தியினால் பிர்மாபரோக்ஷஞ்சித்தித்து அந்தநீர்க்க விசாரத்தாலுண்டான அபரோக்ஷஞானமே முத்தி இதுவே நீர் வையென்று நிச்சயித்து அந்தநிச்சயவழுத்தத்தால் அறியாமை யைக்கெடுத்து அறியாமையைக்கெடுத்தற்காக அந்தக்கரணப்பிர வேசகமான விருத்திஞானம் அகண்டானுபவசித்தியின்பொருட்டு அந்தஅறியாமையோடுகூட ஒருங்கேநிவர்த்திக்கப்படுவது.

நிச்சயம்.—வந்தியாபுத்திரனுந் தாணுவிற்புருடனும் ககனார விந்தத்தைச்சிரசிற்சூடி கந்தர்வநகரத்துக்குப்போய் சுத்திகாரசி தத்தைவிலைபேசி ஒருவருக்கொருவர்கலகமாகி மத்தியில் ரச்சு சர்ப்பந்தீண்டி இருவருமிறந்து அலகையானார்களென்னும் வியவ காரந்தெரிந்தவனைப்போல சற்றேனும் மயக்கமில்லாதவர்களாய் இராசபாலனைப்போல சிந்தையற்றசுகமுடையராய் பந்தமோக்ஷ தொந்துவம் வர்ச்சித்து பந்தமோக்ஷ மொன்றுண்டென்பது மறந்து ஆகாசத்தை ஒருகொசுகுண்டுமிழ்ந்ததென்பவனைப் போல பந்தமோக்ஷமொன்றுண்டென்பவரும் நகைப்பதற்கிட

மாகி அவித்தைமாயையென்னும் அக்ஞானவிபரீதமுழுதும் வர்ச்சித்து நிர்ச்சந்தேகராய்த் தெளிந்திருப்பது.

அத்துவிதம். — சடசம்பந்தத்தாலில்லதாயும் சிற்சம்பந்தத்தாலுள்ளதாயுமிருக்கின்ற மாயை சச்சிதானந்தமாய் மற்றொன்றை நினையாதிருப்பினும் நீங்கும்.—சின்மயரூபியாய் சிவமேபதகற்பிதங்களைமறப்பினும் நீங்கும்.—நீரில்நலைகிழாகவலைகின்றசாயை செவ்விதாகத் தன்னைநோக்கினும் நீங்கும். —போதபூரணனுய்க் காரியகாரணங்களைச் சிந்தியாதிருப்பினும் நீங்கும்.— இந்தஅத்துவிதீயநிஷ்டையினல் சாட்டியமாயை வர்ச்சித்து எம்மட்டும் பராமுகவசத்திலிருந்தையோ அம்மட்டும் நிசத்தில் உள்விழிப்பார்வையாய் இடைவிடாப்பழக்கத்தால் சாட்டியம்நீங்கி சகஜனுய் உன்மனமானது உனக்குவசப்பட்டுநின்று ஞானவடிவமாகில் நீ கசத்ததேகத்திலிருக்கினும் உனக்கு அந்தக்கசப்புமுழுதும் மாறுபட்டு நீஆனந்தசாகரவடிவமாவாயென்றுணர்த்துவது.

ஆனந்தம்.—உன்சொரூபத்தை நீ ஆராய்ந்துபார் அது அளவற்ற ஆனந்தவடிவமாகும் அந்த ஆனந்தம் விருப்பு வெறுப்பு உதாசீனமுதலிய சருவாவஸ்தைகளிலும் தடைப்படாதது மானவசுகமுதல் விராடசுகபரியந்தம் இலேசங்களாகத் தோற்றுவது பிரளயவெள்ளசாகரசொரூபமாய்த் தடையற்றுவிளங்குவது உள்ளத்திலெழுந்துபொங்கி உலகமுழுதும்நிறைந்து அந்தமில்லாமல்த் தேங்குவது அநன்னியபிர்மத்தினேடு தானேதாளுகவிருந்து ஆனந்த ஆனந்தத்திரய ஆனந்தபஞ்சக ஆனந்தாஷ்டகமென்ன நவநவமாக அனுபவிப்பது.

சுவாநுபூதிகம்.—சுபேக்ஷை விசாரணை தநுமானசியென்னும் மூன்றுபூமியில் வசிக்கின்ற அப்பியாச மூர்த்திகளையும் சத்துவாபத்தி அசம்சத்தி பதார்த்தாபாவனை துரியமென்னும் நான்குபூமியில் வசிக்கின்ற வித்து வரன் வரியான் வரிஷ்டனென்னும் ஆரூடப்பிரபுக்களையும் துரியாதீதபூமியில்வசிக்கின்ற நாரத சுக ஹரிசிவப்பிர்மாதி நித்தியசூரிகளையும் சதாஸ்தெளத்தியம் பண்ணி முதல்ப்பூமியடைந்தவன் பெருமையையும் தனது நிலைமையை

யும் ஸ்ரீசற்குருகிருபையினாலளவிட்டு துரியதுரியாதீதவாசிகளின் அடியரடித்துகளாகநின்று சதாசுகமுடையராய் சமத்துவ யேக பரிபூரண பரப்பிர்ம சுவாநுபவரூபமான பேரின்பநலத்தை சார் வதாகாலமும் அனுபவித்துக்கொண்டிருப்பது.



## நவ்விநோக்கம்.

கடை தலை இடம் வலமுதலியவற்றை நேத்திரத்துவைம்ச்சி யினால் சுழற்றிப்பார்க்கின்ற மானைப்போல படலத்துவயமுழு தினும் பலவாறாகப்பரிச்சேதித்திருக்கின்ற அர்த்தசாரங்களை அடி யேனுடைய மந்தவிருத்திக்கெட்டினமாத்திரம் ஒருபிரகாரம் ஆராச்சிசெய்து அதனை சற்குரு சாஸ்திர அதிகார போத பிர மாண நிச்சய நியம அற்புதமென் றஷ்டவிஷயமாகத் தொகுத்து ஆசிரயிப்பவருக்குணர்த்தப்படுவது.

சற்குரு.—ஏகமாயும் அநேகமாயும் சொரூபமாயும் ஈஸ்வர னாயும் ஞானமாயும் நமதுபங்குக்குலதெய்வமாயும் பிரிந்து திரித் துவ திரியேகப்பொருளாகப் பிரிவற்று நம்மைச் சதாகாலமும் ரக்ஷிக்கும் ஸ்ரீபகவானாகிய நாராயணபரப்பிர்மம்.

சாஸ்திரம்.—சர்வதீர்த்தப்பிரயோஜனத்தையுங் கொடுக்கும் ஸ்ரீசற்குருபாதோதகம்போல சர்வசாஸ்திரசிரேஷ்டமான கைவல் யநவநீதசாஸ்திரம் ஒன்றைமாத்திரங் கற்பவர்க்கு சர்வசாஸ்திர பண்டிதரான மகாத்மாக்கள் அடைகிற பிரயோஜனமெதுவோ அந்தப்பிரயோஜனமுழுதுங்கொடுத்து உதயாஸ்தமின்றி ஊழிபே ரூழியாக வாழ்கின்ற பேரின்பநலத்தையநுபவிக்கச்செய்வது.

அதிகாரம்.—சாருவாக இரண்யகர்ப்ப சைநபௌத்த கர்மட நாஸ்தீக சுவாத்ம சாங்கிய பஞ்சப்பிர்ம மூர்த்தித்திரேய காலவாத சுபாவீகமென்னும் ஒன்றுக்கொன்று ஒவ்வாத பேதவாத சமய நிலையை சுதந்தரரூபமாய்ச்சுட்டாமல் அகத்துருப்பைக்கொண்டு சரீரி சரீர விவேகியாய் சரீர பிராண மனோ புத்தி சிவ சூனிய கிஞ்சித்துவ பாஞ்சபூத குணத்திரய காலதத்துவங்களை உண்டான விதிப்படி கிரமமாக மூலசுபாவத்திலொடுக்கி அகிலமங்களகுண சொரூபனான பரமேஸ்வரகிருபைக் கெதிர்பார்த்திருப்பது.

போதம்.—ஸ்ரீசற்குரு சரீரத்திலிருக்கின்ற சரீரியை பகிர்முகத்திற்செல்லாது தன்முகமாக ஆகரிஷித்து நீபஞ்சகோசவிலக்ஷணன் அவஸ்தாத்திரயசாக்ஷி துவம்பதலக்ஷியனான கூடஸ்தன் சமத்துவயேகபரிபூரண பரப்பிர்மமென்றுணர்த்திய பரோக்ஷ வாக்கியத்தை அபரோக்ஷரூபமா யனுபவித்துணர்வது.

பிரமாணம்.-அவித்தைமாயைத் தொடக்கில்லாது நீநானென்னும் பேதத்தையகற்றி இரண்டுக்கும் நடுநிலைப்பொருளாயும் அவாங் மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்ம தத்துவத்தை வேதாந்தசமிக்ஞாவிதிப்படி ஸ்ரீசற்குரு ஆகமப்பிரமாணத்தைக் கொண்டு மோனசுபாவத்தாலுணர்த்தியபடி அகமுகபிதயத்தாலுணரப்படுவது.

நிச்சயம். — பிர்மாதிகடவுளரும் பாரிலுள்ளபெரியோரும் கங்கையாதிதீர்த்தமும் லீலை நித்தியம் அகண்டம் சரண்யம் பரமபதமென்கின்ற சர்வப்பிரதேச சர்வஐஸ்வரியங்களும் சமஸ்தமான காலதத்துவ வேதசாஸ்திரங்களும் அசத்திய திருஷ்டியினால் மித்தையாகக்கண்டு சத்திய திருஷ்டியினால் அவையாவும் பிர்மசொரூபமென்றுணரப்படுவது.

நியமம்.-அதேந்திரியவிஷயமாயும் நமக்கனுபூதிவஸ்துவாயுமிருக்கின்ற பரப்பிர்மசொரூபத்தின் சந்நிதானமகிமையால் தனது சிற்சத்தியானது ராசாவைப்போலவிருந்து தனது ஆக்ஞாசக்கரத்தை சமஸ்தலோகங்களிலுஞ் செலுத்துவதனால் திரணாதி அசேதனபதார்த்தங்களும் புஷ்பித்துக் காய்க்குது சரவசரவுயிர்கள் முழுமையும் புராதனம் எப்படிவந்ததோ அப்படியே அதுவதுக்குரிய சுபாவங்கள் மாறுபடாதிருக்குது கருப்பையிலுண்டானமுட்டையொருநிறமாகினும் அதிலுண்டானகுஞ்சுகளாகியபரவைகள் தத்தங் குலமுறைதவராது வெவ்வேறு விசித்திரரூபமாக விருக்குது நெருப்புநீராய்க் கசப்புமதுரமாய் மாறுமல் தொன்றுதொட்டுவந்தபடி நெருப்பு நீர் கசப்பு மதுரமான அதுவதின் குணங்கள் அதுவதினிடத்திலேயேயிருக்குது பிராம்மணாதி சண்டாளபரியந்தம் தத்தம் வர்ணாதிவரைகள் வழுவாதிருக்குது சமுத்திரமும் அதைச் சூழ்ந்ததீவுகளும் அந்தத்தீவுகளைநிறுத்துகின்றபருவதமும் அந்தப் பருவதமுதலியவற்றில் மழைவருஷிக்கின்றமேகமும் சற்றேனும்

வரைதப்பாதிருக்குது பிர்மாதி கடவுளரும் பூமியிலுள்ள பெரியோரும் கங்கையாதிதீர்த்தமும் சமஸ்தமான தேசகால வேத சாஸ்திரங்களும் நல்லவர்க்கு நன்மையும் தீயவர்க்குத்தீமையும் பாவிகளுக்குநரகமும் சுகிர்திகளுக்குச்சுவர்க்கமும் சிற்சத்தியின் ஆக்ஞாமகிமையால் எப்போதும் சத்தியமாகவே யிருக்குதென் றுணரப்படுவது.

அற்புதம். — உண்டானவிதிப்படி தேகமுதல்சுபாவபரியந்தம் ஒடுக்கிச் சதாதிருவுள்ளநோக்கத்துக்கெதிர்பார்த்திருக்கும் ஓரதிகாரிக்கி திரியேகப்பொருளாகிய நாராயணபரப்பிர்மம் தமதுஅபாரகருணையினால் திரித்துவரூபமாய்வெளிப்பட்டு பிதா புத்திரசம்பந்தத்தால் வாஞ்சையுற்று திரித்துவதிரியேகப்பொருளைத்துலக்கி தத்துவசொரூபத்தைவிளக்கி சந்தேகமுழுவதும் நிவர்த்தித்து நிரதிசயவானந்த நிரவதிக சந்தோஷ சர்வ சம்பூர்த்தியைப்பண்ணி சொல்பவனுங் கேட்பவனுந்தானாகி சருவாவஸ்தையிலுந்தடையற நின்று ஆரோகணரூபமாய்த் திரட்டிவைத்த கைவல்யநவநீதத்தை அவரோகணரூபமாய்ச்சம்பூரணமாக்குவது.



## பக்ஷிக்கிராகியம்

பலப்பிரயோஜனத்தைமாத்திரம் சஞ்சேபரூபமாயெடுத்து குஞ்சுகளாற்கிரகிக்கும் இரையை லகுலகுவாயுவப்பித்தூட்டும் மாதாபக்ஷியைப்போல சாஸ்திர சம்பந்த அதிகார வாக்கிய போத வியாக்யான தெரிசன சற்சார சம்பூரணமென்னும் நவபேதமாய் ஆசிரயிப்பவரை ஆசிரயித்துணர்த்துவது. சஞ்சேபம்.— பிர்மம் ஆத்மா ஈஸ்வரனென்னுந் தத்துவத்திரய சந்நியாச சம்பூரணமென்றைந்துபேதமாக நிரூபிப்பது.

பிர்மதத்துவம்.—நாமரூப சம துவித ஏகஞான சோதி பூரணமென்னும் அஷ்டபேத அநீதப்பிர்மநிஷ்டையினால் தத்துவசூரியன் கதிர்களைப்பரப்பி சருவபூமியும்வியாபித்திருப்பது.அவற்றுள். நாமப்பிர்மம்.—பரப்பிர்மபரமேஸ்வரசற்குருவின் திவ்விய சரித்திர நாமசமூகங்களை சதாஜெபித்துக்கொண்டிருப்பது. ரூபப்பிர்மம்.—ஸ்ரீபரப்பிர்ம பரமேஸ்வர சற்குருவின் சிரவதன கழ

மார்பகரசரணாதி சர்வாவயவசகிதமான திவ்வியமங்களகவிக்கிரகத்தை இடையறாது தியானிப்பது.சமப்பிர்மம்.உடலையும் உயிரையும் விவேகித்து திரிசியசூனியங்களில் பந்திக்காமல் அவ்விரண்டுக்கும் ஞானகைங்கிரியங்களைய பிவிருத்திபண்ணுவது.துவிதப்பிர்மம்.- புத்திரனுக்குப்பிதாவாகவிருந்து தத்துவசொரூபத்தைவிளக்கி சந்தேகமுழுதும் நிவர்த்தித்து தீர்க்கமாக வஸ்துத்துவயத்தை நிர்ணயப்படுத்துவது. ஏகப்பிர்மம்.—அவன் இவனுக்குரிய பெயர் இடம் உபாதி உடல் உணர்வென்னும் ஐந்துபிரிவான வாச்சியபேதத்தைவிட்டு அவ்விரண்டிடத்தும் விளங்குபவன் ஒருவனே அவனே பாரமார்த்த தேவென்றுணர்த்தப்படுவது.ஞானப்பிர்மம்.- பிரத்தேகசாக்ஷியாயிருந்து உடலையும் உயிரையும் வேறுபடுத்தி திரிபுடிநிவர்த்தனாய் அவ்வாத்மாவாகிய பிரத்தேகசாக்ஷியை சர்வவியாபக சைதன்யத்துக்கு விஷயமாக்குவது. சோதிப்பிர்மம்.— ஞானாத்மாவாகவிருந்து அக்ஞானப்பிரபஞ்சத்தைமித்தையாகக் கண்டு அந்தஞானயிதயத்தினால் சர்வமும் ஒளியுருவாகவுணரப்படுவது.பூரணப்பிர்மம்.—சருவசீவசாக்ஷியாய் நன்னிலமாதி சருவபூமியும் வியாபித்திருக்கின்ற பரப்பிர்மதத்துவத்தை நிற்சந்தேகமாய்த்தெளிந்து பிரபோதநிஷ்டனாய் அனுபூதிவாழ்விலமர்ந்திருப்பது.

ஆத்மதத்துவம்.—தமோவிகாரம் அக்ஞானவிகாரம் விருத்திவிகாரமென்கின்றவிகாரத்திரயரூபமான அசுத்தவிருத்தியைநீக்கி சுத்தவிருத்தியினால் சத்தாதி அசத்தாதியை விவேகம்பண்ணி சத்தாதியொன்பது லக்ஷணங்களுக்கும் லக்ஷியப்பொருளாகிய ஆத்மசொரூபத்தை சற்குருமுகமாய்த்தெளிந்து அவ்வாத்மாவையும் பரப்பிர்மதத்துவத்துக் கநன்னியமாய்க்கண்டு அதுவேதானாக விளங்குவது.

## விவேகம்.

சத்தசத்து சித்தசித்து சுகாசுகம் சமாசமம் ஸ்திராஸ்திரம் சாக்ஷிசாக்ஷியம் ஏகானேகம் நித்தியாநித்தியம் வியாபகாவியாபகமென்ன நவவிதமாக விவேகித்துணர்வது. அவற்றுள்.சத்தசத்து விவேகம்.—சர்வசார சுத்தசத்துவ ஞானாகாரமாக விருக்கின்ற சத்துரூபமே மெய்யென்றும் மரீசிகாஜலம் சுத்திரசிதம் கந்தற்ப

நகரம் சொப்பனநகரம் ஆகாயநீலம் ரச்சுசர்ப்பம் வந்தியாபுத்திரன் சசவிஷாணம் தாணுபுருஷனென்னும் நவபேதமாய் அஞ்ஞானமறதியினால் சீவனை துக்கசாகரத்திலமிழ்த்துகின்ற அசத்துரூபமான பிரபஞ்சமுழுதும் சுத்தப்பொய்யென்றும் விவேகித்து மற்றய எட்டுலக்ஷணங்களையும் உபதேசமுகமாகச் சூசிப்பித்து நம்முடபேரிலாணைப்படிக்கி உன்னைமறவாதேயென்று ஆத்துமதத்துவத்தை நிலைநிறுத்தி அனர்த்தநிவர்த்தியைச்செய்து வஸ்துத்துவயத்தை யுறுதிப்படுத்தி இரண்டாம் படலத்துக்கதிகாரியாக்குவது.

மரீசிகாஜலப்பிரபஞ்சம்.—மூலத்தையுணராமல் சீவனானவன் மிருகதிருஷ்ட்ணையைப்போல சற்றும்பலம்பெறாத ஆசாவழியில் சதாதாபித்தலைவது. சுத்திரசிதப்பிரபஞ்சம்.—மூலத்தையறியாத சீவன் அக்கினிக்கிப்பயன்பெறாத முக்தாரசிதத்தையொத்த ஆக்கையின்வழியாய் அகங்கரித்துழல்வது. கந்தர்ப்பநகரப்பிரபஞ்சம்.-சீவனானவன் மனச்சக்ஷுராதி இந்திரியவியாபாரங்களைவிட்டு சரீரத்தைச்சவத்தைப்போலக்கிடத்தி அநங்கனாய் சுழுத்தியவஸ்தையிலடங்கியிருப்பது. சொப்பனநகரப்பிரபஞ்சம்.—நாசம் உற்பத்தி மூர்ச்சை நனா கனா சுழுத்திமுதலிய சர்வாவஸ்தையிலும் நிலைபெறாமல் சீவனானவன் குலாலவட்டம்போல சுற்றிக்கொண்டுதிரிவது. ஆகாயநீலப்பிரபஞ்சம்.—நீலரூபம் ஆகாயத்துக் கென்பதுபோல ஆத்மாவுக்குத் தேகமேரூபமென்றுறப்பேறி தேகபோஷணமே புருஷார்த்தமென்றுறுதிப்பட்டு சரீரமுள்ளபரியந்தம் மற்றய சற்கருமாதி புருஷார்த்தங்களை சற்றுங்கலக்கவிடாமல் சரீராந்தத்தில் அந்தசீவனானவன் பூதாகிருதியாய் லயப்படுவது. ரச்சுசர்ப்பப்பிரபஞ்சம்.— மூலத்தைத்தெரியாமல் சீவனானவன் சடரூபமான பிரகிருதிதேகத்தில் சஞ்சலரூபமான மனதை வைக்க அதனது சேஷ்டிதத்தால் அந்தப்பிரகிருதிக்குரிய வாத பித்த சிலேத்துமாதி ரோகபந்திகளால்ப் பீடிக்கப்பட்டு பயகம்பனாதிகளையடையப்படுவது. வந்தியாபுத்திரப்பிரபஞ்சம்.—சீவனானவன் மூலத்தைவிசாரிக்குமிடத்து காரியகாரண மிரண்டும் பொய்யாய் அஞ்ஞானமறதியினால்பேதிக்கப்பட்டு தேகோகபுத்தியினால்அவித்தையாகர்ம வாசனைவழியில்ச்சஞ்சரிப்பது. சசவிஷாணப் பிரபஞ்

சம்.—பூருவோத்தர விரோதமாய் ஒன்றுக்கொன்று பொருத்த மில்லாமல் சிவனுக்குவந்த் பிரபஞ்சசரித்திரங்களை மூலத்தைத் தெரியாது அவ்வரவர் வந்தவந்தபடி பிதற்றப்படுவது. தாணுபுருஷப்பிரபஞ்சம்.—சிவனெனவன் மூலத்தைத்தெரியாமல் தாணுவுக் கொப்பாய் தன்னுலாளுகைக்குரியபிரகிருதிதேகத்தையாளுகின்ற புருடனைய் ஆத்மபுத்திபண்ணி அந்தப்பிரகிருதிகருமங்களுக்கு வசப்பட்டு அதனால் சொப்பிரக்ஞையிழந்து கருமமேபுருஷனாக விருந்து அவனைச்சென்மபரம்பரையாயாளப்படுவது.

ஈஸ்வரதத்துவம்.—சோபாதிகரூபத்தால் லோகரக்ஷகார்த்தம் பஞ்சகிருத்திய தசாவதார சர்வாவதாரங்களால் சற்றும்வரை கடவாது சமஸ்தமானதர்மங்களையும் ஸ்தாபனம்பண்ணியும் நிருபாதிகரூபத்தால் ஸ்ரீசற்குருவாய் பரப்பிர்மதத்துவத்துக் கநன்னியமாயிருந்து பரமார்த்ததெரிசனத்தையுணர்த்தி ஆசிரயிப்பவர்க்கு தடையற்றசுகத்தையனுபவமாக்கியும் ஆசிரதன் அனுசிரதன் யாவனானாலும் விதிப்படி அனுஷ்டிக்கின்ற வேதநிஷ்டனுக்கு அபேக்ஷிதகாமியத்தைக்கொடுத்தும் மற்றய சீவர்களுக்கெல்லாம் உணர்வின்வழியாய் தத்தங்கருமானுரூபமான உணவைக் கொடுத்தும் மாயையைவசமாக்கிக்கொண்டு இன்னம்பலவாறான அற்புதலீலைகளைநடத்தப்படுவது.

மாயை.—சத்தாய் அசத்தாய் சித்தாய் அசித்தாய் சுகமாய் துக்கமாய் சமமாய் விஷமமாய் திரமாய் அத்திரமாய் சாக்ஷியாய் சாட்டியமாய் ஏகமாய் அநேகமாய் நித்தியமாய் அநித்தியமாய் வியாபகமாய் அவ்வியாபகமாய் இன்னம் பரமேஸ்வரதிருச்சித்தமெப்படியோ அப்படியே அமைந்துநின்று பிராப்தமாகாததையும் சத்தனுக்கு அந்நியமாகவிருந்து பிராப்தமாகச்செய்கின்ற மாயைசத்தசத்தாதி தொந்துவயிடையைகற்றி லக்ஷியப்பொருளாகவிருக்கின்ற ஆத்மநிஷ்டனுக்கு அவயவாதி ஒன்பதும் வியாவகாரிகத்தில் தோற்றமாத்திரமாயும் பாரமார்த்திகத்தில் கல்ப்பிதஜனகமாயும் பாகியாந்தரம்நீங்கிய சொரூபதிருஷ்டியில் இதுமாயை இதுஆத்மாவென்ன சற்றும்பிரிக்கக்கூடாததாய் சித்திரபடசிலாபங்கயம்போல சர்வமுந்தானேதானாயுணர்வதாயும் பிராந்தசீவர்களின் எண்ணத்தின்வழியாய்ப் பிரதிபலித்து எதார்த்தஞானத்

தில் அசத்தாகியும் அனுபூதிவாழ்விலமர்ந்திருக்கின்ற பிர்மநிஷ்டருக்கு மாயாநாமகம் நீங்கிய ஆனந்தபூர்த்திதையாயும் ஈஸ்வரனுக்கு விநோதகாரணியாயும் ஆத்மநிஷ்டனுக்கு அபேதரூபியாயும் பிராந்த சீவர்களுக்கு மித்தையாரூபியாயும் இப்படி தானபேதத்தால் வெவ்வேறுநாமகமாகப்பிரிந்திருக்கின்ற பிர்மசத்திகள்முழுதும் சத்தனாகிய பரப்பிர்மதத்துவத்துக் கநன்னியமாய்க்கண்ட தத்துவஞானிகளிடத்து சர்வமும்பிர்மமயமென்ன நிர்ச்சந்தேகமாய்த்தெளிந்திருப்பது.

## சந்நியாசம்.

வேதம் ஆகமம் ஞானமென்னத்திரிவிதரூபமாய் அதற்கு கிராசையே முக்கியபிரதானமென்றுணர்த்துவது. அவற்றுள். வேதசந்நியாசம்.— யசன யாசன அத்தியயன அத்தியாபக தான பிரதிக்கிரகமென்னும் சட்கர்மசம்யுக்தனான ஒருவிப்பிரனுக்கு அர்த்ததாரசங்கங்களில் விரக்தியுண்டாகி அவற்றைச்சரீரமுள்ளபரியந்தம் சற்றும்பரிசிக்கேனென்கின்ற தீர்க்கவைராகமுடையனாய் காவிகாம்பர தண்டுகமண்டலாதியை விதிபூர்வகமாகப் பெற்று திடசக்தியுள்ளபரியந்தம் பக்ஷதகவிரதத்தைச்சாதித்து அதுதளர்ந்தவிடத்து குடீசகசந்நியாசியாய் சரீரமுள்ளபரியந்தம் காலத்தைக்கடத்துவது. ஆகமசந்நியாசம்.— சிவசம்பந்தமுடையவனாய் வேதவிகிதமான தனக்குரிய குலாசாரதர்மத்தை வழுவாதிருக்கின்ற ஒருபுருஷனுக்கு வாமம் வைரவம் காளாமுகம் மாவிரதம் பாசுபதமென்னும் ஐந்துபேதமான தாந்திரீக சைவத்தை விலக்கி வைதீகசைவத்தைத்தெளிவித்து சமய விசேஷ நிருவாண சத்பீஜ அபிஷேகமென்கின்ற தீக்ஷாபஞ்சகத்தை சிவக்ஞான தேசிகனால் அனுக்கிரகிக்கப்பெற்று வேதாகம விரோதிகளான பாஷண்டசங்கத்தை கட்டோடுவிலக்கி சரீரமுள்ளபரியந்தம்குரு லிங்கஜங்கமத்தைவிட்டுப் பிரியாமல் மமதகங்கார வர்ச்சிதனாய் குருபரன்பணிகளைச் செய்துகொண்டிருப்பது. ஞானசந்நியாசம். அநேகஜன்ம புண்ணியபரிபாகத்தால் புனிதனாகவிருக்கின்ற ஒரு புருஷனுக்கு வேதாகமவரம்புநழுவி தனியனாய் சற்றும் இதரசனங்களுடைய வரம்பைக்கொலைக்காமல் முயற்சியின்றி வர்த்தமானத்தில் கிட்டியபோகத்தால் க்ஷுத்வாதையைமாத்திரம் அகற்றி

குருபதேசத்தால் யோகசமாதியைச்சாதித்து தத்துவசாக்ஷாத்காரமுடையனாய் மூடகோரவனர்த்தம் நீங்கி சுத்தசத்துவ சித்த சாந்தம் அபிவிர்த்தியாகி சகஜானுபவத்தால்வெளியிட்டு ராமார்ச்சுன பலி பகீரத ஜனக சிகித்துவாசாதிகளைப்போல பூர்வம் நின்றவர்ணாதி சுதர்மவரையை நிலைநிறுத்தி பூருவோத்தரமுழுதும் ஆனந்தரசமாயனுபவித்து தற்பதநிஷ்டனாய் அனுபூதிவாழ்வில் அமர்ந்துநிற்பது.

## சம்பூரணம்.

சாதன சாத்திய நிரூபிதமான கைவல்யநவநீத பூர்த்திசமஸ்கார இறுதியும் கீதாவியாக்யானதாற்பரிய சந்திரிகையினிறுதியும் ஒருப்படுத்துலக்கி மூலகற்பார்த்தத்தையுபதேசித்து சம்பூரணரகசியத்தைப் பரிபூர்த்திபண்ணுவது. அவற்றுள். சாதனம்.-முமுக்ஷுத்துவம் சற்குருசாஸ்திரசிநேகம் சிரவணார்த்தசிந்தனம் சுகதுக்கசகனம் வியவகாரவிலக்ஷணம் அகக்கரணதண்டம் புறக்கரணசிக்ஷை அநித்தியவிராகம் நித்தியவாஞ்சிதம் சகலத்தியாகமென்னத் தசவிதமாக நிரூபிப்பது.

முமுக்ஷுத்துவம்.— ஆதியாத்மீகம் ஆதிதெய்விகம் ஆதிபௌதீகமென்கின்ற தாபத்திரயாக்கினிக்காற்றுமல் தனித்தனியே நாள்விளம்பத்தில்போக்கும் உபாயத்திரயத்தைவெறுத்து தாபத்திரயமுழுதும் ஒருங்கேபோக்கும் சத்தியோன்முத்தியை விருப்புற்று சருவதீர்த்தபாதனான பரப்பிர்ம பரமேஸ்வர வாசுதேவ ஸ்ரீமன் நாராயணசற்குருவைச் சரணமாகவடைவது. சற்குருசாஸ்திரசிநேகம். — சாஸ்திரசற்குருவைத் தஞ்சமாக்கி சரீரசரீரியைவிவேகித்து சரீரியைப் பஞ்சகோசங்களுக்குவிலக்ஷணப்படுத்தி தாரகப்பொருளைத் தானமாய்க்கொண்டு அவஸ்தாத்திரயத்தைத் தெரிசித்து நியதிபூர்த்தியென்கின்ற சமஸ்காரவிதிப்படி கேவலபூரணத்தை விஷயமாக்கி தத்துவோபதேசத்தையுணர்த்தப்பெற்று தாராவழியாய்ச் சிந்திக்கப்படுவது. சிரவணார்த்தசிந்தனம்.—அஞ்ஞானவிபரீதாதிகளால் தடைப்படாமல் உபதேசப்பொருளை மனனயூகத்தால் கலக்கமறத்தெளிவது. சுகதுக்கசகனம்.—திருவடிச்சாயையிலொதுங்கி கருமபீடிதத்தால்ப்போராடுகின்ற சீதோஷ்ணாதிகளைச் சகித்திருப்பது. வியவகாரவிலக்ஷ

ணம்.— காரியரூபமான ஸர்வேஸ்வரஜகத்துருவை விவேகித்து பந்திக்காமல் பிரத்தேகமாயிருந்து வியவகரிப்பது. அகக்கரணா தண்டம்.—இதயப்பிரதேசத்துக் கநன்னியமாகவிருக்கின்ற பரப் பிரம்பரமேஸ்வர சற்குருவினிடத்தில் நாட்டம்வைத்து இதராந் தரங்களை சிக்ஷிக்கப்படுவது. புறக்கரணசிக்ஷை.— உண்முகத்தை யூர்த்துவமாக்கி பகிர்முகவழியைத்தடுத்து பார்ப்பது கேட்பது முதலிய சமஸ்தமும் பரமேஸ்வரசற்குருமயமாய்த்தெரிசிப்பது. அநித்தியவிராகம்.—சுதர்மவரையைக் கொலைத்து கீளதுமேல தாய்த் தட்டுமாறி மாயாகர்மவனுஷ்டிதராய் மூலவகங்கரத்தி லுறப்பேறி கொள்பவன் கொடுப்பவனைப் பாழாக்கி தானவிதாது திகளுக்கருகமில்லாமல் அசாஸ்திரீகமாய்சிவகல்ப்பிதமான பாஷ ண்டவழியில்ச்சேகரிக்கிறதிரவியம் அசாஸ்வததேகத்தைவிருத்தி பண்ணி சாஸ்வததேகிக்கி ஞானத்தை சூன்யமாக்குமெனத்தெரி ந்து அந்தத்திரவியம் சிக்ஷா அருகமேயல்லாமல் சாதாரணமாய்ப் பார்க்க கேட்க பரிசிக்க சிந்திக்கக்கூடாத அசுத்தமலமென்றகற்ற ப்படுவது. நித்தியவாஞ்சிதம். — நித்தியவநித்தியவிவேகியாய் அநித்தியனான சிவகல்ப்பிதபாஷண்டபாவாதிகளை ஈஸ்வரகிருபை யினால்நிவர்த்திபண்ணி நித்தியனான சர்வேஸ்வரன் வர்த்தமானத் தில் அவரவர்க்காகயேற்படுத்திய நியதவழியில்ச் சேகரிக்கிறதிர வியம் ஆசார வியவகார தானவிதாநதிகளுக்கு யோக்கியம் அற் பணகைங்கிரியரூபமாய்ச்சாதிக்கில் அதுவே உயிர்க்குறுதியும் சாஸ்வதபோகத்தையுங்கொடுக்கின்ற பரமபாக்கியமென்னவாஞ் சித்து அதனைவிதிவழியில்ச் சேகரித்து விதரணையோடுசெலுத் தப்படுவது. சகலத்தியாகம்.—மத்தியயிகபரத்தில்வசிக்கும் சித்த மனுஷதேவர்களுக்குரியபோகத்திரயமுழுதும் லப்தமாகினும் பூமி யந்தரசுவர்க்கத்தை பரிபாலிக்கும் இந்திராதிபத்தியத்தையடையி னும் தேயத்தியாகநிஷ்டையினால் சித்தத்தைச்செயித்துதிருஷ்ட பலத்தைத்திரணீகரித்து பரமேஸ்வரனைப்பிரார்த்தித்துஅவனது நியதகைங்கிரியமாக சருவாதிபத்தியமுஞ்செய்யப்படுவது.

சாத்தியம்.— முத்திப்பிராப்பியம் சருவதுக்காபாவம் பர மார்த்தெரிசனமென்ன மூன்றுபேதமாக நிருவாணப்பேற்றை

நிரூபிப்பது. அவற்றுள். முத்திப்பிராப்பியம்.— அகோசரகோசரம் ஐக்கியபேதம் பந்தமோக்ஷம் ஆசிரதசமர்த்தி துவிதப்பிரயோஜனமென்றைந்துபேதமாகநிரூபிப்பது. அவற்றுள். அகோசரகோசரம்.— தேகாதிப்பிரபஞ்சத்தைக் கல்பிதமாகத்தெரிசித்துப் பிரத்தேகமாய்நின்றஆத்மாவை எங்குமாகியபிர்மத்தினோடு யோகசமாதியினுலொருப்படுத்தி சுவர்மத்தியககனம்போல அந்தச்சொரூபசுபாவமாகிய பரமாத்மதேவை இதயப்பிரிவற சகஜானுபவத்திற்றெளிந்துஇப்படித்தெளியச்செய்த நிர்ஹேதுகிருபையைக் கோசரவகோசரமாய்த் துதிசெய்யப்படுவது. ஐக்கியபேதம்.—ஆத்மஞானத்தைத்தெளிவித்து அதனால் யானெனதென்கின்ற உயிர்ப்பந்தத்தைப்பாழாக்கி நீநானென்னுஞ்சொல்லுக்கு ஒன்றேபொருளென்றைக்கியஞ்செய்ய ஸ்ரீசற்குருவாகவெழுந்தருளிய ஈஸ்வரனை ஸ்தௌத்தியம்பண்ணுவது. பந்தமோக்ஷம்.—அந்தமும்நடுவுமில்லதாய் ஆதியுமில்லதாய் அந்தமும் நடுவும் ஆதியுமுடைய சருவ ஜகத்காரணமாய் சதாபிரகாசிக்கும் ஞானசற்குரு பாதத்தைவாழ்த்தி பந்தமுத்திகளைத் துலக்கிச்சேடித்துநின்ற வஸ்துதத்துவத்தைத் தாரகமாக்கி பந்தமுத்திகளைவிசர்ச்சிக்கப்படுவது. ஆசிரதசமர்த்தி.—வேதாந்தசொரூபத்தைச்சாதிக்கும் சாஸ்திரத்திரய சாரம்சமுழுதும் ஒருப்படத்திரட்டி நம்மால்கொடுக்கின்ற கைவல்யாமிர்தத்தைப்புசித்துப் பசிப்பிணியைமாற்றிய முத்திதேவர்கள் அசாஸ்வதமாய்தாற்காலசாந்தியாய் பின்னீடு வருத்தத்தைத் தருவதாயிருக்கும் விஷயமிருத்துவைப்புசித்துப் பின்புபசித்து தினேதினே பலாபேக்ஷையையுடையராய் ஜனனமரணாதிகளில்ச்சிக்கி காலச்சக்கரவழியில் சஞ்சரித்து தாபாக்கினியினால் வெதும்பி சதாவிடாய்ப்பட்டுழல்கின்ற கருமதேவர்களைப்போல அலையாது தடையற்றசுகிகளாய் வாழ்ந்திருப்பவர்கள். துவிதப்பிரயோஜனம்.—பந்தநிவர்த்தகமானவிடத்து அஸ்மதாதிகளுக்குப்பற்றுக்கோடாகநின்று ரக்ஷிக்கின்ற முத்தாத்மாவை சந்தேகநிவர்த்தக தத்துவப்பிரகாச அபேக்ஷிதபலத்தைத்தந்துஅடிமையாக ஆட்கொண்ட வேங்கடேசமுகுந்தனென்கின்ற விஷ்ணுதேவினை உடையனும் உடைமையும் தானாய்நின்று சதாரக்ஷிக்கின்ற கர்த்தாவைவணங்கி கைவல்யநவநீதத்தை

இருபடலமாய்ப்பிரித்து ஆதியோடந்தம் சாஸ்திரக்கிரமமாய்த் துதிசெய்யப்படுவது.

சருவஜுக்காபாவம்.—அகோசரமாகிய பிரபோதசொரூபத்தில்நின்று ஞானனந்தசூரியராய்வெளியிட்டு சத்துவாதி சத்திய சற்குணங்களால்ப் பரிச்சேதித்து ஹரி சிவ விதி இந்திராதிஅநேக மூர்த்திகளாய்ப்பிரிந்து கருமச்சக்கரவழியில்ச் சஞ்சரித்துழல்கின்ற சீவப்பிராணிகளோடு கூட்டுறவாகி அவர்களுக்குரிய சிதோஷ்ண திதிலயோற்பவாதி சருவாவஸ்தைகளோடு சம்பந்தித்தும் திவ்வியாக்கினிமத்தியையிலிருக்கின்ற தேவாமிர்தத்தைப்போல ஆசாமிகுதியினுல் அதிகோரமான விஷயாக்கினியில்விழுந்தும் வருத்தம் குற்றம் உபாதி சந்தேகம் மோகமென்னும் இடர்பஞ்சக சோகந்தாக்காது ஆனந்தசமர்த்தித உபசாந்தசின்மயராய் தற்பதவாழ்விலமர்ந்திருக்கின்ற நிருவாணநிஷ்டர்கள் அற்புதலீலையினுல் விளையாடப்படுவது.

பரமார்த்ததெரிசனம்.—பொன்னிலமாதராசை பொருந்தியும் பொருந்தாதஞானிகளுள்ளத்தில் இதரமில்லதாய் பொருந்திய ராகசீவருள்ளத்தும் பொருந்தாதவிராகசீவருள்ளத்தும் இதரமான இராகவிராகப்பற்றுக்களில்லாத சாக்ஷியாய் எந்நிலம் எழுநிலம் நன்னிலமென்னும் தாரதம்மியபூமிமுழுதுக்குந் தாரகமாய் சுபேக்ஷையாதி துரியாந்தமான ஞானபூமிகளேழினும் ததாகாருபமாகக்கலந்துநிற்கும் சப்பந்தமாய் சருவசிரேஷ்டமான துரிய துரியாதீதமென்னும் நன்னிலத்தைமருவி நடுவெணேயாகவிருக்கும் மூலவிருளைச்சேதிக்குமிடத்து முழுதுபூமிக்கும் அதிபதியாய் நாயகி சம்பந்தத்தால் முழுதுமாய் நாயகசுபாவத்தால் மீமாம்சாவிதிப்படி சருவலிங்கநிருபிதமான சர்வஜெகத்காரண மூலஸ்தம்பபர சொரூபமாய் இன்னமுங்கோசரிக்தற்கெட்டாத ததேகப்பிர்ம அகோசர சுயம்புவாய்நிற்கும் ஏகநாயகன்பதங்களை வாழ்த்தி ஹரி சிவ விதி இந்திராதி நிருவாணநிஷ்டர்கள் சிருஷ்டியாதிபணிகளைச் செய்யப்படுவது.

வாழ்த்து.—பிர்மம் பரமம் சருவம் சருவாதிபம் சம்பந்தம் தாரகம் சாக்ஷி ததாகாரமென்னும் அஷ்டகுணபரிபூரண பரப்பிர்மபரமேஸ்வரசற்குருவுக்கு சிருஷ்டிகன் சிருஷ்டிகள் முதலிய

சர்வப்பிராணிகளையும் பணியாளாகத் தெரிசித்து அநுகனுநற் பொருட்டு அவையாவுக்கும் பணியாளாகநின்று சருவமும்பிர்ம மென்றுசிர்விதிப்பது. அவற்றுள்.— அகோசரசுயம்புவாயிருப் பது: பிர்மம்.— சருவஜெகத்காரண மூலஸ்தம்பபரசொரூபமா யிருப்பது: பரமம்.—நாயகநாயகிபிரிவற இருமையொருமைமுழு துந் தானாயிருப்பது: சருவம்.—ஜகத்பதியாயிருந்து லோகரக்ஷ ணம்பண்ணுவது: சருவாதிபம்.— ததானுரூபமாய்க்கலந்திருப்பது: சம்பந்தம்.—ஆதேயங்களுக்காதாரமாயிருப்பது: தாரகம்.—பிர தக்காகவிருந்து இதாகிதங்களையுணரப்படுவது: சாக்ஷி.—சிவகல் ப்பிதம்நீங்கி யாவையும் தானாகவிருப்பது: ததாகாரம்.

## கீதாவியாக்யான தாற்பரியசந்திரிகை:யினிறுதி.

கருமயோகத்துவாரா பாசமோகங்களானஉடல்ப்பந்தத்தை விலக்கி வர்ணதிசுதர்மவரைமையைநிலைநிறுத்தி பக்தியோகத்துவாரா யானெனதென்னும் உயிர்ப்பந்தத்தைவிலக்கி சரணாகதியில்ச்சேர் ப்பித்து ஞானயோகத்துவாரா கரும குண கரண பூத மூலமென் னும் பிரகிருதிபஞ்சக பரிச்சேததிமிரத்தைநிவர்த்திக்து ஸ்ரீபக வான் ஆசிரயிப்பவர்க்கு பரமப்பொருளைக்காக்ஷிப்படுத்தி தம்பத வாழ்விலிருத்தித் தடையற்றவானந்தத்தை யனுபவமாக்குவது. பிரகிருதிபஞ்சகம்.— கைங்கிரியபூர்த்தியினால்: கருமப்பிரகிருதி நிவர்த்திக்கும்.—சுத்தசத்துவசித்தசாந்தியினால்: குணப்பிரகிருதி நிவர்த்திக்கும்.—யோகசமாதியினால்: கரணப்பிரகிருதிநிவர்த்திக் கும்.—பிராரத்துவம்நீங்கிய விதேகப்பிராப்தியில்: பூதப்பிரகிருதி நிவர்த்திக்கும்.—பூத கரண குண கர்மமுழுதுமிருக்க ஸ்ரீவாசுதேவ நோக்கத்தால் அஸ்மதாதிகளிதயத்தில் நடுவணையாகவிருக்கின்ற மூலவிருளைச்சேதிக்குமிடத்து சருவத்துக்கும் பிரதானமான:மூல ப்பிரகிருதிமுழுதும் நாசமாய்நிவர்த்திக்கும்.

மூலகற்பார்த்தம்.—வேதாந்தமந்திரத்தையுபதேசித்து மந் திரார்த்தத்தைத்துலக்கி ஹரி: ஓம் நமோநம: வென்று மந்திரப் பிரதனை ஸ்ரீபரப்பிர்மபரமேஸ்வர வாசுதேவநாராயணசற்குரு பாதபத்மங்களைவாழ்த்தி சருவராலும் ஸ்தௌத்தியம்பண்ணி அனர்த்தமுழுதும் நிவர்த்திபண்ணித் தடையற்றவானந்தத்தை யனுபவமாக்குவது.

சாஸ்திரம்.—சாதனசதுஷ்டயசம்பூரணனாய் பூர்வஜென்மங்களில் அளவற்ற புனிதபுருடனாகவிருக்கின்ற ஸ்ரீதாண்டவப்பிரபுவைமுன்னிட்டுபாஞ்சபூதசம்பந்தமான விவிதவிகாரதேகத்தை நானென்றிருக்கும் அவிற்பன்னரான அஸ்மதாதிகள் நிமித்தம் ஸ்ரீபகவானாகிய நாராயணபரப்பிர்மம் நிரோது கிருபையினால் சொல்லப்பட்டது.

சம்பந்தம்.— ஸ்ரீபகவானாகியசற்குரு பூருவசிநேகத்தால்த் தன்னை ஆசிரயிப்பவர்களைத் தான்போய்ஆசிரயித்து அவர்கள்சமயம்பார்த்து பகிர்முகத்திற்செல்லும் விருத்தியைத்தடுத்து அகமுகமாக்கிக் கண் காது நாக்கு மூக்குமுதலிய உறுப்புகளில் ஓருறுப்பைத்தந்திரமாய் முன்னுதாகவளர்த்துப் பின்புஅவர்களைச் சருவாதிகார சிரேஷ்டராக்குதற்குக் கங்கணங்கட்டுவது.

அதிகாரம்.-காதுள்ளவன் கண்ணுள்ளவன் வாக்குள்ளவன் மூக்குள்ளவன் நாக்குள்ளவன் கையுள்ளவன் மெய்யுள்ளவன் கருத்துள்ளவன் சுகிர்த்துள்ளவனென்னும் நவவுறுப்பில் ஓருறுப்பினையுடையனாயினும் ஆசாரியவல்லபத்தால் அவனை அதிகாரியாய்க் கைக்கொண்டு நாளாவட்டத்தில்த்திருத்திச் சருவாதிகார சிரேஷ்டனாக்குவது. அவற்றுள்.-ஸ்ரீபகவானுடைய திவ்வியசரித்திரங்களைக்கேட்டு உள்ளத்தைக்கனிவித்து உள்ளும் புறம்பும் ரமிக்கச்செய்வது: காது.—ஸ்ரீபகவானுடைய கரசரணவதனகேசாதி சருவாவயவசகிதமான திவ்விய மங்களவிக்கிரகத்தை அகத்திலும்புறத்திலும்தெரிசித்து நவ நவமாகவனுபவிப்பது:கண்ணு. ஜகசீவபரமுழுதும் தோற்றியொடுங்குதற்குமூலமாய் அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற பரதத்துவத்தை தனக்கிஷ்டமான சௌலப்பியரூபத்தில் ஆவாகனம்பண்ணி திரிகரணங்களும் வழிபட்டு பிரணவாதி நமோஅந்தமாகஸ்ரீபகவானுடைய திவ்வியநாமங்களைச்சொல்லி சதாஸ்தௌத்தியம்பண்ணுவது:வாக்கு.-எதிரிட்ட சந்தன குசும பரிமள சுகந்தாதிகளை தனக்கு அநன்னியமாகவிருக்கின்ற ஸ்ரீபகவானுக்கேஅருகமாகவமைக்கப்படுவது:மூக்கு.-அருந்துதற்காகயெதிரிட்ட அன்னபானாதிமுழுதையும் ஸ்ரீபகவானுக்கு அகத்திலும் புறத்திலும் நிவேதனமாக்குவது: நாக்கு.-எடுத்தல் கொடுத்தல் உண்ணல்உடுத்தல் செய்தல்சேவித்தல்முதலியசமஸ்த

கிருத்தியங்களையும் பகவத்பரமாயமைக்கப்படுவது: கை.-அதிஷ்டாதாவாய் ஸ்ரீபகவான் இதயபீடத்திருந்து தமதுசத்திகளைக்கொண்டு நடத்துகிற ரதத்துக்கொப்பாகவெண்ணி போஷிக்கப்படுவது: மெய்.—இதராந்த்ரவர்ச்சிதனாய் அகிலமங்கள குணசொரூபனான ஸ்ரீபகவானை சதா அகத்திலும் புறத்திலும் தியானிக்கப் படுவது: கருத்து.—நமக்குச்சொந்தமாய் நம்மைவிட்டுப்பிரியாது எக்காலமுங் கூடிக்கொண்டிருக்கும் நமதுஆப்தனான ஸ்ரீபகவானை இவனே பரத்துவமென்று நமது ஆப்தஜனங்களுக்கும் போதமாக்குவது: சுகிர்த்து.

வாக்கியம்.—தேகமல்ல இந்திரியமல்ல பிராணனல்ல கரணமல்ல கர்த்தாவல்ல நீயல்ல நானல்லவென்று நியதித்து இரண்டிடத்தும் சமமாயும் ஏகமாயும் பூரணமாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்மதத்துவத்தை வேதாந்தசமிக்ஞாவிதிப்படி மோனசுபாவத்தாலுணர்த்தப்படுவது.

போதம்.— காரியகாரணவிவேகியாய் காரியரூபமான நாமரூபப்பிரபஞ்சமுழுதையும் காரணபூதரான பரமாத்மாவுக் கநன்னியமாகக்கண்டு சர்வமும் பிர்மமயமென்றுணரப்படுவது. அவற்றுள்.காரியம்.-தேகேந்திரிய பிராண கரண கர்த்தாநீ நானென்னப் பரிச்சேதித்து காரணபூத பரமாத்மாவினிடத்து ஜெகசீவபரமாய்த் தோற்றியொடுங்குவது. காரணம்.—அத்தியாசோற்பவம் சத்தியோற்பவம் அத்தியாசசத்தியோற்பவங்களுக்கு மூலமாயும் சமத்துவ ஏக பரிபூரணராயும் சைதன்ய சாக்ஷித்துவ சயேக சம்பந்த வியவகாரமென்னும் லக்ஷணபஞ்சகத்துக்கு லக்ஷியப்பொருளாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற பரப்பிர்மதத்துவம். அத்தியாசோற்பவம்.—அதிஷ்டானமாகவிருக்கின்ற அதீதப்பிர்மம் ஆசிரயிப்பவர்க்குப்போதமாம்படி அதனிடத்து எக்காலத்துமில்லாத நாமரூபப்பிரபஞ்சத்தை ஆரோபயுத்தியினாலேற்றிவைத்து அபவாதயுத்தியினால் நிவர்த்திபண்ணி அவ்வதிஷ்டானப் பிர்மத்தைப் பிரசன்னமாக்குவது. சத்தியோற்பவம்.-அவ்வியக்த சுழுத்தியிலடங்கியிருக்கின்ற சீவர்கள் ஈஸ்வரகிருபையினால்க் கல்ப்பாதியில்வெளியிட்டு தத்தங்கருமானுரூபமாய் ரக்ஷிக்கப்பட்டுப் பிரளயாந்தத்தொடுங்கிநிற்பது. அத்தியாசசத்தியோற்பவம்.—

ஹரி சிவ விதி இந்திர நாரத வசிஷ்டாதிகள் பின்னையபின்னைக்கு மூலமாய் உதயாஸ்தமின்றிச் சதோதீதமாக விளங்கிய பரப்பிர்ம நிஷ்டராகவிருந்தும் கல்பாந்தத்தில் அபின்னசத்தியோடுகூடி அதீதப்பிர்மத்திலடங்கியும் கல்பாதியில் பின்னசத்தியோடு கூடி விவிதரூபமாய்ப்பிரிந்து திதிலயோற்பவ நிக்கிரக வனுக்கிர காதிகளைச்செய்தும் கிரீடாப்பிரவர்த்தகராய்க் கல்பப் பிரளயத்திற் றோற்றியொடுங்குவது.

வியாக்யானம்.—சர்வசாஸ்திரார்த்தசாரமுழுதும் ஒருங்கே திரட்டிவைத்திருக்கும் கைவல்யநவநீத சாஸ்திரார்த்த சாகரத்தில் அஸ்மதாதிகள் மந்தவிருத்தியில் கொள்ளத்தக்க சிலஅர்த்த பாகத்தைப் பிரத்தேகமாகவெடுத்து அதனோடு சாங்கர கிருஷ்ண மன்னர் வசிஷ்ட சம்பு சேஷாஸ்திரிமுதலினோர்சொன்ன சாஸ்திரார்த்தங்களையும் ஆசிரதர்நிமித்தம் அனுசரித்துக் கொண்டு அதனை உபதேச சங்கிரக சிட்டாசார தேசிகவிலாச நிருப நியமன மென்னப் பத்ததிசட்கரூபமாகத்தொகுத்து அந்தச்சட்பத்ததி யோடுகூடிய கைவல்யநவநீத சத்சாரவியாக்யானத்திற்குப் பால போத சம்பூரணரகசிய பரப்பிர்ம ஸ்ரீமுகமென்னத் திரிவிதரூப மாகப் பெயரிடப்பட்டது.

பாலபோதம்.-பாலர்கள்நிமித்தஞ் சொல்லுகிறேனென்னும் தமதன்பனான தாண்டவேசன் அபிமதத்தை நிறைவேற்றுதற் பொருட்டு ஸ்ரீபகவானாகிய நாராயணபரப்பிர்மம் கோஷ்டிப்பிர தேச தெரிசனப்பிரவர்த்தக சமூகசம்பந்தனான ஓரதிகாரியின் இதயப்பிரதேசமே திருக்கோயிலாகவெழுந்தருளித் தம்மையாசி ரயித்த பேதைகளாகிய ஏழைஜனங்களுக்கு லகுலகுவாக அறிவை வளர்த்துப் பரிபூர்த்திபண்ணியவதனால் இந்தவியாக்யானத்திற்கு பாலபோதமென்னப் பெயரிடப்பட்டது.

சம்பூரணரகசியம்.—தாண்டவேசன் இதயப்பிரதேசத்தரசனான ஸ்ரீமன் நாராயணபரப்பிர்மம் தானே ஆசாரியனாய்த் தானே சிஷ்யனாகவிருந்து அறிவீனரான தேகாதி யனாத்மபுத்தியை யுடைய அஸ்மதாதிகள்நிமித்தம் அஞ்ஞனைப்போலத் தானபினிவேஷம்பண்ணிக்கொண்டு தேகமேதானெனத்தொடங்கி சன்னம் சன்னமாய் விதேகமுத்திபரியந்தமுணர்த்தி துரியாதீதவாசிக

ளான ஹரிசிவப்பிர்மாதி நித்தியசூரிகளின் பிரயோஜனத்தை அஸ்மதாதி பேதைஜனங்களுக்குக்கொடுத்து சம்பூர்த்திபண்ணிய வதனால் இந்தவியாக்யானத்திற்குச் சம்பூரணரகசியமென்று பெயரிடப்பட்டது.

பரப்பிர்மஸ்ரீமுகம்.—ஸ்ரீ கோஷ்டிப்பிரதேச தெரிசனப்பிர வர்த்தக சமூகசம்பந்தனான ஓரதிகாரிக்கு தாரண௵ ஆனிமீ௳ எழுதியநிருபத்துக்கு துன்முகி௵ ஆனிமீ௳ விடைகொடுத்து இந்தப்பாலபோத சம்பூரணரகசியவியாக்யானத்தை ஸ்ரீவியாக்கிர புரம் மதுராபுரம் கோஷ்டிபுரம் ஸ்ரீசைலம் பரமபதமென்கின்ற திவ்வியப்பிரதேசங்களுக்கு ஸ்ரீமுக நிருபசகிதமா யனுப்பியவதா னல் இதற்கு பரப்பிர்ம ஸ்ரீமுகமென்னப் பெயரிடப்பட்டது.

தெரிசனம்.—ஸ்ரீபகவானாகியசற்குரு நிரோதுகிருபையினால் ஓரதிகாரியை ஆசிரயித்து அவனுக்கு மனுஷியோக கர்த்தோக சிவோகமென்னும் அகம்பாவத்தைப்போக்கி நரகாவகம் துக்கா வகமிரண்டினோடு அகந்துவமென்கின்ற தொந்துவமுழுதும் நிவர்த் தித்து தற்பதநிஷ்டையினால் பரிபூர்த்திபண்ணுவது.

## நரகாவகம்.

சாதனசதுஷ்டயசம்பன்னனாய் சகலகுணசம்பூரணனான சர்வேஸ்வரசற்குருவை ஆசிரயித்து அவன்கொடுக்கும் ஔஷத சேவையினால் பவரோகமுழுதையும்நிவர்த்தித்து சுத்தசத்துவ சாந்தியாதி சற்குணவிசிஷ்டனாய் நித்தியசூரிகளானமுத்தகுழாங் களோடு சதாஆனந்தாநுபவம் பண்ணிக்கொண்டிருக்கும் உணர் முழுநலமான நிரதிசயானந்த பேரின்பவாழ்வையிழந்து பிரகிருதி ஆத்மவிவேகத்தால் அதனைப்பிரத்தேகமாக்கி சத்துவசம்பிலே ஷம் சற்றேனுங்கிட்டாதபடி சாக்ஷிபூத தீர்க்கதிடவிரதனாகநின்ற பூர்வபுண்ணியம் நீடித்திராமல் இம்மையில்த்தானே சுலபமாய்க் களித்து சேடித்திருக்கின்ற பாவபரிபக்குவத்துக்கேற்க நியந்தா வினாலேற்படுத்திய காலஅளவைபரியந்தம் மீளாதநரகத்தை யனுபவித்துக்கொண்டிருப்பது.

## துக்காவகம்.

நியாசநிஷ்டையினால் அற்பணஅனுதாபரூபமாய் புண்ணிய பாவ தொந்துவபாரத்தைவிலக்கி பூருவவிதிப்படி தத்தம் நியத

கருமங்களைச்செய்யாமலும் பூர்வகர்மத்தைவிலக்கி பரதந்திரனாய் ஞானசற்குருவையாசிரயித்து தத்தங்கருமானுரூபமாய் அவ னிட்டபணிகளை சிரேஷ்டகனிஷ்டமென்றெண்ணாமல் பரமபாக் கியமெனக்கைக்கொண்டு சருவசந்துஷ்டனாய் இன்னமுங்கிடைக் குமோவென்கின்ற பேராசையோடு நியமித்தகருமங்களைச்செய் யாமலும் பரமகிருபையினால் அக்ஞானபீஜம்நசித்து அகம்பாவ முழுதும் வர்ச்சித்து அநகனாகவிருக்கின்ற சீவன்முத்தன் ஆசிரத ரக்ஷகார்த்தம் நிர்த்தொந்தமாகச்செய்யும் கிருத்தியாகிருத்தியங் களை விதிநிஷேதங்கல்ப்பித்து புண்ணியபாவமெனக் குறிக்காமல் அவையாவும் பரப்பிர்மலீலையென்றெண்ணி அவனதடிக்கடி யாகப்பணிச்செய்து சதாஆனந்தபூர்த்தியையடையாமலும் சிற் சடரூபமான சரீர பிராண மனோ புத்தி சீவனைவிவேகித்து அந்தரி யாமியாய் சதா நமக்குள்ளும் புறம்பும் இதோ சாக்ஷாத்காரமா யிருக்கின்ற சர்வேஸ்வரசற்குருவை அதன்யதாப்பிரகாரம் உண ராமலும் இருவினைக்கீடாகவந்த பிரகிருதிதேகத்தை நியதிரூபத் தால் பிரத்தேகமாக்கி வினைப்பகுதியை யனுபவிக்கவிடாமல் அதைப்பற்றியெழுப்பும் விருத்தியை நசிப்பித்து கிருபாலோசன னம் பரிசிக்காமல் சித்தோகமென்கின்ற தீர்க்கநிஷ்டையைச்சாதி த்து அநேககாலம் அவ்வியக்தசுழுத்தியிலொடுங்கிநின்று கருமபீடி தத்தால் அந்தச்சுழுத்திவாசனையோடும் வெளியிட்டு பிராந்தனைப் போல சொப்பிரக்ஞைபிழந்து புண்ணியபாவ சுகதுக்காதிகளை மாறிமாறியனுபவித்து சதாதுக்கியாய் சஞ்சிதரோகமுள்ளபரியந் தம் குலாலசக்கரம்போலச்சுற்றிக்கொண்டுதிரிவது.

## தற்பதநிஷ்டை.

சருவப்பிராணிகளுக்குந்தாழ்ந்தவனாய் தனக்குக்கீழ்ப்பட்ட பிராணிகளொருவருமில்லதாய் சித்தத்தில் உள்ளபடிதீர்க்கமாக நிச்சயித்து தனக்கு உயர்ந்தவர்களாகவிருக்கின்ற சருவப்பிராணிக ளிடத்தும் சதா அகமகமென்பதனைத்தும் பரமாத்தும சொரூப மெனத்தெளிந்து அந்தப்பரமாத்துமாவாகிய சேஷிக்கி சருவப் பிராணிகளையும் சேஷபூதர்களாகத் தெரிசித்து அநகனாகவிருக் கின்ற சீவன்முத்தன் ஸ்ரீபரப்பிர்மநியதத்தால் பூமியந்தர சுவர்க்க சரண்ய பரமபதமென்றைந்துபேதமாய் லீலாவிபூதி நித்தியவிபூதி

யென் றிரண்டுபிரிவுகளாயிருக்கின்ற சாலோக தருமத்தை நிலை நிறுத்தி சாமீப சாரூப சாயுச்சிய கைவல்ய சம்பூரண சம்பூர்த்தி யென்னும் முத்திபேதத்தை நிஷ்டாரூபமாய்ச்சாதித்து கிருத கிருத்தியனாய் நித்தியசூரிகளான முத்தகுழாங்களோடு இம்மை மறுமையென்பதில்லாமல் சதா எக்காலமும் ஆனந்தானுபவம் பண்ணிக்கொண்டிருப்பது.

சாலோக்கியநிஷ்டை.—ஸ்ரீபரப்பிர்மநியதத்தால் அநகனாக விருக்கின்ற சிவன்முத்தன் லீலாவிபூதி நித்தியவிபூதியிரண்டும் ஞானகர்மமென்னும் இரண்டடிகளால் நிறுத்தப்பட்டு பூமி அந்தர சுவர்க்க சரண்ய பரமபதமென்னும் சருவலோக சருவப்பிராணிகளுக்கும் மத்தியப்பிரதேசத்தில் சருவசமனாய் ஸ்திரநிலையாக விருந்து ஸ்ரீபகவானாகிய சருவேஸ்வரபரப்பிர்மம் தத்நம்வரை கடவாதுசெங்கோல்நடாத்தும் அற்புதவிலாச மகிமையைக்கண்டு ப்ய பக்தி விசுவாசமுடையனாய் அவனது ஆக்ஞாவிதியிற்கட்டுப் பட்டு படைப்பவனுதவியால் படைப்புகளையும் படைப்புகள்மகிமையால் படைப்பவனையும் யூகபுத்தியால்க்கவனித்து அவற்றை நவநவமாகச்சிந்தித்துணர்வது.

சாமீப்பியநிஷ்டை.-ஸ்ரீபகவானாகிய சர்வேஸ்வரசற்குருவுக்கு செய்யுங்கைங்கிரியமே சருவப்பிரயோஜனமெனத் தெளிந்து அத்தால்வரும் இதரப்பிரயோஜனத்தைக்குறிக்காமல் சுயமேவ வடிமை நீக்கமில்லாவடிமை கோதில்லாவடிமையென்னும் நம் சொரூப பவித்திரமான அடிமைத்தொழில்களைக் கைங்கிரியரூபமாய் தழும்பேரச்செய்வது. அவற்றுள். சுயமேவவடிமை.—தேசவாச ராசதாச சிரேஷ்டகனிஷ்டங்களைக்குறிக்காமல் திருச்சித்தப்படி அமைந்திருப்பது. நீக்கமில்லாவடிமை.— ஸ்ரீபகவானாகிய சர்வேஸ்வரசற்குருவின் பிரதமசரமமென்னும் பருவவேற்றுமையைத்தெரிந்து சொலபனாய் நமக்குடன்பாடாகவிருந்து அதிகாரபூர்த்தியைப் பண்ணும் சருவசிரேஷ்டமான சரமவடியைப்பற்றிப் பிரிவரநின்று சதாசருவவிதபணிகளையும் செய்யப்படுவது. கோதில்லாவடிமை.—மிகவும் உகப்பாயிருக்கும்பாரியா புத்திர பரிசனபரிவாராதி பகவதபிமதவிஷயங்களை முன்னிட்டு ஸ்ரீபரப்பிர்ம சற்குருவைச் சரணாகவடைவதே சருவசிராக்கிய

மென்றுணர்ந்து பூர்வாபரத்தைத்தெரிந்து பாகியாந்தரவிரோத மில்லாமல் ஆசிரயிப்பவர்களையாசிரயித்து அடிக்கடியாகப் பணி செய்யப்படுவது.

சாரூப்பியநிஷ்டை.—சமம் தமம் உபரதி திதீக்ஷை சமாதானம் சிரத்தையென்கின்ற சட்குணங்களும் நிறைந்து மித்திராமித்திர சமத்துவமுடையனாய் சர்வாத்மாவுக்குள்ளும் தோஷரகிதமாய் ஜொலித்துக்கொண்டிருக்கும் அந்தராத்மவிவேகத்தால் சருவமும் பரமாத்மசொரூபமெனத்தெளிந்து சருவப்பிராணிகளுக்குள்ளிலும்புறம்பிலும் ஏகவனேகமாய்ப் பிரிவற்றிருக்கும் அந்த பரமாத்மாவாகிய சருவேஸ்வரசற்குருவை நமக்குள்ளும்புறம்பும் சதாதெரிசித்துக்கொண்டிருப்பது. அவற்றுள். — அகக்கரணத்தைத்தண்டித்து ஏகாக்கிரசித்தனாயிருப்பது: சமம். — சத்தாதி விஷயங்களிற் செல்லாதடக்குவது: தமம். — உள்ளும் புறம்பும் ஒளிவுடையனாயிருப்பது: உபரதி.—பிராரத்துவபீடிதமான சுகதுக்காதிகள் வந்துபோராடினும் சகிப்பையுடையனாயனுபவிப்பது: திதீக்ஷை.-துவம்பததற்பதஅசிபதமென்னும் அதிகாரபருவத்துக்கேற்க குருமுகமாய்க்கேட்ட உபதேசப்பொருளே தானாகச்சிந்திப்பது: சமாதானம், அவற்றுள்.— பிரத்தேகசாக்ஷியாய்நின்று அவித்தையாரூபமான சாட்டியப்பிரபஞ்சத்தை மித்தையாய்க் கண்டு சருவவியாபக சைதன்ய சொரூபமே தானாகச்சிந்திப்பது: துவம்பதசிந்தனம்.—காரியரூபமான விஸ்வவிராடாதி சராசரப்பிரபஞ்சமுழுமையும் சொப்பனகல்பித தோற்றமாத்திரமாய்க் கண்டு காரணரூபமான கூடஸ்தப்பிர்மவைக்கிய ஆத்மசொரூபமே தானாகச்சிந்திப்பது: தற்பதசிந்தனம்.— அகண்டார்த்தபோதத்தால் அத்தியாசமயக்கத்தைப்போக்கி இன்பபரிச்சேதமா யுதிப்பித்தொடுக்குகின்ற ஆனந்தசொரூபமே தானாகச்சிந்திப்பது: அசிபதசிந்தனம்.—பரமமாய் முப்பதமுடிவில்விளங்கிய சற்குரு சாஸ்திரங்களையே சிநேகமாகப்பற்றுவது: சிரத்தை.

சாயுச்சியநிஷ்டை.—இருமையே ஒருமை ஒருமையே இருமை இருமையொருமையென்பதற்றஅநுபூதிராஜாயனமென்னும் நிஷ்டாதிர்க்கத்தால் மானதவிகல்பம்நழுவி சிருஷ்டிக்குமுன்னம்

இருந்தபடியேயிருக்கின்ற பரசொரூபத்தோடு இருந்தபடியே ஐக்கியமாவது.

கைவல்யநிஷ்டை.—அபவாதயுத்தியினால் ஆரோபப்பிராந்தியைப்போக்கி அனர்த்தநிவர்த்தியின்பொருட்டு அதிகாரபருவத்துக்கேற்க ஞானபேதத்தால் கேவலசுபாவத்தை வேறுவேறாகவுணர்த்தினும்வாஸ்தவமாகஅதனிருதயம்நிஷ்டாதீர்க்கத்தால்காண்பானுங்காக்ஷியும்நழுவி ஞப்திமாத்திரமாய்ச் சேடித்திருப்பது.

சம்பூரணநிஷ்டை. — அவாங்மனோகோசரமாகவிருக்கின்ற பரப்பிர்மம் ஓரதிகாரியின் அகக்கரணசம்பந்தமான விருத்திபோதத்தால் அக்ஞானதமசைநசிப்பித்து சிற்சடவிவேகத்தால் ஆவரணகோசத்தைப் பேதித்து விக்ஷேபமூலத்தையுணர்த்தி விவித அகங்கரத்தைப்போக்கி அற்புதலீலையைவெளியிட்டு சதா சருவமும் ஆனந்தரூபமாயனுபவப்படுவது.

சம்பூர்த்திநிஷ்டை.—ஞான சக்தி பல ஐஸ்வரிய வீரிய தேஜசாதி சகலகுணசம்பூரணனான சருவேஸ்வரன் அப்பிரமேயஅவாச்சியப்பிரபுவாகவிருந்தும் சௌலப்பியசற்குருவாக வெளியிட்டு ஆசிரதரக்ஷகார்த்தம் சம்பூர்த்தியாதி சாலோக்கியபரியந்தமான நிஷ்டாபேதத்தைச்சாதித்து ஆசிரயிப்பவர்களின் அக்ஞானமுழுதையும் நிவர்த்திபண்ணி சாலோக்கியாதி சருவப்பிரயோஜனமும் நிரோதுவாகக்கொடுத்து அவர்களுக்கானந்தபூர்த்தியைப் பண்ணப்படுவது.

அக்ஞானநிவர்த்தி. — பிரத்தேகசாக்ஷியாய்நின்று பிரதம துவிதீய திரிதீயமென்னும் அவஸ்தாத்திரயவிவேகத்தால் அக்ஞானமுழுதையும் நிவர்த்தித்து பருவத்துக்கேற்க தராந்தரமாக யேற்படுத்திய யோகநிலையைத்தெரிந்து துரியாதீதநாயகன் பிரதம சரமபதங்களைப்பற்றி பிரிவறநின்று சுபேக்ஷையாதி ஞான பூமிமார்க்கமாய் அந்தத்துரியாதீத பூமியையடையப்படுவது. அவற்றுள். பிரதமாவஸ்தை. — சாக்கிரம் சாக்கிரசாக்கிரம் சாக்கிர சொப்பனம் சாக்கிரசுழுத்தியென்னச் சதுர்விதம்.-வித்துநனவு நனவு மகாநனவென்னத் திரிவிதரூபமாயிருப்பது:சாக்கிரம்.-புறக்கரணத்தைத்தண்டித்து மமதகங்கார சத்பீஜவுணர்வை சிந்திக்கப்

படுவது: சாக்கிரசாக்கிரம்.—சகஜமாய் ஒன்றினுந்தடைப்படாது சத்பீஜ அகமமதுருவாய் மாறிமாறிப்பரிணமித்துழல்வது:சாக்கிர சொப்பனம். — அகக்கரணத்தைத்தண்டித்து மமதகங்கார சத்பீஜவுணர்வை உதித்தவிடத்தொடுக்கி அதன்வரவை ஸ்ரீசற்குரு முகமாயுணரப்படுவது:சாக்கிரசுழுத்தி. துவிதியாவஸ்தை.-சொப்பனம் சொப்பனசாக்கிரம் சொப்பனசொப்பனம் சொப்பன சுழுத்தியென்னச்சதுர்விதம். அவற்றுள். நனவு கனவு நினைவென்னும் தானபேதத்தால் மனோராச்சியத்தை மூவிதமாகச்சொல்லப் படுவது: சொப்பனம்.-சொப்பனத்திற்கண்டபொருள் சாக்கிரத்தில் சத்தியமாயிருப்பது: சொப்பனசாக்கிரம்.-சொப்பனத்தில்க் கண்டபொருள் சாக்கிரத்தில் மித்தையாயிருப்பது: சொப்பன சொப்பனம்.—சாக்கிரவழுத்தமே சொப்பனமாகி அதுவுந்தோற்றாது வாசனைவசத்தாய்முழுகிக்கிடப்பது: சொப்பனசுழுத்தி. திரிதியாவஸ்தை.-சாட்டியசுழுத்தி சின்மாத்திரசுழுத்தி ஆத்மசுழுத்தி ஆனந்தசுழுத்தியென்னச்சதுர்விதம்.— அவிவேகப்பிராணிகளுக்கு சுழுத்திப்பிரளயமிரண்டினும் ஒன்றுந்தோற்றாது வல்லிருளாக மூடப்படுவது: சாட்டியசுழுத்தி. — சாக்ஷிபூதசின்மாத்திர தீர்க்க திடவிரதனாகநின்று சீவசிருஷ்டியாகிய அவித்தையாப்பிரபஞ்சத்தை கட்டோடும்நசிப்பிக்கப்படுவது:சின்மாத்திரசுழுத்தி.-சிற்சடவிவேகத்தால் ஈஸ்வரசிருஷ்டியாகிய விஸ்வவிராடாதி மாயாப்பிரபஞ்சத்தை தோற்றுமாத்திரமாய்க்கண்டு திரிபுடிநிவர்த்தனாய் சச்சிதானந்தபரிபூரண கூடஸ்தப்பிர்மஐக்கிய ஆத்மசொரூபமே தானாகவிருப்பது: ஆத்மசுழுத்தி.- நம்மையிதிலிருந்துவிழிப்பித்து நமக்கற்புதசுவானுபவத்தை யபிவிர்த்திபண்ணி நிர்ோதுகிருபையினால் துரியதுரியாதீதபூமியில்ச்சேர்ப்பிக்கும் அற்புதவிலாசமகிமைகளை ஸ்ரீசற்குருமுகமாயுணரப்படுவது: ஆனந்தசுழுத்தி.

## சற்சாரம்.

அவஸ்தாசத்தமம் ஆனந்தாபஞ்சகமென்றிரண்டுவகையாய் சாஸ்திரசாராம்சத்தைத்தொகுத்துரைப்பது. அவற்றுள். அவஸ்தாசத்தமம்.—அக்ஞானம் ஆவரணம் விக்ஷேபம் பரோக்ஷம் அபரோக்ஷம் துக்கநிவர்த்தி தடையற்றவானந்தமென் றேழுபேதமாயிருப்பது. அவற்றுள். — பிர்மமாகின்ற நிருபாதிகஆத்மாவைமறந்

தது: அக்ஞானம். — பஞ்சகோசங்களுக்குவேறுபட்டும் பத்தி ஞெருமையையுணராமல் பதின்மரிலொருவனைக் காணேமென் பது: ஆவரணம்.-பஞ்சகோசக்குகையில்பதைப்பவனை பரமகுரு வினல் விலக்ஷணப்படுத்துவது விக்ஷேபம். —சுருதிப்பிரமாணத் தால் நியதிசமஸ்காரவிதிப்படி நிருபாதிகஆத்மாவையுணர்த்தி நீயேபிர்மமென்றுபதேசிப்பது: பரோக்ஷம். — தனித்தனியே தற்பதத்துவம்பத விசாரம்பண்ணி ஒன்றிலொன்றையொடுக்காமல் இரண்டுமிருக்க அவ்விரண்டிடத்தும் ஒருவனுகவிருக்கின்ற அத்து விதீயப்பிர்மமே தாஞயிருப்பது: அபரோக்ஷம்.—பௌதீகத்தை பூதத்துக்கும் பூதத்தை லிங்கத்துக்கும் லிங்கத்தைச்சத்துவத்துக் கும் சத்துவத்தை ஈஸ்வரத்துக்கும் ஈஸ்வரத்தை இதயத்துக்கும் இதயத்தைப்பரப்பிர்மத்துக்கும் அநன்னியமாய்க்கண்டு அந்தப் பரப்பிர்மத்தை இதயப்பிரிவற சதா வுணர்ந்து கொண்டிருக்கும் அதிகாரிக்கி சித்தரோகம்நசித்து எதிர்விம்பமாய்த்தோற்றிய சிவ பேதம்வர்ச்சிக்கப்படுவது: துக்கநிவர்த்தி.—சுயம்புவாகியபிர்மம் சருவதருமியாயிருந்து அகோசரம் பரப்பிர்மம் இதயம் ஈஸ்வரம் சத்துவம் லிங்கம் பூதம் பௌதீகமென்னும் அஷ்டவித ஆத்மா வையும் தத்தந்தருமங்களோடு அதனதன்வரைகடவாது நிலை நிறுத்தி எந்நிலம் எழுநிலம் நன்னிலமுழுதுக்கும்அதிபதியாய் உத யாஸ்தமின்றி ஏகநாயகனுகவிருந்துசதாசெங்கோல்நடாத்துவது: தடையற்றவானந்தம்.

வாக்குமனதுக்கெட்டாததாகினும் ஆசிரயமானவதிகாரிக்கி அற்புதவதிசயங்களால் காக்ஷிப்படுவது: அகோசராத்மா.-சருவ ஜெகத்காரணமாயிருப்பது: பரப்பிர்மாத்மா.—சருவவியாபக சிதா காசமாயும் சருவஜெகத்தும் உதித்து விரிந்தொடுங்குதற்குத் தான மாயுமிருப்பது: இதயாத்மா. — அகிலமங்கள குணசொரூபனுய் அகிலலோககர்த்தாவாய் ஹரி சிவ விதிஇந்திராதிஅநேகரூபமாய்ப் பிரிந்து திதிலயோற்பவாதி அகிலகிருத்தியங்களைச்செய்பவனுய் உபயவிபூதிக்கும் நிருவாகனுயிருப்பது:ஈஸ்வராத்மா.-முப்பதுமுடி வாய்விளங்கியஸ்ரீவாசுதேவினில்ப்பிரிந்து முத்தாத்மாவாகவிருந்து அவனதுநியதகைங்கிரியங்களை செய்யப்படுவது: சத்துவாத்மா.— கல்ப்பாதியில் அவ்வியக்தசுழுத்தியில் நின்றுதித்து முக்குணவழி

யாய்ப்பேதித்து ராகத்துவேஷசங்கங்களை விருத்திபண்ணி சுரா சுரர் நரர்விலங்காதி அநேகதேகாவஸ்தையையடைந்து கல்ப் பாந்தத்திலடங்கியிருப்பது: லிங்காத்மா.— ஒருயிருக்கோருயிராக சருவப்பிராணிகளையும்தொடர்ந்துநின்று முத்திதிசையில்பற்றுக் கோடாயிருப்பது: பூதாத்மா. — ஒருடலுக்கோருயிராகவிருந்து உடல்ப்பந்தத்தை வெறுத்து உயிர்ப்பந்தமான நித்தியசூழாங் களோடு சரணாகதிபண்ணியஅதிகாரியின்விருத்திவழியாய் சாக்ஷா த்காரமாகி ஆசிரயிப்பவர்க்கு சம்பந்தானுசம்பந்தங்களை யுணர்த்தி உயிரையும்உடலையும் ஒருப்படுத்தி ஸ்ரீவாசுதேவினால் ரக்ஷிக்கப் படுவது: பௌதிகாத்மா

ஆனந்தபஞ்சகம்.—அத்துவிதானந்தம் ஆத்மானந்தம் யோகா னந்தம் பிர்மானந்தம் வித்தையானந்தமென் றைந்துபேதமா யிருப்பது. அவற்றுள். அத்துவிதானந்தம். — கசப்போடுகூடிய தேகத்தடையிலிருக்கின்ற ஆத்மாவுக்கு அகாரணமாக சற்குரு கிருபையினால் தடையற்றவானந்தம் லப்தமாகி சகஜானந்தசாகர சொரூபமாய் வரம்பற்று விளங்குவது. ஆத்மானந்தம். — பஞ்ச கோசகுத்திரதேகத்திலிருக்கின்ற சருவாத்மாக்களுக்குரிய சச்சி தானந்த லக்ஷணமும் பஞ்சகோச குத்திரதேகத்திலிருக்கும் போதே அவற்றைவேறுபடுத்தி சீவன்முத்தர்களாலனுபவிக்கும் சருவவியாபக சச்சிதானந்த ஸ்வானுபூதிலக்ஷணமும் பஞ்சகோச முப்புரதேகத்தைத்தகர்த்து பிர்மவிகாரிகளான நிருவாணநிஷ்டர் கள் முழுதும் ஒருமைப்பாடாக அனுபவிக்கும் ஏகரூபரான வாசு தேவ சச்சிதானந்தசொரூப மகாத்மியமும் யதாப்பிரகாரந் தெரிந்து தத்தம் அதிகாரத்துக்கேற்க சற்குருகிருபையினாலனுப விப்பது. யோகானந்தம்.—விஷயானந்தம் பிர்மானந்தம் வாசனா னந்தம் நிசானந்தம் முக்கியானந்தமென்றைந்துபிரிவாய் லக்ஷியப் பொருளில் நாட்டம்வைத்து அதனதுசேர்த்திப்பிரிவுமுதலியது களாலுண்டாகிறசுகத்தை பிரதக்குபிரதக்காகத்தெரிந்து பிர்மாப் பியாசிகளாலனுபவிப்பது. பிர்மானந்தம். — ஏகார்ணவம் வந்து சேர்த்து துவந் தநுவென்னும் இரண்டுபதமுந்தட்டுமாறி இந்தி ராதிசுகமுந் திவலையாய்க்கண்டு பிரளயவெள்ள சாகரத்தை யொத்த ஏகானந்த பேரின்பவாழ்விலமர்ந்திருப்பது. வித்தையா

வந்தம்.—சர்வேஸ்வரசற்குரு அனுக்கிரகித்த வேதாந்தமந்திரம் சித்தத்திலெழுந்துபொங்கிஜெகத்தைமுழுதும்நிறைந்துத்தேங்கி முடிவுபெறாமல் இன்னமும் ஒன்றநக்ஷயமாய் விருத்தியடைந்து கொண்டிருப்பது.

## சம்பூரணம்.

ஸ்ரீபரமசற்குருகிருபையினால் கோசரவகோசரமாகவிருக்கின்ற பரப்பிர்மமும் இதயசம்பந்தமான விருத்திபோதத்தால் அந்தப்பிர்மம் மனோ புத்தி சிவ தேகாதிகளைப் பிறப்பித்தொடுக்குகின்ற விசித்திரலீலையும் சதேக விதேகமுத்தியும் அப்பியாச ஆரூடநிஷ்டையும் ஆரூடனான ஞானிஈசசமானத்துவதாரதம்மியமும் சித்தாந்தபூருவ வேதவாக்கியமும் ஈஸ்வரசிருஷ்டிபேதமும் ஞானகர்மப்பூர்த்திப் பிரயோஜனமும் அஞ்ஞானம் நீங்கிய ஆரூடஅனுபவமும் சச்சிதானந்த பரிச்சேதவுலகமும் சச்சிதானந்தபரிபூரணஆத்மாவும் சடசத்தி சிற்சத்தியும் சத்திமானாகிய பரப்பிர்மமும் பிர்மானந்த அற்புதசிரோஷ்டமும் அந்தப்பிர்மானந்தத்தை துரியாதீதபூமியிலிருந்து சதாஅனுபவிப்பவனெவனோ அவனது திருவடித்துகளின்பெருமையும் துரியாதீதபூமியை அடைவதற்கு சுபேச்சையாதி துரியாந்தமாகச்சொல்லும் ஒன்றுக்கொன்றுயர்வுள்ள ஞானபூமிகளின்அற்புதசுவாநுபவ மார்க்க சோதனையும் உதயாஸ்தமின்றி ஏகசக்கிராதிபதியாய் அந்தத் துரியாதீதபூமியிலிருந்து சதாசெங்கோல்நடாத்தும் நம்யோகநாயகனது பிரதம சரமமென்கின்ற பதத்துவயமும் அந்தப்பதங்களைப்பற்றிப் பிரிவறநின்று லோகோபகாரார்த்தம் சதோதயமாகவெழுந்தருளிய பிர்மவர்க்கம் விஷ்ணுவர்க்கம் மகேசவர்க்கம் நித்தியவர்க்கம் முத்தவர்க்கம் பூரணவர்க்கமென்னும் அளவற்ற திவ்வியமூர்த்திகளின் அற்புதவிலாசமகிமையையும் அதனதன் யதாப்பிரகாரம்நவநவமாகவுணர்த்திதத்துவசொரூபத்தைதனிளக்கி சந்தேகமுழுதையும் நிவர்த்தித்து நித்தியதாண்டவஞ்செய்தருளு நடதிஷ்டதெய்வமாகிய ஸ்ரீமன் நாராயணபரப்பிர்மத்தை சதாஸ்தௌத்தியம்பண்ணி கைவல்யநவநீத சற்சாரவியாக்யானத்தை சம்பூர்த்திபண்ணுவது.



ஹரி ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

திரிதீயம் விவேகவிதாயகம்.

## விவேகம்.

சாருவாக வைசேடிக சாங்கிய நையாயிக பாட்டப்பிரபாகர வேதாந்த பௌராணிகாதி சமயவகைகளையும் மூகம்மது கிறிஸ்துவாதி புறச்சமயங்களையும் தெய்வீக ஆரிஷீக மனுஷீக ஆசுரிகமென்கின்ற மார்க்க சதுஷ்டயத்தையும் தெய்வத ஆசுர தெய்வாசுர மானவமென்கின்ற நிஷ்டாபேதத்தையும் தினசரித காரிகஸ்த பூருவ அபரமென்கின்றகிரியாசதுஷ்டயத்தையும்வேதவேதாங்க ஸ்மிருதி புராண நையாயிக மீமாம்சமென்னும் சதுர்த்தசபேதமான வித்தையாசாஸ்திரத்தில் சற்சாரமாகவிருக்கின்ற மீமாம்ச சாஸ்திரத்தினது தாந்திரீக வபிப்பிராயத்தையும் சிரேஷ்ட ஹீனனென்னும் அதிகாரபேதத்தையும் நிரைநிரையேவிவேகித்து சம்பூரணவபேக்ஷையினால் நிலைபெறாது அதனைச்சாஸ்திரமுகத்தால் சாதித்தடைதற்கசக்தனாய் சருவசக்தனான ஸ்ரீவாசுதேவசற்குரு சரணமே நமக்குத்தஞ்சமெனவடையப்படுவது.

சாருவாகம்.-தேகமேஆத்துமா போகமேமோக்ஷம்ராஜனே தெய்வமெனநிரூபித்து சடிந்திரியப்பிரத்தியக்ஷமான போகபூமியையபிவிர்த்திபண்ணுவது. வைசேடிகம்.—பிரத்தியக்ஷத்தினோடு தூமாக்கினிஞாயத்தால் கிரியாரூப நித்தியரூபப்பிரபஞ்சத்துக்கு மூலகாரணமாகிய சமவாயவஸ்து ஒன்றுண்டென்று அனுமானப்பிரமாணரூபமாய் நிச்சிதப்படுத்துவது. சாங்கியம்.—பிரத்தியக்ஷ அனுமானத்தினோடு ஆகமப்பிரமாணமென்னும் ஆப்தவாக்கிய சகாயத்தால் பிரகிருதிகுணங்களை அதற்குரிய லக்ஷணபரீக்ஷையால் வேறுபடுத்தி விலக்ஷணபுருஷனை நிரூபித்துக்காட்டுவது. நையாயிகம்.—பிரத்தியக்ஷ அனுமான ஆகமத்தினோடு உபமானப்பிரமாணத்தால் சாதிர்ஸ்யமானகடபடாதிகளையுவமித்து உபமேய பதார்த்தத்தை நிர்ணயிக்கப்படுவது. பாட்டப்பிரபாகரம்.—பிர

பாகரபாட்டமென்னும் மதத்துவயரூபமாய் பிரத்தியக்ஷ அநு மான ஆகம உபமானத்திளுேடு அர்த்தவிரோதமான வாக்கியங் களுக்கு ஜகர்அஜகர்ஜகதஜகமென்னும் லக்ஷணரூபத்தாற் பொருட் படுத்தி பூருவமீமாம்சத்திற்சொல்லிய கருமவரையை அருத்தா பத்திப்பிரமாணரூபமாய்ச் சாதிக்கப்படுவது. வேதாந்தம்.—பிரத்தி யக்ஷ அனுமான ஆகம உபமான அருத்தாபத்தியினுேடு பிராக பிரத்தொம்ச அன்னியொன்னிய அத்தியந்தமென்னும் அபாவப் பிரமாணரூபமாய் பிரபஞ்சத்திற்கு மித்தையாத்துவஞ்சாதித்து உத்தரமீமாம்ச உபநிஷதார்த்தமான பிர்மவரையைத் திர்க்கமாகச் சாதிக்கப்படுவது. பௌராணிகம்.—பிரத்தியக்ஷ அனுமான ஆகம உபமான அருத்தாபத்தி அபாவத்தினுேடு இந்தவிடத்திலிப்படி யென்கின்ற ஐதிகப்பிரமாணத்தையும் சகஸ்திரசங்கியையிற் சத சங்கியையுண்டென்கின்ற சம்பவப்பிரமாணத்தையுமனுசரித்து இந்த அஷ்டப்பிரமாணத்தைக்கைக்கொண்டு பூருவோத்தர காண் டத்திரயசமுதாயமாய் விதி நிஷேத பரியாயயோகரூடியென்னும் பஞ்சநாம கோசரவகோசரமாய்விளங்கிய பிர்மத்திற் சருவமு முண்டென்று நிருபிக்கப்படுவது. அவற்றுள். நித்தியபூரணுதியே: விதிநாமம்.—அசலநிரஞ்சனுதியே: நிஷேதநாமம்.-விவிதநாமவிவ காராதியே: பரியாயநாமம்.—விற்பத்தியோக்கியகாரணநாமமே: யோகம்.—அகாரணநாமமே: ரூடி.

## முகம்மதியம்.

சரிஹத்து தரிஹத்து அஹிஹத்து மஹரிபத்தென்னும் நான்குபிரகாரமாயிருப்பது. அவற்றுள். சரிஹத்து.-ஈமானிலறு வகைப்பறுலும் இசுலாத்திலவகைப்பறுலும் முகம்மதுமார்க் கத்தைக்கைக்கொண்ட உம்மத்துக்களுக்காக அல்லாகுத்தாலா விளுல் விதிக்கப்படுவது. ஈமானிலறுவகைப்பறுலு.-முதலாவது.- எல்லாவற்றையும் படைத்த அல்லாவொருவனுண்டென்று நம்புவது. இரண்டாவது.—அல்லாவினுடைய ஏவல்ப்பணிவிடை களைச்செய்யும் வானோர்களென்கின்ற மலக்குகளுண்டென்றுநம்பு வது. மூன்ருவது.—அல்லாகுத்தாலா அருளிச்செய்த தவுரோத் சபூர் இஞ்சில் புருக்கானென்கின்ற நான்குவேதமும் நூறுசுகுபும் உண்டென்றுநம்புவது. நான்காவது.—முகம்மதுநபிகள்முதலான

லக்ஷத்திருபத்து நாலாயிரம்பேர் நபிமார்களுண்டென்று நம்புவது. ஐந்தாவது.—கடைசிகாலத்தில் எல்லாம் அழிந்துபோகும் அல்லாவொருவனே தனித்திருப்பனென்றுநம்புவது. ஆறுவது.- அல்லாகுத்தாலா நியாயாதிபதியாயிருந்து எல்லாருக்கும் உயிர்கொடுத்தெழுப்பி நன்மைசெய்தவர்களைச்சுவர்க்கத்திலும் தீமைசெய்தவர்களைநரகத்திலும் விடப்படும் கியாமத்துநாள் ஒன்றுண்டென்றுநம்புவது. இசுலாத்தில் ஐவகைப்பறுலு. முதலாவது.— ஓதுகிறபருவமும் பொருளும் பயனுந்தெரிந்து ஆயிசிலொருதரங் கலிமாவோதுதல். இரண்டாவது.-தினமொன்றுக் கைந்துவேளை தொழுகுதல். மூன்றுவது.-வருஷத்துக்கொருதரம் ஆஸ்தியுடையவன் நாத்துக்கிரண்டணாவிழுக்காடுயெடுத்து ஏழைஜனங்களுக்குச் சக்காத்துக்கொடுத்தல். நான்காவது.—வருஷந்தோரும் ரமுலான் மாதத்தில் முப்பதுநாளைநோன்புவைத்தல். ஐந்தாவது.—பொருளூந் துணையும் பலமுமுடையவன் ஒருதரம் மக்கமாநகரம்போய் ஹச்சுச்செய்தல். தரிஹத்து.—நாயனுத்தரவின்படி நபிமார்கள் நடந்துகாட்டியசுன்னத்தையனுசரித்துசரிஹத்தில்நாயன்விதித்த பறுலுப்படி நடக்கப்படுவது. அஹிஹத்து.—காதில்லாமற்கேட்பவன் கண்ணில்லாமற்பார்ப்பவன் மூக்கில்லாமல்முகப்பவன் நாக்கில்லாமல்ருசிப்பவன்வாக்கில்லாமல்வசனிப்பவன் எக்காலமுமுயிருள்ளவன்அழிவில்லாதவன் ஆதியாயிருப்பவனென்னும்எப்போதும் நாயனைவிட்டுப்பிரிவில்லாத இவ்வெட்டுச்சிறப்பினையும் ஏகாக்கிரசிந்தத்தாலுணரப்படுவது.மஹரிபத்து.-அஷ்டகுணபரிபூரணனை நாயனை அறிந்தபடியே யதாப்பிரகாரம்அடையப்படுவது.

## கிறிஸ்துசமயம்.

ஏகதேவனைவணங்குதல் இதராந்தரங்களைவர்ச்சித்தல் ஓய்வுநாளையாசரித்தல் தேவநாமத்தைவீணுகவழங்காதிருத்தல் மாதாபிதாவைக்கனம்பண்ணுதல் பொய்கொலைகளவுவிபசாரஅபகாரங்களை விசர்ச்சித்தலென்னும் பழையயேற்பாட்டை யனுசரித்து கிறிஸ்துநாதரால்க் கொடுக்கப்பட்ட பத்துக்கற்பனையைக்கைக்கொண்டு உலகமுடிவுஉயிர்த்தெழுதல்நியாயத்தீர்ப்புமுதலான்வைகளை முகமதியனைப்போலவங்கீகரித்து ரூபவரூபத்தைச்சாதிப்பதனுல் ரோமமார்க்கம் மிசியோன்மார்க்கமென்னத் துவிபாகமா

யிருப்பது. ரோமமார்க்கம். — கிறிஸ்துநாதரோடு மரியம்மை சூசையப்பர் தீர்க்கதெரிசிகள் பக்தஜனங்களைச்சேர்த்து விஸ்வாசிப்பதும் பாவனாவிக்கிரகங்களைமுன்னிட்டு கிறிஸ்துவாதி பக்தஜனங்களினது சரித்திரவிலாசமகிமையை வெளிப்படுத்தி உச்சவாதிகளைநடத்தப்படுவதும் தேசவொழுக்கம் சாதியொழுக்கங்களை யொருபிரகாரமனுசரித்து ஜெப தப விரதாதிகளைச்செய்து விசேஷநாட்களைக் கொண்டாடப்படுவதும் பக்தஜனங்களைமுன்னிட்டுத் திரியேகதேவுக்கு ஸ்தோத்திரஞ்செலுத்துவதும் சிரேஷ்டகுருவாய் அப்பனுக்கெல்லாம்அப்பனாகிய பாப்புவினது ஆக்ஞாவிதியிற் கட்டுப்பட்டுநடப்பது முதலானவைகள். மிசியோன் மார்க்கம்.—கிறிஸ்துநாதனைத் தேவனுடையஆக்ஞையினாற்பெற்ற மரியம்மாளும் அவளுக்குப்பதியாகிய சூசையப்பரும் கிறிஸ்து பிறக்கப்போராரென்று பௌஷீகதெரிசனஞ்சொல்லிய தீர்க்கதெரிசிகளும் சர்வஜனபாவங்களுக்குந் தம்மைப்பிராயச்சித்தபலியாகக்கொடுத்த கிறிஸ்துநாதனைப் பேரன்பினால் விஸ்வாசித்து அவர்மகிமையைவெளிப்படுத்தி பேறுபெற்ற பக்தஜனங்களும் கிறிஸ்துமெய்யானசற்குருவென்பதை பூருவோத்தாமாகருஜப் படுத்துதற்குக் காரணமேயல்லாமல் மரியம்மைமுதலானோர்கள் விஸ்வாசித்தற்குரியரல்லவென்று நிராகரித்து கிறிஸ்துநாதனை மாத்திரம் யதார்த்தசற்குருவாக விஸ்வாசித்து அவரிடத்திலன்புடையர்களாய் அவர்கொடுத்தகல்பனையை மிகுந்தநம்பிக்கையோடு கைக்கொண்டு பிதா குமாரன் பரிசுத்தஆவியென்னும் அரூபராகிய திரியேகதேவனுக்கு ஸ்தோத்திரஞ்செலுத்துவது.

தெய்விகமார்க்கம்.-ஆசிரதரக்ஷகார்த்தம் ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மம் பலப்பிரதரூபமாக சாக்ஷாத்காரமாகி ஆசிரயிப்பவர்கள் யாவரானாலும் அவர்களின் பக்குவாபக்குவங்களைப்பரிக்ஷிக்காமல் அகாரணமாக பாவநிவாரண பரமசுகுர்த்தத்தைவெளிப்படுத்தி மோக்ஷ பர இகமென்கின்ற மூவகைப்பிரயோஜனத்தையும் வர்த்தமானத்தில் நிரோதுவாகக்கொடுத்து ரக்ஷிக்கப்படுவது. அவற்றுள். மோக்ஷப்பிரயோஜனம். — நிருவாணதீர்க்கத்தால் அத்துவித தொய்த விசிஷ்ட சுபாவ சமர்த்தியென்னும் நிஷ்டாபஞ்சகரூபமாக ஞானானந்தசமர்த்தியைப் பண்ணிவைப்பது.

பரத்துவப்பிரயோஜனம்.-பர வியூக விபவ அந்தரியாமி அர்ச்சாவதாரமென்கின்ற பரமேஸ்வரசாக்ஷாத்காரத்தால் சன்மாத்திரப்பொருளான நித்திய சிவனைக்கொடுத்து நித்தியவர்க்கங்களைக் காட்டி நித்தியகைங்கிரியத்தை நியமிக்கப்படுவது. இகப்பிரயோஜனம்.—அறம் பொருள் இன்பம் கீர்த்திஆயுஸ— மோக்ஷமென்னும் புருஷனது அர்த்திகபோகத்தைக் கொடுக்கப்படுவது.

ஆரிஷீகமார்க்கம்.—ஞானபரிபூரணனான ஸ்ரீசற்குரு தன்னை யாசிரயித்த அதிகாரிகளின் பக்குவாபக்குவங்களைச் சமஸ்காரம் பண்ணி சாஸ்திரிகமான இக பர மோக்ஷமென்னும் ஆடவகிருத்தியத்தை நிலைநிறுத்தி கர்ம யோக ஞானசாதகத்தை அபிவிர்த்தி பண்ணிஅதனனுசாத்தியமான சுவர்க்க நித்திய நிருவாணசுகத்தை அதிகாரானுரூபமாய்க் கொடுக்கப்படுவது. அவற்றுள்.—வர்ணம் ஆச்சிரமம் சமயம் அதிவர்ணம் ஸ்ரீ துறவென்னும் சட்பிரகாரத்தால் கிரியாபூமியை நிலைநிறுத்துவது: இகவனை.-பர வியூக விபவ அந்தரியாமி அர்ச்சாவதாரமென்கின்ற ஈஸ்வரசொரூப பாவனா பூர்த்தியினால் கிரியாபூமியைவிசர்ச்சித்து நித்தியபூமியை நிலைநிறுத்துவது: பரத்துவனை.—தனித்தனியேசாதிக்கும் அத்துவித தொய்த விசிஷ்ட சுபாவ சமர்த்தியென்னும் நிஷ்டாபஞ்சகரூபமாக முக்தி பூமியை நிலைநிறுத்துவது: மோக்ஷவனை.

மனுஷீகமார்க்கம்.—விப்பிரசிரேஷ்டனான ஓரதிகாரி மானவகுருமுதல் அமானவகுருபரியந்தமான விவிதசற்குருவை அதிகாரபக்குவத்துக்கனுகுணமாய் படிப்படியாக ஆசிரயித்து மனோவாக்குக்காயமென்கின்ற முக்கரணங்களுக்கும் பாவகிருத்தியத்தை யகற்றி புண்ணியகிருத்தியத்தை யபிவிர்த்திபண்ணி புண்ணியப்பிரயோஜனத்தை ஈஸ்வரனுக்கர்ப்பித்து அவ்வர்ப்பணவிசேஷத்தால் சித்தசுத்தியைப்பெற்று சித்தசுத்தியினால் விசாரக்ஞானமுதித்து விசாரக்ஞானதீர்க்கத்தால் சடசித்தைவிவேகித்து சடத்துவமீக்கத்தால் சித்சொரூபமேதானாகி சின்மாத்திர தீர்க்கத்தால் சதானந்தங்களொருமித்து சச்சிதானந்தவொருமையால் சாந்தாகாரத்தைப்பெற்று சாந்தியாதிசற்குணபூர்த்தியினால் சம்பூரணவதிகாரத்தைப்பெற்று அவ்வதிகாரசிரேஷ்டத்தால் அமானவகுருவையாசிரயித்து அவனதுகடாக்ஷத்தால் சமத்துவயோகபரி

பூரண பரப்பிர்ம சுவாநுபவரூபமான பேரின்பநலத்தை அதிகாராநு ரூபமாகவடையப்படுவது.

ஆசுரீகமார்க்கம்.விபரீதக்ஞானத்தால் வேதார்த்தங்களைப்பேதித்து தெய்வீக ஆரிஷீக மனுஷீகமென்கின்ற மார்க்கத்திரயத்தையும் இக பர மோக்ஷவகைகளையும் கட்டோடுகொலைத்து அதர்ம வனர்த்த அப்பிரிய அபகீர்த்தி அநாயஸ பாசபந்தமுதலானநரக சாதனங்களை புருஷதந்திரத்தால் தர்மார்த்தப்பிரிய கீர்த்தி ஆயுஸ மோக்ஷமென்ன ஆசிரயிப்பவர்க்குப் போதமாம்படி தந்திரயுத்தியால்ப் போதித்து யாவரும் வெறுவும்படியான பயங்கரவேஷமுடையருய் திரிகரணங்களுக்கும் பாவகிருத்தியங்களை நாளுக்கு நாளபிவிர்த்திபண்ணி பூர்வபுண்ணியத்தை நீடித்திராமல் கொடுந்தொழில்களால் வர்த்தமானத்தில் சொரூபமாய் அதிசீக்கிரமாக விசர்ச்சித்து பௌஷதியில் ஆசிரயிப்பவர்கள் வியப்புற்றவர்களையுங் கூட்டிக்கொண்டு எக்காலமும் மீளாதநரகலோகத்தையாசிரயித்து சதாநரகாநுபவம் பண்ணிக்கொண்டிருப்பது.

தெய்வதநிஷ்டை. — தனக்கெனவோரபேக்ஷயுமின்றி வாசுதேவநியமிதத்தால் ஆசிரதரக்ஷகார்த்தம்வெளியிட்டு அவர்களபேக்ஷித்தபிரகாரம்விளையாடி சரண்யருசியைப் பிறப்பித்து சம்பந்தாநுரூபமாக நித்தியவாழ்வைக்கொடுக்கப்படுவது

ஆசுரநிஷ்டை.—தெய்வத்தன்மை யெவ்வளவுமில்லாத ஒரு கீழ்மகன் புருஷதந்திரத்தால் தேவனைப்போல அபிநயித்துக் காட்டி மானவதர்மத்தைக்கொலைத்து உடன்பட்டவர்கள் வியப்புற்றவர்கள் முதலானோர்களையுஞ் சேர்த்துக்கொண்டு புண்ணிய க்ஷயமானவிடத்து எப்போதுமீளாத நரகத்தையடையப்படுவது.

தெய்வாசுரநிஷ்டை. — தேவபக்தனுகிய ஒருமனுஷன் மானவதருமத்தைக் கொலைத்து ஆசுரகிருத்தியத்தைச் செய்த பாவகர்மத்துக்காக நரகாநுபவம்பண்ணி பாவங்குறைந்தவிடத்து மிசிரகர்மத்துக்காக மனுஷஜென்மமெடுத்து ஆசுரத்தன்மைமிகுதியானல் அபலஜென்மத்தையும் தேவத்தன்மை மிகுதியானல் சபலஜென்மத்தையும் அடையப்படுவது.

அபலஜென்மம்.—சுதந்தரரூபமான நியதிசமஸ்காரத்தால்ப் பிரத்தேகசாக்ஷியையுணர்ந்து தான் சொப்பிரகாசசுத்தன் சமஸ்

தமும் அப்பிரகாசஅசுத்தமென்னும் தீர்க்கவிரதத்தைச்சாதித்து ஜென்மசாபல்யத்தையடையாமல் எடுத்தஜென்மத்தைப் பாழாக நஷ்டப்படுத்தி விதேகப்பிராப்தியில் ஜெனனமரணத்தை யொழிக்கப்படுவது.

சபலஜென்மம்.—நீதலோஜனமான அகச்சாக்ஷிப்பிரகாசத்தால் தன்னைப்பாவாத்மாவாகவுணர்ந்து புத்திபூர்வகமாய்ச்செய்த பாவத்தை புத்திபூர்வகமாயும் அபுத்திபூர்வகமாய்ச்செய்தபாவத்தை அபுத்திபூர்வகமாயும் தெய்வசகாயத்தால் விஞ்ஞைமாகக் கழித்து கரணபரிசுத்தமுடையனாய் சர்வமும் பிர்மமயமென்னும் பூர்த்திசமஸ்காரத்தால் சமஸ்தமும் இன்புருவாகத்தெரிசித்து விதேகப்பிராப்தியில் சரண்யத்துவாரா நித்தியபூமியையாசிரயித்து நித்தியசூரிகளோடு நித்தியகைங்கிரியபரனாய் ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மத்தை இடையறாது சதாசேவித்துக் கொண்டிருப்பது.

மானவநிஷ்டை.— பிருதிபத்திமார்க்கமாய் ஸ்ரீவாசுதேவின் கைப்புகுதுகிறபரியந்தம் உழவு தொழவு வரைவு வாணிப வித்தை சிற்பாதி இககிருத்தியமும் தவம் மகம் தீர்த்தம் சேவை அர்ச்சனை தான விரதாதி பரகிருத்தியமும் சிரவண மனன தியான சமாதிமுதலிய மோக்ஷகிருத்தியமும் மற்றயசாஸ்திரீகமான விதிவத்தான தர்மங்களையும் சற்றேனுங்குலைக்காமல் ஸ்ரீசற்குருமுகமாய் வாசுதேவநிஷ்டையை யனுஷ்டித்துக்கொண்டிருப்பது.

தினசரிதக்கிரிகை.— பிராம்மியவந்தித சௌசாசமன தந்ததாவசித ஸ்நானதர்ப்பண சந்தியாஜெப வைச்வதேவ பூசாபோஜன பாராயண சயனாதிகர்மம்: தினசரிதம். அவற்றுள்.பிராம்மியவந்திதம்.— அருணோதயத்துக் கைந்துகடிகைமுன்னதாய் நித்திரைவிட்டெழுந்து ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மத்தை திரிகரணபூர்வகமாக ஸ்தோத்தியம் பண்ணுவது. சௌசம்.— தட தடாக நதி ஆலய புர புரசனாதிகளுக்கவிரோதபூமியிற் பிரவேசித்து மலசலமிரண்டையும் விசர்ச்சனம்பண்ணி பத கர குதகுய்யாதி அவயவங்களில் துர்க்கந்தம் நீங்குகிறபரியந்தம் மண்ணினாலும் நீரினாலுஞ்சுத்திபண்ணுவது. ஆசமனம்.—ஸ்நானாதிபண்ணினும் தூஸாதியணியினும் நீராதியருந்தினும் ஸ்ரீயாதிபொருந்தி

னும் மலினாதிநீண்டினும் புனிதனாகும்பொருட்டு அங்கநியாச கர நியாசசகிதமாய் மந்திரஜலத்தை மூன்றுதரம் ஆசோஜனம் பண்ணுவது. தந்ததாவுசிதம்.— கடுமையாய்ப் பாலாய் முள்ளுடைத்தாயுமிருக்கின்ற விருக்ஷத்தில் வாசுதேவப் பிரார்த்திதனாகத் தாருவொடித்துப் பல்லுநாவுகளைச்சுத்திகரிப்பது. ஸ்நானதர்ப்பணம்.—புண்ணியோதக மந்திரோதக பாதோதக பிர்மோதகமுதலான பாவனநீர்க்கஜலத்தில் நீராடி அவ்விடத்தில் ரிஷிதேவபிதிர்களுக்குமந்திரோதகபூர்வகமாகத்திருப்திபண்ணுவது. சந்தியாஜெபம்.—பிராதசந்தி மத்தியசந்தி சாயசந்திகளில் தூளித உதக பஸ்ம சுகந்த பாதுகா விமலமென்னும் சட்பிரகாரவஸ்துவினால் திரிபுண்டர ஊர்த்துவபுண்டராதி தத்தம்மரபினுக்குரிய சின்னத்தைத் தரித்து உதகக்கிரிகையைமுடித்து உதகதீரத்திலிருந்து பிரணவாதி மகாமந்திரங்களை அதற்குரியதேவை முன்னிலையாகவரித்து சக்தியானுசாரஞ்செபித்து சர்ம வர்ம குப்த தாசனென்னும் வர்ணானுரூபமான நாமகோத்திரத்தைச்சொல்லி மாதுருப்யோ பிதுருப்யோ குருப்யோ சருவேப்யோ சர்வதேவதாப்யோ நம: வென்று உபஸ்தானமுறையை நிறைவேற்றப்படுவது. வைச்வதேவம்.— சர்வாத்மதிருப்தியின்பொருட்டு மத்தியசந்தி சாயசந்திகளில் விஸ்வதேவைவரித்து அதிதிமுதலானோர்களுக்குப் பங்கிட்டு அன்னபூர்வகமாயாவது உதகபூர்வகமாயாவது சக்தியானுசாரமாய் நடத்தப்படுவது. பூசை.— ஸ்ரீபகவானாகிய வாசுதேவ பரப்பிர்மத்தை அகத்திலும் புறத்திலும் அநேகபிரகாரமாக ஆராதிக்கப்படுவது. போஜனம்.— அதிதிமுதலானோர்களுக்கு சக்தியானுசாரம் சத்கரித்து ஆகாரரூபமாக வர்த்தமானத்திற்கிட்டியபதார்த்தத்தை பிராணாக்கினியிலாகுதிபண்ணி வாசுதேவுக்குத் திருப்தியாக்குவது. பாராயணம்.— பூதகால சகாகத்தைக்குறிக்காமல் வர்த்தமானத்தில் நித்தியரூபமான சம்பந்தானுசம்பந்தங்களைத்தெரிந்து ருசிகரமாகப்போதுபோக்குகைக்கும் பௌஷதியில் நித்தியபோகத்தைப்பெறுகைக்கும் சர்வவேதசாரமான சம்பூரணரகசியத்தின் அர்த்தசாரங்களைத்தெரிந்து ஆதனை விதேகப்பிராப்திபரியந்தம் போதக போத்திய படனசிரவணாதிகளால் சதாஸ்தௌத்தியம்பண்ணிக்கொண்டிருப்பது.

சயனம்.— தீப தூப வாசனை பரிமள பூரணகும்ப விவிதகோலா கலமான அந்தப்புறத்திற்பிரவேசித்து பாரியாசமேதராக நித்திரைசெய்யப்படுவது.

## காரிகஸ்தக்கிரிகை.

விவாக மிதுன உற்பவ யெக்ஞ சிராத்த ஆசார விவகாராதி தர்மம்: காரிகஸ்தம். அவற்றுள். விவாகம்.— பிர்மம் தெய்வதம் ஆரிஷ்யம் பிரசாபத்தியம் ஆசுரம் காந்தர்வம் ராக்ஷசம் பைசாச மென்ன அஷ்டபேதமாய் பிர்மக்ஷத்திரியர்களுக்குச் சாஸ்திரீகமாயும் மற்றயவர்களுக்குப் பரம்பராவழக்கப்படி அநுஷ்டானரூபமாயுமிருப்பது. அவற்றுள்.— ஆடையாபரண பூஷண போஷண சருவாலங்காரசகிதமாய் பிர்மநிஷ்டனான ஒருவிப்பிரனையழைத்துத் தன்னுடையகன்னிகையைத் தானமாகக்கொடுப்பது: பிர்ம விவாகம்.—எக்ஞசீலனான ஒருவிப்பிரனுக்குத் தன்னுடகன்னிகையை அப்படியேதானமாகக்கொடுப்பது தெய்வதவிவாகம்.— ஒருவிப்பிரனிடத்தில் இரண்டுபசுத்திரவியம் வாங்கிக்கொண்டு தன்னுடகன்னிகையைக்கொடுப்பது: ஆரிஷ்யவிவாகம்.— பொருட்கிரகணமில்லாமல் கேட்கப்பட்ட ஒருவிப்பிரனுக்குத் தனதுகன்னிகையைச் சம்மதிபூர்வகமாகக்கொடுப்பது: பிரஜாபத்தியவிவாகம்.— இவை நான்கும் பிராமணர்க்குரியது.— கன்னிகையைப் பெற்ற மாதாபிதாக்கள் அபேக்ஷித்த திரவியத்தைக்கொடுத்து அக்கன்னிகையைச் சொந்தமாகப்பெற்றுக்கொள்வது: ஆசுரவிவாகம்.— இதரஜனங்களுக்குத்தெரியாமல் சுபதினம் பிரதிதினத்தைக்குறிக்காமல் ஆசாமிருதியினால் ஸ்ரீயும்புருஷனும் பரஸ்பர சம்மதத்தால் சேரப்படுவது: காந்தருவவிவாகம். ஒரரசனை யுத்தமுகத்தால் ஜெயித்து அவனுடைய கன்னிகையைப் பலத்காரமாகக் கிரகித்துக்கொள்வது: ராட்சசவிவாகம். இவைமூன்றும் க்ஷத்திரியர்க்குரியது. யாவரும் நிந்திக்கிறதற்கேதுவாக களவில் களிப்பில் நித்திரையில் ஸ்ரீகளை வசமாக்கிச்சேருகின்றது: பைசாச விவாகம். மிதுனம்.— சாஸ்திரீகமாயும் நிஷ்டாபூர்வகமாயும் மேலோர்கள் நியமிக்கப்பட்டதினத்தில் பாரிகையோடு சம்யோகப்படுவது. உற்பவம்.— வந்திசெய்யாமல் வாசுதேவப்பிரார்த்தனையால் சந்ததிபரம்பரையை அபிவிர்த்திபண்ணி அடிபடியாய்க்

கிரியாபூமியைநிறுத்தப்படுவது. யெக்ஞம்.— பிர்மயெக்ஞம் பிதிர் யெக்ஞம் தேவயெக்ஞம் பூதயெக்ஞம் மானிடயெக்ஞமென் றைந்துபிரிவுகளாய் பாராயண தற்பண மந்திர ஹோம பூத பலி அதிதிசத்கார பூர்வகமாகச்செய்து அன்றுடகபாவத்தை நிவர்த்தி பண்ணுவது. சிரார்த்தம்.— க்ஷீர அன்ன தண்டுல இரண்ய பல மூல உதகாதிவஸ்துக்களால் மாதாபிதாமுதலானோரைவரித்து விதிபூர்வகமாயும் சக்தியானுசாரமாயும் செய்யப்படுவது. ஆசாரம்.— அதிருட்டமான தர்மசூட்சத்தைத்தெரிந்து முக்கியகௌணங்களையாராய்ந்து கடினசாரத்தைச்செலுத்தாமலும் அவ்வாசாரத்தை விட்டிடாமலும் அதனை சுவபரசுகமாயும் வர்ணானுரூபமாயும் நடத்தப்படுவது. விவகாரம்.— சகாய ரட்சக சத்கிரிய சத்காரதானவிதானாதிகளைத்தெரிந்து விதரணையோடு நடத்தப்படுவது.

சகாயம்.—மாதா பிதா பிராதா குரு தெய்வமுதலானோர்களின் ஆக்ஞாவிதியிற்கட்டுப்பட்டு மமதகங்காரம் உதிக்காமல் எக்கிரிகையும் அவர்களைச் சிட்சாதுணையாகக்கொண்டு நடத்தப்படுவது. ரக்ஷகம்.—அஹிம்சா சத்திய அஸ்தேய மத்தியஸ்த முதலான நீதிமார்க்கத்துக்குமாறுபடாமல் பாரியாபுத்திர பரிசன பரிவாராதி ஆசிரதஜனங்களைக்காப்பாற்றப்படுவது. சத்கிரிகை.— தட தடாக மட ஆலயமுதலிய புண்ணியகிருத்தியங்களைச்செய்து அதனைச்செய்கின்ற புண்ணியபுருஷர்களுக்குவேண்டும் உபகரண சாதகபூதையாகவிருப்பது. சத்காரம்.— பாஷண்டதிரஸ்கரனாய் அத்துவித தொய்த விசிஷ்ட சுபாவ சமர்த்திதமொன்கின்ற தத்துவநிரூபிதரையும் சைவ வைஷ்ணவ ஸ்மார்த்த மாத்துவாதி சமயநிரூபிதரையும் உபசரித்து வர்ணாதிசட்க விரோதம் வாராமல் அவரவர்க்குத் தக்கதக்கமரியாதையை விதிபூர்வகமாக நடத்தப்படுவது. பாஷண்டதிரஸ்காரம்.— லிங்கபேதியாய் பாவானுசந்தானம் பிரார்த்தனானுசந்தானமுதலிய சமஸ்த அனுசந்தானங்களையும் இழந்து இழந்தோமென்னும் அனுதாபசூனியனாகவிருக்கின்ற பாஷண்டனை மனமொழிமெய்யென்னும் முக்கரணத்தும் பரிசியாது யெக்கரணத்துந்தெரிசியாதிருப்பது. தானம்.- அன்னதானம் வஸ்திரதானம் கன்னிகாதானம் பூதானம் .கோதானம்

உபயமுகிதானம் இரண்யதானம் மகிஷதானம் அஸ்வதானம் சுவேதாஸ்வதானம் காலதானம் காளாமுகிதானம் மகாமேருதானம் கற்பகவிருக்ஷதானம் வித்தியாதானம் மகாதானமுதலிய தானுந் தரங்களைத்தெரிந்து தேச கால பாத்திர பரீக்ஷிதனாய் வாசுதேவப்பிரீதியினோடுஅக்ரவருணத்தாருக்குக் கொடுக்கப்படுவது. விதானம்.—சருவப்பிராணிகளோடுங்கலந்திருக்கும் ஸ்ரீ வாசுதேவின் இயற்கைவடிவத்தைத்தெரிசித்து சாதிசமய சத்துருமித்துருமுதலானவைகளைப் பரீக்ஷிக்காமல் சிவகருணையினால் ரக்ஷிக்கப்படுவது.

## சீவகருணை.

பசியென்கிறநெருப்பானது யேழைகள் தேகத்தினுட்பத்தியெரிகின்றபோது ஆகாரத்தாலவிக்கின்றதுதான்: சீவகாருண்யம் கடவுள் இயற்கைவிளக்கத்துக்கிடமாகிய சீவதேகங்களென்கிற ஆலயங்கள் பசியினாற்பாழாகுந்தருணத்தில் ஆகாரங்கொடுத்து அவ்வாலயங்களை விளக்கஞ்செய்வதே: சீவகாருண்யம்.—கடவுள் இன்பத்தைப்பெறுகின்ற நிமித்தம் தேகங்களிலிருந்து குடித்தனஞ்செய்கின்ற சீவராதுதத்துவக்குடும்பமுழுதும் பசியினால் நிலைதடுமாறிஅழியுந்தருணத்தில் ஆகாரங்கொடுத்து அக்குடும்பமுழுதும் நிலைபெறச்செய்வதே: சீவகாருண்யம்.—பசியென்கிறபுலியானது ஏழைஉயிர்களைப்பாய்ந்து கொல்லத்தொடங்குந்தருணத்தில் அப்புலியைக்கொன்று அவ்வுயிரைரட்சிப்பதே: சீவகாருண்யம்.— பசியென்கிறவிஷந் தலைக்கேறி சீவர்கள்மயங்குந்தருணத்தில் ஆகாரத்தாலவ்விஷத்தையிரக்கி மயக்கந்தெளியச்செய்வதே: சீவகாருண்யம்.— பசியென்கிற கொடுமையாகியதேள் வயற்றிற்புகுந்து கொட்டுகின்றபோது கடுப்பேறிக்கலங்குகின்ற ஏழைகளுக்கு ஆகாரத்தாலக்கடுப்பைமாற்றிக் கலக்கத்தைத்தீர்ப்பதே: சீவகாருண்யம்.— நேற்று இராப்பகல்முழுதும் நம்மை அறைப்பங்குகொன்றுநின்ற பசியென்கிறபாபி இன்றும்வருமே இதற்கென்னசெய்வோமென்று ஏக்கங்கொள்கின்ற ஏழைச்சீவர்களது ஏக்கத்தைநீக்குவதுதான்: சீவகாருண்யம்.— வெய்யிலேறிப்போகின்றதே இனிப்பசியென்கின்ற வேதனைவந்து சம்பவிக்குமே இந்தனிதிவசத்திற் கென்னசெய்வதென்று தேனில்கிழுந்த

ஈயைப்போலத்திகைக்கின்ற ஏழைச்சீவர்களுடைய திகைப்பை நீக்குவதுதான் சீவகாருண்யம்.— இருட்டிப்போகின்றதேஇனி ஆகாரத்தைக்குறித்து எங்கேபோவோம் யாரைக்கேட்போம் என்னசெய்வோமென்று விசாரத்திலழுந்திய ஏழைச்சீவர்களது விசாரத்தைமாற்றுவதே: சீவகாருண்யம்.— நடந்து நடந்து காலுஞ்சோர்ந்து கேட்டுக்கேட்டுவாயுஞ்சோர்ந்து நினைத்து நினைத்துமனமுஞ்சோர்ந்து இனியிப்பாவிவயற்றுக்கென்னசெய்வோமென்று கண்ணீர்வடிக்கின்ற ஏழைகளுக்கு ஆகாரங்கொடுத்துக் கண்ணீரைமாற்றுவதே: சீவகாருண்யம்.— பகற்போதும் போய்விட்டது பசியும்வருத்துகின்றது வேறிடங்களிற்போக வெட்கந்தடுக்கின்றது வாய்திறந்துகேட்க மானம்வலிக்கின்றது வயறுயெரிகின்றது உயிர்விடுவதற்கும் உபாயந்தெரியவில்லை இவ்வுடம்பையேன் எடுத்தோமென்று மனமும் முகமுஞ் சோர்ந்து சொல்வதற்கும் நாவெழாமல் உற்பாத சொப்பனங் கண்ட ஊமையைப்போல மனமருகுகின்ற மானிகளாகிறசீவர்களுக்கு ஆகாரங்கொடுத்து மானத்தைக்காப்பாற்றுவதே: சீவகாருண்யம். நாம் முன்பிறப்பில் பசிக்குறிப்பறிந்து பசியைநீக்கியிருந்தால் இப்பிறப்பில் நமதுபசிக்குறிப்பறிந்து பசியைநீக்குவதற்குப் பிறிதொருவர்நேர்வார் அப்போது அப்படி நாம்செய்ததில்லை இப்போது இப்படி நமக்குச்செய்வாருமில்லையென்று விவகரித்துக் கொண்டு தூக்கம்பிடியாமல் துக்கப்படுகின்ற ஏழைச்சீவர்களுக்கு ஆகாரங்கொடுத்து துக்கத்தைநீக்கி தூக்கம்பிடிக்கவைப்பதே: சீவகாருண்யம்.— தேகமுழுதும் நரம்புகள்தோன்ற பசியினாலிளைத்து உயிரொடுங்கி மூர்ச்சைமூடியகாலத்தும் அயலாரைக்கேட்பதுதுணியாமல் கடவுளை நினைத்துநினைத்து நெருப்பிற்படுத்து நித்திரைசெய்யத்துடங்குவாரைப்போல அடிவயற்றிற் கொடிய பசி நெருப்பைவைத்துப் படுக்கத்தொடங்குகின்ற அருக்காத்மாவுக்கு ஆகாரங்கொடுத்து அந்தப்பசிநெருப்பை மாற்றுவதே: சீவகாருண்யம்.— நேற்றுப்பட்டினிகிடந்ததுபோல இன்றும் பட்டினிகிடப்பது எப்படி நாம் பால்யவசத்தால் இன்றும் பட்டினிகிடக்கத்துணிவோமாயினும் பட்டினிசகியாத நமது ஏழைமனைவியவற்றுக்கு யாதுசெய்வோம் இவள்பசியைக்குறிப்பதும்

பெரிதல்ல வார்த்திபதிசையால் மிகவுஞ்சோர்ந்த நமது தாய்தந்தைகள் இன்றும்பட்டினிகிடந்தால் இறந்துவிடுவார்களே இதற்கென்னசெய்வோம் பசியினாலழுதழுது நமதுபுத்திரர்களது சோர்ந்தமுகத்தை எப்படிப்பார்ப்போமென்று எண்ணி எண்ணிக் கொல்லனுலைபின்மூண்ட நெருப்பைப்போல பசிநெருப்பும் விசாரநெருப்பும் உள்ளேமூண்டபடியிருக்கக் கன்னப்புடையிற் கைகளை வைத்துக்கொண்டு கண்களில்நீர்ததும்ப வருந்துகின்ற ஏழைகளுக்கு ஆகாரங்கொடுத்து வருத்தத்தைமாற்றுவதே: சீவகாருண்யம்.— கண் கை கால்முதலிய உறுப்புகளில் குறைவில்லாதவர்களாகி ஆகாரஞ்சம்பாதிக்கத்தக்க சக்தியுள்ளவர்களும் பசியால் வருந்தி இதோபடுத்திருக்கின்றார்கள் குருடும் செவிடும் ஊமையும் முடமுமாகவிருக்கின்றநமக்கு ஆகாரம் எந்தவழியாற்கிடைக்குமென்று தனித்தனி நினைந்துநினைந்து துக்கப்படுகின்றஏழைகளுக்கு ஆகாரங்கொடுத்து துக்கத்தைநீக்குவதே:சீவகாருண்யம்.- பசியினால்வருந்துகின்றவர்கள் எந்ததேசத்தாராயினும் எந்தச்சமயத்தாராயினும் எந்தச்சாதியாராயினும் எந்தச்செய்கையாராயினும் அவர்கள் தேசவொழுக்கம் சமயவொழுக்கம் சாதியொழுக்கம் செய்கையொழுக்க முதலானவைகளைப்பேதித்து விசாரியாமல் எல்லாச்சீவர்களிடத்தும் கடவுள்விளக்கம் பொதுவாக விளங்குவதையறிந்து பொதுவாகப்பார்த்து அவரவரொழுக்கத்திற்குத் தக்கபடி அவர்கள்பசியை நிவர்த்திசெய்விப்பதே: சீவகாருண்யம்.- பகைவராலெறியப்பட்டு மார்பிலுருவிய பாணத்தையும் கையாற்பிடித்துக்கொண்டு எதிரிட்டபகைவரையெல்லாம் அஞ்சாது ஒருநிமிஷத்திற்கொல்லத்தக்க சூரவீரரும் கல்வி கேள்விகளில் நிறம்பி அறிதற்கரியநுட்பங்களையறிந்து செய்தற்கரியசெய்கைகளைச்செய்து முடிக்கவல்லவர்களும் பசிநேரிட்டபோது அறிவுங்கருத்துமழிந்து தடுமாறுகின்றார்கள் இராப்பகல் தோன்றாது புணர்ச்சியின்பத்திற்பொங்குகின்ற காமிகளும் பசிநேரிட்டபோது புணர்ச்சியைமறந்து காமத்தைக்கசந்து கலங்குகின்றார்கள் நாமேபெரியர் நமக்குமேல்பெரியரில்லையென்று இருமாப்படைகின்ற அகங்காரிகளும் பசிநேரிட்டபோது அகங்காரங்குலைந்து ஆகாரங்கொடுப்பவரைப் பெரியவராகப்புகழ்

கின்றார்கள் இவரிவரிப்படியானால் ஒருவகைஆதாரமுமில்லாத ஏழைகள் பசிநேரிட்டபோது என்னபாடுபடார்கள் அந்தக்காலத்தில் அந்தஏழைகளுக்கு ஆகாரங்கிடைத்தால் எப்படிப்பட்ட சந்தோஷமுண்டாகும் அந்தச்சந்தோஷத்தைத் தோற்றுவித்தவர்களுக்கு எப்படிப்பட்டலாபங்கிடைக்கும் இப்படிப்பட்டதென்று சொல்லுதற் கருமையென்றறியவேண்டும்.— பசித்தவர்க்குப் பசியைநீக்குகின்ற விஷயத்தில் புருஷனைப்பெண்சாதிதடுத்தாலும் பெண்சாதியைப் புருஷன்தடுத்தாலும் பிள்ளைகளைத்தந்தை தடுத்தாலும் தந்தையைப்பிள்ளைகள்தடுத்தாலும் சிஷனைஆசாரியர்தடுத்தாலும் அடியார்களைஆண்டவன்தடுத்தாலும் குடிகளை அரசன்தடுத்தாலும் அந்தத்தடைகளில் சிறிதுந்தடைப்படாமல் பசித்தவர்களுக்குப் பசியையாற்றுவித்து இன்பத்தையுண்டுபண்ணுகின்ற சீவகாருண்யவொழுக்கமாகிய மேலானவிரதம் கடவுளாக்கினையானதால் இதனைப் புத்திமான்கள் தீர்க்கமாகச் சாதிக்கத்தக்கது.

விதரணை.—ஸ்ரீபகவானாகிய வாசுதேவசற்குருகிருபையினால் நிரூபகதிருஷ்டியில் விருத்தியொடுக்கம் நீததிருஷ்டியில் விருத்திக்ஷயம் சயோகதிருஷ்டியில் வஸ்துநிர்த்தேசம் சம்பந்ததிருஷ்டியில் சற்குருலாபம் வியவகாரதிருஷ்டியில் பூமித்துவய ஐஸ்வரியமுஞ் சித்தித்து இதயசீதளமிகுத்திருக்கின்ற விதரணன் சமஸ்தபூமியின்வியவகாரங்களையும் பூருவோத்தரமாகத்தெரிந்து எவ்வளவும் பிரயாசமில்லாமல் விளையாட்டாக நடத்தப்படுவது.

## பூர்வக்கிரிகை.

கற்பாதானம் பும்ஸவனம் சீமந்தம் உன்னயனம் சாதகர்மம் நாமகரணம் உபநிஷ்கிரமணம் அன்னப்பிராசனம் சௌளம் உபநயனம் மகாநாமியம் மகாவிரதம் உபநிஷத்து சோபனம் உத்துவாகனம் மிருதியென்னச் சோடசகர்மம்: பூர்வம். அவற்றுள்.— ஸ்ரீபகவானாகிய வாசுதேவப்பிரார்த்திதராய் வம்சாபிவிருத்தியின் பொருட்டு பாரிகையினிடத்தில் மிதுனபூர்வகமாகக் கற்பத்தைக் கொடுப்பது: கற்பாதானம்.— வாசுதேவக்காப்பினால் யாதொரு விக்கினமுமில்லாமல் புத்திரகற்பத்தைத்தினேதினேபரிபாலனம்

பண்ணுவது: பும்ஸவனம்.-நாசிகைத்துவாரா பிராணசஞ்சீவியைப் பூரித்து அதனிடத்தில் ஸ்ரீபகவான் தனதம்சத்தைவைத்து கற்ப சீமந்தனாய் மாதாவைமுன்னிட்டு வகடுகீறி தினேதினே நித்திய ஆஸ்தியை அபிவிர்த்திபண்ணுவது: சீமந்தம்.-பூப்பிரவேசமாதற் பொருட்டு ஸ்ரீபகவான் இமையைத்திறந்து புத்திரலோஜனத்தை விளக்கப்படுவது: உன்னயனம்.— பூபதனமானமாத்திரம் வாசுதேவப்பிரார்த்திதராய் புத்திரோத்ஸவங்கொண்டாடி உற்பவக்கிரிகையை நடத்தப்படுவது: சாதகர்மம்.—வாசுதேவைப்பிரார்த்தித்து சந்நிதிபூர்வகமாக ரம்மியப்பெயரைச் செய்யப்படுவது: நாமகரணம். — வாசுதேவைப்பிரார்த்தித்து இருத்தல் தவழ்தல் நடத்தல்முதலிய பருவக்கிரிகைகளை நடத்தப்படுவது: உபநிஷ்கிரமணம்.—வாசுதேவப்பிரசாதத்தை பிரார்த்தனுரூபமாய் ஊட்டிவைப்பது: அன்னப்பிராசனம். — வாசுதேவைப்பிரார்த்தித்து சிகாவிவாகத்தை வர்ணனுரூபமாய் நடத்தப்படுவது: சௌளம்.—திவ்வியசக்ஷுவைக்கொடுத்துஸ்ரீபகவான் தமதுநிசசொரூபத்தை புணர்த்தப்படுவது: உபநயனம்.—ஸ்ரீபகவானாகிய வாசுதேவினால் அந்தராத்மாவை சம்பந்தானுரூபமாகவிளக்கி நீயே ஸ்ரீவாசுதேவனென்னும் நித்தியநாமத்தைத் தரிக்கப்படுவது: மகாநாமியம்.—வாசுதேவகிருபையினால் எவ்வளவும் வழுவாமல் பிர்மசரிதநிஷ்டையைக் காப்பாற்றப்படுவது: மகாவிரதம்.—ஸ்ரீபகவான் சர்வவேதசாரமாகிய திரியேகப்பொருளையுணர்த்தி கிரகஸ்தனாதற் பொருட்டு பூர்வாச்சிரமத்தை சமர்த்திபண்ணுவது:உபநிஷத்து.-வாசுதேவகிருபையினால் அவரவர்க்குரிய கன்னிகையை விதிபூர்வகமாகக் கல்யாணஞ்செய்யப்படுவது: சோபனம்.—சீவன்முத்தனாய் காரிகஸ்ததர்மத்தை விதிபூர்வகமாகநடத்தி சர்வசிரேஷ்டர்களான சீவன்முத்தர்களின் அடியர்களுக்கெல்லாம் அடிமையாக நின்று சமஸ்தமானதேவர்களும் பலவாரான வேதகோஷ்டங்களோடு சந்தோஷிக்க சேவிதப்பிரயோஜன பாவனசொரூபத்தைப்பெற்று பூர்வக்கிரிகையை விதிபூர்வகமாகப் பரித்தியாகம் பண்ணுவது: உத்துவாகனம்.—வர்ணனுரூபமாக அபரக்கிரிகையைச்செய்து வாசுதேவகிருபையைப்பெற்று உஜ்ஜீவிக்கும் பொருட்டுத் தனதுசரீரத்தைப் புத்திரபௌத்திராதிகளுக்

கொப்புவித்து எப்போதும் இருந்தபடியேயிருக்கின்ற விதேகப் பிராப்தியையடையப்படுவது: மிருதி.

## அபரக்கிரிகை.

ஆரம்பம் சமஸ்காரம் சஞ்சயனம் பாஷாணகிருத்தியம் ஏக வோமம் நவசிராத்தம் சோதகும்பம் ஊனம் மாசிகம் சபிண்டீ கரணம் கோதானம் ஆப்திகம் கிரகயெக்ஞம் வருஷாப்திகம் சதா வந்தனம் வாசுதேவசமர்ப்பணமென்ன சோடசகர்மம்: அபரம்.

ஆரம்பம்.— அகிலமங்கள குணசொரூபனாகிய ஸ்ரீசருவேஸ்வரனதுகிருபையினால் சீவனிறக்கும்விதத்தையும் இறந்தவுடனே வாயுசரீரம்பெற்று யமதூதர்களோடு யமலோகஞ்சார்ந்து கணப்பொழுதில்மீண்டு சவத்தினருகேவந்து இடும்பையடைதலையும் கிருத்தியம் செய்யவேண்டிய விதத்தையும் பத்துநாட்பிண்டங்களால் சீவன்சரீரம்பெறுதலையும் பதின்மூன்றுநாள் யமதூதர் பிண்டசரீரம்பெற்றசீவனை பாசத்தால்ப்பிணித்து நாளொன்றுக்கு இருநூற்றுச்சொச்சங்காதவழிதூரம் ஓராண்டுவரையிலும் நடத்திச்செல்லுதலையும் பூலோகத்துக்கும் யமபுரிக்கும் இடையிலுள்ள எண்பத்தாறாயிரகாதவழியில் சூரிபோன்ற இலைகளையுடைய அசிபத்திரவனமும் உருக்கிவிட்ட செம்புபோலக்காந்தும் இடமும் அதிகஉஷ்ணமுங்குளிருமுள்ளஇடங்களும் இருளுள்ள இடமும் சிலாவருடமுடையஇடமும் இருத்தலையும் சீயாலும் இரத்தத்தாலும்நிறைந்து பாபிகளுக்கும் அப்பாபிகளை ஊறு செய்யப்பலவகைஜெந்துக்களுக்கும் ஸ்தானமாய் வைதரணிநதி கிடத்தலையும் யாமியம் சௌரி கந்தருவநகரம் குரூரம் கிரௌஞ்சம் விசித்திரம் பக்வாபதம் துக்கதம் நானாக்கிரந்தம் சுதப்தம் சீதாப்ரம்என்றபட்டணங்களில் யமதூதர்கட்டளையால் சீவன் சிறிதுபொழுதுதங்கி மாசிகபிண்டங்களையுண்ணுதலையும் மேற்சொன்னவற்றில் விசித்திரமென்றநகரஞ்சார்ந்து ஊனஷாண்மாசிகபிண்டத்தையுண்டு ஏழாமாசிகபிண்டத்தையுண்ணுங்காலை சிலபிசாசங்கள்வந்து அப்பிண்டத்தைக்கவர்ந்துகொள்ளுதலையும் சீவன் யமபுரிக்கருகில்சாரலும் பிண்டசரீரம்நீங்கி அங்குஷ்டப்பிரமாணமாய் ஒருவன்னிமரத்தில் சற்றுதங்கி கருமத்தாலாகிய சரீரம்பெற்று யமன்முன்புபோதலையும் யமபுரியின்தன்மையை

யும் யமனுடையஅரண்மனையும் யமன்வீற்றிருக்கின்றமண்டப மும் சித்திரகுப்தன் அரண்மனையும் மகாரோகங்களின் கிரகங் களும் நரகங்களின்பெயருமாகிய இவற்றின்பெற்றிமையையும் பாபஞ்செய்தசீவர்கள் உலக்கையால்மொத்துண்டும் ஆயுதங்களால் சிதைக்கப்பட்டும் சுரிகையால்சீவப்பட்டும் செக்காலரைக்கப்பட் டும் நெருப்பில்வாட்டப்பட்டும் செம்பினுல்செய்யப்பட்டுத் தப்த மாயிருக்கின்ற ஆண்பாவைபெண்பாவைகளோடுசேர்க்கப்பட்டும் கரும்பைப்போல ஆலையில்கொடுக்கப்பட்டும் நரகங்களில்த் தள்ளி அழுத்தப்பட்டும் துன்பப்படுதலையும் இன்னபாபஞ்செய்தவன் இன்னஜன்மமடைகின்றனனென்பதையும் இன்னபாபஞ்செய் தவன் நரகம்அனுபவித்து இன்னகுறிப்போடு பிறப்பானென் பதையும் இன்னதீவினையால் கொடிதாகியபிரேதஜன்மம் வரு மென்பதையும் நித்தியசிரார்த்தமும் வருடசிரார்த்தமுஞ் செய்ய வேண்டியவிதியையும் கருமஞ்செய்யாவிடின் மரித்தசீவன் துன்ப ப்பட்டுப் பிரேதசன்மமடைந்து குலநாசஞ்செய்தலையும் கரும ஞ்செய்யப்பட்டால் சீவன்இனி தாய்ச்சென்றுஇன்புற்று சுவர்க்க வாசஞ்செய்து குலத்தோரைஆசீர்வதித்தலையும் நல்வினைசெய்த சீவன் உத்தம உலகுஅடைதலையும் சீவன் நல்லுலகடையயேது வாகிய பூதானம் சொர்னதானம் கோதானம் பரித்திதானம் சய் யாதானம் இரும்புத்தானம் திலதானம் தீபதானம் உப்புத்தானம் கடதானம் பததானம் விருஷோர்ச்சர்க்கம் நாராயணபலி முதலி யவை செய்யவேண்டியவிதியையும் பிறத்தலுக்கும் இறத்தலுக் கும் ஆசௌசமுள்ளவிதத்தையும் துன்மரணம் அடைந்தவனு க்கு இன்னகாலத்தில் இவ்விதங்கருமஞ்செய்யவேண்டுமென்பதை யும் சந்நியாசமும் பிராயோபவேசமும் சககமனமுமாகிய இவற் றின்மேன்மையையும் பின்னும் சீவனுக்கு உறுதியாயவற்றையும் வீடுபேற்றிற்கு நிமித்தமாயவற்றையும் ஆதியோடந்தம் ஆராய்ச் சிபண்ணி மந்திர திரவிய கிரிகை பாவன பக்தி ஞானமுதலிய தால் சற்றேனும்வழுவுதல்வாராது உத்தரக்கிரிகையைச் சக்தி யானுசாரஞ்செய்யத்தொடங்குவது.

சமஸ்காரம்.— பைத்திரமேத பிர்மமேதமென்னும் உபய மார்க்கவிதியைத்தெரிந்து தத்தம் அதிகாரானுரூபமாய் தகனஞ்

செய்வது. பைத்திரமேதசமஸ்காரம்.— தத்தங்குலாசாரதர்மத்தைத்தழுவி தெக்ஷணாயனமார்க்கவிதிப்படி பிதிர்கருமத்தைச் செய்யப்படுவது. பிர்மமேதசமஸ்காரம்.— ஞானசிரோஷ்டனான பிதாவுக்கு பூருவசித்தாந்தத்தைத்தெரிந்து உத்தராயனமார்க்க விதிப்படி ஞானபுத்திரனாற்செய்யப்படுவது.

அவயவாஸ்தியை ஒருப்படச்சேர்த்து மந்திரபூர்வகமாக பிரேதாக்கினியையவித்து புண்ணியதீர்த்தத்திற் சேர்க்கப்படுவது: சஞ்சயனம். — பிதிராதிகளைப் பிரேதாகாரமாகச் சிலாரூபத்தில் வரித்துப் பிரேதசப்தவாச்சியப் பிரயோகக்கிரிகையை நடத்தப்படுவது: பாஷாணகிருத்தியம்.— அவயவாதிகளைப்பிரித்து அன்னதிரூபத்தாலாகுதிபண்ணுவது: ஏகவோமம்.— வாசனாதேகத்தைத் துவாரமுகத்தால் சுத்தீகரிக்கச்செய்வது: நவசிரார்த்தம்.— தாகோபசமனார்த்தஞ்செய்வது: சோதகும்பம்.—இருபத்தைந்தாநாள் நாற்பத்தைந்தாநாள் ஆறுமாசபன்னிரெண்டாமாச தானகட்டங்களில் விடாயாத்தியின்பொருட்டு சிரமபரிகாரார்த்தஞ்செய்வது: ஊனம்— மார்க்கவேதனைவாராமல் அதற்குவேண்டும் சகாயசாதனக்கருவிகளை மாசந்தோறுஞ்செய்வது: மாசிகம். — பிரேதஜென்மம்வர்ச்சித்து பிதிருருவத்தைப்பெற்று பிதாவை பிதிர்க்களோடுசேர்ப்பித்தற்பொருட்டுச் செய்யப்படுவது: சபிண்டீகரணம்.— வைதருணியைத்தாண்டிப் பிதிருருவத்தைப்பெற்று பிதாபிதிர்லோகத்தைச்சேரவும் பிதாவுக்குப் பிதாமகபிதாவானவன் விண்ணுலகத்தைச்சேரவுஞ் செய்வது: கோதானம்.- விஷ்ணுவிஸ்வதேவிஞேடு பிதா பிதாமக பிதிர்பிதாமகனைப் பிராம்மணமுகமாகவரித்து சர்வோபசாராதிகளாற் பூசித்து தேவதினத்தைப்பூர்த்திபண்ணுவது: ஆப்திகம்.— கோசல கோமய க்ஷீர ததி சத்பியென்னும் பஞ்சகௌவ்ய குஶோதகங்களால் அகத்தையும் புறத்தையும் பவித்திரமாக்குவது: கிரகயெக்ஞம்.— விஷ்ணுவிஸ்வதேவிஞேடு பிதாவாதிகளை வருஷந்தோறும்வரித்து வாக்குத்தத்தம் மஞேதத்தம் கிரியாதத்தம் தாராதத்தமுதலியவைகளால் பக்திபூர்வகமாகச் சக்தியானுசாரஞ் செய்வது: வருஷாப்தீகம்.— ஞானதீர்க்கத்தால் மாதா பிதா குரு தெய்வமுதலான சமஸ்தமும் வாசுதேவமயமாகத்தெரிசித்து எப்

போதும் ஸ்தௌத்தியம்பண்ணுவது: சதாவந்தனம்.— மாதுருப்யோ பிதிருப்யோ குருப்யோ சருவோப்யோ சருவதேவதாப்யோநம:வென்று ஸ்ரீபகவானிடமாகத் தன்னுடஆத்மாவை சமர்ப்பணம்பண்ணி சீவன்முத்தனாய் நித்தியசிவனைப்பெற்று கிருதகிருத்தியனாய்த் தடையற்று விளங்குவது: வாசுதேவசமர்ப்பணம்.

மீமாம்சதாந்திரீகம்.— கர்மோபாசனையே ஞானசாதகமென்றும் உபாசனாக்ஞானமே கருமசாதகமென்றும் கருமக்ஞானமே உபாசனாசாதகமென்றும் திரிகாண்டங்களும் பரஸ்பரசாதன பரஸ்பரசிரேஷ்டத்தையும் விதிக்கப்படுவது.

மீமாம்சவபிப்பிராயம்.— ஒவ்வொருகாண்டத்தை சித்தாந்தப்படுத்தி மற்றயவிரண்டும் பூருவபக்ஷமென்பதுவும் திரிகாண்டங்களும் சித்தபக்ஷமென்பதுவும் அதிகாரானுரூபமாய் வெளிப்படுத்திஅதன்பிரயோஜனமாகிய இகபரமோக்ஷசுகத்தைத் தனித்தனியேபெறுதற்குரியன்காண்டத்திரயவதிகாரியெனவும் அதனை ஸ்ரீசற்குருமுகமாகவொருங்கேபெருதற்குரியன் சம்பூரணவதிகாரியெனவும் மீமாம்சயிருதயத்தை யதாப்பிரகாரம் விவேகித்துணர்வது.

சிரேஷ்டன்.— ஈஸ்வரானுக்கிரகத்தால் தேச கால பிரகார அதிகார பலமுதலிய நியமங்கள் மாறுபட்டு ஞானசக்தியாதி சாட்குண்ய சித்தியைப்பெற்று சர்வதிருப்தனாக பொது பொதுச்சிறப்பு சிறப்பென்கின்ற தேவநியமனத்தைக்கைக்கொண்டு ஆசிரதரக்ஷணம் பண்ணுதற்கு சதாகங்கணங்கட்டிக்கொண்டிருப்பவன். அவற்றுள்.பொதுரக்ஷகம்.— திரிகரணத்தாலாகிலும் அல்லதொருகரணத்தாலாகிலும் சுசக்தியிழந்து யதார்த்தமாக சரணாகதிபண்ணுபவன் யாவனானாலும் அவனதுவிபத்தைநீக்கி அபயப்பிரதானசகிதமாய் ரக்ஷிக்கப்படுவது. பொதுச்சிறப்புரக்ஷகம்.— பரமதர்மமான அகிம்சா சத்தியமுதலிய நீதிவழியில்நடப்பவனை அன்னியன் அனன்னியனெனப்பாராமல் தர்மசாஸ்திரவிதிப்படி ரக்ஷிக்கப்படுவது. சிறப்புரக்ஷகம்.— தார தனய தாச ஆசிரதர்களின் பக்குவாபக்குவ குணகுற்றங்களைப் பரீக்ஷித்து விலக்காமல் அவர்களை நானாவிதவுபாயபூர்வகமாய்த்திருத்தி சிக்ஷபூர்த்தியாதிகளினால் ரக்ஷிக்கப்படுவது.

## தீனன்.

இக பர மோக்ஷ வாஞ்சையையுடையவனாய் திரிகாண்ட சமர்த்தியையுடையவன் அதனையொருங்கே பெறுவதற்கதிகாரி யென்பதையும் ஒருகாண்டத்திலும் அதிகாரமில்லாத தன்னுட அத்தியந்ததீனத்துவத்தையும் விவேகித்து அசக்தனாய் சருவரக்ஷகசர்வசக்தனானசர்வேஸ்வரனைநோக்கி முறையிட்டு சம்ரக்ஷக ஸ்வீகாரபூர்வகமாக தன்னுடஆத்மாவைச் சமர்ப்பணம்பண்ணி சுசக்திபிழந்து சதாபரமதயாளத்துக் கெதிர்பார்த்திருப்பவன்.

சருவரக்ஷகம்.— சருவவியாபக சம்பூரணனான சருவேஸ்வரன் சர்வதேச சர்வகால சர்வநாம சர்வரூப சர்வாவஸ்தைகளிலும் தத்தங்கருமபலப்பிரத நீதசாநித்திய சமுதாயசொரூபமாகநின்று சர்வாத்மரக்ஷை பண்ணப்படுவது.

சம்ரக்ஷகம்.— அபாரகருணையினால் தெய்வீக மனுஷீகரூபமாகசந்நிதிபண்ணிக்கொண்டு சதா ஆசிரதவரவுபார்த்திருக்கின்ற வாசுதேவகுருப்பிர்மம்.

## சரணாகதி.

பிதாமுதற் பிதாவினுக்கெல்லாம் பிதாவான ஸ்ரீபரமபிதாவாகியும் புருஷன் முதற் புருஷனுக்கெல்லாம் புருஷனான ஸ்ரீ பரமபுருஷனாகியும் குருமுதற் குருவினுக்கெல்லாம் குருவான ஸ்ரீபரமகுருவாகியும் சுயாதிபத்திய சாஸ்வத சுயம்புவாயுமிருக்கின்ற ஸ்ரீபகவான் வாசுதேவசற்குருவினடிக்கமலங்களில் பிதிர் மாதுர் புத்திர களத்திர பௌத்திர பிதாமக தாசதாச ஆசிரத வாசிரயஆசரிய வாசாரியர் முதலிய பூருவோத்தர சமூகங்களோடு தனுகரணபுவனபோகாதி ஜகசீவபரசகிதமாய் தன்னுட ஆத்மாவைச் சமர்ப்பித்து இதராந்தரவர்ச்சிதனாய் சுசக்திஇழந்து கிடப்பது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



ஹரி. ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

சதுர்த்தம்...மீமாம்சவிதாயகம்.

## மீமாம்சம்.

சகலவேதார்த்தங்களையும்யெடுத்து இனம்இனமாகச்சேர்த்து அத்தியாயவிம்சதிரூபமாகத்தொகுத்து அதனையர்த்தபேதத்தால் பூருவோத்தரமென்றிருவகையாகப்பிரித்து அதிகாரபேதத்தால் கர்மகாண்டம் தேவதாகாண்டம் ஞானகாண்டமென்னத் திரிவித ரூபமாக நிரூபிக்கப்படுவது. பூருவமீமாம்சம்.—அத்தியாயதுவாதச சைமினிசூத்திரத்திற்குச் சபரனென்பவனாற் பாஷியம்பண்ணப் பட்டு அந்தச்சாபரபாஷியத்தையனுசரித்துச்செய்யும் பாட்டப் பிரபாகரமென்னும் மதத்துவயரூபமாக கர்மமேபிர்மமெனச் சாதிக்கப்படுவது. உத்தரமீமாம்சம்.—அத்தியாயாஷ்டக வியாச சூத்திரத்தில் அத்தியாயசதுஷ்டயம் தேவதாகாண்டமாயும் அந்தத்தேவதாகாண்டத்துக்குப்பலபத்திரனென்னும் ஓராசாரியனால் பாஷியம்பண்ணப்பட்டும் அத்தியாயசதுஷ்டயம் ஞான காண்டமாயும் அதற்கு சாங்கர மாத்துவ நீலகண்ட ராமானுஜர் முதலிய ஆசாரியர்களால் பாஷியம் பண்ணப்பட்டும் இவ்விரு வகையாலும் அவாங்மனோகோசரமாய்விளங்கிய பரப்பிர்மதத் துவத்தை நிரூபிக்கப்படுவது.

கருமகாண்டம்.-வேதமானது பிர்ம க்ஷத்திரிய வைசியமென் னும் வர்னத்திரயசிரேஷ்டர்களை அதிகாரியாக்கி நித்திய நைமித் திய காமிய நிஷேத பிராயச்சித்தமென் றைந்துபேதமான கர் மத்தை விதிபூர்வகமாய்ச்சாதிப்பவர்க்கு அதன்பிரயோஜனமான சுவர்க்கபோகத்தைக் கொடுக்கப்படுவது.--ஸ்நான சந்தியாவந்தன ஜெப ஹோம தேவதற்பண வைச்வதேவ அதிதிசத்கார அக்கி னிஷ்டோம நவப்பசுபந்த திரேதாக்கினியாதிகர்மம்: நித்தியம்.— அயனம் விசு சங்கராந்தி புஷ்கல பஞ்சப்பருவ அர்த்தோதய மகோதய ஸ்நான தானாதிகர்மம்: நைமித்தியம்.— அயமேத ராஜ சூய பௌண்டரீகாதியெக்ஞ சோமவாரவிரதாதிகர்மம்: காமி

யம்.— சுவர்னஸ்தேய சுராபான குருதல்பகமனுதி அதிபாதக மகாபாதக உபபாதகாதிகர்மம்: நிஷேதம்.— அனசன பார சாந் தராயண கிரிச்சர ஜலமர்ச்சன வாயுவுபக்ஷண அக்கினிஸ்பரிச ஆலயப்பிரகாச தீர்த்தயாத்திராதிகர்மம்: பிராயச்சித்தம். கர்மப் பிரயோஜனம்.– நிஷேதகர்மத்தைநிவர்த்திக்கில் இடையிடையே வருகின்ற காயிகசம்பந்தமான அபமிருத்துநீங்கும்.—பிராயச்சித் தத்தைச்சாதிக்கில் சஞ்சிதகர்மம் வர்ச்சிக்கும்.—நித்திய நைமித் தியத்தை சரீராந்தபரியந்தஞ்சாதிக்கில் பிராரத்வகர்மம் வர்ச்சிக் கும்.— காமியகர்மத்தைச்சாதிக்கில் சார்வகால நிரவதிக சந் தோஷ சுகானுபவரூப சுவர்க்கப்பிராப்தியைக்கொடுக்கும்.

தேவதாகாண்டம்.– பக்தஜனங்களை அதிகாரியாக்கிபர வியூக விபவ அந்தரியாமிஅர்ச்சாவதாரமென்றைந்துபேதமாகவிளங்கிய ஈஸ்வரசொரூபத்தையாசிரயிப்பித்து சாலோக சாமீப சாரூப சாயு ச்சிய முத்திசதுஷ்டயரூபமாக நித்தியசீவனைக்கொடுத்து நித்திய பூமியிற்சேர்ப்பித்து நித்தியசூரிகளோடுமிருந்து நித்தியகைங்கிரி யம்பண்ணச்செய்வது. அவற்றுள். ஈஸ்வரன்.— அகிலஹேயப் பிரத்தியனீகன் அனந்தன் ஞானனந்தைகசொரூபன் ஞானசக்தி யாதி கல்யாணகுணகணவிபூஷிதன் சருவசிருஷ்டி சருவஸ்திதி சருவசம்மாரகர்த்தா ஆர்த்தோசிக்ஞாசு அர்த்தார்த்தி சுக்ஞானி யென்குகிற சதுர்விதபுருஷர்களுக்கும் ஆசிரயணீயன் தர்மார்த்த காம மோக்ஷாயிக்க பலப்பிரதன் சர்வாத்மப்பிரபு ஸ்ரீமான் சர் வேஸ்வரபரப்பிர்மம்.

ஞானகாண்டம்.— நிருபாதிகமாயும் நிர்விசேஷமாயும் நிரா வரணமாயுமிருக்கின்ற நிர்மலஞானத்தை ஸ்ரீசற்குருகடாக்ஷத் தாற்பெற்று சர்வபந்தவிசர்ச்சனராய் அத்துவித நொய்த விசிஷ்ட சுபாவ சமர்த்தியென்னும் சம்பூரணலீலையினுல்விளை யாடப்படுவது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய்ய குருப்பிர்மணேநம:



ஹரி: ஓம்.
ஸ்ரீபரமசற்குருவேநம:
பஞ்சமம்...வைசேடிகவிதாயகம்.

## வைசேடிகம்.

தத்துவநிரூபணஞ்செய்தற்பொருட்டு பரம பண்டிதரான மகத்துக்கள் வாதப்பிரதிவாதரூபத்தால் பிரமாணநீதமாய் விஸ்தரித்திருக்கின்ற நியாயசாஸ்திரம் அவிற்பன்னரான அஸ்மதாதிகளுக்குப்போதமாம்படி மிகவுஞ்சொலுபமாய் ஒருபிரகாரஞ்சங்கிரகித்து இவ்விடத்தில் வைசேடிகம் நையாயிகமென் றிரண்டு விதாயகமாக யேற்படுத்தி சத்தபதார்த்த சோடசபதார்த்தரூபமாய் நிரூபிக்கப்படுவது.

சத்தபதார்த்தம்.—திரவிய குண கர்ம சாமான்ய விசேஷ சமவாய அபாவ சப்தபதார்த்தநாம். தத்திரதிரவியாணி.— பிருதிவு அப்பு தேயுவு வாயுவு ஆகாயம் காலம் திக்கு ஆத்மா மனும் நவைவா.—ரூப ரச கந்த ஸ்பரிச சங்கியா பரிமாண பிரதக்துவ சம்யோக விபாக பரத்துவாபரத்துவ குருத்துவ திரவத்துவ சிநேக சத்த புத்தி சுக துக்க இச்சாத் துவேஷ பிரயத்தன தர்மாதர்ம சமஸ்காரா சதுர்விம்சதிர் குணா:— உக்ஷேபண அவக்ஷேபணஆகுஞ்சனப் பிரசாரண கமனானி: பஞ்சகர்மாணி.—பரம் அபரம் துவிதம்: சாமான்யம்.— விசேஷம்: அனந்தயேவ.— சமவாயஸ்து: ஏகயேவ. அபாவம்சதுர்விதம்.— பிராகபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னியொன்னியாபாவம் அத்தியந்தாபாவம் இதி:

தத்திரகந்தவதி: பிருதிவு.—அதுநித்தியம் அநித்தியமெனத்துவிதம் நித்தியம்பரமாணுரூபம் அநித்தியம்காரியரூபம் புனர்த்திரிவிதம் சரீரேந்திரியவிஷயபேதம் சரீரம் அஸ்மதாதிநாம் இந்திரியம் கந்தக்கிராகியம் கந்தம் நாசாக்கிரவிருத்தி விஷயம் மிருதுபாஷாணாதி.— சீதஸ்பரிசவதிஅப்பு அதுநித்தியம் அநித்தியமெனத்துவிதம் நித்தியம் பரமாணுரூபம் அநித்தியம் காரியரூபம் புனர்த்திரிவிதம் சரீரேந்திரியவிஷயபேதம் சரீரம் வருண

லோகே இந்திரியம் ரசனக்கிராகியம் ரசனம் சிகுவாக்கிரவிருத்தி விஷயம் சரிதுசமுத்திராதி.— உஷ்ணஸ்பரிசவதுதேயுவு அதுநித்தியம் அநித்தியமெனத்துவிதம் நித்தியம் பரமாணுரூபம் அநித்தியம் காரியரூபம் புனர்த்திரிவிதம் சரீரோந்திரியவிஷயபேதம் சரீரம் ஆதித்தியலோகே இந்திரியம் ரூபக்கிராகியம் சக்ஷுஃகிருஷ்ணதாராக்கிரவிருத்தி விஷயம்சதுர்விதம். பௌம திவ்விய ஔதரிய ஆகரசபேதம். பௌமம்: வன்னியாதி. திவ்வியம்: அபிந்தனவித்யுதாதி. புக்தஸ்யபரிணாமயேது: ஔதரியம். ஆகரசம்: சுவர்ணாதி.— ரூபரகிதஸ்பரிசவான்வாயுவு அதுநித்தியம் அநித்தியமெனத்துவிதம் நித்தியம் பரமாணுரூபம் அநித்தியம் காரியரூபம் புனர்த்திரிவிதம் சரீரோந்திரியவிஷயபேதம் சரீரம் வாயுலோகே இந்திரியம் ஸ்பரிசக்கிராகியம் துவக்கு சர்வசரீரவிருத்தி விஷயம் விருக்ஷாதி கம்பனயேது. சரீராந்தசஞ்சாரிவாயுவு. பிராணன்.— அதுயேகம் உபாதிபேதாது பிராணபாநாதிசமிக்ஞாம்லபதே.— சத்தகுணகம்: ஆகாயம் அதுயேகம் விபுநித்தியம்.— அதீதாதி விவகாரயேது: காலம் அதுயேகம் விபுநித்தியம்.—பிராச்சியாதி விவகாரயேது: திக்கு அதுயேகம் விபுநித்தியம்.— ஞானாதிகரணம்: ஆத்மா அதுபரமாத்மாசிவாத்மாவென்னத்துவிதம். தத்திர ஈஸ்வரசருவக்ஞம்: பரமாத்மா ஏகயேவ. சிவஸ்துபிரதிசரீரபின்னம் விபுநித்தியம்.-சுகாதியுபலப்தி சாதனேந்திரியம்: மனம் அது பிரதியாத்மநியதத்துவாது அனந்தம் பரமாணுரூபம்நித்தியம்.

சக்ஷுர்மாத்திரக்கிராகியோகுணம் ரூபம் அது சுக்ல நீல பீத ரக்த அரித கபிச சித்திரபேதசத்தவிதம். பிருதிவு ஜல தேஜோவிருத்தி. தத்திரப்பிருதிவியாம்: சத்தவிதம். அபாஸ்வர சுக்லம்: ஜலே. பாஸ்வரசுக்லம்: தேயசு.— ரசனக்கிராகியோ குணம் ரசம் அது மதுர ஆமல லவண கடு கஷாய திக்தபேதசட்விதம். பிருதிவு ஜலவிருத்தி. தத்திரப்பிருதிவியாம்: சட்விதம். ஜலேமதுர யேவ.—கிராணக்கிராகியோகுணம்கந்தம் அதுசுரபி அசுரபியெனத்துவிதம். பிருதிவுமாத்திரவிருத்தி.— துவக்கிந்திரியமாத்திரக்கிராகியோகுணம்பரிசம் அதுசீதம் உஷ்ணம் அநுஷ்ணாசீதமெனத்திரிவிதம். பிருதிவு அப்புதேஜோவாயுவிருத்தி. தத்திரசீதம்: ஜலே. உஷ்ணம்: தேயசு. அநுஷ்ணாசீதம்: பிருதிவு

வாயுவு. ரூபாதிசதுஷ்டயம் பிருதிவியாம்பாகஜம் அநித்தியம் அன்னியத்திரா அபாகஜம். நித்தியவநித்தியம் நித்தியகதம் நித்தியம் அநித்தியகதம் அநித்தியம்.— ஏகாதிவிவகாரயேதுசங்கியா நவத்திரவியவிருத்தி. ஏகத்துவாதி பரார்த்தபரியந்தம் ஏகத்துவம் நித்தியகதம் நித்தியம் அநித்தியகதம் அநித்தியம் துவித்துவாதிகம் சருவத்திரா அநித்தியம்.— மானவிவகாரகாரணம்பரிமாணம் நவத்திரவியவிருத்தி. அது அணு மகது தீர்க்கம் இரஸ்வமெனச் சதுர்விதம்.— பிரதக்குவவிவகாரயேதுபிரதக்துவம். சருவத்திரவியவிருத்தி.—சம்யுக்தவிவகாரயேதுசம்யோகம். சருவத்திரவியவிருத்தி.—சம்யோகநாசகோகுணம்விபாகம். சருவத்திரவியவிருத்தி.—பர அபர விவகார சாதாரண காரணம்: பரத்துவாபரத்துவம். அது திக்கிருதம் காலகிருதமெனத்துவிதம். தூரஸ்தேதிக்கிருதம்: பரத்துவம். சமீபஸ்தேதிக்கிருதம்: அபரத்துவம். ஜேஷ்டேகாலகிருதம்:பரத்துவம்.கனிஷ்டேகாலகிருதம்:அபரத்துவம்.-பதனாதிகாரணம்: குருத்துவம். பிருதிவுஜலவிருத்தி.-சந்தனாதிகாரணம்:திரவத்துவம். பிருதிவுஜலதேஜோவிருத்தி. அதுசாம்சித்திகம்நைமித்திகமெனத்துவிதம். சாம்சித்திகம்:ஜலே. நைமித்திகம் பிருதிவுதேயஸோ: அக்கினிசம்யோககிருதாதிதிரவத்துவம் பிருதிவு. தேயஸோ: சுவர்ணாதிகள்.—சூரணாதிபிண்டீபாவஹேதுகுணம் சிநேகம். ஜலமாத்திரவிருத்தி.—சுரோத்திரக்கிராகியோகுணம்சத்தம். ஆகாயமாத்திரவிருத்தி. அதுதொன்யாத்மகம் வர்ணாத்மகமெனத்துவிதம் தொன்யாத்மகம்: பேரியாதிகள். வர்ணாத்மகம்: சமஸ்கிருதபாஷாதிரூபம்.— சருவவிவகாரஹேதுர்ஞானம் புத்தி அது ஸ்மிருதி அனுபவமெனத்துவிதம். சமஸ்காரமாத்திர ஜென்யக்ஞானம்: ஸ்மிருதி.— தற்பின்னக்ஞானம்: அனுபவம்.சருவேஷாம் அனுகூலதயாவேதநீயம்: சுகம்.—பிரதிகூலதயாவேதநீயம்: துக்கம்.—இச்சா: காமம். குரோதோ: துவேஷம்.—கிருதி: பிரயெத்தனம்.-விகிதகர்மஜென்யோ: தர்மம்.-நிஷிதகர்மஜென்யோ: அதர்மம்.—புத்தியாதிஅஷ்டௌ ஆத்துமாமாத்திரகுணம் புத்தி இச்சாப்பிரயத்தனம் நித்தியம் அநித்தியம் நித்தியம்ஈஸ்வரஸ்யஅநித்தியம்சிவஸ்ய. சமஸ்காரம்திரிவிதம்.— வேகோபாவனஸ்திதஸ்தாபகம். வேகம்.- பிருதிவியாதிசதுஷ்டயம் மனோவிருத்தி. அனுபவ

...பஸ்மிருதிபேது: பாவனம் ஆத்மா மாத்திரவிருத்தி.-அன்னி யதாசிருதஸ்ய புனதா தவ்வவஸ்தையாபாதகம்: ஸ்திதஸ்தாபகம் கடாதிபிருதிவுமாத்திரவிருத்தி.

சலனாத்மகம்கர்மம்.— ஊர்த்துவதேச சம்யோகயேது: உக்ஷேபணம்.— அதோதேசசம்யோகயேது: அவக்ஷேபணம்.— சரீரஜென்னிகிருஷ்டயேது: ஆகுஞ்சனம்.— விப்பிரகிருஷ்டசம் யோகயேது: பிரசாரணம்.— அன்னியது: சருவங்கமனம். நித் தியம்யேகம்.— அநேகானுகதம்: சாமான்யம்.— பரம்: சத்தா. அபரம்: திரவியத்துவாதி.-நித்தியத்திரவியவிருத்தயோ வியாவர்த் தகம்: விசேஷம். அது அனந்தயேவ.— நித்தியசம்பந்தம் சம வாயம். அது அயுதசித்தவிருத்தி யயோர்மத்தியே ஏகம் அவி நஸ்யஅவஸ்தம் அபராசிருதம் ஏவாதிஷ்டதே. அயுதசித்தௌ.— அவயவாஅவயவினௌ குணகுணினௌ கிரியாகிரியவந்தௌ சாதி வியக்தி விசேஷம்நித்தியத்திரவியயே.—பிராகபாவம்: உற்பதே பூருவம்.—பிரத்தொம்சாபாவம்:உற்பதேஅனந்தரம். — அன்னி யொன்னியாபாவம்: யதாபடம்கடோநபவதி.— அத்தியந்தாபா வம்: யதாபூதலே கடோநாஸ்தி.

சருவேஷாம் அபிபதார்த்தானாமுக்தேமௌ வாந்தர்ப்பா வாது சப்தைவபதார்த்தம் இதுசித்தம்.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணாய குருப்பிர்மணே நம:



உ

ஹரி: ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

சட்கம்...நையாயிகவிதாயகம்.

---

## நையாயிகம்.

பிரமாண பிரமேய சம்சய பிரயோஜன திருஷ்டாந்த சித் தாந்த அவயவ தற்க நிண்ணய வாத செல்ப விதண்டா ஏதுவா பாச சல சாதி நிக்கிரகஸ்தான சோடசபதார்த்தநிரூபிதம்.

பிரமாணம்.— பிரத்தியக்ஷ அனுமான உபமான சாப்த சதுஷ்டயபேதமாய் சருவஜகத்காரணகர்த்தா ஒன்றுண்டென்று

நிச்சிதப்படுத்துவது. பிரமேயம்.— ஞானத்துக்குவிஷயமாக சரீரேந்திரியார்த்த மனே புத்தி ஆத்ம பிரவர்த்த நிவர்த்த பாவ அபாவ பந்தமோக்ஷ பரிச்சின்ன துவாதசத்தைக்கண்டு அப்பிரமேய அபரிச்சின்னசொரூபமாக விளங்குவது. சம்சயம்.— சற்குருவினது வாக்கியோபதேசத்தை நிஷ்டாபூர்வகமாகச்சாதித்து நம்பிக்கைபிறவாமல் சந்தேகபுத்தியா லிதுவதுவென்னக் கலக்கமுற்றுழல்வது. பிரயோஜனம்.— இந்திரியசட்க இந்திரியவிஷய இந்திரியக்ஞான சுக துக்க சரீரமென்னும் இருபத்தொருபேதமான துக்கநிவர்த்திரூபமோக்ஷம். திருஷ்டாந்தம்.— பருவதவன்னிக்கு மகாநசாதியைப்போல சர்வஜகத்காரணகர்த்தாஉண்டென்பதற்கு ஒருசரீரேந்திரியகாரண ஆத்மாவை யுதாகரணப்படுத்துவது. சித்தாந்தம்.— விவிதவாதிகளினது பரபக்ஷத்தைப்பூருவப்படுத்தி பரமேஸ்வரனேபரதத்துவமென்கின்ற தமதுசித்த பக்ஷத்தைநிரூபிக்கப்படுவது. அவயவம்.— பிரதிக்ஞை ஹேது உதாகரணம் உபநயம் நிகமனமென்னப்பஞ்சவிதம்.- பருவதவன்னியைப்போல பரமாத்மாவொன்றுண்டென்பது: பிரதிக்ஞை.— பிரபஞ்சநாமமே: ஹேது.— மகாநசாதியைப்போல ஒருசரீரேந்திரியகாரணஆத்மாவே: உதாகரணம்.— இத்தைப்போல சருவஜெகத்காரணபரமாத்மா விருக்கின்றுனொன்றெடுத்துக்காட்டுவது: உபநயம்.— நிர்ச்சந்தேகமாகத் தெளிந்திருக்கின்ற பரமாத்மக்ஞானமே: நிகமனம். தற்கம்.— நிரீஸ்வரவாதத்தை அனுசரித்து சதாசகேஸ்வரவாதத்தைப் பிரயோகம்பண்ணுவது. நிண்ணயம்.— பய பக்தி விஸ்வாசத்தினல் அன்புருவானதுவளர்ந்து பரமசுகிர்தம்வெளிப்படுமிடத்துபரமார்த்தநிச்சிதம் பண்ணப்படுவது: வாதம்.— ஆசிரயரக்ஷகார்த்தம் பரஜெயசப்தப்பிரயோகம்பண்ணுவது. செல்ப்பம்.— சுபக்ஷத்தையாதரிக்காமல் பராளுடைய தோஷத்தை உத்காடனம்பண்ணுவது. விதண்டா.— நியாய விரோதிகளினது குதற்கவாதத்தைநிராகரித்துப் பலத்காரமாக சுபக்ஷத்தைஸ்தாபனம்பண்ணுவது.

ஏதுவாபாசம்.— சவ்வியபிசாரம் விருத்தம் சத்பிரதிபக்ஷம் அசுத்தம் பாதிதமென்னப் பஞ்சவிதம் ஆபாசஹேது. சவ்வியபிசாரம்.-பரவஸ்துவைச்சாதிக்குமிடத்து அதற்குரிய சத்காரிமுத்

கியலக்ஷணத்தை எடுத்துக்காட்டாமல் சுக்கிலநீலாதி கௌண லக்ஷணத்தை யுதாகரித்துக்காட்டும் அநேகாந்திகமது. விருத் தம்.— காரியரூபப்பிரபஞ்சத்தைப்போலக் காரணபூதபரமாத்மா நித்தியமென்னச்சாதிக்கின்ற அபாவமேது. சத்பிரதிபக்ஷம்.— காரியரூபப்பிரபஞ்சத்தில் காரணபூதபரமாத்ம சத்தாதிலக்ஷ ணம் எடுத்துச்சாதிக்க காரியரூபமான பிரபஞ்சத்திற்குரிய அநர் தாதிலக்ஷணம் காரணபூதபரமாத்மாவுக் குண்டென்றுசாதிக்கும் வெதிருத்தமேது. அசுத்தம்.— ஆசிரய சொரூப வியாப்தியத்தை மாறுபடச்சாதிக்கின்ற குதற்கமேது. ஆசிரயாசுத்தம்.— சொப் பிரயோஜன தற்புகழ்ச்சியைக் குறித்துழல்கின்ற பாஷண்டசுதந் தரர்களை பரசமர்த்தித பரமகாருண்ய பரமரக்ஷகமென்று ஆசிர யிக்கின்ற அவிவேகமேது. சொரூபாசுத்தம்.— சருவசங்கபரித் தியாகியாய் சருவமும்அநித்தியமெனக்கண்டு விவிதவிஷயத்துக் குப்பயந்து வெருண்டோடிக்குவிந்துகிடக்கின்ற அதிவிரக்தனை நிர்ச்சங்கதுறவியை அவாப்தசமஸ்தகாம ஆசிரதரக்ஷக குணசம் பூரண ஸ்ரீமான்சற்குருவென்று சாதிக்கின்ற பரிகாசமேது. வியாப் பியத்துவாசுத்தம்.— காரியரூபப்பிரபஞ்ச வியாபகமில்லாவிடத் துக் காரணபூதபரமாத்மாவுக்கு அபாவஞ்சாதிக்கின்ற அஞ்ஞான மேது. பாதிதம்.— சற்குணசம்பன்னனை புருஷோத்தமனிடத் தில் விரோதபொறாமையால் அசற்குண அபரிசுத்தனென்னச் சாதிக்கில் ததபாவசற்குணத்தைப் புத்திபூர்வகமாக விவேக பூரணனலறியப்படுவது.

சலம்.— இதரபதார்த்தத்தைப் பிரகடனம்பண்ணி அபி மதபதார்த்தத்தைத் தோஷமாகஉத்காடனம்பண்ணுவது. சாதி.— வக்தாவினது அபிமதத்தையறியாமல் பிரதியுத்தரஞ்சொல்லப் படுவது. நிக்கிரகஸ்தானம்.— காலதேச பாத்திரசகாயாதிகளைப் பரீக்ஷிக்காமல் அவிவேகவாதத்தைப்பண்ணி அதனால்தாழ்த்தப் பட்டிருக்கின்ற சுவாஅவமானம்.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



ஹரி: ஓம்.
ஸ்ரீபரமசற்குருவேநம:
சுத்தமம்...யோகவிதாயகம்.

## யோகம்.

சித்தவிருத்திநிரோதனம் அநுபலப்பிராப்தியிலொன்றாகி யும் நிஷ்டாபேதத்தாற் சாலம்ப நிராலம்ப சாங்கிய சாங்கமென் னப் பல்வாறாயும்விதிக்கப்படுவது. அவற்றுள்.— சாலம்பயோகம்.- சகேஸ்வரசொரூபத்தையவலம்பித்து சத்தாதிவிஷயங்களிற்செல் லாமல் சித்தவியாபாரத்தைத் தடைசெய்யப்படுவது. நிராலம்ப யோகம்.— விவிதவிஷயங்களிற்செல்லாதபடிக்கி விருத்திநிரோ தனமாக்கிய சித்தத்தை வேறொருவஸ்துவை அவலம்பிக்காமல் விமலாகாரமாய்த் தெளியச்செய்வது. சாங்கியயோகம்.— பிர கிருதிபுருஷவிவேக மைத்திரியாதிகுணவிசிஷ்டனாய் அவித்தை யாஸ்மித ராகத்துவேஷ அபினிவேஷாதி பஞ்சக்கிலேசம்வர்ச் சித்து நான்அசங்கன் சின்மாத்திரனென்னும் தீர்க்கதிடவிரதத் தாற்சாதிக்கப்படுவது.

சாங்கயோகம்.— இயம நியம ஆசனப் பிராணாயாம பிரத்தி யாகார தாரணா தியான சமாதியென்னும் அஷ்டபேதமாய்ச் சாதிக்கப்படுவது. அவற்றுள்.— அஹிம்சா சத்திய அஸ்தேய பிர்மசரிய கருணா அவஞ்சக க்ஷம தைரிய ஆகாரசௌசாதியே: இயமம்.— தப சந்தோஷ யதார்த்த தான பூசா சிரவண லஜ்ஜா மதி ஜெப விரதாதியே: நியமம்.— சௌஸ்திக கோமுக பத்ம வீர சிம்ம பத்திர முக்தா மயூர சுகாதியே: ஆசனம்.— பிர்மசா க்ஷாத்காரார்த்தம் நாடிகளின்று உற்பவ சிரேஷ்ட ஸ்தான மார் க்க சோதனா சுத்தியால் பிராணனைத்தீர்க்கம்பண்ணிக்கொள்வது: பிராணாயாமம்.—நாபிமூலத்திலுற்பவித்து அதோஊர்த்துவப்பிர தேசங்களிற் சக்கராகிருதியாகவளைந்து வாயுவுசஞ்சாரயோக்கிய தையாய் எழுபத்திராயிரம் நாடிகளாகப்பிரிந்து சருவாவஸ்தை யிலும் பரவிநிற்பது: நாடியுற்பவம்.— சங்கினி குரு காந்தாரி

அலம்புஷா புருஷ அத்தி சிங்குவா வாம பிங்கலா சுழிமுனை: நாடி-சிரேஷ்டம்.-மூல மூர்த்தன்ய நாபி கண்ட ரசன நேத்திர சுரோத்திர நாசிகையே: நாடிஸ்தானம்.—ஐக்கியபிர்மீக தூமாதி அர்ச்சராதியே: நாடிமார்க்கம்.—முக்கியன் வைரம்பன் மகாப்பிராணன் அந்தரியாமியென்கின்ற சிரேஷ்டநாடிகளைவிவேகித்து நாடிமத்தியகதனை பரமாத்மதேவையுணரப்படுவது: நாடிசோதனை.—ரேசகபூரக மிசிரகும்பக சாதனையாற் பிராணவாயுவைஸ்தம்பித்து கேவலகும்பகமாத்திரமாயிருப்பது:நாடிசுத்தி. - இந்திரியங்களை சத்தாதிவிஷயமார்க்கத்திற்செல்லாது நிக்கிரகிப்பதே: பிரத்தியாகாரம்.-சித்தவியாபாரத்தைத்தவிர்த்து நிவாததீபம்போல லக்ஷியத்தில் அசஞ்சல சித்தனாயிருப்பது:தாரணை.— ஆதார ஆதேய விவேகியாய் மூலாதார சுவாதிஷ்டான மணிபூரக அநாகத விசுத்தி ஆக்ஞா சடாதாரங்களையுணர்ந்து அதற்குரியதெய்வதங்களை அர்ச்சிப்பதே: தியானம்.— அக்கினிபீஜாக்ஷரத்தால் மூலாக்கினியையெழுப்பி நாடிவலயங்களைப்பேதித்து ஆதாராந்த சிரோமத்தியகத சகஸ்திரதளகமல கேசராக்கிர ஆதேய சந்திராமிர்தத்திற்படிந்திருப்பது: சமாதி.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



உ

ஹரி: ஓம்

ஸ்ரீபரமசற்குருவேநம:

அஷ்டமம்...வைஷ்ணவவிதாயகம்.



## வைஷ்ணவம்.

இரண்யகர்ப விராமானுஜீய தத்துவவாத சங்கராசாரிய யாதவ மாயாவாதமென்கின்ற சட்சமயநிருபிதமாயும் சகலவேதவேதாந்தப்பொருளாயும் நாரங்கள்தோறும் வீற்றிருக்கின்ற சர்வாதாரக்கடவுளாயும் அவாங்மனோகோசரமாயுமிருக்கின்ற ஸ்ரீமன் நாராயணபரப்பிர்மத்தை பாஞ்சராத்திர வைகானசமென்னும் ஆகமத்தையனுசரித்து அந்நாராயணபரப்பிர்மமே விஷ்ணுதேவாகவும் அந்தவிஷ்ணுதேவே பரதத்துவமாகவும் நிரூபிக்கப்படுவது.

இரண்யகற்பவைஷ்ணவம்.—ஓரதிகாரி சர்வலோகங்களையும் அடைதற்கேதுவாய சாதனங்களை கிரியாபூமியிற்சாதித்து அதனது சாத்தியமான புவனபோகங்களைக் கிரமங்கிரமமாகவனுபவித்துப் புவன அத்துவாவிதிப்படி சத்தியலோகத்தையடைந்து கற்போதய பிரளயகற்பவாசியாய் சொரூபத்திற்கு ஆனிவராமல் பிர்மாவினால் ரக்ஷிக்கப்பட்டுப் பிரளயாந்தத்தில் பிர்மாவினோடு மகாவைகுந்தஞ்சேர்ந்து சருவசிரேஷ்டனாகிய ஈஸ்வரனுக்குத் ததானுரூபமாகத் தாசபூதக்கிரிகையைச் செய்துகொண்டிருப்பதே முத்தியென்பது.

இராமானுஜீயவைஷ்ணவம்.—அத்துவேஷி அனுகூலி மந்திரபாடி நாமதாரி சக்கரதாரி வைஷ்ணவன் ஸ்ரீவைஷ்ணவன் பிரபன்னன் ஏகாந்திபரமயேகாந்தி யென்னும் பத்துப்பருவமுடைய அதிகாரிகளாய் பிரவர்த்தி நிவர்த்தியென்னும் நிஷ்டாபேதத்தாற்றுவிதமாயும் பலப்பிராப்தியிலேகமாயும் அத்துவித தொய்த சம்பந்தமான விசிஷ்டாத்துவிதபக்ஷத்தை நிரூபிக்கப்படுவது. அவற்றுள்.—பகவத்பாகவதவிஷயங்களில்த் துவேஷமில்லாமலிருப்பவன்: அத்துவேஷி.—பகவத்பாகவத விஷயங்களுக்கு வேண்டும் உபகரணசாதக சகாயபூதையாயிருப்பவன்: அனுகூலி. — அற்பஞதிகளைப்பண்ணுமல் இச்சாரூபமாக மந்திரசமூகங்களை யுச்சரிப்பவன்: மந்திரபாடி.—திருமண் கோபி சந்தனமுதலிய ஊர்த்துவபுண்டரத்தால் வைஷ்ணவசின்னத்தை வெளிப்படையாக யாவருக்குந்தோற்றும்படி பாகியரூபத்திற்றரித்துக்காட்டுபவன்: நாமதாரி.—சந்தன தப்த புஷ்பாதிகளால் சக்கராங்கிதம் பண்ணிக்கொண்டு சிரேஷ்டமந்திரங்களைச் செபிக்கப்படுபவன்: சக்கரதாரி.-ஸ்ரீவிஷ்ணுசம்பந்தம்பெற்று நிவர்த்தி பிரவர்த்திவிதிகளை நிஷ்டாபூர்வகமாகச் சாதிக்கப்படுபவன்: வைஷ்ணவன்.- வேதபாரகனாய் நிர்ப்பரத்துவ அநுசந்தானமுடன் திருமந்திரார்த்த காலக்ஷேபம் பண்ணிக்கொண்டிருப்பவன்: ஸ்ரீவைஷ்ணவன்.-சுதந்தரரூபமான சிவச்சேஷ்டைகளற்று பரதந்திரனாய் பகவத்செயலாலே போஷிக்கப்படுபவன்: பிரபன்னன்.- சர்வப்பிராணிகளினிடமாக வாசுதேவையும் வாசுதேவினிடமாகச்சருவப்பிராணிகளையும் பிறிவரக்காண்பவன்;ஏகாந்தி.-சர்வமும் பகவானுடையசொரூபமாகத்

தெளிந்து நிர்ச்சிந்தனுயுன்னுதலற்றிருப்பவன்: பரமயேகாந்தி.

தத்துவவாதவைஷ்ணவம். — அனந்தஜென்ம புண்ணியபரிபாகத்தால் விப்பிரபுருஷனுகவவதரித்து விப்பிரகர்மத்தைச்சாதித்து விப்பிரயோக பிர்மக்ஞானநிஷ்டனுய் விப்பிரோத்தமர்களையாராதித்து விப்பிரசிரேஷ்ட தெய்வீககுருவினுல் தனக்குரிய நிசசொரூபத்தையுபதேசிக்கப்பெற்று சொரூபக்ஞான நிஷ்டாதிர்க்கத்தினுல் இதராந்தரங்கள்வர்ச்சித்து அர்ச்சராதிமார்க்க விரஜாஸ்தானமகிமையால் அவித்தையாகட்டடம் உடைபட்டு அப்பிராகிருத சதுர்ப்புஜாஸ்த தேஜோமயமாகிய தனதுநிசசொரூபத்தைப்பெற்று விரஜாதீரத்திலெழுந்தருளியிருக்கும் அமானவகுருவினது கரஸ்பரிசாதி சமஸ்காரபூர்வகமாக அனுமதியைப்பெற்று அப்பிராகிருத நகரத்திற் பிரவேசித்து சாலோக சாமீப சாரூப சாயுச்சிய முத்திசதுஷ்டயரூபத்தை அதிகாரானுரூபமாகவடையப்படுவது.

சங்கராசாரியவைஷ்ணவம். — சுத்தாத்துவித சுயம்பிரகாச யதார்த்த ஆத்மக்ஞான மோக்ஷகைவல்ய திவ்வியசாக்ஷாத்காரமாகவிளங்கும் நாராயண பரப்பிர்மமெதுவோ அதுவே நமது சொரூபமென்ன நிரூபிக்கப்படுவது.

யாதவவைஷ்ணவம்.—சர்வாத்மப்பிரபுவாய் பரமபுருஷனிலையைச்சாதித்து நிரோதுகடாக்ஷத்தினுற்றன்னையாசிரயமானவர்கள் யாவரானுலும் அவர்களே அதிகாரிகளெனக்கைக்கொண்டு பரமசுகிர்தத்தை அகாரணமாக அவர்களுக்கு அனுக்கிரகம்பண்ணி பரமபதவாழ்விற்சேர்க்கப்படும் வாசுதேவகுருப்பிர்மமே பரதத்துவமென்று சாதிக்கப்படுவது.

மாயாவாதவைஷ்ணவம்.-சுத்திகாரசித ககனுரவிந்தம்போலத் தோற்றுமாத்திரமாகவிருக்கின்ற மாயாப்பிரபஞ்சத்தை மித்தையாய்க்கண்டு நிருபாதிகசொரூபமாய் விளங்கிய நாராயணனே பரப்பிர்மமென்று நிஷ்டாரூபமாய்ச் சாதித்து அதுவே நமதுசொரூபமென் றனுபவரூபமாயுணரப்படுவது.

நாராயணபரப்பிர்மம். — சங்கருஷணப் பிரத்தியும்ந அநிருத்த வாசுதேவ புருஷோத்தமமென்னும் வியூகபஞ்சக கர்த்தாவாகவிருந்து சர்வரக்ஷகளையும் பண்ணப்படுவது. ருத்திர அங்

கினி அந்தகாதிகளுக் கந்தரியாமியாகநின்று பிரபஞ்சத்தைசம்ஹரிக்கை: சங்கருஷணவியூகம்.— பிர்மாவுக்கும் பிரஜாபதிகளுக்கும் அந்தரியாமியாகநின்று பிரபஞ்சசிருஷ்டிபண்ணுவது: பிரத்தியும்நாவியூகம்.— விஷ்ணுவாதி அவதாரரூபங்களுக்கு அந்தரியாமியாகநின்று பிரபஞ்சரக்ஷை பண்ணுவது: அநிருத்தவியூகம்.—உபகார ரக்ஷக சிக்ஷைமோக்ஷங்களையேற்படுத்தி சருவாத்மாக்களுக்கும் அந்தரியாமியாகநின்று சருவரக்ஷணம் பண்ணுவது: வாசுதேவவியூகம்.— அசித்தைப்பரிணமித்துச் சேதனர்களுக்குச் சரீரேந்திரியாதிகளைக்கொடுத்து ஞானவிகாசத்தைப் பண்ணுவது: உபகாரம்.— மனுவாதிமுகேன சாஸ்திரங்களைப் பிரவர்த்திப்பித்து தத்தம்வரைகடவாது நிறுத்தி நல்வழிகாட்டிப் பயிருக்குநீர்நிலைபோலேஅனுகூலமாகப்பிரவேசித்துநின்று சருவரக்ஷைகளையும் பண்ணுவது: ரக்ஷகம்.- அவிநீதனுனபுத்திரனைப் பிதாவிலங்கிட்டு வைக்குமாப்போலே விஷயாந்தரங்களிலே கைவளருகிறகரணங்களைக் குலைத்திட்டுவைக்கை: சிக்ஷை.— அங்குரபல்லவ பக்குவ பலமென்னும் அதிகாரதிசாபருவங்களைத்தெரிந்து ஸ்ரீசற்குருசொரூபமாய் வெளியிட்டு சரண்யருசியைப்பிறப்பித்து முத்திபூமியிற்சேர்த்துவைக்கை: மோக்ஷம்.—மாயாவிகாரமான ரூபவுருபத்தைக்கடந்து அவாங்மனோகோசரமாயிருக்கும் நம் ஆனந்தசொரூபத்தைத் தெளிந்து சதா அதனிடத்து நாட்டம் வைத்திருப்பவர்களுக்குப் பவபந்தரோகத்தைநிவர்த்தித்துஅபேக்ஷித்தபோகத்தைக்கொடுக்கப்படுவது: புருஷோத்தமவியூகம்.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



உ

ஹரி: ஓம்

ஸ்ரீபரமசற்குருவேநம:

நவமம்...சைவசித்தாந்தவிதாயகம்.



## சைவசித்தாந்தம்.

உத்தரகுருவாய்நின்று பூருவோத்தரமென்னும் இருவகையாகிய வேதார்த்தங்களை வெளியிட்டருளியஸ்ரீபகவான்தெக்ஷண

குருவாய்நின்று சனகாதிகளுக்குணர்த்திய சிவாகமப்பொருளை இவ்விடத்திலொருபிரகாரம் சொல்லத்தொடங்கி தெக்ஷிணைத் தரவிரோதிகளான பாஷண்டதுறவிகளை முதலில்த்தானே ஏழு பாசுரங்களால் நிரசித்து சைவசித்தாந்தத்தை நிருபிக்கப்படுவது.

பாஷண்டம்.— இல்லொழுக்கமும்விட்டு துறவொழுக்கமுங் கெட்டு பதிதராய் வேத விரத விதேய காபாலிகாதி வரம்பிலுங் கட்டுப்படாமல் மூர்க்கசிகாமணிகளாய் அசுத்தவகங்கரத்தை அபிவிர்த்திபண்ணி முடிவில் ஆசுரசம்பத்தையடையப்படுவது.

வேதவரம்பு.—யசன யாசன அத்தியயன அத்தியாபக தான பிரதிக்கிரகமென்கின்ற சட்கர்மசம்யுக்தனான ஒருவிப்பிரனுக்கு அர்த்ததாரசங்கங்களில்விரக்தியுண்டாகி காவிகாம்பர தண்டுகமண் டலாதியை விதிபூர்வகமாகப்பெற்று பக்ஷதக்ஷ குடீசகமென்கின்ற சந்நியாசவிரதத்தைச் சரீரமுள்ளபரியந்தஞ் சாதிக்கப்படுவது.

விரதவரம்பு.—பிராம்மணாதி சண்டாளபரியந்தம் அவரவர்க் காக ஏற்பட்டிருக்கின்ற குலாசாரதர்மத்தை விட்டிடாமல் சிவா கமவிதிப்படி சரிதாதிஞானந்தமான தீக்ஷையைக் கிரமமாகப் பெற்று விபூதிருத்திராக்ஷ தாரணமுடையனாய் சைவநெறி தண்ட நெறி பக்திநெறிக்கி மாறுபடாத சற்சரிதமுடையனாய் தியான ஜெப யோக சமாதியினால் சிவசிவோகத்தைத்தெளிந்து ஆசிர யிப்பவர்க்குப் பரம்பரையாய் சிவமேபரதத்துவமென் றனுக்கிர கம்பண்ணிவருவது. அவற்றுள். சைவநெறி.—பிராம்மணாதிசண் டாள பரியந்தம்அவரவர்க்காகஏற்பட்டிருக்கின்ற குலாசாரதர்மத் தையனுசரித்து சிவக்ஞானதேசிகரது திருவடிசம்பந்தம்பெற்று வித்தியாபாத கிரியாபாதவிதிப்படி விபூதிருத்திராக்ஷ காஷாய இஷ்டலிங்க பஞ்சாக்ஷர பஞ்சமுத்திரா விஸ்வாசபூசிதமுடைய னாய் சமையாதி அபிஷேகாந்தமான தீக்ஷையைக்கிரமமாகப் பெற்று சிவசீவஐக்கியத்தைத்தெளியப்படுவது. தண்டநெறி.— வேதவிகிதமான குலாசாரதர்மத்தை விட்டு மாயாகர்ம வநுஷ்டித ராகவிருக்கின்ற பாஷண்டமூர்த்திகள் பூசித சேவித யாசகயோ ஜன உபசாராதிகளையபேக்ஷித்து விபூதி ருத்திராக்ஷ காஷாயாதி சிவவேடத்தை சைவநெறிக்கிமாறுபாடாகத்தரித்து பிரபஞ்சத் தைமருட்டிப்பிழைக்கின்ற பரமபாவிகளான சிவத்துரோகிகளைச்

சிக்ஷிக்கப்படுவது. பக்திநெறி. — பாத்திராபாத்திரங்களைப் பரீக்ஷிக்காமல் காஷாயாதி சிவவேடத்தை தேவ மனுஷ நரக திரியக்காதி எந்தச்சீவரிடத்திலப் பார்த்தாலும் சுவாகங்கரத்தைவிட்டு அவற்றைச் சிவசொரூபமாகப்பாவித்து தத்தம்விதிபூர்வகமாகப் பூசிக்கப்படுவது.

விதேயவரம்பு. — காணியாக்ஷியைப்பெற்று கிராமஊழியம் ஆலயப்பணிவிடை தண்ணீர்ப்பந்தல் நந்தனகைங்கிரியம் சங்குசேகண்டிவேலை இத்தியாதிபணியை கிராமவரம்பில் கட்டுப்பட்டுச் செய்தும் சவசரீரத்தைத் தவசரீரமாயலங்கரித்து பிருதிவுசமஸ்காரவிதிப்படி சமாதியில்வைத்தும் உத்தரக்கிரிகையை நடத்தப்படுவது.

காபாலிகவரம்பு.—சிருத்தொண்ட சீராளவடிகளைரக்ஷிக்கும்பொருட்டு பிக்ஷாசமூகங்களோடு பிக்ஷாவேஷத்தைத்தரித்து வைரவமூர்த்தமாயெழுந்தருளிய சிவபெருமான் திருச்சித்தப்படி சித்தர்கள் பத்தர்கள் முதலானசிவகணங்கள் ஊமை செவிடு குருடு சப்பாணி லங்கோட்டி நிர்மாணி கௌபீணி காஷாயி தப்புக்கொட்டி சங்குஊதி மரமாட்டி மணியாட்டி பாம்பாட்டி குரங்காட்டி கல்லுளிச்சித்தன் கவுத்துச்சித்தன் அகப்பேய்ச்சித்தன் பித்தன் பேயன்சோகிசங்கமன் உயிர்பிரித்தொடுக்குவோன்உடற்கூறுபடிப்போன் அங்கயீனன் இழிகுலன் அநுசாரன் முதலான பிக்ஷாவேடத்தைத்தரித்து உதரநிமித்தியம்வெகுகிருதவேஷம் யாவனானாலும் பசியனேசோத்துக்கதிகாரியென்பதை உலகத்தவர்க்குவெளிப்படையாய்க்காட்டுவது.

பாசுரம்.—வாமபாகத்தின்வர்க்கமோரிரண்டும் வகுத்தனன் வடநிழற்பரமன், காமனதுருவைமாத்தியும்ரதிக்கிக் கருதியதளித்து மேலறத்தைப், பூமகற்குரைத்தும் நாரதர்க்கந்நோர் புகன்றதைச்சைவர்போற்காட்டும்,பாமரத்துரோகப்பாஷண்டம் விலக்கிப் பகுத்துமேல்விரித்துரைத்திடுவாம். (க)

சொல்லிஞேன்கண்முன்னிகபரம்விடுத்துச் சுயமதாய்விளங்குவோன்றுறவி, இல்லிஞேன் கருமமியற்றுபேதத்தா லிகபர மோக்ஷமேலடைவன், வல்லியோனருளால்மூன்றுமோர்கணத்

தில் மகிழ்வொடுமடைபவன்சிரேஷ்டன், புல்லியோனசையாற்
பிதற்றுபாஷண்டப் பிரபுவாய் நரகினுக்கெழுவன். (௨)

சூரனீயொருவன்றுறவினேனின்னைச் சூள்ந்துளோரனைவருந்
துறவோ, ஊருதோறிறந்துதானியதனங்களொருப்படச்சேர்ப்
பதோகிஷ்டை, பேருறப்பழித்துப்பின்புபல்காட்டிப் பிழைப்
பதோமகவைராகம், பாரிலிப்பெரியபாஷண்டத்துறவு பகருநூ
லெதுவதைப்பகர்வாய். (௩)

சங்கமன்காவியம்பரஞ்சிரமேற்சைவர்களருள்வழிபுடுக்கும்,
துங்கணீடணையைத்துறப்பதற்கணியும் சொற்றிடுஞ்சுத்தசைவ
த்தில், எங்கணுமயக்கியைம்புலன்வளர்க்க வில்லர்கட்குரிய நூல்
பிதற்ற, உங்களைத்துறவென்றுணர்த்துநூலெதுவோ உரைத்தி
டும் பாஷண்டப்பெரியோய். (௪)

அறத்துவமெனக்கேதறிவுயான்செய்வ தனைத்துமேலற
மெனவரிட்டன், திரத்துவம்பேசிவித்தினுக்குரிய செயலறிகுண
மிலாமூர்க்கப், பரத்தையரிருமாந்தறத்துவம்நழுவிப் பதிதராயிக
பரமோக்ஷ, சிரத்தையுமிழந்தவரக்கரைச்சிவமே நீனரகழுந்து
தல்திண்ணம். (௫)

வெழுப்பெலாம்வெண்ணீர் வேம்பெலாமிலிங்கம் வேடநற்
சிவமெனப்பணிந்து, பழிப்பிலாக்கதிசேர்பத்தர்நாலோதிபகட்டி
யூருர்தொருமயக்கிக்,கழுக்களாய்க்கோதிப்பொருள்பகரிக்கும் கட
டகத்துறவினையரசன்,வழக்கினுலொருக்கியொழுக்கநூல்விரித்தல்
வழக்கமென்றுரைத்தனர்தெளிந்தோர். (௬)

இன்னபாஷண்டவிருளரைச்சிதைத்த லிலதவர்க்குன்னிநா
யிருத்தல், அன்னவர்கலக்கிலனுதபித்திடுத லருள்வழியடியர்பா
லடியை, முன்னிலையாக்கியஷ்டசேவிதராய் முத்திலோகத்திருப்
பவர்க்குச், சொன்னதோர்நெறியையருள்நிலைதோன்றுத் துரி
தற்குச்சொற்றிடலாகா. (௭)

## சைவசித்தாந்தம்.

அவாங்மனோகோசரமாய்விளங்கியஅதீதசிவத்தைவாமபைரவ
காளாமுக மாவிரத பாசுபத சைவமென்னும் சட்சமய நிரூபித
மாயும் ஆகம வேத தாந்திரீக வைதீக வாதப்பிரதிவாதரூபத்தால்
ஆதி அநாதி அவாந்தர அத்துவா பேதவபேத அனுத்துவ மகத்

துவ சகள நிஷ்கள சகுண நிற்குண பர வபர சதுர்ப்பாத சுத்த சுபாவமென்னச் சைவம் அநேகபேதவாத சாத்தியமாயும் நிரு பிக்கப்படுவது.

வாமம்.—திருமாணஸ்ரீயைப்பீடமேற்றி அவளைச்சத்திரூப மாகவரித்து மதுமாம்சாதிகளாலாராதித்து ஊட்டிஉண்டுமிழ்ந்த உச்சிஷ்டசேஷங்களை சாக்தேயசங்கமத்துக்கு வினியோகம் பண்ணி கஞ்சாக் கள் அரக்கு அபின்முதலாகிய லகிரிபதார்த்தங் களைப் புசித்து ஸ்ரீபுருஷவபேத வெறியாவேச திருமாணநிர்த்தன ராய்ப் பராசத்தியே பரதத்துவமெனநிருபிக்கப்படுவது. வைர வம்.—அஸ்திதாரண காவிகாம்பர நரகபால பிக்ஷாடன பயங்கர வேஷ முடையவராய் ஸ்மசானபூமியிற்பிரவேசித்து குண்டமண் டலவேதிகையிட்டு வைரவசிவத்தைவரித்துக் கபாலவோட்டில் மதுமாம்சாதிகளைப்பெய்து வைரவவோமத்துக்காகுதிபண்ணி நர டெலிகொடுத்து நரமாம்சாதி அசுத்தபோகங்களோடு பூசித்தரு ந்திஅதற்குரிய இஷ்டசித்தியைப்பெற்று மதாவேஷலகிரி உன்மத் தராய் அகாரணமாகத்துணங்கையிட்டுச் சிரித்துக் குதித்தானந் தித்து வைரவசிவமே பரதத்துவமெனநிருபிக்கப்படுவது. காளா முகம்.—ஜெனன மரண ருது சாதி உச்சிஷ்டமென்னும் பஞ்சசூத விசர்ச்சனராய் அங்க லிங்க காஷாயதாரண குடும்பசகித பிக்ஷா டனராய் அதாரணநிந்தித ஆலய அசேவிதராய் வீராகமவிதிப்படி குருலிங்கசங்கம பூசிதராய் வீரபத்திரசிவத்தை யாராதித்து வீர பத்திரசிவமே பரதத்துவமென நிருபிக்கப்படுவது. மாவிரதம்.— விபூதிருத்திராக்ஷ சித்திப்பிரதகாஷாயதாரண சித்தயோகசாதித் தியரான கௌமாரசிவத்தைப் பிரார்த்தனைரூபமாக வரித்து அதற்குரிய தீர்க்கவிரதத்தைச்சாதித்து அபேக்ஷிதசித்தியைப் பெற்றுக்கொண்டு குமாரதேவனையே பரதத்துவமென நிருபிக்கப் படுவது. பாசுபதம்.-பதி பசு பாசமென்கின்ற திரிபதார்த்தவிவே கியாய் மூலகணேசசிவத்தையாராதித்து யோகநிர்க்கத்தால் பாச படலத்தை யூடுருவிக்கொண்டு முத்திகணபதியென்னும் பசுபதி சிவத்திலக்கியப்படுத்தி கணேசசிவமே பரதத்துவமெனநிருபிக் கப் படுவது.

சைவம்.—சிவாகமங்களின் நாமகம் உற்பவம் பேதம் விஸ்

தாரம் தீக்ஷை பிரயோஜனமென்னும் சட்பிரகாரமாகநிருபிக்கப் படுவது. நாமகம்.—காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் அஜிதம் தீப்தம் சூக்ஷமம் சகஸ்திரம் அம்சமான் சுப்பிரபேதம் விஜயம் நிஸ்வாசம் சுவாயம்பு அனலம் வீரம் ரௌரவம் விமலம் மகுடம் சந்திரக்ஞானம் விம்பம் புரோர்க்கீதம் லளிதம் சித்தம் சந்தான சமிக்ஞை சாருவோக்தம் பரமேஸ்வரம் கிரணம் வாதுளமென்ன அஷ்ட விம்சதிபேதமாயிருப்பது. உற்பவம்.-காமிகாதிஐந்தாகமம் சத்தியோஜாதமுகத்திலும் தீப்தாதிஐந்தாகமம் வாமதேவமுகத் திலும் விஜயாதிஐந்தாகமம் அகோரமுகத்திலும் ரௌரவாதி ஐந்தாகமம் தற்புருஷமுகத்திலும் புரோர்க்கீதாதியெட்டாகமம் ஈசானமுகத்திலுமிருந்து வெளியிட்டருள்வது. பேதம்.—காமி காதிபூர்வதசகம் சிவபேதத்தையும் விஜயாதிதசாபரதசகம் சிவ ருத்திரபேதத்தையும் புரோர்க்கீதாதி ததாபராஷ்டகம் சிவருத் திர ஆத்மபேதத்தையும் யதாப்பிரகாரம் அதன் அர்த்தசாரங் களைக் குரூடீகரித்து சிவக்ஞானதேசிகராலுணர்த்தப்படுவது. விஸ்தாரம்.—அஷ்டாவிம்சதி ஆகமங்களையும் ஆசிரயிப்பவர்க்குப் போதமாம்படி நாரசிங்கமென்னும் மிருகேந்திராகமமுதல் விஸ்வ வான்மகம் முடிவாய்விளங்கிய இருநூற்றேழு உபாகமங்களாக விரித்து மூலாகமப்பொருளைத்துலக்கி பூர்வாசாரியர்களால் சொல் லப்பட்டது.

தீக்ஷை.—சமய விசேஷ நிருவாண சத்பீஜ அபிஷேகமென் றைந்துபேதமாய் ஸ்ரீசற்குரு ஆசிரயிப்பவரின் அதிகாரதெசா பருவங்களைத் தெரிந்துபதேசிப்பது. அவற்றுள். சமயதீக்ஷை.— பஞ்சபஞ்சஉஷத்காலத்தெழுந்து சிவாலயம்விளக்குதல் நயிஷ்டிக ஞக நந்தனவனத்திற்சென்று சுகந்தபுஷ்பங்களையெடுத்தல் மாலை கட்டி ஈசன்றிருமேனிக்கணிசெய்தல் தேவார திருவாசக திரு விசைப்பா சிவபுராணாதி பக்தவிலாசங்களைக் குருமுகமாகப் பாரா யணஞ்செய்தல் வில்வாதி புஷ்பச்செடிகள்வைத்துப் பயிர்செய் தல் விபூதிருத்திராக்ஷ காஷாய லிங்க பஞ்சாக்ஷர மென்னும் பஞ்ச முத்திரையணிந்த சிவனடியாரை சிவமாகப்பாவித்து வழிபாடு செய்தல் சிவாலயம் விஷ்ணுவாலயம் பிர்மாலயம் சத்திரம் மடம் இவைகளை நூதனமாகச்செய்தல் க்ஷீரணமானதை உத்தாரணஞ்

செய்தல் கங்கையாதிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தல் சிவாலயங்களிற் காலந்தவராது தெரிசித்துப் பிரதக்ஷணமுதலானபணிகளைச்செய்தல் இந்தக்குணமுடைய சிஷ்யனுக்கு குணாதிகனாகவிருக்கின்ற சமயாசாரியன் பஞ்சாக்ஷரத்தை ஸ்தூலமாகவுபதேசிப்பன். அதைச்சற்சரிதையுடையனாகவிருந்து சதாகாலமும் ஜெபித்துக்கொண்டிருப்பது.

விசேஷதீக்ஷை. — சந்தனம் புஷ்பம் தூபம் தீபம் நெய்வேத்தியம் கோஜலம் கோமயம் பால் தயிர் நெய் வாழைப்பழம் எலுமிச்சம்பழம் நார்த்தம்பழம் நெல்லிப்பருப்பு இளநீரு மற்றும் உபகரணபுஷ்பாதிகளுஞ்சேர்த்து ஆத்மசுத்தி பூதசுத்தி திரவியசுத்தி மந்திரசுத்தி லிங்கசுத்தியென்னும் பஞ்சசுத்திகளைச்செய்து சூரியநமஸ்கார சூரியபூசைசெய்து தெரிசனார்க்கியம் சாமான்யார்க்கியம் விசேஷார்க்கியம்வைத்து சிவத்தியானஞ்செய்து பஞ்சப்பிர்ம சடங்க பஞ்சாக்ஷர மந்திரஉச்சாடனத்தால் ஆவாகன ஸ்தாபன சந்நிதான சந்நிரோதன சகளீகரண பரமீகரண அவகுண்டன தேனுமுத்திரை யோனிமுத்திரை அமுர்தமுத்திரை லிங்கமுத்திரையாதியாக திக்குபந்தனாதி மந்திரக்கிரியாபாவனைகளை விதிப்படிசெய்து ஆசனம் மூர்த்தி மூலத்தினாலும் அஷ்டபுஷ்பத்தினாலும்அர்ச்சித்து பீடத்துவாரபூசைசெய்து ஈசானாதிமுதலாவரணமும் அனந்தாதிஇரண்டாமாவரணமும் நந்தியாதிமூன்றுமாவரணமும் இந்திராதி நான்காமாவரணமும் வச்சிராதி ஐந்தாமாவரணமும்அந்தந்தத்தேவதாபாவனைசெய்து வில்வத்தினால் ஒண்ணு பதினொண்ணு பனிரெண்டு நூற்றியெட்டு ஆயிரத்தெட்டென்னும் நாமங்களையர்ச்சித்து ஆனந்தமாய் ஸ்தோத்திரஞ்செய்து சண்டிகேஸ்வரனைப்பூசித்து சரிதையின்தொழிலைவிடாது சமஸ்தமும் சிவார்ப்பணஞ்செய்யும் சற்கிரியையுடைய சிஷ்யனுக்கு சிவக்ஞானதேசிகன் சூக்ஷமபஞ்சாக்ஷரத்தையுபதேசிப்பது.

நிருவாணதீக்ஷை. — மந்திர பத வர்ன புவன தத்துவ கலையென்னும் சடத்துவாக்களையும் நியதிசெய்து பதிபசு பாசவிவேகத்தால் பாசத்தைவிலக்கி பசுத்தன்மையைப்போக்கி பதியாகிய சிவம் நீயென்றுபதேசிக்கப்பெற்று அகம்சிவம் சிவம்அகமென்கின்ற அனவரதபாவனையையுடையவனுய்ச் சாயையைப்போல

ஸ்ரீபரமாசாரியனைவிட்டு சதாகாலமும்பிரியாதிருப்பது.

அத்துவாங்கியதி. — விராட்புருஷனுக்குச் சாந்தியாதீதகலை ஊர்த்துவமாய்ச் சாந்திகலை முகமாய் வித்தியாகலை இருதயமாய்ப் பிரதிஷ்டாகலை குஹ்யமாய் நிவர்த்திகலைபாதாந்தமாய் அன்பத்தோராக்ஷரமுஞ் சர்மமாய் இருநூற்றிருபத்துநாலு புவனமும் ரோமமாய் பதினொருமந்திரமும் ரக்தமாய்எண்பத்தொருபதமும் தசையாய் முப்பத்தாறுதத்துவமும் அஸ்திமச்சை சுக்கிலமாய் இவையாவும்பாகியத்திற்றோற்றுவது சாக்கிரமாய் அகமுகத்திற் றோற்றுவது சொப்பனமாய்ப் பாகியாந்தரங்களைக்கிரகித்து பீஜரூபமாயடக்கியிருப்பது சுழுத்தியாய் ஊர்த்துவமுகத்திற்பிரத்தேகமாவது துரியமாய்சிவகிருபையோடுசையோகமாவது துரியாதீதமாய் இங்கிலையிலிருக்கின்றசிஷ்யனை உஜ்ஜீவிப்பிக்கும்பொருட்டு சிவமேதிருவுருக்கொண்டு ஸ்ரீசற்குருசொரூபமாக வெழுந்தருளி அத்துவாவாறையும் அதனதுரூபதெரிசன சுத்தியாற் பிரத்தேகமாக்கி சுத்தாத்மாவாக நிருவாணதீக்ஷைக்குப்பாத்திரமாக்குவது.

பதி. — அவாங்மனோகோசரமாகவிருந்தும் தமது அபாரகருணையினால் ரூப வரூப ரூபாரூபராகப்பிரிந்துநின்று சருவரக்ஷைகளையும்பண்ணுகின்றசிவம். அவற்றுள். ரூபசிவம். — பஞ்சவக்திர சதுர்ப்புஜாஸ்த காளகண்ட திரிநேத்திரதாரியாய்ஆசிரயிப்பவர்க்குப் பிரசன்னமாகிஅவரவரபிமதவரத்தைக் கொடுக்கப் படுவது. அரூபசிவம். — மும்மலநீங்கிய சுத்தாத்மாக்களுக்கு நிர்மலரூபமாய் நின்றைக்கப்படுத்துவது. ரூபாரூபசிவம். — தனக்கெனவோருருவை நாமமின்றி சித்திர படசிலா ஜல தருப்பண அரித்திரபாத சரித்திர கெளமல மிருத்து லோக சர வசர சுதை தாருவாதிகளில் அடியார்களெந்தரூபத்தைக்கொடுத்தாலும் அதுவேதனக்குருவமாயும் அவ்வடியார்களெந்தநாமத்தைக் கொடுத்தாலும் அதுவே தனக்கு மிகவும் அற்புதமான நாமமாயுமங்கிகரித்துக்கொண்டு அவ்வடியார்களை எக்காலமும் ரக்ஷித்துக்கொண்டிருப்பது.

பசு. — அநாதியாய் செம்பிற்களிம்புபோல ஆணவ கர்ம மாயையென்னும் பாசத்திரயத்தாற்பந்திக்கப்பட்டுச் சிவகிருபையினாற் பாசபந்தங்கள்நிவர்த்திக்குமிடத்து விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னத் திரிவிதரூபமாய்ச் சிவசாயுச்சியத்தைப்பெறு

கின்றசிவர்கள். விக்ஞானகலர்.—இயற்கைஞானமுடையர்களாய் அணுசதாசிவர் அஷ்டவித்தீஸ்வரர் மந்திரேஸ்வரரென்னத் திரிவிதரூபமாய் சர்வபுவனகர்த்தாவாய் மலத்திரயத்தை வசமாக்கிக்கொண்டு ஆசிரதர்மனோரதப்பிரகாரம்விளையாடி தத்தம் லோகாந்தத்தில் சிவசாயுச்சியத்தைப்பெற்றிருப்பவர்கள். பிரளயாகலர்.-சிவகிருபையினுலிவ்விடத்தில் மாயாமலம்நிவர்த்திக்கப்பட்டு திவ்வியசரீரத்தோடு சிவலோகத்தைச்சேர்ந்து சிவனதுஆக்ஞாவிதியிற்கட்டுப்பட்டுச் சிவகைங்கிரியபரராய் கல்பாந்தத்திற் சிவகுருவினுற் சத்தியோபதேசத்தைப்பெற்று சிவசாயுச்சியத்தையடைபவர்கள். சகலர்.-அவித்தையாரூபமான ஆணவ கர்ம மாயையென்னும் மும்மலபாசத்தாற்பந்திக்கப்பட்டு அறிவித்தாலறிபவராய் ஜனன மரண மரணஜனனுதிகளைப்பொருந்தி கர்மாதீனமாய் வந்த சுகாசுகங்களைத் தன்னதென்னவபிமானித்துப் பசுத்தன்மைபோன்று சதாதுக்கித்துழல்கின்ற சிவர்கள்நிமித்தம் காருண்யமிகுதியினுல் ஸ்ரீபரமசிவமேமானிடச்சட்டைசாத்தி சங்கமலிங்ககுருரூபமாய் நின்று கரும மாயை யாணவமென்னும் மும்மலபாசத்தைப்பரிகரித்து அத்துவாவாறையுந்நியதிபண்ணி அவ்வத்துவாக்களுக்குமூலமான விந்து நாதம் வெளி யொளி சிவமென்னும் மெஞ்ஞானபோதத்தாலஞ்ஞானத்தைப்போக்கி ஸ்தூலசூக்ஷ்ம காரண மகாகாரணசுத்தமென்னும் பஞ்சாக்ஷரப்பொருளையுணர்த்தப்பெற்று பரமகிருபையோடைக்கியம்பெற்றிருப்பவர்கள்.

பாசம்.—ஆணவகர்மமாயையென்னத் திரிவிதரூபமாய் சிவகிருபைக்கிமாறுபட்டு பசுத்தன்மைபோன்றிருக்கின்ற சிவர்களை தனக்குப்பணியாளாக்கி சிவகிருபையைப்பெற்ற சிவனடியார்களுக்குப் பணியாளாய்நின்று சேவிக்கப்படுவது.

சத்பீஜதீக்ஷை.—திரோதானகாரியமான இச்சைஞானக்கிரிகைகளை ஆதிசத்தியிலும் ஆதிசத்தியைப் பராசத்தியிலும் பராசத்தியைச் சிவத்திலும் ஒடுக்கி சேடித்திருக்கின்ற அவ்வதீதசிவத்தைப் பரமாசாரியனுனவர் சமிக்ஞாரூபமாய்த்தெரிசிப்பிப்பது.

அபிஷேகதீக்ஷை.— அகண்டபரிபூரண சச்சிதானந்தசிவம் அவாங்மனோகோசரமாயெல்லையற்றிருப்பதை ஸ்ரீபரமாசாரியன் மௌனசுபாவத்தாற்றெரிசிப்பித்து சிஷ்யனுக்கு ஆசாரியாபி

ஷேகஞ்செய்து அதிகாரசமர்ப்பணத்தைப் பண்ணிவைத்துத் தானுமவ்வதீதசிவத்துக்கடிமையாகி நமஸ்காரம்பண்ணி அஞ்சலியஸ்தனுகநின்று தெய்வமே ஜெபித்தல் தியானித்தல் பாவித்தல் ஸ்தாபித்தலாதி பரிச்சேதக்கிரிகைகளால் சிஷ்யனுகக்குறிப்பிட்ட அபராதத்தைப்பொறுத்து ரக்ஷிக்கவேண்டுமென்று சதாஸ்தோத்திரம் பண்ணுவது.

## பிரயோஜனம்.

சந்நிதிமாத்திரத்தால் சிவத்தில் யேகதேசமான பராசத்தி தோன்றி பராசத்தியிலாயிரத்தொன்றுன ஆதிசத்திதோன்றி ஆதிசத்தியிலாயிரத்தொன்றுன இச்சாசத்திதோன்றி இச்சாசத்தியிலாயிரத்தொன்றுன ஞானசத்திதோன்றி ஞானசத்தியிலாயிரத்தொன்றுனகிரியாசத்திதோன்றி கிரியாரூபத்தால் ஆசாரியனை நமஸ்கரித்து அஞ்சலியஸ்தனுகநின்று பாதப்பிரச்சாளனம்அஸ்தசையோகம் நேத்திரகடாக்ஷம் சிந்தனுமகிமையா லடியேனைக்கிருதார்த்தனுக்கிய தெய்வமேயென்று சதாஸ்தௌத்தியம்பண்ணி பரஸ்பரசேவிதராய் சிஷ்யஆசாரிய பேதவபேதமுழுதும்வர்ச்சித்து சரிதாதிகளை விநோதமாகநடத்தி சதா திருவிளையாடல்களைச் செய்துகொண்டு அதிஷ்டானமான அவ்வதீதசிவமாத்திரமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருப்பது. அவற்றுள். சரிதாதிகள்.—கிரியாப்பிர்மம் மந்திரப்பிர்மம் தத்துவப்பிர்மம் பீஜப்பிர்மம் பிர்மமூலமென்கின்ற பஞ்சப்பிர்மசாக்ஷாத்காரமுடையனுய் யதாப்பிரகாரம் சரிதாதிவிதிப்படி தானும்நடந்து தன்னையாசிரயிப்பவர்களையும் நடத்திவைப்பது. கிரியாப்பிர்மம்.— மண்டலவேதிகை குண்டவேதிகை பூரணகும்பம் ஆசாரியன் அவனுக்குஅதிஷ்டானமான இஷ்டலிங்கம் இவ்வைந்துபிரகாரமாகவிருப்பது. மந்திரப்பிர்மம்.— ஈசானுதிபதினெருபேதமாகவிருப்பது. தத்துவப்பிர்மம்.— பிர்மா விஷ்ணு ருத்திர மகேஸ்வர சதாசிவமென்றைந்து பேதமாகவிருப்பது. பீஜப்பிர்மம்.— மூலஸ்தம்பசொரூபம். பிர்மமூலம். சிவம். சாக்ஷாத்காரம்.— பிர்மமூலத்தைநிர்த்தேசித்து பீஜப்பிர்மத்தையவதானித்து தத்துவப்பிர்மத்தைத்தியானித்து மந்திரப்பிர்மத்தையுச்சரித்து கிரியாப்பிர்மத்தை ஆவாகனம் பண்ணி அதனனுமதியாற் சரிதாதிகிரியைகள்முழுதும்நடத்தி

அதனது பேதவபேதமுழுதையும் விசர்ச்சித்து சர்வமும் சிவாகாரமாகத்தெரிசிக்கப்படுவது. அதீதசிவம்.— அவாங்மனோகோசரமாய்விளங்கிய சிவசொரூபமே பராசத்தியோடுங்கூடி சர்வஜகத் காரண மூலஸ்தம்பபரசிவமாகியும் ஆதிசத்தியோடுங்கூடி அப்பிராகிருத சிவலோக அபரிச்சின்னமூர்த்திகளாகியும் இச்சாசத்தியோடுங்கூடி பக்தசிந்தித வரப்பிரசாதமூர்த்திகளாகியும் ஞானசத்தியோடுங்கூடி அறிவுக்கறிவாகநின்று சருவரக்ஷைபண்ணுவதாகியும் கிரியாசத்தியோடுங்கூடி பஞ்சகிருத்தியபாராபரப் பொருளாகியும் சமுத்திரதரங்கநியாயத்தால் சருவமுஞ்சிவாகார சுகோததியுருவாயும் விளங்கிய சிவசொரூபத்தை அத்துவாநிண்ணய அத்துவாநியதியினாற் பவித்திரமாக்கி சமிக்ஞாரூபமாய் ஸ்ரீபரமசற்குருவினாற் சூசிப்பிக்க அப்படியே அத்துவாதீதசிவமாய்ப் பிரிவற்றிருப்பது.

அத்துவாநிண்ணயம்.—அத்துவாரூபம் அத்துவாதெரிசனம் அத்துவாசுத்தி அத்துவாத்தொகை அத்துவாவகை அத்துவாவிரிவென்னச் சட்பிரகாரமாகவிருப்பது. அத்துவாரூபம்.— வியோமம் பரம் நாதம் விந்து கலை தத்துவம் புவனம் வர்னம் பதம் மந்திரம் கிரிகை பாவனை யென்னும் துவாதசபேதத்தையும் அதனதுதொகைவகைவிரிவுகளையும் ஒன்றிலிருந்தொன்று உபக்கிரமித்தபடியே பார்க்கப்படுவது. அத்துவாதெரிசனம்.— பாவனாமூலங் கிரிகை கிரியாமூலம் மந்திரம் மந்திரமூலம் பதம் பதமூலம் வர்னம் வர்னமூலம் புவனம் புவனமூலந் தத்துவம் தத்துவமூலங் கலை கலாமூலம் விந்து விந்துமூலம் நாதம் நாதமூலம் பரம் பரமூலம் வியோமமென்னும் ஒன்றுக்கொன்று காரியகாரண பேதவபேத தொந்தநிர்த்தொந்த விவிதபரிச்சேதமென்றுணரப்படுவது. அத்துவாசுத்தி.— பாவனையைக்கிரிகையிலும் கிரிகையை மந்திரத்திலும் மந்திரத்தைப்பதத்திலும் பதத்தைவர்னத்திலும் வர்னத்தைப்புவனத்திலும் புவனத்தைத்தத்துவத்திலும் தத்துவத்தைக்கலையிலும் கலையைவிந்துவிலும் விந்துவைநாதத்திலும் நாதத்தைப்பரத்திலும் பரத்தைவியோமத்திலும் உபக்கிரமித்தபடியே ஒன்றிலொன்றைலயமாக்கிச்சருவமுஞ்சுகாகாரசுகோததியுருவாய்த் தெரிசிக்கப்படுவது. அத்துவாதொகை.— மந்திர பத

வர்ன புவன தத்துவ கலையென்னச்சட்பேதமாயிருப்பது. அ
துவாவகை.—மந்திரம்பதினொண்ணு பதம் யெண்பத்தொண்ணு
வர்னம்ஐம்பத்தொண்ணு புவனம் இருநூற்றிருபத்துநாலு த
துவம் முப்பத்தாறு கலைஐந்து ஆகநானூற்றெட்டுப்பேதமா
விருப்பது. அத்துவாவிரிவு.—சமயானுரூபமாயுச்சரிக்கும் நமப
சுத சுவாகா உம் படு ஔஷடுவென்னும் ஏழுலக்ஷணங்களை முடி
லுடையதாய்

ஈசானனம்
தற்புருஷம்
அகோரம்
வாமதேவம்
சத்தியோசாதம்
இருதயம்
சிரம்
சிகை
கவஜம்
நேத்திரம்
அஸ்திரம்
ஆ மந்திரம். (௰க)

—பதஅத்துவா—

பிரணவபதம்
வியோமவியாபினிப
வியோமரூபபதம்
சருவம்வியாபினிபத
சிவாயபதம்
அனந்தபதம்
அனாசிரதாயபதம்
அனாதபதம்
திரவபதம்
சாஸ்வதபதம்
யோகபீடபதம்
சமஸ்தபதம்
நித்தியபதம்
யோகினிபதம்
தியானபதம்
நமசிவாயபதம்
சருவப்பிரபவேபத
ஈசானபதம்
தற்புருஷபதம்
அகோரபதம்
வாமதேவபதம்
சத்தியோசாதபதம்
நமோநமபதம்
குஹ்யாதிகுஹ்யபதம்
கோப்திரபதம்
அனிதனுயபதம்
சருவ யோகாதி கிரு
தாயபதம்
சருவ வித்தியாதி பா
யபதம்
சோதிரூபபதம்
பரமேஸ்வரபதம்
அசேதனபதம்
சேதனபதம்
வியோமின்வியோமி
ணிபதம்
அரூபின் அரூபினிப
பிரதமப் பிரதமபத
தேஜஸ்தேஜபதம்
ஜோதிஸ் ஜோதிபத
அரூபபதம்
அனக்கினிபதம்
அதூமபதம்
அபஸ்மபதம்
அனாதிபதம்
நானுபதம்
தூதூபதம்
பூபதம்
புவாகாபதம்
சுவாகாபதம்
நிதனநிதனபதம்
நிதனோற்பவபதம்
சிவசருவபதம்
பரமாத்மபதம்
மகேஸ்வரபதம்
மகாதேவபதம்
சத்பாவேஸ்வரபத
மகாதேஜஜோபதம்
யோகாதிபதயேபத
முஞ்சமுஞ்சபதம்
சருவசர்வபதம்
பவபவபதம்

| | | |
|---|---|---|
| பவோற்பவபதம் | அனர்ச்சிதபதம் | சப்தசப்தபதம் |
| சருவபூதபதம் | அஸ்துதாஅஸ்துதப | சூக்ஷுமசூக்ஷுமப |
| சுகப்பிரதபதம் | பூர்வஸ்திதபூர்வஸ்திதசிவசர்வபதம் | |
| சருவசாநித்தியகரப | சாக்ஷிசாக்ஷிபதம் | ஓம். நம பதம் |
| பிர்மபதம் | துருத்துருபதம் | சிவபதம் |
| விஷ்ணுபதம் | பதங்கபதங்கபதம் | பிரணவபதம் |
| ருத்திரபதம் | பிங்கபிங்கபதம் | ஆ பதம் (அயக) |
| பரபதம் | ஞானக்ஞானபதம் | |

வர்னஅத்துவா.— க கூ உ ா ம உ ஊ ஐ ஐ ஏ ஏ ஔ ஔ ஓ ஔ கம் கஃ க வ ம வ ஊ வ ஊ ஜ ஜ ஞ ட ் ஞ ஞ ண த ய ஊ ய ந வ வ வ வ ப ய ா வ வ ப ஷ வ ஹ ஊ க்ஷ

ஆ (ருயக)

| | | |
|---|---|---|
| புவனஅத்துவா.— | ஏகருத்திரபுவனம் | உற்பலபுவனம் |
| அனுசிரதாபுவனம் | யேகநேத்திரபுவன | பவபுவனம் |
| அனுதபுவனம் | சிவோக்தமபுவனம் | உக்கிரபுவனம் |
| அனந்தாயைபுவனம் | சூக்ஷுமபுவனம் | பீமபுவனம் |
| வியோமரூபிணிபுவ | அனந்தபுவனம் | வாமாபுவனம் |
| வியாபிணிபுவனம் | மனோன்மன்னிபுவ | ஸ்ரீகண்டபுவனம் |
| ஊர்த்துவகாமினிபு | சருவபூதமன்னிபுவ | ஔமாரபுவனம் |
| மோசிகாபுவனம் | பெலப்பிரமதனிபுவ | கௌமாரபுவனம் |
| தீபிகாபுவனம் | பெலவிகரணிபுவன | வைஷ்ணவைபுவன |
| இந்திகாபுவனம் | கலவிகரணிபுவனம் | பிராம்மியைபுவனம் |
| சாந்தியாதீதபுவனம் | காளிகைபுவனம் | வைரவபுவனம் |
| சாந்திபுவனம் | ரௌத்திரிபுவனம் | கிருதபுவனம் |
| வித்தயாபுவனம் | சேஷ்டாபுவனம் | அகிருதபுவனம் |
| பிரதிஷ்டாபுவனம் | வாமாயைபுவனம் | பிர்மாண்டபுவனம் |
| நிவர்த்திபுவனம் | அங்குஷ்டமாத்திரக | பிராசேஸ்வரபுவன |
| சதாசிவபுவனம் | புவனேசபுவனம் | சௌமியதேகபுவ |
| சிகண்டிபுவனம் | ஈசானபுவனம் | அயிந்திரபுவனம் |
| ஸ்ரீகண்டபுவனம் | ஏகேக்ஷணபுவன | காந்தர்வபுவனம் |
| திரிமூர்த்திபுவனம் | ஏகபிங்கலபுவனம் | யக்ஷபுவனம் |

ராக்ஷதபுவனம்
பைசாசபுவனம்
ஸ்தலேஸ்வரபுவன
ஸ்தூலேஸ்வரபுவன
சங்குகர்னபுவனம்
காலஞ்சரபுவனம்
மண்டலேஸ்வரபுவ
மாகோடபுவனம்
விரண்டபுவனம்
சகலண்டபுவனம்
ஸ்தாணுபுவனம்
சொர்ணக்ஷபுவனம்
பத்திரகர்னபுவனம்
கோகர்னபுவனம்
மகாலயபுவனம்
அவிமுக்தபுவனம்
ருத்திரகோடிபுவன
வஸ்திரபாதபுவனம்
விமேஸ்வரபுவனம்
மகேந்திரபுவனம்
அட்டஹாசபுவனம்
விமலேசபுவனம்
நகலபுவனம்
நாகலபுவனம்
குருக்ஷேத்திரபுவ
கெதாத்திரபுவனம்
அபைத்திரபுவனம்
கேதாரபுவனம்
மகாகாளபுவனம்
மத்திமேசுரபுவனம்
ஆமிராதிகேஸ்வரபு
செல்ப்பேஸ்வரபுவ

ஸ்ரீசைலபுவனம்
அரிச்சந்திரபுவனம்
லகுளீசபுவனம்
பாரபூதிபுவனம்
டிண்டிபுவனம்
முண்டிபுவனம்
ஔஷதபுவனம்
புஷ்கரபுவனம்
நைமீசபுவனம்
பிரபாசபுவனம்
அமரேசபுவனம்
பத்திரகாளிபுவனம்
வீரபத்திரபுவனம்
திரிலோசனபுவனம்
லிப்சுபுவனம்
சம்பவபுவனம்
வச்சிரபுவனம்
நபாபுவனம்
ஔதும்பரபுவனம்
விவாகபுவனம்
சம்வாகபுவனம்
திரிதிகேஸ்வரபுவன
திரயக்ஷபுவனம்
கஞதியக்ஷபுவனம்
விபபுவனம்
சம்பவபுவனம்
தமுஷ்டிரபுவனம்
பனிந்திரபுவனம்
உதும்பரீசபுவனம்
கிரகசனபுவனம்
மாறுதாசனபுவனம்
குரோதபுவனம்

அனந்தபுவனம்
விருஷதரபுவன
விருஷபுவனம்
பலிப்பிரியபுவன
பூதபாலகபுவனம்
சேஷ்டாபுவனம்
சருவபுவனம்
சுரேசபுவனம்
வேதபாரகபுவன
ஞானபுஞ்சனபுவ
ரக்ததரபுவனம்
லக்ஷ்மிதரபுவ
ஜடாதரபுவனம்
தகனபுவனம்
சௌரபுவனம்
தன்யபுவனம்
ரூபபுவனம்
நிதீசபுவனம்
மேகவாகனபுவன
கபர்த்திபுவனம்
பஞ்சசிகாபுவனம்
பஞ்சாந்தகபுவன
க்ஷயாந்தகபுவனம்
ஜெயப்பிரபவாசபு
ஜலப்பிரபவாசபுவ
யக்ஷபுவனம்
தீக்ஷ்ணபுவனம்
சூக்ஷ்மபுவனம்
வாயுவுபுவனம்
லகுபுவனம்
வேகபுவனம்
தக்ஷகபுவனம்

| | | |
|---|---|---|
| சீக்கிரபுவனம் | நிருதிபுவனம் | உதாஜனபுவனம் |
| சுனுதபுவனம் | தர்மபதிபுவனம் | அக்கினிபுவனம் |
| மேகநாதபுவனம் | அதர்மபதிபுவனம் | ருத்திரபுவனம் |
| ஜலாந்தகபுவனம் | விதோக்திரபுவனம் | திரிபுவனம் |
| தீர்க்கபாகுபுவனம் | போக்திரபுவனம் | கபாலீசபுவனம் |
| மாரணபுவனம் | கரத்திரிபுவனம் | பிஞுகிபுவனம் |
| செயபூத்திரபுவனம் | விதாத்திரைபுவனம் | சாஸ்திரபுவனம் |
| சுவேதபுவனம் | திரதசாதிபபுவனம் | அவ்வியயபுவனம் |
| தர்மபுவனம் | தாத்திரைபுவனம் | விபூததனுபுவனம் |
| மகாபெலபுவனம் | அரபுவனம் | பிரமர்த்தனபுவனம் |
| பாசஅஸ்தபுவனம் | மிருத்தியுபுவனம் | வச்சிரதேகபுவனம் |
| அதிபெலபுவனம் | வாம்மியபுவனம் | புக்தபுவனம் |
| பெலபுவனம் | க்ஷயாந்தகபுவனம் | அஜபுவனம் |
| தூஷ்ணிபுவனம் | பஸ்மாந்திகபுவனம் | ருத்திரபுவனம் |
| லோகிதபுவனம் | தேஜாதிபபுவனம் | விஷ்ணுபுவனம் |
| தாம்புரபுவனம் | பெப்புருபுவனம் | பிர்மபுவனம் |
| விருபாக்ஷபுவனம் | தகனபுவனம் | ஆடகபுவனம் |
| ஊர்த்துசேபபுவ | ஜலாந்தகபுவனம் | கூஸ்மாண்டபுவனம் |
| பாயாந்தகபுவனம் | அராயபுவனம் | காலாக்கினிபுவனம் |
| குரூரதிஷ்டிபுவனம் | காதகபுவனம் | ஆ புவனம் (உ௱ய௲) |
| அந்திரபுவனம் | பிங்கலபுவனம் | |

இந்திர அக்கினி இயம நிருதி வர்ண வாயு குபேர ஈசான்ய அதோ ஊர்த்துவதிக்குப்புவனம். (ய)

சருவபுவனங்களுக்குமத்தியப்பிரதேசமாய் சமஸ்தபுவனங்களும் உதித்தற்கும் விளங்குதற்கும் ஒடுங்குதற்கும் காரணபூதையாய் சருவபுவனகர்த்தாவாய் ஸ்ரீபகவானுகிய அதீதசிவம் சதா சந்நிதிபண்ணிக்கொண்டிருக்கின்ற திருக்கோவிலாய் அதியற்புதமாகவிருக்கின்ற நம் இருதயபுவனம் (க) ஆ புவனம் (உ௱உயச)

| | | |
|---|---|---|
| **தத்துவஅத்துவா.—** | ஈஸ்வரதத்துவம் | நியதிதத்துவம் |
| சிவம் | சுத்தவித்தயாதத்து | கலைதத்துவம் |
| சத்திதத்துவம் | மாயாதத்துவம் | வித்தயாதத்துவம் |
| சதாசிவதத்துவம் | காலதத்துவம் | ராகதத்துவம் |

புருடதத்துவம்
பிரகிருதிதத்துவம்
குணதத்துவம்
புத்திதத்துவம்
அகங்காரதத்துவம்
மனசுதத்துவம்
சுரோத்திரதத்து
துவக்குதத்துவம்
சக்ஷுதத்துவம்
சிங்குவைதத்துவம்
ஆக்கிராணதத்துவ
வாக்குதத்துவம்
பாணிதத்துவம்
பாததத்துவம்
பாயுருதத்துவம்
உபஸ்ததத்துவம்
ஆகாசதத்துவம்
வாயுவுதத்துவம்
அக்கினிதத்துவம்
ஜலதத்துவம்
சத்ததத்துவம்
ஸ்பரிசதத்துவம்
ரூபதத்துவம்
ரசதத்துவம்
ஸ்கந்ததத்துவம்
பிருதிவிதத்துவம்
ஆஹதத்துவம் (௩௰௬) இந்தத்தத்துவம் முப்பத்தாறுக்கும் அதீதமாகவிருப்பது சிவம்.

கலாஅத்துவா—.
சாந்தியாதீதகலை
சாந்திகலை
வித்தையாகலை
பிரதிஷ்டாகலை
நிவர்த்திகலை
இவ்வைந்து கலைகளுக்கும் அதீதமாகவிருப்பது. சிவம்.

அதீதம்.

மந்திர பத வர்ன புவன தத்துவ கலையென்னும்அத்துவாவாறுக்கும்அகோசரமாய்ப்பிரமாணாதீதமாயெல்லையற்றிருப்பது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



௨

ஹரி: ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

தசமம்...வேதாந்தவிதாயகம்.



## வேதாந்தம்.

உத்தரார்த்தப்பிர்மைகநிரூபணம் இதுபாஸ்கரிய மாயாவாதசத்தப்பிர்மவாத கிரீடாப்பிர்மவாதமென்னச்சதுர்விதபேதமாய் சாங்கர மாத்துவ நீலகண்ட ராமானுஜீயபாஷியசதுஷ்டயநிரூபிதமாய்ப் பிரபஞ்சத்திற்கு மித்தையாத்துவஞ்சாதித்து உத்தரமீமாம்ச உபநிஷதர்த்தமான பிர்மவரையைத் தீர்க்கமாகச்சாதிக்கப்படுவது. பாஸ்கரியம்.— காரியகாரணவிவேகியாய்க் காரியரூபமாய்த்

தோற்றிவிரிந்திருக்கின்ற சீவேஸ்வரப்பிரபஞ்சம் சிருஷ்டிக்கு முன்னம் காரணபூதபரமாத்மாவினிடத் தில்லையென்று நிச்சயித்து உதித்தவிடத்தொடுக்கிக் காரியரூபப்பிரபஞ்சத்துக்குப் பிராகபாவஞ்சாதித்துக் காரணபூதபரமாத்மாவே தானாகவிளங்குவது. மாயாவாதம்.— விம்பப்பிரதிவிம்பவிவேகத்தால் விம்பாகாரமாகவிருக்கின்ற நிருபாதிகப்பிர்மத்தினிடத்துப் பிரதிவிம்பமாய் உபாதிபேதத்தாற்றோற்றிவிரிந்திருக்கின்ற மாயாப்பிரபஞ்சம் பிரளயத்துக்குப்பின்னில்லையென்று நிச்சிதரூபமாய்ப் பிரத்தொம்சாபாவத்தைச்சாதித்து மாயாமூலமான சித்தசங்கல்பத்தைத்தடுத்து விம்பாகார நிருபாதிகப்பிர்மமே தானாகவிளங்குவது. சத்தப்பிர்மவாதம்.— வியோமம்பிர்மம் விஸ்வம்பிர்மம் காலம்பிர்மம் கர்மம்பிர்மம் வேதம்பிர்மம் பூதம்பிர்மம் புருடன் பிர்மமென்று ஏழுவகையாய் அநாதிதத்துவத்தைத்தனித்தனியே நிரூபித்து அதிகாரபூர்த்தியினாற் சருவமும் பிர்மமயமென்றுணர்த்தி அபவாதக்கிரமத்தினால் ஆரோபப்பிரபஞ்சத்துக்கு அத்தியந்தாபாவஞ்சாதித்து அதிஷ்டானப்பிர்மமேதானாகவிளங்குவது. கிரீடாப்பிர்மவாதம்.— நித்தியவநித்தியத்தை விவேகித்து நித்தியம் பூர்வமாய் பௌஷதியாய்ப் பரஸ்பரமாய்ச் சதோதீதமாகவிருக்கின்ற பிர்மம் பிராக பிரத்தொம்ச அன்னியொன்னிய அத்தியந்தமென்னும் அபாவசதுஷ்டயத்தோடுகூடிய அநித்தியப்பிரபஞ்சத்தோடு கலந்துநின்றும் அதனோடுபற்றாது தாக்கற்றிருப்பதனால் அநித்தியலக்ஷணம் நித்தியப்பிர்மத்தில்லையெனநிச்சயித்து நித்தியவநித்தியங்களுக் கன்னியொன்னியாபாவஞ்சாதித்து நித்தியப்பிர்மத்தோ டகலாநேசமுடையனாய் நித்தியசம்பந்தத்தைப்பெற்று நித்தியபூமியையாசிரயித்து நித்தியசூரிகளோடிருந்து நித்தியகைங்கிரியம் பண்ணிக்கொண்டிருப்பது.

தொய்தபக்ஷத்தைநிஷேதித்து பிர்மாத்மவபேதஅத்தொய்தபக்ஷத்தை நிரூபிக்கப்படுவது: சாங்கரபாஷியம்.— அத்தொய்தபக்ஷத்தை நிஷேதித்து பிர்மாத்மபேத தொய்தபக்ஷத்தை நிரூபிக்கப்படுவது: மாத்துவபாஷியம்.—அத்தொய்த தொய்தத்தை நிஷேதித்து சுத்தாத்மாவையுணர்த்தி சுபாவசிவத்தை நிரூபிக்கப்படுவது: நீலகண்டபாஷியம்.— பேதவபேதசுருதியையும் அத்து

வித தொய்தபக்ஷத்தையும் அனுசரித்துக்கொண்டு விசிஷ்டாத்து விதபக்ஷத்தை நிரூபிக்கப்படுவது: ராமானுஜீயபாஷியம்.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



உ

ஹரி: ஓம்

ஸ்ரீபரமசற்குருவேநம:

ஏகாதசம்...மோக்ஷவிதாயகம்.



## மோக்ஷம்.

பிரதமசட்கம் துவிதியசட்கம் திரிதியசட்கமென்ன கருமபக்திஞானத்தைக் கிரமமாய்ச்சாதிக்கும்கீதாசாஸ்திரஅஷ்டாதசஅத்தியாயசாரமாய் சந்நியாசதியாகம் சாங்கியமீமாம்சவபிமதம் மோக்ஷசந்நியாசம் பரமார்த்ததெரிசனமென்ன நான்குபிரகாரமாய்நிரூபிப்பது.

பிரதமசட்கம்.—விஷாதயோகம் சாங்கியயோகம் கர்மயோகம் ஞானயோகம் கருமசந்நியாசயோகம் ஆத்மப்பிர்மயோகமென்னச் சட்பேதமாயிருப்பது. அவற்றுள். விஷாதயோகம்.—சமர்முகத்தில்ச் செய்வதுதவிர்வது தெரியாமல்க்கலங்கி சோகமிகுதியினுல் அஸ்திர சஸ்திரநழுவிய அர்ச்சுனன் சொப்பிரக்ஞையிழந்து அதைத்தெளிவிக்கும் ஸ்ரீவாசுதேவைச் சரணமாகவடைவது.

சாங்கியயோகம். — உடலுயிர்பரமென்னும் தத்துவத்திரயத்தைவிவேகித்து ஸ்ரீவாசுதேவையடைதற்கு அவசியம்வேண்டும்கருமக்ஞான தியான தியாக சாந்தியென்னும் பஞ்சசாதனங்களைநிரூபிக்கப்படுவது. அவற்றுள். — பிறப்பிறப்பாதி விகாரத்தைப்பொருந்திக் காலமுடிவில்ப் பூதமயமாய் நசிக்கப்படுவது: உடல். — இருவினைக்கீடாய்க் குண கரண விகாராதி அளவற்ற தேகாவஸ்தையைப் பொருந்தி ஒன்றைவிட்டொன்றை மாறி மாறிச்சுழலப்படுவது: உயிர். — உயிருடலைப்பிறப்பித்து தத்தங் கருமவழியாய் ரக்ஷித்தொடுக்கும் அந்தரியாமியாய் சருவஜெகத்

காரண கர்த்தாவாயிருப்பது: பரம். கருமம். — ஸ்ரீவாசுதேவைப் பற்றிநின்று சமஸ்தமானகருமங்களையும் நிஷ்காமனாய்ச்செய்து பரித்தியாக பலத்தியாக அற்பண அவதான கைங்கிரியரூபமாய் மமதகங்காரம் வர்ச்சித்து பரம்பரையாய்வந்த புண்ணியபாவத் தொடக்குவிட்டு சித்தம்நிர்மலமாய் நாளுக்குநாள் சுடர்விட் டெரிப்பது. ஞானம்.—உயிருடலைப்பிரித்து உயிர்நித்தியம் உடல் அநித்தியமெனவிவேகித்து உயிர்ப்பற்று உடல்ப்பற்றைவிலக்கி உயிர்ச்சங்கம் உடல்ச்சங்கமுழுதும் பற்றரத்துடைத்து நிற்சங்க னாய் உடல் உயிர் புலன் பரமென்னும் நான்குலக்ஷணங்களையும் விவேகித்து சர்வமும் வாசுதேவமெனக் கலக்கமறத்தெளிவது. தியானம். — ஸ்ரீவாசுதேவை ஞானபாதத்தாலொன்றாயும் கிரியா பாதத்தால் வேறாயுமிருந்து பாவனாயோகத்தா லாராதிப்பது. தியாகம். — ஸ்ரீவாசுதேவினைக்கத்தால்ச் சத்துவகுணம்விருத்தி யாகி மமதகங்கரத்துருவாய்நிற்கும் தமோசங்கம் ரசோசங்க முழுதும் மூலத்தோடு நிவர்த்திக்கப்படுவது. சாந்தி. — ஸ்ரீவாசு தேவைப்பற்றித் தொழில்செய்யாவிடில் சித்தசுத்தியில்லை அதில் லாவிடில் ஆத்மஞானமில்லை ஞானகருமம்ஒருப்படாவிடில் தியான தியாகமில்லை தியானதியாகம் ஒருப்படாவிடில் சித்தசாந்தியில்லை சித்தசாந்தியில்லாவிடில் சுகமென்பது சற்றேனுமில்லவேயில்லை ஆதலால் ஞானகர்மசமத்துவ நிஷ்டையினால் சித்தசாந்தம் லப்த மாகி ஸ்ரீவாசுதேவைச்சரணமாகவடைவது.—ஞானிகளாலனுஷ் டிக்கும் நிஷ்காம கருமத்தையுணர்த்துவது: கருமயோகம். — ஞானிகளனுஷ்டிக்கும் யெக்ஞகருமத்தை யுணர்த்துவது: ஞான யோகம்.—ஞானிகளனுஷ்டிக்கும் சந்நியாசகருமத்தை யுணர்த்து வது: கர்மசந்நியாசயோகம்.—ஞானிகளுக்கு ஆத்மா ஸ்ரீவாசுதே வென்பதைத் தெளியச்செய்யும் யோககர்மத்தையுணர்த்துவது ஆத்மப்பிர்மயோகம்.

துவிதியசட்கம்.—விக்ஞானயோகம் அக்ஷரப்பிர்மயோகம் ராஜ வித்தியா ராஜகுஹ்யயோகம் விபூதியோகம் விஸ்வரூபசந்தெரி சனயோகம் பகவத்பக்தியோகமென்னச் சட்பேதமாயிருப்பது. அவற்றுள். விக்ஞானயோகம்.- ஆர்த்தோசிக்ஞாசு அர்த்தார்த்தி சுக்ஞானி யென்னும் சதுர்விதபுருஷர்களே ஸ்ரீவாசுதேவைப் பிர

பக்திபண்ணும் அதிகாரிகளென்றுணர்த்துவது. — செல்வத்தை யிழந்து செல்வத்தைப் பெருதற்குப் பிரபக்திபண்ணுபவன்: ஆர்த்தன்.—பிரகிருதித்தொடர்பைநீக்கி ஸ்ரீவாசுதேவினிடத்திற் பிரபக்திசெய்பவன்: சிக்ஞாசு.—அர்த்தமிருந்தும் ஆபத்துக்காலத் தில் அவ்வர்த்தத்தைமறந்து ஸ்ரீவாசுதேவை அர்த்தித்துப் பிர பக்திபண்ணுபவன்: அர்த்தார்த்தி. — சருவமும்வாசுதேவெனத் தெளிந்து ஆத்மப்பிரிவறப்பிரபக்திசெய்பவன்: சுக்ஞானி. அக்ஷ ரப்பிர்மயோகம்.—பிர்மம் அத்தியாத்மம் கர்மம் அதிபூதம்அதி தெய்வம் அதியெக்ஞம் இவ்வாறும் சரீரத்திலிருப்பதும் பிராண யாத்திராகாலத்தில் திடச்சித்தமுடையோரால் சாதித்தடையும் ஞேயம் ஆகஇந்தயேழுசங்கையும் உத்தரரூபமாய்த் தெளிந்து பெரிதுக்கெல்லாம்பெரிதாய் எப்போதும் நாசவத்துவ மில்லா திருக்கும் அவ்வக்ஷரப்பிர்மத்திலப் பிரபக்திபண்ணுவது. ராஜவித் தியாராஜகுஹ்யயோகம். - பிரகிருதித் தொடக்கில்லாத பரமரகசி யத்தையும் சீவசமூகங்கள்முழுதுக்கும் உதயாஸ்தகாரணமாகவிரு க்கும் விராட்பெருமானையும் சருவஜகத்காரணமான பகவன்மா யையையும் ஸ்ரீவாசுதேவின்முகமாய்த்தெளிந்து சருவவியாபியாக விருக்கின்ற பரிபூரணனைசதன்னியத்தில் பிரபக்திபண்ணுவது. விபூதியோகம்.—சீவகல்ப்பிதம்நீங்கிசருவமும்வாசுதேவ ஐஸ்வரிய மெனத்தெளிந்து அப்படித்தெளியச்செய்த தெய்வகுருமூலமாய் ஸ்ரீவாசுதேவைப் பிரபக்திபண்ணுவது. விசுவரூப சந்தெரிசன யோகம்.— சருவஐஸ்வரியங்களையும் தொகை வகை விரிவோடு தொகுத்துநிற்கும் விஸ்வரூபஅற்புதத்தை யோகதிருஷ்டியினு லொருப்படத்தெரிசித்து அதனிடமாகப்பிரபக்தி பண்ணுவது. பகவத்பக்தியோகம்.—ஸ்ரீவாசுதேவ சொரூபத்தை அகோசர கோசர கோசராகோசரமென்னத் திரிவிதரூபமாகவிவேகித்து அகோசரரூபத்தை ஞானயோகத்தாலும் கோசரரூபத்தைக் கரு மயோகத்தாலும் கோசராகோசரரூபத்தைப் பக்தியோகத்தா லும் ஸ்ரீசற்குருமுகமாய்த்தெளிந்து ததானுரூபமாய்ப்பிரபக்தி பண்ணி முடிவில் சர்வமும்வாசுதேவ மென்றுணரப்படுவது.

திரிதியசட்கம்.— க்ஷேத்திரக்ஷேத்திரக்ஞ விபாகயோகம் குணத்திரய விபாகயோகம் புருஷோத்தமப் பிராப்தியோகம்

தெய்வாசுர சம்பத்தியோகம் சிரத்தாத்திரய விபாகயோகம் மோக்ஷசந்நியாசயோகமென்னச் சட்பேதமாயிருப்பது. க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞவிபாகயோகம்.-சமஷ்டிவியஷ்டிரூபமான க்ஷேத்திரமும் சேதனன் ஈஸ்வரனென்றிருவகையான க்ஷேத்திரக்ஞ தாரதம்மியங்களையும் விவேகித்துணர்வது. குணத்திரயவிபாக யோகம்.— பிரகிருதியின் குணத்திரய தாரதம்மியங்களையும் பிரகிருதித்தொடக்கில்லாத ஸ்ரீவாசுதேவையாசிரயித்திருக்கும் புண்ணியாத்மாக்கள்சுபாவமும் அவர்களையறியும் குறிகுணங்களையும் விவேகித்துணர்வது. புருஷோத்தமப்பிராப்தியோகம். — புருஷனானவன் மாயாவிருக்ஷத்தைச்சேதித்து வாசுதேவதருச்சாயையைக்கிட்டி தாபத்திரயாக்கினியைப்போக்கி நடையற்றசுகத்தை எப்படியடைவதென்று விவேகித்துணர்வது. தெய்வாசுரசம்பத்தியோகம். — நரசிரேஷ்டாளாலேயனுஷ்டித்து பௌஷதியில் நித்தியசுகத்தைப்பெறுகின்ற தெய்வசம்பத்தும் நரஅதமாளாலேயனுஷ்டித்து பௌஷதியில் மீளாதநரகத்தையனுபவிக்கச்செய்யும் ஆசுரசம்பத்தும் விவேகித்துணர்வது. சிரத்தாத்திரயவிபாக யோகம்.—மூன்றுபேதமானசிரத்தையையும் சத்துவசிரத்தையின்வழியாய் அதிக்கிரமித்து ஓம் தத் சத்தென்னும் முப்பதநிஷ்டையைச்சாதிக்கும் ஞானவிப்பிரனது பெருமையையும் விவேகித்துணர்வது. மோக்ஷசந்நியாசயோகம்.—அத்துவித தொய்த சுபாவ விசிஷ்டமென்னும் நான்குபக்ஷத்தையும் ஒருப்படுத்தி இதற்குப்பொருள் ஏகரூபரான வாசுதேவ பரப்பிர்மமென்ன சமர்த்திபக்ஷத்தால்த்துலக்கி அதனர்த்தத்தை சம்பூரணரகசிய மூலமாய் விஸ்தரிக்கப்படுவது.

## சந்நியாசதியாகம்.

சந்நியாசம். — காமியகருமங்களையும் அதன்பிரயோஜனங்களையுமறிந்து அவற்றைச்செய்யாதடக்கி ஏகரூபரான ஸ்ரீவாசுதேவினிடத்தில் சித்தத்தைநியாசம்பண்ணுவது. தியாகம்.—சாங்கிய மீமாம்ச கீதாவாக்கியமென்னத்திரிவிதம். சாங்கியம்.—பாபகருமங்களைப்போல சுகிர்தகருமங்களையும்விட்டு வாயுவுபக்ஷிதராய் சிலர்சமாதிபண்ணவேணுமென்றும் சிலர்சேஷமில்லாமல் வர்த்தமானத்தில்நேரிடும் க்ஷுத்துவாதையைப்போக்கி மலவாதைகளை

நிவர்த்திசெய்யலாமென்றும் சிலர் நிர்ச்சிந்தனைகவிருந்து யதிரிச்சையாகவந்த விவகாரத்தைத் தடையன்னியில் செய்யலாமென்றும் இப்படிப்பலவாருகச்சொல்லப்படுவது. மீமாம்சம்.— ஞானசாதனமாகையால் நித்தியநைமித்திகாதிகருமங்களை மனுஷதேகமிருக்கிறபரியந்தஞ்செய்து சந்ததிபரம்பரையாய்ச் செய்துவரும்படி ஆக்ஞாபித்து சரீராந்தத்தில் விடுவதே தியாகசத்தத்துக்குப் பொருளென்றுநிரூபிக்கும். கீதாவாக்கியம்.— சமஸ்தகருமங்களையுந்தீர்க்கமாகச்செய்துநிஷ்கர்மனுயதன்பிரயோஜனத்தைக் குறிக்காதிருப்பதே தியாகசத்தத்துக்குப் பொருளென்றுநிரூபிக்கும்.

## சாங்கியமீமாம்சவபிமதம்.

சாங்கியவபிமதம்.-எப்போதும் இருவினைசெய்யாதாரொருவருமில்லை பிரதக்காகவிருந்து அதனைநடத்தும் அதிஷ்டானம் கர்த்தா கரணம் சேஷ்டா தெய்வமென்னும் ஐந்துகாரணங்களையுமுணர்ந்து மமதகங்காரங்களை நிவர்த்திக்கவேண்டுமென்பது.— அதிஷ்டானம்: உடல்.—கர்த்தா: உயிர்.—கரணம்: மனுதிகள்.— சேஷ்டா: பிராணுபானுதித்தொழில்.—தெய்வம்: சூரியாதிஅதிதேவதைகள். ஆதிகாரணமான அந்தரியாமி. மீமாம்சவபிமதம்.- பிதிர்யானம் தேவயானமென்னும் மார்க்கபேதத்தையாராய்ச்சிபண்ணி சேதனனையும் ஈஸ்வரனையும் விவேகித்துச் சருவசுதந்தரனுன ஈஸ்வரனைச்சரணமடைந்து சரீரமுள்ளபரியந்தம் பகவத்பாகவதவிஷயத்தில் பரதந்திரநிஷ்டையைச்சாதித்து சரீராந்தத்தில்சரண்யத்துவாராமேல்வீடுபெற்று சிவன்முத்தனுய் சதாகாலமும்வாசுதேவகைங்கிரியம்பண்ணிக்கொண்டிருப்பது. அவற்றுள். பிதிர்யானம்.-சரீரத்தோடுசெய்த இஷ்ட பூர்த்த தத்தமென்னும் புண்ணிய கர்மபலத்தால் மரணுந்தம் தூமம் இராத்திரி கிருஷ்ணபக்ஷம் தெக்ஷணயனுதி அதிதேவதைகளால் ஊர்த்துவவழியாய் சந்திர லோகத்திற்சேர்ப்பிக்க அந்தலோகத்தையாசிரயித்துபுண்ணியபோகத்தையனுபவித்து புண்ணியக்ஷயமானமாத்திரம் பின்னுமனுஷபூமியிற்பிறக்கப்படுவது. இஷ்டம்: அக்கினிஹோத்திராதி பூர்த்தம்: வாபிகூபதடாகாதி.-தத்தம்: பசுபூமிசுவர்னுதிதானம்.- தேவயானம்.—சரீரமுள்ளபரியந்தம் சதுர்முகப்பிர்மாவையுபாசித்த உபாசனுபுருஷனை சரீராந்தத்தில் ஊர்த்துவலோகவழியாய்

அக்கினி அகசு சுக்கிலபக்ஷ உத்தராயனுதி அதிதேவதைகளால் பிர்மலோகத்திற்சேர்ப்பிக்க பிர்மசாரூப்பியமுடையனாய் மீட்டும் இவ்வுலகத்திற்பிறக்காமல் உபாசனுதாரதம்மியப்படி பிர்மாதிகடவுளரைப்போல விண்ணுலகவாசியாய் வாழ்ந்துகொண்டிருப்பது.

## மோக்ஷசந்நியாசம்.

மோக்ஷம்.— ஸ்ரீவாசுதேவசற்குருவினுல் சாங்கியமீமாம்ச இறுதியை யொருப்படத்துலக்கி ஆசிரயிப்பவர்க்குச் சீவன்முத்தி விதேகமுத்தியையனுபவமாக்குவது. சாங்கியஇறுதி.— தத்துவசோதனையினுல் பிரத்தேகாத்மாவையுணர்த்தி மமதகங்கரத்தைக் கெடுத்து பவபந்தரோகத்தை நிவர்த்திபண்ணுவது. மீமாம்ச இறுதி.— குணம் சிரத்தை தியாகம் ஞானம் கர்மம் கர்த்தா புத்தி திருதி சுகம் தருமமென்னும் தசலக்ஷணங்களால் தமோகுண ரசோகுணத்தைவிலக்கி சத்துவகுணத்தை விருத்திபண்ணி அந்தச்சத்துவகுணவழியாய் சுத்தசத்துவசித்தசாந்தஞ்சித்தித்து அந்தச்சித்தசாந்தியினுல் முத்திபூமிக்கதிகாரியாக்குவது.

குணம்.-சத்துவரசசுதமசென்னுமுக்குணங்களில் எக்குணமே விட்டதோ மற்றயவிரண்டுகுணமும் படிந்திருக்கும் சத்துவகுணமேலிடில்தெய்வசம்பத்தும் ரசோகுணமேலிடில் மக்கள்சம்பத்துந்தமோகுணமேலிடில் அசுரசம்பத்தும் விருத்திக்கும்.சிரத்தை.— தேவர்களை சரணமடைந்துபூசிப்பது: சாத்வீகசிரத்தை.— யக்ஷராக்ஷதர்களை சரணமடைந்து பூசிப்பது: ராசதசிரத்தை.- பூதப்பிரேதாதிகளைச் சரணமடைந்துபூசிப்பது: தாமதசிரத்தை.— தியாகம்.- நித்தியநைமித்தியாதிகருமங்களை விவேகசூனியனுய்ச் செய்யாமல்விடுவது: தாமதத்தியாகம். — சரீரப்பிரயாசை வருமென்னும்பயத்தினுல் கருமங்களைச்செய்யாமல்விடுவது: ராசதத்தியாகம்.— சமஸ்தகருமங்களையுஞ்செய்து பலாபேக்ஷையை விட்டிருப்பது: சத்துவத்தியாகம். ஞானம்.— ஏகரூபராயிருக்கின்ற ஸ்ரீவாசுதேவை ஆத்மப்பிரிவற ஏகரூபராயுணரப்படுவது சாத்வீகக்ஞானம்.—ஏகரூபரான ஸ்ரீவாசுதேவை பிரதக்காகவுணரப்படுவது: ராசதக்ஞானம்.-ஞானம் பக்தி கருமமென்னு மார்க்கபேதத்தையுணராமல் ஐகிகவழியாய் ஒருதானத்தைக்குறிப்பிட்டு

அதிலிருக்குந்தெய்வமும் அதைப்பூசிக்குமருளாளியுமே தெய்வமாகவுணரப்படுவது: தாமதக்ஞானம்.— அகோசரசுயம்புவாகவிருக்கின்ற ஸ்ரீவாசுதேவை ஒன்றாயும் பிரதக்காயுங்கோசரித்து ஆராதிப்பது: ஞானமார்க்கம்.— அகோசரசுயம்புவாகவிருக்கின்ற ஸ்ரீவாசுதேவை ஓரபீஷ்டவிஷயத்திற் கோசரித்து அன்பின்வழியாய் ஆராதிப்பது: பக்திமார்க்கம்.— பூர்வாசாரியர்கள் அஸ்மதாதிகள்நிமித்தம் சாஸ்திரீகமாகச்சாதித்திருக்கும் தெய்வங்களை அத்துக்காகயேற்பட்டிருக்குங் கிரியாவிதிப்படி ஆராதிப்பது: கருமமார்க்கம். கருமம்.— கர்த்துருத்துவம் பலாபேகைஷ ராகத்துவேஷாதிகளை விட்டுச்செய்வது: சாத்வீககருமம்.- பலாபேகைஷயையுடையனாய் மமதகங்காராதிகளோடுசெய்வது: ராசதகருமம்.— கர்மமும் கர்மத்தின்முடிவும் அதனாலுண்டாகும் லாபநஷ்டமும் பிரர்வருத்தமும் தனதுசக்தியும் ஆராயாமல் அவிவேகத்தால்செய்யுங்கருமம்: தாமதகருமம். கர்த்தா.— பலாபேகைஷயைவிட்டவன் அகங்காரத்தைத்துறந்தவன் ஆரம்பித்தகாரியத்தில் தைரியமும் விடாமுயற்சியுமுடையவன் அக்காரியம்நிறைவேறினும் நிறைவேறாவிடினும் சந்தோஷவிசனமற்றவன்: சாத்விகன்.—ஆரம்பிக்குமுன்னமே கர்மபலத்தையெண்ணுகிறது அந்தப்பலங்கைவருதற்குமுன்னமே ஒன்றுபத்துநூறாய்ப்பேராசைப்படுகிறது தாரதம்மியத்தையுணராமல் யாவருக்கும் உதாரனாயிருப்பது யாவருக்குமுலோபனாயிருப்பது புறக்கிரிகைகளை மனதினாலேமுடித்து மனதினாலேசந்தோஷப்படுகிறது இத்தியாதிலக்ஷணமுடையவன்: ராசதன்.— சாஸ்திரசாதுக்களுக்கெதிர்த்தட்டாயிருந்து விருத்தாசாரங்களைச்செய்பவன்: தாமதன். புத்தி.—இல்லறதுறவறம் பந்தமோக்ஷம் தர்மாதர்மம் தைரியாதைரியம் இதுகளையதாப்பிரகாரம் விவேகித்துணர்வது: சத்துவபுத்தி.— தர்மாதர்ம காரியாகாரியங்களை நிர்ச்சந்தேகமாய் விவேகித்தறியாதது: ராசதபுத்தி.— தர்மத்தையதர்மமாய் அதர்மத்தைத்தர்மமாய் ஆவதையடாததாய் அடாததைஆவதாய் இப்படியெல்லாவிஷயங்களையும் விபரீதமாயுணர்கின்றது: தாமதபுத்தி. திருதி.— சரீர பிராணாதி உயிர்த்தொழில் சுரோத்திர வாக்காதி யிந்திரியத்தொழில் மனாதிகரணத்தொழில் சாட்டியமிகுதியினாலதிகரிக்கில்

பிரத்தேகமாயிருந்து அத்தொழில்களின் போக்குவரவைக் கண்டு அவற்றில் வெறுப்பில்லாததனால் பொருமையானது அதிகரித்து அதனால் சித்தசாந்தம் லப்தமாகி அந்தச்சித்த சாந்தியினால் மனாதிகரணங்களை தத்தம்வரம்பில்நிறுத்தி சரு வேந்திரியங்களுக்கும் இராஜாவாகவிருந்து சமஸ்தமானவியவ காரங்களையும் நடத்தப்படுவது: சாத்வீகதைரியம்.— ஆசாமிகுதி யினால் அர்த்தத்தினிடத்தில் விருப்பத்தைவைத்து அதுலப்த மாகிறபரியந்தம்நடுவிலெவ்வளவுகஷ்டநஷ்டங்கள்வரினும் அர்த்த வாஞ்சையினாற்ச் சகித்திருப்பது: ராசததைரியம்.— சோகம் பயம் தூக்கம் களிப்பு யெதுவரினும் சடத்துவமிகுதியினால் ஒன் றுக்கும்அஞ்சாதிருப்பது: தாமததைரியம். சுகம்.— தத்துவார்த் தத்தையுணர்கின்ற அப்பியாசகாலத்தில் விஷமாயும் தடையற்ற வானந்தத்தைப்பெறுகின்ற பரிபாககாலத்தில் அமுர்தமாயு மிருப்பது: சாத்வீகசுகம்.— மிருகதிருஷ்ணையைப்போல ஒன்றை யொன்றாயுணரும் விபரீதக்ஞானத்தால் ஆரம்பத்தில் அமுர்தமா யும் எவ்வளவுபிரயாசைப்பட்டும் பரிபாககாலத்தில் பலசித்தியில் லாமையால் விஷமாயுமிருப்பது: ராசதசுகம்.— நித்திராரம்பத் தும் நித்திரிக்குமிடத்தும் நித்திரைநீங்கியவிடத்தும் சதாயிடர் களையே இன்பமாகவிளைத்து பீஜரூபமாயொடுங்கிநிற்கும் நித்தி ராசுழுத்தியில் சற்றே சுகம்போலத்தோற்றுவது: தாமதசுகம். தருமம்.—அநாதியாய் பரம்பரையாய்த்தொடர்ந்துவந்த குலத் தொழில் பொல்லாதாகினும் அதுவேபரப்பிர்மப்பியதம் அதுவே சருவசிராக்கியமென்னச் செய்யப்படுவது: சாத்வீகதர்மம்.— அவரவர்க்காக யேற்பட்டிருக்கும் நியதவரம்பில்க்கட்டுப்படா மல் அதனோடு இதரகுலத்தொழிலையுஞ் செய்யப்படுவது: ராசத தர்மம்.— அநாதியாய்வந்த குலத்தொழில் முழுதையும்விட்டு சமதமாதிமுமூக்ஷுசம்பத்தும் வாத்சல்ய சுவாமித்துவாதி சற் குருசம்பத்தும் ஞானசக்தியாதி ஈஸ்வரசம்பத்தும் அடையாமல் விபரீதக்ஞானம் உறப்பேறி பாஷண்டவிருத்தியினாற்ச் சீவிக்கப் படுவது: தாமததர்மம்.

## சாங்கியமீமாம்சஒருமை.

கருமம் ஞானம் தியானம் தியாகம் சாந்தியென்னும் பஞ்ச

சாதனபரிபூர்த்தியினால் ஸ்ரீவாசுதேவின் மகத்தானசொருபத்தை ஆத்மப்பிரிவறத்தெளிந்து அதைப்பற்றிநின்று சமஸ்தகைங்கிரியங்களையுஞ்செய்து ஸ்ரீவாசுதேவகிருபையினால் பவரோகத்தையொழித்து சீவன்முத்திப்பதத்திலிருத்தப்படுவது.

சீவன்முத்தி.-சருவமங்களம் முத்தானுபாவியம் கருணாலோசனம் தயாரூப சுத்தசத்துவாத்மகம் ஆசிரயரக்ஷகம் சத்துவசூனிய மிசிரசத்துவாதி அபகுணவர்ச்சிதம் ஏயகுணப்பிரத்தேகம் கல்யாணகுணவிசிஷ்டம் சரீரத்திரய அவஸ்தாத்திரய அபிமானநாமத்திரய நவதோஷவர்ச்சிதம் சத்துச்சித்தானந்த நித்தியபூரண குணாகாரம் சருவேஸ்வராத்மகம் நித்தியானந்த சத்தானுவித்தம் தேவாதிதேவ தேவமுனீந்திராதி முத்தரூபசகுணாத்மகம்முமூக்ஷுசேதனபூசிதவிக்கிரகம்சதேகம்:சீவன்முத்தி

விதேகமுத்தி.-ஆதிமத்தியாந்தரகிதம் ஆந்தர்ப்பாகிய அதோஊர்த்துவாதி சருவத்திரசாக்ஷிபூதம் மத்தியகரம் உதயாஸ்தரகிதம் நீதலோஜனம் சுயம்பிரகாசம் குணகுணவர்ச்சிதம் தேவமனுஷ நரக திரியக்காதி தத்தங்கருமானுரூப நீதபலப்பிரதம் சருவாத்மலோஜனம் நீதசாநித்தியம் கல்பனாரகிதம் அகளங்கநேத்திரம் ஆசிரயபவபந்தவிசர்ச்சனம் நிர்க்குண நிரவயவ நிரதிசய நிரானந்த நிஷ்கிரியாதி விதேகரூபப் பிரதிரூப சதேக சகுணவர்ச்சிதம் தேகேந்திரியமனோரகிதம்மனச்சக்ஷுராதிசர்வேந்திரியப்பிரகாசகாரணம் சோமசூரியாக்கினியாதி தேஜோப்பிரதாயகம் தேஜோதேஜவத்துவம் தனதன்னியபக்ஷவிபக்ஷரகிதம் சர்வநாம சர்வரூப சர்வதேச சர்வகால சர்வாவஸ்தாஜொலிதம் சர்வத்திரதேவாதிதேவம் தேவமகாத்மீகம் அவாங்மனோகோசரம்: விதேகம்.

சந்நியாசம்.—இதுவரையிலும் அனுக்கிரகித்த ஸ்ரீவாசுதேவசற்குருவினிடத்திற் சித்தத்தைவைத்து சீவன்முத்தி விதேகமுத்தியென்னும் தொந்துவபிடரையகற்றி அந்த சித்தத்துவாரா ஸ்ரீவாசுதேவினால் நடாத்தும் அதியற்புத அதிசயமதுரங்களை நவநவமாயனுபவித்துப் பேரானந்தத்தையடையும்பொருட்டு சித்தசிவாதிகளை தத்தம்வரம்பில் நிலைநிறுத்தி இதரசேஷ்டிதங்களை நிவர்த்திக்கப்படுவது.

## பரமார்த்ததெரிசனம்.

ஸ்ரீவாசுதேவநோக்கத்தால் சாங்கியயோகம் தெய்வயோகம் இரண்டும்ஒருங்கேசித்தித்து அறிபவன் அறிவு அறிபொருளென்னும் திரிபுடிபீஜமாக விருக்கின்ற அவித்தையாகட்டடம் உடைபட்டு சர்வமும் ஆனந்தபூர்த்தியாய்த் தடையற்றுவிளங்குவது. அவற்றுள். சாங்கியயோகம்.—சாக்கிர சொப்பன சுழுத்தியென்னும் சமஷ்டி வியஷ்டிரூபமான அவஸ்தாத்திரய பிரபஞ்சசாலங்களைப்பிரதக்காகவிருந்து உணரப்படுவது. தெய்வயோகம்.—திருவுள்ளக்களிப்பினால் பிர்மானந்தஸ்ரீவாசுதேவவாறுதிகணாபிரண்டு சர்வாவஸ்தைகளிலும் தடையற்றுவிளங்குவது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணாய குருப்பிர்மணேநம:



உ

ஹரி: ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:

துவாதசம்...சரமோபாயவிதாயகம்.

## சரமோபாயம்.

ஸ்ரீவாசுதேவநோக்கத்தால் தத்தங்கருமங்களை விதிபூர்வகமாகச்செய்து ஓம் தத் சத்தென்கின்ற ஞானவிப்பிரனாய் சாங்கிய சாதக சாத்திய சுதர்ம யோக சர்வமென்னும் தியாகசட்கரூபத்தால் சித்தசாந்திக்கிவிரோதமான ஆத்மவகங்கரத்தை நிவர்த்தித்து இதுவேமுடிந்தகெதியென்று சரமோபாயத்தையுணர்த்தி மோக்ஷம் சரமோபாயம் பலப்பிரதமென்னும் விதாயத்திரய ரூபமாய் கீதாசாஸ்திரத்தைப் பரிபூர்த்திபண்ணி சமர்த்திபலப்பிரதம் மோக்ஷபலப்பிரதம் அர்ச்சராதிபலப்பிரதமூன்றையும் பிரகாசப்படுத்துவது.

சாங்கியதியாகம்.—பாவகருமங்களைப்போல சுகுர்தகருமங்களையும் விசர்ச்சித்து சரீரம் கர்த்தா கரணம் கிரியை தெய்வமென்னும் பஞ்சசாதன விசாரதனாய் சுகுர்தபாவமெனச்சுட்டாது உன்னுதலற்று எதிரிடத்தோன்றிய வர்த்தமான கிரியையைச்

செய்யப்படுவது. சாதகதியாகம்.—மனதின்கண்ணுள்ள மயக்கத்தைப்போக்கித் தத்துவக்ஞானத்தைக் கொடுப்பதற்குக்காரணம்யாகதவதானங்கள்முதலிய சற்கருமங்களாகையால் அக்கருமங்களைச் சரீரமுள்ளபரியந்தம் சாதித்து விதேகப்பிராப்தியில் விடவேண்டுமென்பது. சாத்தியதியாகம்.—பரோபகாரார்த்தம் அதிகாரானுரூபமாய் இம்மையைக்குலைத்து மறுமையைநிறுத்தியும் மறுமையைக்குலைத்து இம்மையைநிறுத்தியும் இம்மைமறுமைகளை ஒருங்கேநிறுத்தியும் அவற்றிற்பந்தப்படாது நிருதநிருத்தியனாய் அதனால்வரும் பெரிய பிரயோஜனத்தைச் சிந்தியாதிருப்பது. சுதர்மதியாகம்.—மமதகங்கரத்தைவிட்டுப் பிர்ம க்ஷத்திரிய வைசியசூத்திரர்க்குரிய குலஆராதனத்தைக் கைங்கிரியரூபமாய்ச் செய்யப்படுவது.—சமம் தமம் தவம் தூய்மை பொறை கல்வி ஞானம் இவையே பிர்மவித்துக்களான: விப்பிரஆராதனம்.—ஆதிபத்தியம் உதாரம் அஞ்சாமை சௌரியம் தைரியம் உச்சாகம் புறங்கொடாமை இவையே பிர்மவித்துக்களான: க்ஷத்திரிய ஆராதனம்.—கிருஷி வாணிப கோரக்ஷக திரவியசம்பாதனமே பிர்மவித்துக்களான: வைசியவாராதனம்.-பரம்பரா வம்சாசரணைமாய்வந்த குலத்தொழில் பொல்லாதாயினும் அதுவேசருவசிராக்கியபரப்பிர்மநியதமெனச்செய்யப்படுவது பிர்ம்மவித்துக்களான: சூத்திரஆராதனம். யோகதியாகம்.—ஸ்ரீவாசுதேவிஷேக்கத்தால் அந்தக்கரணஞ்சுத்தியாகிஅந்த அகக்கரணசுத்தியினால் திடச்சித்தமுண்டாகி அந்தத்தீர்க்கசித்தத்தினால் ராகத்துவேஷம்வர்ச்சித்து அதனால் மனமொழிமெய்களடங்கி அவ்விடத்திற்றோற்றும் களிப்பு காமம் மமதகங்கரம் வெகுளி வலியென்னும் சட்டேபதமான ஆத்மவகங்கரந் தவிர்ந்து சித்தசாந்தம் லப்தமாகி அதனால் ஸ்ரீவாசுதேவின் மகத்தானஆனந்தரூபத்தைப்பற்றிநின்றுசமஸ்தகருமங்களையுஞ்செய்து பவரோகத்தை நிவர்த்திபண்ணுவது. சர்வதியாகம்.— மமதகங்கரம்வர்ச்சித்துஇஷ்டாநிஷ்டமெனப்பாராமல் ஸ்ரீவாசுதேவினால் நியமிக்கப்பட்ட தெதுவோ அதுவேபரமகைங்கிரியமெனச் செய்யப்படுவது.

## சரமோபாயம்.

ஞானகர்மோபாஸ்தியைச் சாதித்தடைவதற்கு அசக்தா

ளாகிய அஸ்மதாதிகளுஜ்ஜீவிக்கும்பொருட்டு சரணாகதியே முடிந்த உபாயமென நிரூபிக்கப்படுவது. சரணாகதி.— திருஷ்டபல சாதனங்களோடு மோக்ஷபலசாதனங்களாகிய எல்லாத்தருமங்களையும் அடியோடேவிட்டு ஒருவனாகியவென்னை ரக்ஷகமாகவடைநானுன்னை சமஸ்தமானபாவங்களிலேநின்றும் முத்தனாம்படிபண்ணக்கடவேனென்கின்ற ஈஸ்வரவாக்கியத்தை யனுசரித்து நிரோதுவத்துவ சகேதுவத்துவ சமர்த்தித்துவமென்னும் அதிகார பேதத்தாற் சரணாகதியைத் திரிவிதரூபமாகநிரூபிப்பது. ஈஸ்வர வாக்கியம்.—சர்வதர்மான் பரித்தியஜ்ய மாமேகம் சரணம் விரஜா அஹந்துவா சர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஸுசஹா.

நிரோதுவத்துவம்.— திருஷ்டாதிருஷ்டப் பிரயோஜன சாதனங்களோடு திரிகரணவியாபாரங்களையும் அடியோடேவிட்டு சம்ரக்ஷகனிடமாகத் தன்னுடையஆத்மாவைச் சமர்ப்பணம்பண்ணி சுசக்தியிழந்துநிற்கின்ற சரணாகதி.

சகேதுவத்துவம்.—விதித்தனசெய்தல் விலக்கியதொழிதல் ரக்ஷிப்பானென்னுந்துணிவு ரக்ஷிப்பாயென்னும் பிரார்த்தனை நைச்சியவிண்ணப்பம் பரநியாசமென்னச் சட்பேதமாயிருப்பது. அவற்றுள். விதித்தனசெய்தல்.— பூருவோத்தரவிரோதமில்லாமல் சமஸ்தமான கருமங்களையும் விதிபூர்வகமாகச்சாதித்து பரித்தியாக பலத்தியாக அற்பண அவதாரணதிருபத்தால் பலப்பிரயோஜனத்தை விசர்ச்சித்து சருவேஸ்வரனையேசரணாகவடையப்படுவது. விலக்கியதொழிதல்.- ரக்ஷகப்பிரதிபந்தகமான மந்தராந்தர தேவதாந்தர சாதனாந்தரமுதலிய இதராந்தரங்களைவிசர்ச்சிக்கப்படுவது. ரக்ஷிப்பானென்னுந்துணிவு.— சரணாகதிபண்ணிய நம்மை பாதகாதிகளைக்குறித்துவிலக்காமல் ரக்ஷிப்பானென்கின்ற திடமானநம்பிக்கை. ரக்ஷிப்பாயென்னும்பிரார்த்தனை.— சத்தியோவதிகாரிகளால் அபீஷ்டப்பிரயோஜனத்தைப் பிரார்த்தனாரூபமாகவரித்து என்னைரக்ஷிக்கவேண்டுமென்று முறையிடுதல். நைச்சியவிண்ணப்பம்.— சருவேஸ்வரனுக்கு அருகமில்லாத திரிகரணலோப அத்தியந்தநீனத்துவத்தைக்குறித்துச் சந்நிதிபூர்வகமாக அடிக்கடிவெளிப்படுத்துதல். பரநியாசம்.— சர்வபரங்களையும் சருவேஸ்வரன்பக்கலிலேபுகவிட்டு நிற்பாரணகநின்று ஙிங்கர

பாவமிருத்து நான்தீனன் கிருபணன் ஏழையென்று தன்னுடைய கார்ப்பண்ணியத்தைவெளியிட்டுக்கைங்கிரியஞ்செய்துவருதல்.

சமர்த்தித்துவம்.— ஆனுகூல்யசங்கற்பம் பிராதிகூல்யவர்ச்சனம் ரக்ஷணவிஸ்வாசம் கோப்துருத்துவவரணம் ஆத்மநிக்ஷேபம் கார்ப்பண்ணியமென்னச் சட்பேதமாயிருப்பது. அவற்றுள் ஆநுகூல்யசங்கற்பம்.— வாக்கியகைங்கிரியபரராய் வாசுதேவினடியைப்பற்றிநின்று கிதாசாஸ்திரவிதிப்படி அவரவர்க்காகயேற்படுத்திய சுதர்மவரம்பை வழுவாது நிறுத்தக்கடவோமென்று தீக்ஷிப்பித்துக்கொள்வது. வாக்கியகைங்கிரியம்.— கிதாசாஸ்திரவிதிப்படி ஹரி சிவ விதி இந்திராதி வேதவிஹிதமான சருவதேவுக்கும் ஆராதனையைப்பண்ணி அவையாவுக்கும் ஆதிபத்தியமுடையதாய் சருவஜெகத்காரணமாகவிருக்கின்ற வாசுதேவஒருவனையே சரணகவடையப்படுவது.பிராதிகூல்யவர்ச்சனம்.-தத்தம் சுதர்மவரையையிழந்து அவற்றைஇழந்தோமென்னும் அனுதாபருணியராய் பராளுடையதர்மத்தையுங் குலைத்தற்கென்னும் ஈஸ்வரவிரோதிகளான பாஷண்டசுதந்தரர்களைக் கட்டோடும்நிவர்த்திக்கப்படுவது. ரக்ஷணவிஸ்வாசம்.— ரக்ஷகளாகிய படைப்பின் மகிமையால் படைப்பவனாகிய ரக்ஷகன் அற்புதசிரேஷ்டத்தைத்தெரிந்து அடியேனை ரக்ஷிக்கவேண்டுமென்று திடமானநம்பிக்கையைச்செலுத்துவது. கோப்துருத்துவவரணம்.— கோப்தாவினிடத்திலுண்டாகி கோப்தாவினிடத்தில்விளங்கி கோப்தாவினிடத்தில் ஒருபிரதேசத்திலொடுங்குநிற்கின்ற ஹரி சிவ விதி இந்திராதி சருவலோக சருவப்பிராணிகளையும் கோப்தாவுக்கனன்னியமாகவுணரப்படுவது. ஆத்மநிக்ஷேபம். — பிரகிருதித் தொடக்கைவிலக்கி சுதசித்தமாகவிருக்கின்ற தன்னுடஆத்மாவை சரண்யனை வாசுதேவினடிக்கமலங்களுக்கு தெக்ஷிணையாகச்சமர்ப்பிப்பது. கார்ப்பண்ணியம்.—சுவாகங்காரத்தையகற்றி வாசுதேவினடிக்கடியாய்நின்று பரதந்திரநிஷ்டையைச்சாதிக்கப்படுவது.

உபயவிபூதியையும் நிலைநிறுத்துவது: சமர்த்திபலப்பிரதம்.- லீலாவிபூதி யொன்றைமாத்திரம் நிலைநிறுத்துவது: மோக்ஷபலப்பிரதம். சரீராந்தத்தில் லோகாந்தரமாகிய நித்தியவிபூதியையடைவிப்பது: அர்ச்சராதிபலப்பிரதம்.

## அர்ச்சராதி.

சீரார்பரமபதம் சேரவாவென்றழைத்துப்
பேராருதேசிகர்தன் பின்புவரச்சொன்னாரோ. (க)

காலமொடுதேசந் திக்குக்கருமமுடல்க்
கோலமெல்லாம்நீக்கிக் குருபதத்தைச்சார்ந்தனையோ (உ)

ஆதித்தியாதி அகிலலோகங்களெல்லாம்
பேதித்துமேல்ப்போம் பிரணவத்தேரேறினையோ (ங)

ஊராரிழுக்கவடம் உள்ளிருப்போன்சாரதியாய்
நேராய்க்கபாலவழி நிசியறுத்துச்சென்றாயோ (ச)

ஆவரணமேழும் அகற்றிவருசூரியனைத்
தேவரெல்லாம்போற்றி ஜெயஜெயெனவாழ்த்தினரோ (ரு)

பாசாதியைக்கழற்றிப் பகலவன்போல்மெஞ்ஞான
தேசாகியநதியில் திவ்யவுருப்பெற்றனையோ (சா)

பூஷணமாயுதங்கவசம் பொற்பதம்பீதாம்பரநால்
ஆசனம்வாகனமாதி அற்புதமாய்ச்சேர்ந்ததுவோ (எ)

விரசாநீரதமெழுந்த மெய்க்குருவினாதரத்தால்
அரசாகிஅய்யோத்தி ஆழ்பவனிவந்தாயோ (அ)

ஓராயிரம்பரிதேர் ஓராயிரங்கரியாள்ப்
பேராயிரமுடைநம் பெம்மானைச்சூழ்ந்ததுவோ (கூ)

அணியணியாய்த்தேவ ரடியடியாய்நின்னேவல்
பணியடியார்க்கேவல்ப் பணியாளாய்நின்றாரோ (ய)

சத்திரசாமரமிரட்டத் தாலவட்டம்ஆலவட்டம் [துவோ]
நித்திலதோரணங்கொடிகள்நிறைநிறையாய்ச்சென்ற (கக)

ஆரணங்கள்சொல்லி யமரர்புடைசூழ்ந்துவர
பூரணகுஞ்பஞ்சிலர்கள் போற்றியெதிர்கண்டாரோ (யஉ)

ஆர்த்தியெடுப்ப அதிர்பல்லியமுழங்க
கீர்த்திப்பிரதாபதுதி கேட்டுவலம்வந்தாயோ (யங)

ஆசுசொல்லித்தேவ ரக்ஷதைபுஷ்பம்பொரிகள்
ஈசர்க்குவப்பா யிறைத்தெங்குந்தூவினரோ (யச)

சந்தனங்கஸ்தூரிபன்னீர் சவாதுபுனுகாதிதிவ்ய
கந்தபரிமளமெவர்க்குங் கமகமெனப்பூசினரோ (௯௫)

திருமாளிகைபுதுக்கித் திருக்கோஷ்டிக்கண்ணாணிங்கே
வருமாறையெண்ணி மகிழ்ந்துகுதிகொண்டாரோ (௯௬)

அபாராசிதைநகர்க்கு அரசாய்ப்பவனிசுத்தி
சபாராஜராஜேந்திர சந்நிதிமுன்வந்தாயோ (௯௭)

தேர்விட்டிரங்கித் திருக்கோவிலுட்புகுந்து
பேரிட்டநம்பரம பிதாவினடிசூட்டினையோ (௯௮)

அஷ்டபணிசெய்து அடித்தொழுதபுத்திரனை
இஷ்டபிதாமார்பி லெடுத்தணைத்துக்கொண்டாயோ (௯௯)

அமரர்தொழுநம்பரம னகமகிழவாதரித்து
குமரவெனத்தாங்கியுன்னை குலமகட்குயீந்தாரோ (௧௦௦)

திருமாமகள்வாங்கிச் சீர்திருத்திப்புத்திரனைக்
குருமாமணியாக்கிக் குவலயத்துக்கேவினரோ (௧௦௧)

நித்தியசம்பந்தமெல்லாம் நேசமதாயாசரிக்கப்
பத்திசெய்வோர்க்கெல்லாம் பணியாளாய்நின்றாயோ (௧௦௨)

துஷ்டர்களைப்போக்கி துரிதமெல்லாம்நீக்கி
சிஷ்டர்களைப்போற்றி ஸ்ரீசைலம்வந்தாயோ (௧௦௩)

அந்தநகர்க்கரசனெம்மை ஆளுகின்றகோமானை
சிந்தைதனிற்கொண்டே திருக்கோஷ்டிகண்டனையோ ()

பூலோககோஷ்டியினைப் புந்திபுறக்கண்டதுபோல்
மேலோககோஷ்டிதனை விழிகுளிரப்பார்த்தனையோ (௧௦௫)

வாழிதிருமாமகள்சீர் வாழிசொக்கநாயனார்தான்
வாழிகுருகோதைகுழாம் வாழியெனவாழ்த்தினையோ (௧௦௬)

திருமணிமாமண்டபத்தைச் சேர்ந்துநித்தியகுழாங்களுடன்
பரமனடிவாழ்த்திநித்திய பணிசெய்துவாழ்ந்தனையோ (௧௦௭)

சதேகபணிசெய்துபர சற்குருவேதப்பரனாய்
விதேகபணிசெய்துவெகு தேகபணிசெய்தனையோ (௧௦௮)

திருமாமகள்வாழி திருக்கோஷ்டியூர்வாழி
கருமாமுகில்நிரத்துக் கண்ணபிரான்வாழியதே (உசு)
சீர்தாலம்ஓப்புகண்ணி முப்பதுஞ்சேய்சொல்லயிரு
பார்தாங்கிநீவாழ்கப் பரமபணியெனக்கருளே. (௩௰)



பலப்பிரதம்.—சரணாகதிகளுக்குப்பலம் கைங்கிரியம் கைங்கிரியத்துக்குப்பலம் பகவத்கடாக்ஷம் கடாக்ஷத்துக்குப்பலம் மோக்ஷம் மோக்ஷத்துக்குப்பலம் அர்ச்சராதிவிதிப்படி நித்திய பூமியையாசிரயித்து இப்படியே சர்வாவயவசகிதமான திவ்விய சொரூபத்தைப்பெற்று நித்தியசூரிகளோடு நித்தியகைங்கிரியபரராய் ஸ்ரீபகவானாகிய சர்வேஸ்வரனை இடையறாது சதாசேவித்துக் கொண்டிருப்பது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணாய குருப்பிர்மணேநம:



உ

ஹரி: ஓம்
ஸ்ரீபரமசற்குருவேநம:



துவாதசாந்தம் பலப்பிரதவிதாயகம்.

## பலப்பிரதம்.

அந்தந்த அத்தியாயமுடிவிலிருக்கின்ற சரமப்பொருளையனுசரித்து கீதாசாஸ்திரசாரமாய் அஷ்டாதச பலப்பிரதத்தையுணர்த்தி அத்துவித தொய்த சுபாவ விசிஷ்ட சமர்த்தியென்னும் அளவற்ற பேதவாதங்களினுற் சாதிக்கின்ற கீதார்த்தத்துக்குப் பொருள் ஒருவனாகிய வாசுதேவபரப்பிர்மமெனத்தெரிந்து அவ்வர்த்தத்தை சற்குருமுகமாயுணரப்படுவது.

அஷ்டாதசபலப்பிரதத்தில் பிரதமம்...விஷாதயோகபலப் பிரதம்.—தாபாக்கினிக்கிஆற்றுமல் சித்தசிவாதி சேஷ்டிதம்நழுவி நிர்ச்சேஷ்டிதனாய் ஆசிரயித்தஅதிகாரிக்கி ஸ்ரீபகவான் சாங்கிய யோகவிதிப்படி உடல் உயிர் பரமென்னும் தத்துவத்திரயத்தை

யுபதேசித்து சோகநிவர்த்திசெய்யப்படுவது.-அநித்தியமாய் இருவினைக்கீடாய் வந்துவந்து நசிப்பது: உடல்.-அளவற்றதேகங்களைக் கிரகித்தும் விசர்ச்சித்தும் அதற்குரியவிகாரத்தைப் பொருந்தாமல் நித்தியனாய் நிர்விகாரியாயிருப்பது: உயிர்.— அக்ஷரமாய் சருவஜெகத்காரணமாயிருப்பது: பரம். துவிதீயம்...சாங்கியயோகபலப்பிரதம். — சருவஜெகன்மாதாவாகிய மகாலெக்ஷுமியைத் திருமார்பத்தில்வைத்தருளிய ஸ்ரீபகவான்ஆசிரயிப்பவருக்கு பாபஉபேயமிரண்டுந்தானாகநின்று வேதமுடிவாகிய தமதுபரமாத்மசொரூபத்தை யுபதேசிப்பது. திரிதீயம்...கருமயோகபலப்பிரதம்.— புத்திக்கிப்பரமாய் பரமாத்மாவுக்கனன்னியமாக விருக்கின்ற அந்தராத்மதேவையுபதேசித்து மனதிலுள்ள மயக்கத்தைப்போக்கி அந்தமனதோடுகலக்கின்ற காமாதிசிவசேஷ்டிதங்களை அதனோடுகலக்காது உசார்ப்பண்ணுவது. சதுர்த்தம். ஞானயோகபலப்பிரதம்.-அஞ்ஞானகிருதமாய்ப்பிறந்து அகக்கரணத்திலபிவிர்த்தியாயிருக்கின்ற சந்தேகத்தை ஞானவாளினுற்சேதித்துலக்ஷியத்தை வாசுதேவினிடத்தில்வைத்து வாசுதேவப்பிரோகத்தால் உன்கருமத்தைப் பலிதமாக்கிக்கொள்ளென்றுணர்த்துவது. பஞ்சமம்.. கருமசந்நியாசயோகபலப்பிரதம்.— தத்தோர்தவசுக்கும் சாதியோர்தொழிலுக்கும் நீதற்றவெலருக்கும் சேருதற்கிடமான ஸ்ரீவாசுதேவினை ஆதியென்றும் அந்தமென்றும் பிரிக்காமல் தங்களாலியன்றமட்டும் ஓதி சருவமும் வாசுதேவசொரூபமெனத் தெளிபவர் இனிமேல்ப்பிறவார்களென்றுணர்த்துவது. சஷ்டம்... ஆத்மப்பிர்மயோகபலப்பிரதம்.—தொந்துவரூபமான இருவினையிடரைப்போக்குதற்குப் பலவாரான யோகத்தைச்சாதிக்கும் யோகிகளனைத்தினும் மனதையும் அன்பையும் வாசுதேவினிடத்தில் வைக்கின்ற யோகியொருவனே வாசுதேவினால் சந்தோஷப்படுகின்றானென் றுணர்த்துவது.

சத்தமம்...விக்ஞானயோகபலப்பிரதம்.—பவரோகத்துக்கு ஔஷதமான ஸ்ரீவாசுதேவை ஆசிரயித்து அறிதற்கரியபிர்மமும் அந்தப்பிர்மத்தையறிகின்ற ஞானமும் அந்தஞானமார்க்கமாய் வாசுதேவப்பிரோகமாய் நடக்குங்கருமமும் இந்தச்சரீரமிருக்கும் போதே தெரிசித்து சிந்தித்தவழியாய் வந்ததேகமும் தேகபரம்

பரையாய்ப் பந்தித்துவந்த புருடனும் அந்தப்புருடன் சரீராந்தத்தில் மனதையொடுக்கி சிந்தித்தரூபத்தை யடைகின்றகிரமமுந் தெரிந்து சதாவாசுதேவைச்சிந்தித்து வாசுதேவ சாக்ஷாத்காரம் பண்ணினயோகிசரீராந்தத்திலும் வாசுதேவையே அடைவனென் றுணர்த்துவது. அஷ்டமம்..அக்ஷரப்பிர்மயோகபலப்பிரதம்.—சருவத்திர யோகத்திற்கும்பலதாதாவாயிருக்கின்ற அக்ஷரப்பிர் மத்தினிடத்தில் லக்ஷியம்வைத்து தேவயானம் பிதிர்யானமென் னும் இரண்டுமார்க்கமும் ஆராய்ச்சிபண்ணினயோகி வேதத்தை யோதி வேதவிதிப்படி யாகதவ தானதிகளைக் குற்றமறச்செய்த விப்பிரோத்தமன் அடைதற்கேதுவாய சிரேஷ்டபதத்தையடை ந்து மோக்ஷமும் அடைவனென்றுணர்த்துவது. நவமம்...ராஜ வித்தியாராஜகுஹ்யயோகபலப்பிரதம்—வைசியரும் சூத்திரரும் பெண்களும் மேன்மையானக்ஷத்திரியரும் பிராமணரும் தத்தங் குலாசாரவரம்பிலிருந்து ஸ்ரீவாசுதேவையாசிரயித்து வாசுதேவப் பிரீதியினேடுவணங்கி வாசுதேவைப்பொருந்துவராகில் வாசுதே வையே அடைவரென்றுணர்த்துவது...தசமம்.விபூதியோகபலப் பிரதம்.—வாசுதேவபீஜத்தில்நின்றுதித்த சர்வலோக சருவப் பிராணிகளாகிய சமஸ்தஜஸ்வரியங்களும் வாசுதேவுக்கன்னிய மாகாமல் ஒருபிரதேசத்திலொடுங்கி முடிவில் வாசுதேவசொரூப மேசேடிக்குமென்றுணர்த்துவது. ஏகாதசம்.. விஸ்வரூபயோக பலப்பிரதம்.-நிரேதுவாய் வாசுதேவகிருபையினுல்காட்ட பாக் கியவான்களால் தெரிசிக்கும்விஸ்வரூபத்தைத் தேவர்முதலிய யா வராலும் எத்தனருபமாயறியக்கூடாத அற்புதாகாரத்தை வாசு தேவைத்தவிர மற்றெருருதொடக்குமில்லாது வாசுதேவினிடத் தில் அன்புசெலுத்திய தொண்டர்களடைவரென்றுணர்த்துவது. துவாதசம்...பகவத்பக்தியோகபலப்பிரதம்.—கோசர வகோசர மாகவிருக்கின்ற வாசுதேவசொரூபத்தை அநாயாசமாய் லகு லகுவாய்பக்திசெய்தற்குத்தகுதியாய் மயக்கத்தைப் போக்கி ஆசி ரதருஜ்ஜீவித்தற்கேதுவாய் கருமம் ஞானம் தியானம் தியாகம் சாந்தம் சர்வாத்மப்பிரியம் யேகாக்கிரசித்தம் வாசுதேவப்பிராப் தியென்னத் தரந்தரமா யுணர்த்தியபொருளை இயன்றமாத்திரம் உணர்ந்து மமதகங்காரத்தைதவிசர்ச்சித்து ஆசையால் அன்பால்

சாதியால் ஒழுக்கத்தால் அற்பணத்தால் பத்திரத்தால் காயால் கனியால் நீரால் நினைவால் கூடியமாத்திரம் பூசித்து நம்பிக்கையோடு விஸ்வாசிக்கின்ற பக்தஜனங்கள் யாவராகிலும்அவர்களே வாசுதேவப்பிரியரான சருவசிரேஷ்டரொன் றுணர்த்தப்படுவது.

திரயோதசம்...க்ஷேத்திரக்ஷேத்திரக்ஞயோகபலப்பிரதம்.-பிறப்பிறப்புப் பிணிமூப்பாதி விகாரத்தோடுகூடிய உடம்பையும் அதற்குவிலக்ஷணமாய் நிருவிகாரியாயிருக்கின்ற உயிரையும் சருவ ஜெகத்காரணனாய் சருவக்ஷேத்திரக்ஞனா யிருக்கின்ற ஈஸ்வரனையும் விவேகித்தறிபவர் வீடுபெற்றினவரொன் றுணர்த்துவது. சதுர்த்தசம். .குணத்திரயயோகபலப்பிரதம்.-சத்துவகுணவழியாய் சத்துவ ரசசு தமசென்னும் முக்குணத்தொடர்புநீங்கிய புண்ணியாத்மாக்கள் பரிச்சேதமில்லாத ஞானமும் கேடில்லாதமோக்ஷமும் தடையில்லாத ஆனந்தமும் சாஸ்வதமான தருமமும்எவ்விடத்தும் எக்காலத்தும் யாவர்களுக்கும் உபதேசித்துவரும் ஸ்ரீவாசுதேவனிடத்திலிருந்து உண்டாகப்பெறுவரொன் றுணர்த்துவது. பஞ்சதசம்...புருஷோத்தமப்பிராப்தியோகபலப்பிரதம்.-இதராந்தரங்களைவிட்டு ஆனந்தரூபரான ஸ்ரீவாசுதேவனிடத்தில் சித்தத்தை வைக்கும் உத்தமபுருஷனால் விருப்பமுறும் ஆசாசங்கமான கருமப்பிரயோஜனமுழுதும் அவனுக்குலப்தமாகுமென் றுணர்த்துவது. சோடசம். .தெய்வாசுரயோகபலப்பிரதம்.-பலப்பிரதத்தை தெய்வதம் ஆசுரமென்றிரண்டுபிரிவாயுணர்த்தி ஆவதானதெய்வசம்பத்தைக் கைக்கொண்டு அடாததான அசுரசம்பத்தை மனத்திலும் நினையாமல் உன்மனுஷகருமத்தைப் பொருந்துவாயென நிரூபிப்பது.

தெய்வதம்.—பௌதிக விலிங்க முத்தியென்னும் தேவைத்திரயரூபமாயுணர்த்துவது. அவற்றுள். பௌதிகதேவான்.— பாவமிகுதியினால் உடலைவிட்டு உயிரைப்பிரிக்கப்படாமல் பாஞ்சபூதகிரஸ்தமான சீவப்பிராணிகளிருக்க பிராணயாத்திராகாலத்தில் உகரதேகாதி ரோகபீடிதத்தால் க்ஷீணித்த பௌதிகதேகத்தை ...படுத்தி நீதியரசனாலேற்படுத்திய நரகவாதையைக்கடந்து ...னமார்க்கமாய் இஷ்ட பூர்த்த தத்த நியமவிரதாதி சுகிர்த ...து புண்ணியக்ஷயமானவிடத்து மனுஷியாதி

ஜெனனத்தையெடுக்கப்படுவது. இலிங்கதேவாள்.—பக்திவைராக்கிய ஞானக்கிரிகையாதியினல் சோபாதிக ஈஸ்வரனை விதிதகே வாக ஆராதித்து அந்தத்தேவமகிமையால் பௌதிகதேகத்தை வேறுபடுத்தி சடத்துவாவிதிப்படி அந்தத்தேவபூமியை ஆசிரயித்து தேவபூதியைப்பெற்று கல்பமுழுதும் லிங்கசரீரத்தோடிருந்து அந்தந்தத்தேவதாகைங்கிரியத்தைச்செய்து இப்படியே கல்பங்கள்தோறும் அந்தந்தத்தேவர்களோடு தோற்றியொடுங்குவது. முத்திதேவாள்.—கேவலத் துவய யேக சம்பூரணமென்னச் சதுர்விதரூபமா யிருப்பது. அவற்றுள். கேவலம்.— சமஷ்டி வியஷ்டியென்னும் சோபாதிகரூபமான சாட்டியப்பிரபஞ்சத்தை வேறுபடுத்தி மூலவைகங்கரத்தை சமாதிரூபமான சின்மாத்திரநிஷ்டாமகிமையினல் நசிப்பித்து சகஜானுபவத்துக்கு வெளியிட்டு தேகேந்திரியமனமாதி பிராணபுத்திவிலக்ஷணமாய் நித்தியமாய் நியாமியமாய் தாரியமாய் அணுவாய் அசிந்தியமாய் ஞானசிரயமாய் சேஷபூதமாய் சுயம்பிரகாசமாய் சுவதச்சுகியாய் சர்வமும் அகம்அகமென்னும் உறப்பேரி உணர்வுருவாக வநுபவப்படுவது. துவயம்.—சேதனனையும் ஈஸ்வரனையும் விவேகித்து சேதன பலப்பிரதமான கைவல்யவாழ்வை துச்சமாய்க்கண்டு நிருபாதிக பரப்பிரம பரமேஸ்வரனைச் சரணுகதிபண்ணி சரண்யத்துவாரா சுத்தசத்துவாத்மகமான நித்தியபூமியென்னும் அபராசிதைநகரத்தை ஆசிரயித்து நித்தியசூரிகளோடிருந்து சேர்த்திப்பிரிவு முழுதினும் மாறுபடாத நித்தியகைங்கிரியம் பண்ணிக்கொண்டிருப்பது. ஏகம்.—தேசகாலாவஸ்தைகளின்றி ஆசிரதருள்ளத்தில் பிறிவறநின்று தெய்விகமாய்நடத்துகின்ற வியவகாரமருமங்களை நன்றாய்த்தெரிந்து சரீரேந்திரிய மனோபுத்தி ஆத்மாவென்னும் பஞ்சசமஸ்காரத்தால் ஆபாசசித்தாய் அத்தியாசசுகியாய் அதோமுகமாய்ச்சுழல்கின்ற காமனைச்செயித்து இவ்விடத்தில் புத்திக்கிப்பரமாய் புத்தியாதியைநடத்துவதாயிருக்கும் நம்ஆத்மாவாகிய ஈஸ்வரனே சருவசிரேஷ்டமான பரமனென்றுணரப்படுவது. சம்பூரணம்.—சருவ ஜெகத்காரணமாகவிருக்கின்ற ஸ்ரீ வாசுதேவபரப்பிரமம் பிரமாத்மப்பிரிவறநின்று சருவமுந்தானே தானுக நடத்தப்படுவது.

ஆசுரம்.-வேதமந்திரரூபமாய் தேவப்பிரசாதத்தைப்பெற்று வேதவிகிதமான தெய்வீகமனுஷீகவரம்பிற் கட்டுப்படாமல் சருவ லோக சருவப்பிராணிகளுக்கும் விரோதமான கொடுந்தொழில் களைப்பண்ணி அதற்குப்பிரயோஜனமான நரகானுபவம்பண்ணு தற்குப்பயந்து காரியரூபமான நாமரூபப்பிரபஞ்சத்தை மித் தையாக்கி மூலவகங்கரத்தை காரணபூதசின்மாத்திர சொரூபத்தி லடக்கி கருமமானசமான சித்தசங்கல்பம் வெளிப்படாமல் ஊழி பேரூழியாய்த் தடுத்துக்கொண்டிருப்பது.

மனுஷகர்மம் ... நீதிநியமமென்னத்துவிதம். — அவற்றுள். நீதிதர்மம்—மிருகாதிஐந்து பேதமாய் ஊனகருமவழியிற்சூழல் கின்ற விவிதப்பிராணிகளிருக்க மனுஷரெனத்தோற்றிய சருவ ஜனங்களுக்கும் சமுதாயமாய் அறஞ்செயவிரும்பெனத்தொடங்கி ஔவை முதலானோரருளிய நீதிநூல்வழியா யுணரப்படுவது. நியமதர்மம்.— ஸ்ரீவாசுதேவப்பிரசாதத்தால் ஆசிரயிப்பவர்க்கு மூலவகங்கரம் நசித்து வர்த்தமானத்தில் அவரவர்க்காக ஏற்பட் டிருக்கின்ற குலாசார தருமமே நியமனபாக்கியமாகக் கைக் கொண்டு தீர்க்கமாகநிலைநிறுத்தி அதனைவழுவில்லாது சாதிக்கப் படுவது. அவற்றுள். மூலவகங்கரம்.— ஸ்ரீவாசுதேவ விபூதியை அபரிமிதமாகப்பெற்றும் அதனால் செருக்கடையாமல் சருவப் பிராணிகளுக்கும் தாழ்ந்தவனாய் சருவமும் வாசுதேவசொரூப மெனத் தெளிந்திருக்கும் ஓரதிகாரிக்கு அகங்கரமானது மூலத் தோடுநசித்து அவனுக்கு வியவகார பரிச்சேதமாயிருக்கும் அவன் இவன் அவள் இவள் அதுவிதுமுதலிய சருவமும் ஆனந்தரூபமா யனுபவப்படுவது.

சத்தாதசம்: சிரத்தாத்திரயயோகபலப்பிரதம்.—முக்குணத் தோர்க்குரிய ஆசிரய ஆகார யாக தவ தானங்களைத்தெரிந்து ஞானவிப்பிரனாய் சத்கருமத்தைச் சத்ரூபசிரத்தையினாற்சாதித்து தத்ரூபசிரத்தையினால்வாசுதேவுக்கற்பிதமாக்கி ஓங்காரசிரத்தை யினால் மமதகங்காரத்தைநிவர்த்திசெய்வது. ஆசிரயம்.— தேவர் களைச்சரணமாயடைவது: சாத்வீகாசிரயம்.—யக்ஷராக்ஷதர்களைச் சரணமாயடைவது: ராசதாசிரயம்.—பூதப்பிரேதபைசாசங்களைச் சரணமாயடைவது: தாமதாசிரயம். ஆகாரம்.—சௌந்தரமாய்

மாதுரியமாய்ஆயுளாரோக்கிய ஞானநந்தகுணங்களை விருத்திசெய்வது: சாத்விகபோஜனம்.—அதிகோரமான உஷ்ணமுடைத்தாய் கைப்பு உவர்ப்பு புளிப்பு கார்ப்பு அதிகரித்து சரீரரோகமனோதுக்கத்தைவிருத்திசெய்வது: ராசதபோஜனம்.— தேவபூசைக்காகாத ஊசல் எச்சில் அடிக்காந்தல் வேகாவரியையுடைத்தாய் காயிகாதிசமஸ்த ரோகங்களையும் விருத்திசெய்வது: தாமதபோஜனம். யாகம்.—பிரயோஜனத்தை நினையாமல் மந்திர திரவிய கிரியாலோபமில்லாமல் சாஸ்திரோக்தமாய்ச் செய்வது: சாத்விகயாகம்—பிரயோஜனத்தை உத்தேசம்வைத்துப் பலராலுங்கீர்த்திக்கச்செய்வது: ராசதயாகம்.—சாஸ்திரோக்தம் மந்திரோக்தம் சாதுக்களபிமதம் அதிதிசத்காராதிகளைவிட்டு அதற்குமாறுபாடாயிருக்கும் ஆசுரவிதிகளைச்செய்வது: தாமதயாகம். தவம்.—வாசகமானத காயிக கரணங்களால் சகலலோகங்களும் மகிழ்வடையச் செய்வது சாத்விகதவம்.—யாவர்செவிக்கும் இனிமையாய் யார்க்கும் பவித்திரமாய் பவரோகத்துக்கு ஔஷதமாய் ஓர்மைநாட்டத்தால் சருவமும் சத்தியவாக்காய் பேசுதல்முழுதும்வேதபாராயணமாயிருப்பது: வாசகதவம்.—ஞானசாந்தத்தைத்தெளிய மனதையொருக்கி ஐம்புலக்களிப்பைமாற்றுவது: மானததவம்.—கொலையைத்துரத்தி காமத்தைக்குறைத்து அந்தணர் தேவர்குரவர்கட்கு வழிபாடுசெய்வது: காயிகதவம்.-ஆசையினோடு பொருளையடைதற்கு மானிடராலேகீர்த்திக்க டம்பார்த்தமாய்ச்செய்வது: ராசததவம்.—தன்னுடையுயிர்க்கும் பிறருடையுயிர்க்கும் மகத்தானதுயரமுங்கேடுமுண்டாகச்செய்வது: தாமததவம். தானம்.—கைமாறெண்ணமல் தனக்கேயுரிமையானபொருளை நல்லகாலத்தில் நல்லவிடத்தில் நல்லமனதோடு நல்லவர்களுக்குக் கொடுப்பது: சாத்விகதானம்.—பூர்வந்தந்தவனையும் வர்த்தமானத்திற்கொடுத்தால் பௌஷதியில் தருபவனையும் குறிப்பிட்டுக் கைமாறெண்ணிச்செய்வது: ராசததானம்.— தனக்குவாய்க்காதெனத் தெரிந்த ஒரு பொருளை வழங்கக் கூடாதென்ற ஓர்காலத்தில் இசைவில்லாதநிலத்தில் இழிந்தகுலத்தோனை ஓரதமனுக்கு ஆராயாதஅறிவினல் அப்பிரியத்தோடு கொடுப்பது: தாமததானம்.

ஞானவிப்பிரன்.— பிரகிருதித்தொடக்கில்லாத வாசுதேவ
சொரூபத்தைக் கலக்கமறத்தெளிந்து பிரகிருதித்தொடக்கான
ஜகசிவபரமுழுதும் ஆனந்தரூபமாய்த் தெரிசித்துப் பிராரத்தா
தேகமுள்ளபரியந்தம் பரம்பரையாய் அவரவர்க்காக ஏற்பட்டிருக்
கும் குலாசாரவரம்பிலிருக்கின்ற பிர்மவித்துவானெவனோ
அவனேஞானவிப்பிரன் அவனே மகத்தான விப்பிரசிரேஷ்ட
னென் றுரைப்படுவது.

அஷ்டாதசம்...மோக்ஷசந்நியாசயோகபலப்பிரதம்.-இரண்டு
பிரிவாய் அவற்றிலொவ்வொருபிரிவுக்கு அளவற்றபேதபாடுகளை
யுடையதாயிருக்கின்ற மாயாகருமங்களைக் கிஞ்சித்தும்பொருட்டே
னென்று அடியோடேவிட்டு மாயையினால் மறைக்கப்படாத ஒரு
வனாகிய என்னையே தஞ்சமாகவடை அப்படியென்னைத்தஞ்ச
மாயடைவையாகில் நீஇந்தப்பவசமுத்திரத்தைத்தாண்டி. மோக்ஷ
தீரத்திலேர இதோநானுனக்குக் கைகொடுப்பேனென்றுரைத்
திய வாசுதேவவாசகமான பரமபாக்கியத்தைச் சிரசின்மேல்க்
கொண்டு நியமித்தகைங்கிரியங்களைச் செய்யத்தொடங்குவது.

பலப்பிரதம்.-நியமனபாக்கியத்தைச் சிரசின்மேல்க்கொண்ட
ரவி மனு இக்ஷுவாகுவாதி ராஜரிஷிகளும் ராஜவம்சத்திலிருக்கும்
பிராம்மணாதி சமஸ்த வர்னத்தவர்களும் வாசுதேவனைப் பிரார்த்
தித்து அவரவர்க்குரிய குலாசாரவொழுக்கத்தை நிலைநிறுத்தி
கரும பக்தி ஞானமென்னும் யோகத்திரயபலமான இகபரமோக்ஷ
வாழ்வை யொருங்கே யடைதற்குவேண்டும் அஷ்டாதசபலப்பிர
தங்களையும் அவர்கள் ஸ்ரீவாசுதேவின்முகமாயடையப்படுவது.

அத்துவிதம்.—தொய்த சுபாவ விசிஷ்டமென்னும் பக்ஷத்
திரயத்தைக் கௌணமாக்கி அத்துவிதபக்ஷமே சிரேஷ்டமென்
றும் அவற்றைச்சுவாநுபவரூபமாய்ச்சாதிப்பவர்களேபரமசாதுக்
களென்றும் நிச்சிதரூபமாய்த்தீர்க்கம்பண்ணி மற்றயபக்ஷத்தைக்
கட்டோடும் நிரசனமாக்கி அதற்குவேண்டும் சுருதி யுக்தி அனுப
வங்களைப் புத்திபூர்வகமாகத்தெளிந்து அத்துவிதபக்ஷமே சருவ
சிராக்கியமென நிரூபிக்கப்படுவது. தொய்தம்.—அத்துவித சுபாவ
விசிஷ்டமென்கின்ற பக்ஷத்திரயத்தைக்கௌணமாக்கித் தாங்கள
னுஷ்டிக்குந் தொய்தபக்ஷமே. சருவசிராக்கியமென்றும் அதனை

நிஷ்டாபூர்வமாய்ச் சாதிப்பவர்களே பரமசிரேஷ்டர்களென்றும் அவர்கள் சாஸ்திரிகமாகநியமிக்கும் தவம் மகம் தீர்த்தம் சேவை அர்ச்சனை தான விதானாதி சற்கருமசதாசாரமே நமக்குமறுமைக்குரிய பரமசாதகமெனக் கைக்கொண்டு மற்றயபக்ஷத்தைக் கட்டோடும் நிரசிக்கப்படுவது. சுபாவம்.-விருக்ஷமும்சாயையும்போல ஐக்கியத்தில் ஆத்மாக்களொன்றிரண்டெனச்சொல்லக்கூடாதசிவசொரூபத்தோ டெக்காலமுமகலாநேசமுடையராய் மும்முதலுமிருக்கும்போதே மோக்ஷசாயுச்சியத்தைச் சாதிக்கும் நமது சுபாவபக்ஷம்போல அத்துவித தொய்த விசிஷ்டமென்கின்ற பக்ஷத்திரயவாதிகளுக் கைக்கியங்கூடாதென்று அவற்றைக்கட்டோடும் நிரசனமாக்குவது. விசிஷ்டம்.—பேதசுருதியை நிரசனமாக்குகின்ற அத்துவிதபக்ஷமும் அபேதசுருதியை நிரசனமாக்குகின்ற தொய்தபக்ஷமும் சுத்தசுபாவத்தைப்பொருந்தாமல் சுத்தமானாலும் அசுத்தமானாலும் இருந்தபடியேயிருக்கச் சொரூபவயிக்கஞ்சாதிக்கின்ற சுபாவபக்ஷமும் மிகவும் அத்தியந்தவிருத்தமெனவவற்றைநிரசனமாக்கி பேதவபேதசுருதியையும் அத்துவிததொய்தபக்ஷத்தையும் அனுசரித்துக்கொண்டு சேதனனுக்கும் ஈஸ்வரனுக்கும் சேர்த்தியிலேகமும் பிரிவில்த்துவயமும் சேர்த்திப்பிரிவுகளிரண்டிடத்தும் இடையறாது சதாபரஸ்பரமாகக் கூடிக்கொண்டிருக்கும் நமதுவிசிஷ்டபக்ஷமே அதிசிரேஷ்டமென நிரூபிக்கப்படுவது.

## சமர்த்தி.

ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஓரதிகாரியை சிந்தனா திருஷ்டி அபயப்பிரதான பலப்பிரத வரப்பிரசாத மென்கின்ற பஞ்சசமஸ்காரரூபமாய்ப் பவித்திரனாக்கி ஆசிரதரக்ஷகார்த்தம் அவனதுள்ளமே திருக்கோவிலாக வெழுந்தருளி அவனதுகருவிகரணாதிகளைத் துணைக்காரணமாய்க்கொண்டு சருவசாஸ்திரசமயங்களின் சாராம்சத்தைத்தொகுத்து அதியந்தரங்கமாயும் சருவசிரேஷ்டமாயும் அமைத்திருக்கின்றசம்பூரணரகசியமகிமையைப் பிரசன்னமாக்கி இம்மை அம்மையெனக்குறிக்காமல் ஞானசக்தியாதி குணகணபூர்த்தியினால் ஆசிரயிப்பவரைச் சமர்த்திபண்ணி தாம் அவர்களோடு சதாதிருவிளையாட்டஞ் செய்யப்படுவது.

சிந்தனம்.—நிரோதுவாகப் பாவனுநிக்ஷையினுல் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஓரதிகாரியின் சித்தத்தைத் தன்முகமாகத் திருப்பி குவிதல்விரிதல் கரணம் குவிப்பவன்விரிப்பவன் கர்த்தா திரிசியசூனியம் விஷயம் சாக்ஷிபூதம் ஆத்மா சருவபரிபூரணம் வாசுதேவமென்னத்தெளிவித்து இதராந்தரங்களிற்செல்லுஞ்சித்தத்தைத்தடுத்து இனிமேல் ஜெனனபரம்பரையை அபிவிர்த்திபண்ணுமல் அவ்வதிகாரிக்கிஆகாமியகர்மத்தை நிவர்த்திக்கப்படுவது.

திருஷ்டி.—ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஓரதிகாரிக்கி சக்ஷுதிக்ஷையினுல் பிரமாணுதீத பவரோகபீஜமாய்க் குவிந்திருக்கின்ற சஞ்சிதகருமத்தை நசிப்பித்து நிரூபக நீத சயேக சம்பந்த வியவகாரமென்னும் பஞ்சதிருஷ்டியைவிளக்கி பரமசாதனங்களையபிவிர்த்திபண்ணுவது.—ஜெகசீவபரத்தைநியதித்துஅதனைவேறுபடக்கண்டஅறிவை சமாதிரூபத்தால்த்தானுகவும் நியதிபண்ணியஜெகசீவபரத்தைச் சகஜரூபத்தாற் றன்மயமாகவுந்தெரிசிப்பது: நிரூபகம்.—அகச்சாக்ஷியாய்நின்று முன்னிட்டவிஷயத்தைப் பகுத்தறிவது: நீதம்.—சருவஜகத்காரண மூலஸ்தம்பசொரூபத்தை யதாப்பிரகாரந்தெரிசிப்பது: சயேகம்.— இம்மூன்றும் பரத்துவமெனத்தெளிந்து சுசக்திமூழ்ந்துநிற்கும் அதிகாரிக்கி சௌலப்பியசற்குருவாய் வெளியிட்டு ததானுரூபமாய்க் கைக்கொள்வது: சம்பந்தம்.—சேதனர்நின்றநிலைக்கிக் கிரியாவிதாயகத்தைக் கைங்கிரியரூபமாயும் அவற்றிற்பந்தப்படாமல் சரண்யச்சோதியினுல் நித்திய பூமிக்கெச்சரிக்கையாயு மிருக்கும்படி நியமிப்பது: வியவகாரம்.

அபயப்பிரதானம். — சையோகதீக்ஷையினுல் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஓரதிகாரியின் மனச்சக்ஷுராதி சர்வாவயவங்களையும் ஞானகரங்களாற் பரிசித்து அவனதுபிராரத்துவபயங்கரமான ஆதியாத்மீக ஆதிதெய்வீக ஆதிபௌதீகமென்னும் தாபத்திரயவனர்த்தத்தைப்போக்கி சௌலப்பிய சற்குருவாய் வெளியிட்டு அவனுக்கு நித்தியசீவனைக்கொடுத்து சரண்யத்துவாராமுத்திபூமியிற்சேர்க்கப்படுவது.- ஆதியாத்மீகம்.அக்ஞானவல்லமையினுல் ஆத்மஸ்வரூபத்தைமறந்து அநாத்மவர்க்கங்

களை ஆத்மபுத்திபண்ணியவதனால் அந்தகார மூட காஷ்டசுழுத்தி ரூபமாகத்தாபமானது அபிவிர்த்தியாகி ஆத்மக்ஞான வபரோக்ஷ சகஜ வநுபூதிநிஷ்டையினால் நசிக்கப்படுவது. அவற்றுள். அநுபூதிநிஷ்டை.-ஞானசற்குருவையாசிரயித்து உபதேசபூர்வகமாக ஆத்மக்ஞானத்தைப்பெற்று பிரபஞ்சவாசனை கலக்காது அபரோக்ஷாநுபவரூபமான ஞானசமாதியைச் சாதித்து அதனை யழுத்த நிச்சிதத்தால் சகஜமாக்கி சுழுத்தனைப்போலத் திரிசிய ரூபமான தேகாதிப்பிரபஞ்சத்தைக் கட்டோடுமறந்து திருக்கு ஸ்வரூபமான ஞெப்திமாத்திரமாகப் பிரகாசிக்கப்படுவது. ஆதிதெய்வீகம்.-ஆவரணவவஸ்தையினால் பரசொரூபத்தை மறைத்து திரிகுணாத்மகமான புவனதெய்வங்களாகப் பரிச்சேதிக்குமிடத்து சஞ்சல கோர சமுசய அபிமானாதி ரூபமாகத் தாபமானது அபிவிர்த்தியாகி பரஸ்பரம்ஆசிரதபலப்பிரதரூபமான நித்தியானந்த பரிபூரணசற்குரு தெரிசனத்தால் நசிக்கப்படுவது. அவற்றுள். ஆசிரயம்.—சேதனன் ஈஸ்வரனையாசிரயிக்குமிடத்து அதத்துவ பேதம்வர்ச்சித்து தத்துவக்ஞானத்தைப்பெறுகை. —ஈஸ்வரன் சேதனனையாசிரயிக்குமிடத்து அவனது தோஷகுணங்களைப்பாராது அநித்திய பேதங்களிருக்கும்போதே அதிகாராநுரூபமாக நித்தியானந்தபோகத்தைக்கொடுக்குகை.—நிர்ச்சிந்தராய்ப்பரஸ்பரம் ஆசிரயிக்குமிடத்து சச்சிதானந்தவிக்கிரக நித்தியபூரண குணாகாரமாய் விளங்குவது. ஆதிபௌதீகம்.—விக்ஷேபவவஸ்தையினால் நான் ஒருசீவன் ஒருகர்த்தா ஒருமனுஷனென்னும் அகங்கரவங்குரத்தாற்றுக்கித்து அதனதுசம்பந்தமான இந்திரிய புவன பௌதீகங்களை என்னதென்னச்சஞ்சலமுற்று ஆதிவியாதி இடிமிருகாதிகளினாற் றேகத்துக்கபாயம்வருமென்றஞ்சி இவ்வொன்பதுவிதத்தாலுந் தாபமானது அபிவிர்த்தியாகி ஸ்ரீசற்குருவின் அருட்பிரசாத வநகப்பிராப்தியினால் நசிக்கப்படுவது.

பலப்பிரதம்.—ஸ்ரீபரமசற்குருகிருபையினால் அநித்தியசரீர சம்பந்தமான விக்ஷேபபந்திகளிருக்கும்போதே ஓரதிகாரிக்கி அக்ஞானபீஜம் நசித்து ஆவரணகோசம் பேதித்து நித்தியானந்த வாரிதிகரைபிரண்டு சருவானந்த சமர்த்தியாய் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் சாநித்தியமாகி அவனது பிதிர் மாதுர் புத்திர

களத்திர பௌத்திர பிதாமக தாச தாச ஆசிரத வாசிரய ஆசாரிய வாசாரியர்முதலிய பூர்வோத்தரசமூகங்களோடு கனுகரணபுவன போகாதி ஜகசிவபரசகிதமாய் ஆத்மசமர்ப்பணபூர்வகமாகக்கைக் கொண்டு அவனைக்கிருதார்த்தனுக்கிசருவாபீஷ்டமோக்ஷம் மோக்ஷசருவாபீஷ்டமென்னும் உபயப் பிரயோஜனத்தையும் ஒருங்கேகொடுத்து ரக்ஷிக்கப்படுவது. அவற்றுள். சருவாபீஷ்டமோக்ஷம்.-சிவன்முத்தனாய் அநித்தியசரீரபொம்மைக்கிச் சூத்திரதாரியாய் ஜனன மரண பால விருத்த போக யோக ராச தாசமென்னும் விவிதக்கிரீடைகளினாற் றிருவிளையாட்டஞ்செய்வது. மோக்ஷசருவாபீஷ்டம்.—விதேகமுத்தனாய் நித்தியபூமியை ஆசிரயித்து இப்படியே சருவாவயவசகிதமான திவ்யசொரூபத்தைப்பெற்று நித்தியசூரிகளோடு நித்தியகைங்கிரியபரனாய் ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மத்தை இடையறாது சதாசேவித்துக்கொண் டிருப்பது.

வரப்பிரசாதம்.—ஸ்ரீபகவானாகிய வாசுதேவபரப்பிர்மம் ஓரதிகாரியின் திருச்சித்தத்திற் குடியேறி ஆசிரயரக்ஷகார்த்தம் அவ்வதிகாரிக்கி சாநித்திய சன்மான ரக்ஷக பரமார்த்த பலப்பிரத உபசாந்த ஆசிர்வாத கைங்கிரியமென்னும் அஷ்டவரத்தை உபபலமாகக்கொடுத்து ஆசிரயிப்பவர்களோடு உனக்குநாமே இதோ பரமபதவாழ்வைத் தந்தோமென்று அதிசிரேஷ்டமான நிர்க்கவரத்தைச்சாதிக்கப்படுவது. சாநித்தியம்.—ஏகதத்துவம் காலாதிவர்ச்சிதம் தொந்துவரீக்கம் விமலபாஸ்கரம் அபிஷேகம் சருவமங்களம் நித்தியசேவிதம் சம்பூரணமென்னும் ஆரோகணரூபமாயும் சர்வசம்பூரண நித்தியசேவித சருவமங்கள சருவாபிஷேக சர்வப்பிரகாச தொந்துவரகித காலாதிதத்துவாதித ஏகதத்துவமென்னும் அவரோகணரூபமாயும் ஆரோகணாவரோகண அவரோகண ஆரோகணரூபமாயும் ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமாகிய நாமேசதாஉனக்கு சருவசாக்ஷாத்காரமாகவிளங்குகிறோம். சன்மானம்.— உன்மூலமாய்ப் பாரியா புத்திர பரிசன பரிவாராதிகளபேக்ஷித்த புவி தன போக சுகி சுக கைங்கிரியாதிகளை விசித்திரரூபமாகநின்று ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமாகியநாமே அவர்களபேக்ஷிதபதார்த்தங்களைக் கொடுத்து அவர்களைப்பூர்த்தியண்ணாக்

கடவோம். ரக்ஷகம்.—சச்சிதானந்த விக்கிரக நித்திய பூரண குணா காரமாய் உனக்குள்ளிலும் புறம்பிலுஞ் சதாஜொலித்துக்கொண் டிருக்கும் ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமாகியநாமே சற்குருவாய்க் காதுள்ளவன் கண்ணுள்ளவன் வாக்குள்ளவன் மூக்குள்ளவன் யாவனாலும் அவர்களே அதிகாரிகளாய் உன்மூலமாய்நம்மைச் சரணமாகஅடைபவர்களுக்கு நாமேகர்த்தாவாகவிருந்து சருவரக்ஷைகளையும்பண்ணக்கடவோம். பரமார்த்தம்.—அக்ஞான திருஷ்டியினாற் பரிச்சேதரூபமாகத் தோற்றிக்கொண்டிருக்கின்ற ஜகசீவ பரமுழுதும் உனக்குவிச்சின்னமாகாமல் ஸ்ரீவாசுதேவ பரப்பிர்மமாகியநாமே ஞானதிருஷ்டியைத்தந்தோம் அதனால் உனக்குச் சருவமும் நமதாக்ஞையால் சமத்துவ யேக பரிபூரண பரப்பிர்ம சுவாநுபூதிவஸ்துவாகப் பிரகாசிக்கக்கடவது. பலப்பிரதம்.—பௌஷதியில் நித்திய பூமியிலடையப்போகிற அதிசிரேஷ்டமான நிருவாணப் பிரயோஜனத்தை ஸ்ரீவாசுதேவ பரப்பிர்மமாகிய நாம் நமதுமகிமையினால் உனக்கு வர்த்தமானத்தில் இதோகிரியா பூமியில்த்தந்தோம் அதனால் இம்மைமறுமையென்னும் பேதத்தையறுத்து சருவமும் உனக்கு இன்பரசமாக ரமிக்கக்கடவது. உபசாந்தம்.-அணுவுக்கணுவாய் மகத்துக்குமகத்தாக விருக்கின்ற சருவஜகத்காரண மூலஸ்தம்ப ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமாகிய நமது திருநோக்கத்தால் உனக்குத்தொந்தரூபமாய்த் தோற்றிக்கொண்டிருக்கின்ற மாயாப்பிரபஞ்சமுழுமையும் நீதுன்புருவாகக்கண்டு நிர்த்தொந்தமாய் சித்தசாந்தியினால் அவையாவும்நீ இன்புருவாகத் தெரிசிக்கக்கடவது. ஆசீர்வாதம்.— திருவடிமகுடத்தைச் சிரசிற்றரித்து நாமே ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமென்றுதிருநாமத்தைச் சொல்லிபிதாபுத்திரசம்பந்தத்தால்நீயேமுத்திபூமிக்கரசனென்று நித்தியசாம்பிராச்சிய சருவாதிபத்தியமும் உரிமையாக்கி சருவராலும் ஸ்தௌத்தியம்பண்ண உனக்கு சருவாபீஷ்டமுஞ் சித்திக்கக்கடவதென்று நாமே சதாவாழ்த்துகிறோம். கைங்கிரியம்.-அற்புதசுவாநுபவமேலிட்டு கல்பனாதீதமாய் விளங்கிய முத்தாத்மாக்களுக்கும் நித்தியசூரிகளுக்கும் ஸ்வரூப வியவகாராதிகளிற் றாரதம்மியமிருக்கினும் ஸ்ரீவாசுதேவபரப்பிர்மமாகிய நமதுசுவாநுபவத்திற் சமானத்துவமுடையரெனத்தெரிந்து அவரதடியரடி-

களைச் சிரோபூஷணமாக்கி அவர்களாலிட்டபணியைச்செய்து இனிமேலிடப்பட்டபணிகளுக்கு யெதிர்பார்த்திருக்கின்ற பரம சாதுக்களின் திருவடித்துகளே உன்னை அநகனாக்கி உஜ்ஜீவித்தற் குரிய பரமதனமெனத்தெளிவித்து அதனால் உன்னைநாம்உஜ்ஜீவிப் பிக்கக்கடவோம். பரமபதம்.—சீவன்முக்தர்களாகவிருந்து விதேக கப்பிராப்தியில் முத்தாத்மாக்களினது அவித்தையாகர்ம வாசனை தேகம்நசித்து சதேகவிதேகமென்கின்ற தொந்துவம்வர்க்கித்து ஸ்ரீவாசுதேவப்பிரபாவிலாசத்தாலுண்டுமிழ்ந்த சர்வாவயவசுந்த மான தேஜோரூபத்தைப்பெற்று அமானவகரத்தால் முடிசூட்டி சமஸ்தமான தேவர்களும் ஸ்தௌத்தியம்பண்ண நித்தியசூரிக ளோடுமிருந்துநித்தியகைங்கிரியபரராய்ஸ்ரீபகவானாகியவாசுதேவ பரப்பிர்மத்தை இடையறாது சதாசேவித்துக்கொண்டிருப்பது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணாய குருப்பிர்மணேநம:



உ

ஹரி: ஓம்.

ஸ்ரீபரமசற்குருவேநம:



நிருபபத்ததி...பிரயாணநிருபம்.

## முதலாவது.

ஸ்ரீமதநேகபுவன பவனாரம்ப மூலஸ்தம்ப சொரூபமாதி தேசிகோத்தம பரியந்தமான குருபரம்பரையைக் கரணத்திரய பூர்வகமாகநமஸ்காரம்பண்ணி சம்பூரணரகசியத்திற் சொல்லியசம் பந்தநவாங்கத்தி லொன்றான சரீரிசரீரசம்பந்த சித்தாந்தத்தை விளக்கி மிகவும் மந்தவதிகாரிகளான அஸ்மதாதிகள் நிமித்தம் வற்புறுத்தி கோஷ்டிப்பிரதேச தெரிசனப்பிரவர்த்தக சமூக சம் பந்தனை ஓாதிகாரியின் பிரயாணநிருபத்தைப் பூருவசிநேகத் தாற் சருவசன சமுதாயமாக வெழுதப்பட்டது.

சம்பூரணரகசியம்.-நியந்தாவாகிய சருவேஸ்வரன் உபகரண சாதகபூதையாக நித்தியவர்க்கங்களுக்குக் கைங்கிரியம்நியமித்து

அவர்களபேக்ஷிதப்பிரகாரம் அத்துவித தொய்த சுபாவ விசிஷ்ட சமர்த்தியென்னும் லீலாபஞ்சக ரூபமாய்த் திருவிளையாட்டுஞ் செய்வது.

## சம்பந்தம்.

சரீரிசரீர போக்துருபோக்கிய சுவசுவாமித்துவ ஆதாராதேய சேஷிசேஷ ஞாதுருக்ஞேய ரக்ஷ்யரக்ஷக பர்த்துருபாரியர் புத்திரபிதாவென்ன நவபேதமாயிருப்பது.—சமஸ்தமான சரீரதங்களுக் கதிஷ்டாதாவாக விருக்கின்ற சர்வசரீரியாகிய சருவேஸ்வரனை அஸ்மதாதிகள் தெரிசிக்கும்படி நம்ஒருசரீரத்தினிடமாக வற்புறுத்திக்காட்டுவது: சரீரிசரீரசம்பந்தம்.-சர்வபோக்தாவாகிய சருவேஸ்வரன் அவனதுபோக்கியங்களாகியநம்மை காலின் கீழ்வைத்துப் பணிகொண்டாலும் சிரசின்மேல்வைத்துச் சிராக்கித்தாலும் அநகனாய் அவனது போக்கியத்துக்குச் சற்றேனுங் குறைவுபடாமல் பரதந்திரனா யிட்டபணிவிடைக்கி உடன்பாடாக விருப்பது: போக்துருபோக்கிய சம்பந்தம்.— அன்னியருக்கருக்மாகாமல் சர்வசுதந்தரனாய் நம் சுவாமியாகவிருக்கின்ற சருவேஸ்வரனுக்கேயருகமாம்படி கர்த்தாவினதுபெயரைஸ்தாபகம்பண்ணி கிரயவிக்கிரயங்களுக்கு யோக்கியமாகவிருக்கின்ற சொத்தைப் போல சருவேஸ்வரனே ஆளுகைக்குரிய பாத்திரமாய்த்தளர்ந்து கிடப்பது: சொத்சுவாமித்துவசம்பந்தம்.-சர்வாதாரக்கடவுளாகிய சருவேஸ்வரனிடத்து ஆதேயங்களாகவிருக்கின்றசேதனசேதனமிரண்டில் அசேதனமாகிய அசித்தைப்போலச் சேதனனாகிய நாமும் சற்றேனும் பதைப்பற்று சதா நம் தாரகப்பொருளாகிய அவ்வாதாரவஸ்துவுக்கநன்னியமாகவிருப்பது: ஆதாரஆதேயசம்பந்தம்.—ஈஸ்வரனே இந்திராதிபோகத்தைக் கொடுப்பினும் நிரபேக்ஷையையுடையனாய் அவற்றைத்தடுத்து சருவசேஷியான சருவேஸ்வரனுக்கு சேஷபூதையாகவிருந்து சர்வவிதத்தாலுங் கைங்கிரியஞ்செய்தற்குச் சார்வதா அவ்வீஸ்வரனைப்பிரார்த்திக்கப் படுவது: சேஷிசேஷசம்பந்தம்.— ஞாதாவாகிய சருவேஸ்வரனுக்கு அத்தியந்த அபிமதவிஷயமாக விருக்கும் நித்தியமுத்தர்களான பரமசிரோஷ்டர்களினது திருவடிசம்பந்தம்பெற்று அவர்களோடெக்காலமு மகலாநேசமுடையனாய் நித்திய பூமியையாசிர

யித்து நித்தியகைங்கிரியம் பண்ணிக்கொண்டிருப்பது: ஞாதுருக் ஞேயசம்பந்தம்.-சிமூததாரையை யெதிர்பார்த்திருக்கும் திரணோ ஷதிமுதலிய சீவசாலங்களைப்போல ரக்ஷ்யரக்ஷக விவேகியாய் சருவரக்ஷகனான சருவேஸ்வரனது கிருபாவிலாசத்துக் கபிமுக மாகவிருக்கும் மந்தராந்தர தேவதாந்தர சாதனாந்தரமுதலிய இத ராந்தரங்களை விசர்ச்சித்து சதாகிருபாநோக்கத்துக் கெதிர்பார்த் திருப்பது: ரக்ஷ்யரக்ஷகசம்பந்தம்.

சரீரமாகிய ஸ்ரீ நீ அதனைநடத்தும் சரீரியாகியகர்த்தா நான் போக்கியமாகிய ஸ்ரீ நீ உனதுபோக்தாவாகியகர்த்தா நான் சுவ மாகியஸ்ரீ நீ உனதுசுவாமியாகியபர்த்தா நான் ஆதேயமாகவிருக் கின்றஸ்ரீ நீ உனக்காதாரமாகவிருக்கின்றகர்த்தா நான் சேஷபூதை யாகவிருக்கின்ற ஸ்ரீ நீ உனக்குசேஷியாகவிருந்து சேஷப்பிரார்த் தனையைப் பூர்த்திசெய்கின்றகர்த்தா நான் எனக்குஞேயமாக விருக்கின்ற ஸ்ரீ நீ உனதுகாக்ஷியைக்கண்டு சதாஉவப்புறுகின்ற ஞாதாவாகியகர்த்தா நான் நம்ரக்ஷ்யாகிய ஸ்ரீ நீ உனதுரக்ஷக னாகியகர்த்தா நானென்று தமதுபிரதானநாமத்தை யுபதேசித்து பாரிகையாகிய உனக்குநானேபர்த்தாவென்பதை வெளிப்படுத்தி அநாதியாய் நித்தியமாகவிருக்கின்ற மங்கல சூத்திரத்தை மந்திர பூர்வகமாகஞாபகப்படுத்திநம்மோடுசார்வதாகலந்து நிற்கும் நமது பர்த்தாவாகிய சருவேஸ்வரனோடு பாரிகையாகியநாமெல்லோரும் மணியும் ஒளியும் மலருமணமும்போல யெக்காலமும் பிரியா திருப்பது: பர்த்துருபாரியாசம்பந்தம்.

பரமபிதாவாகிய சருவேஸ்வரபரப்பிர்ம சற்குரு நிரோது வாக நமக்கு ஆத்மவநாத்மாவைவிவேகித்து அதற்குள்ளிருக்கும் அந்தராத்மாவை முன்னிலையாக்கி நித்தியசீவனைத்தந்து பிதாபுத் திரசம்பந்தத்தால் நித்தியசாம்பிராச்சிய சருவாதிபத்தியமும் நினக்கேயுரியதெனத் திருமுடிசூட்டி உனக்கு மாதா பிதா குரு தெய்வமுதலிய சமஸ்தமும் நித்தியகுமாரங்களெனத் தெரிவித்து சருவாபீஷ்டமு முண்டாகக்கடவதென் றாசீர்விதித்தருளிய நம் -மபிதாவான பரமேஸ்வரபரப்பிர்மசற்குருவை நித்தியவர்க்கங் ந்ப் பணியாளாகநின்று அவனிட்டயேவலைக் கைக்கொண்டு மையென்பது தோற்றுமல் நித்தியசீவிகளாகவிருந்து

சதாஸ்தௌத்தியம் பண்ணிக் கொண்டிருப்பது: பிதா புத்திர சம்பந்தம்

பிரயாணநிருபம். — சிராந்தபதி வாசனை கிண்கிணிவிநாயகனைப் பூசித்து நித்தியகல்யாணிகைலாசேஸ்வரனை நமஸ்கரித்து ஸ்ரீகோஷ்டிபுரத்தைச்சார்ந்த கிருஷ்ணசரசென்னும் ஜெனனபூமியிற்பிரவேசித்து ஓரதிகாரியைமுன்னிட்டு கிரியாவரையை நிலைநிறுத்தும்பொருட்டு நித்தியவர்க்கங்கள் மூலமாய் ஸ்ரீவாசுதேவினிடத்து விடைபெற்றுக்கொள்வது.

சிநேகம்.—பாரியாபுத்திர பரிசனபரிவாராதிகளுக்கு அகலா நேசத்தையுண்டுபண்ணும் அன்பு அன்பில்லாவிடில் ஆத்மா சற்றேனும் நிலைபெறாது கேவலாவஸ்தையிலொடுங்கிப் போம் அன்பேசரீரம் அன்பேபிராணன் அன்பேமனம் அன்பேஆத்மா அன்பகத்தில்லாதசரீரம் சவத்துக்கொப்பானது அன்பு சினமடையாது தீங்குநினையாது தற்புகழாது தற்பொருளைநாடாது படைப்புகளிடத்தில் வைக்கின்றசிநேகமே படைப்பவனுக்குப் பிரீதியை அபிவிர்த்திபண்ணுவது ஆகையால் சிருஷ்டிகளாகிய சருவப்பிராணிகளிடத்தும் சிருஷ்டிகனாகிய ஸ்ரீவாசுதேவினிடத்தும் அகலாதபேரன்பையுடையராய் நீக்கமில்லாத நேசத்தை நாளுக்குநாளபிவிர்த்திபண்ணுவது.

இரண்டாவது.— சரீரசம்பந்தமாய் மூர்த்திகரித்திருக்கின்ற சரீரி இன்றைக்கிருக்கிறபடியே நாளைக்கும் இம்மையிலிருக்கிறபடியே மறுமையிலுமிருக்கின்ற இயற்கைப்பொருளாகிய அழிவில்லாத நித்தியவஸ்து சரீரம் அழிவுக்குரியதாய் மாறிமாறிவரும் செயற்கைப் பொருளாகிய அநித்தியவஸ்துவென்று சற்குருகடாக்ஷத்தால் முமூக்ஷுக்களாகியநாம் யதாப்பிரகாரம் விவேகித்தறியவேண்டியது.

மூன்றாவது.— சரீரிபுறக்கரணங்களடங்கிய சொப்பனாவஸ்தையில் குருடன்கண்ணுள்ளவனாயும் முடவன்காலுள்ளவனாயும் மற்றயவுருப்பில்லாதவன் அவ்வுருப்புள்ளவனாயும் அகக்கரணத்தைக்கொண்டு தன்தொழிலைநடத்தி சுழுத்தியிலொடுங்கி சாக்கிரத்தில்வெளியிட்டு பகிர்முகப்பிராந்தனாய் தர்மாதர்மங்களிற் பந்தி

யித்து நித்தியகைங்கிரியம் பண்ணிக்கொண்டிருப்பது: ஞானுருக்ஞேயசம்பந்தம்.-சிமூததாரையை யெதிர்பார்த்திருக்கும் திரணேஷதிமுதலிய சிவசாலங்களைப்போல ரக்ஷரக்ஷக விவேகியாய் சருவரக்ஷகனை சருவேஸ்வரனது கிருபாவிலாசத்துக் கபிமுக மாகவிருக்கும் மந்தராந்தர தேவதாந்தர சாதனாந்தரமுதலிய இதராந்தரங்களை விசர்ச்சித்து சதாகிருபாநோக்கத்துக் கெதிர்பார்த்திருப்பது: ரக்ஷரக்ஷகசம்பந்தம்.

சரீரமாகிய ஸ்ரீ நீ அதனைநடத்தும் சரீரியாகியகர்த்தா நான் போக்கியமாகிய ஸ்ரீ நீ உனதுபோக்தாவாகியகர்த்தா நான் சுவமாகிய ஸ்ரீ நீ உனதுசுவாமியாகியபர்த்தா நான் ஆதேயமாகவிருக்கின்ற ஸ்ரீ நீ உனக்காதாரமாகவிருக்கின்றகர்த்தா நான் சேஷபூதையாகவிருக்கின்ற ஸ்ரீ நீ உனக்குசேஷியாகவிருந்து சேஷப்பிரார்த்தனையைப் பூர்த்திசெய்கின்றகர்த்தா நான் எனக்குஞேயமாகவிருக்கின்ற ஸ்ரீ நீ உனதுகாக்ஷியைக்கண்டு சதாஉவப்புருகின்ற ஞாதாவாகியகர்த்தா நான் நம்ரக்ஷயாகிய ஸ்ரீ நீ உனதுரக்ஷகனாகியகர்த்தா நானென்று தமதுபிரதானநாமத்தை யுபதேசித்து பாரிகையாகிய உனக்குநானேபர்த்தாவென்பதை வெளிப்படுத்தி அநாதியாய் நித்தியமாகவிருக்கின்ற மங்கல சூத்திரத்தை மந்திர பூர்வகமாகஞாபகப்படுத்தி நம்மோடுசார்வதாகலந்து நிற்கும் நமது பர்த்தாவாகிய சருவேஸ்வரனேடு பாரிகையாகியநாமெல்லோரும் மணியும் ஒளியும் மலருமணமும்போல யெக்காலமும் பிரிவறத்திருப்பது: பர்த்துருபாரியாசம்பந்தம்.

பரமபிதாவாகிய சருவேஸ்வரபரப்பிர்ம சற்குரு நிரோதுவாக நமக்கு ஆத்மவநாத்மாவைவிவேகித்து அதற்குள்ளிருக்கும் அந்தராத்மாவை முன்னிலையாக்கி நித்தியசிவனைத்தந்து பிதாபுத்திரசம்பந்தத்தால் நித்தியசாம்பிராச்சிய சருவாதிபத்தியமும் நினக்கேயுரியதெனத் திருமுடிசூட்டி உனக்கு மாதா பிதா குரு தெய்வமுதலிய சமஸ்தமும் நித்தியகுமாரங்களெனத் தெரிவித்து சருவாபீஷ்டமு முண்டாகக்கடவதென் றாசிர்வதித்தருளிய நம் பரமபிதாவான பரமேஸ்வரபரப்பிர்மசற்குருவை நித்தியவர்க்கங்களுக்குப் பணியாளாகநின்று அவனிட்டயேவலைக் கைக்கொண்டு இம்மைமறுமையென்பது தோற்றுமல் நித்தியசீவிகளாகவிருந்து

சதாஸ்தௌத்தியம் பண்ணிக் கொண்டிருப்பது: பிதா புத்திர சம்பந்தம்

பிரயாணநிருபம். — சிராந்தபதி வாசனுன கிண்கிணிவிநாயகனைப் பூசித்து நித்தியகல்யாணிகைலாசேஸ்வரனை நமஸ்கரித்து ஸ்ரீகோஷ்டிபுரத்தைச்சார்ந்த கிருஷ்ணசரசென்னும் ஜெனனபூமியிற்பிரவேசித்து ஓரதிகாரியைமுன்னிட்டு கிரியாவரையை நிலைநிறுத்தும்பொருட்டு நித்தியவர்க்கங்கள் மூலமாய் ஸ்ரீவாசுதேவினிடத்து விடைபெற்றுக்கொள்வது.

சிநேகம்.—பாரியாபுத்திர பரிசனபரிவாராதிகளுக்கு அகலா நேசத்தையுண்டுபண்ணும் அன்பு அன்பில்லாவிடில் ஆத்மா சற்றேனும் நிலைபெறாது கேவலாவஸ்தையிலொடுங்கிப் போம் அன்பேசரீரம் அன்பேபிராணன் அன்பேமனம் அன்பேஆத்மா அன்பகத்தில்லாதசரீரம் சவத்துக்கொப்பானது அன்பு சினமடையாது தீங்குநினையாது தற்புகளாது தற்பொளிவைநாடாது படைப்புகளிடத்தில் வைக்கின்றசிநேகமே படைப்பவனுக்குப் பிரீதியை அபிவிர்த்திபண்ணுவது ஆகையால் சிருஷ்டிகளாகிய சருவப்பிராணிகளிடத்தும் சிருஷ்டிகளுகிய ஸ்ரீவாசுதேவினிடத்தும் அகலாதபேரன்பையுடையருய் நீக்கமில்லாத நேசத்தை நாளுக்குநாளபிவிர்த்திபண்ணுவது.

இரண்டாவது.— சரீரசம்பந்தமாய் மூர்த்திகரித்திருக்கின்ற சரீரி இன்றைக்கிருக்கிறபடியே நாளைக்கும் இம்மையிலிருக்கிறபடியே மறுமையிலுமிருக்கின்ற இயற்கைப்பொருளாகிய அழிவில்லாத நித்தியவஸ்து சரீரம் அழிவுக்குரியதாய் மாறிமாறிவரும் செயற்கைப் பொருளாகிய அநித்தியவஸ்துவென்று சற்குருகடாக்ஷத்தால் முமுக்ஷுக்களாகியநாம் யதாப்பிரகாரம் விவேகித்தறியவேண்டியது.

மூன்ருவது.— சரீரிபுறக்கரணங்களடங்கிய சொப்பனுவஸ்தையில் குருடன்கண்ணுள்ளவனுயும் முடவன்காலுள்ளவனுயும் மற்றயவுருப்பில்லாதவன் அவ்வுருப்புள்ளவனுயும் அகக்கரணத்தைக்கொண்டு தன்தொழிலைநடத்தி சுழுத்திபிலொடுங்கி சாக்கிரத்தில்வெளியிட்டு பகிர்முகப்பிராந்தனுய் தர்மாதர்மங்களிற் பந்தி

க்கப்பட்டு சாக்கிரத்தைமறந்து சொப்பனத்தைத்தெரிசித்து சுழுத்தியிற் சுகித்து கருமவசத்தால் வெளியிட்டு தத்தெரிசன பரியந்தம் காலச்சக்கரப்பிரமையிற் சுழலுகிருன்.

நான்காவது.—சரீரியானவன் சமீபவிஷயத்தைக்கண்ணுலும் தூரவிஷயத்தைப் பூதக்கண்ணுடியாலும் சாலேசரத்தாற் கண்ணொளிமழுங்கிற் கண்ணுடியாலும் பார்க்கிருன் காலொடிந்தால் ஊன்றுகோலைக்கொண்டும் காலில்லாவிடில் மரக்கால் செய்து தொடுத்துக்கொண்டும் நடக்கிருன் கண்ணுடிக்குப்பார்க்குஞ்சக்தியும் ஊன்றுகோலுக்கு நடக்குஞ்சக்தியும் இயல்பாயில்லை சரீரியின் சக்தியினுற் கண்ணுடி ஊன்றுகோலையொத்த சர்வாவயவங்களும் அவனுக்குப்பயன்படுது புறத்துருப்புகளில்லாவிடத்தும் அகத்துருப்பைக்கொண்டு தன்தொழிலை நடத்தக்கூடும் கருவியாகிய சரீரம்அழிந்தாலும் அதனைநடத்துங் கர்த்தாவாகியசரீரிக்கு அழிவில்லையென்று யூகிக்குமிடத்து சாதாரணமான ஜனங்களுக்கும் அநுபவப்படுகிறது.

ஐந்தாவது.—யோகிகள் தன்சரீரத்தை வேறுபடக்கண்டு எச்சரீரமும் சரீரிக்குறைவிடமென்பதைத்தெரிந்து கூடுவிட்டுக் கூடுபாய்தல் கமனுகமனஞ்செய்தல் சம்பந்தசரீரத்தை விட்டிடாமல் காயசித்தியைப்பண்ணுதல் மரணவவஸ்தையைத்துரத்தி மறுமைத்துன்பத்தை மாற்றுதல்முதலான புருஷயத்தனத்தால் பலவாருன விநோதக்கிரீடைகளை நடத்துகிருர்கள் ஞானிகள்பரிச்சேதரூபமான விவிதசாக்கிரம்நழுவி விசிஷ்டசொப்பனந்தெரிசித்து துரியவிபுவில்விழுங்கி துரியாதீதநிஷ்டராய் சுகித்திருக்கிருர்கள் முமுக்ஷக்களாகிய நாம் சற்குருகடாக்ஷத்தால் சரீரசரீரியை விவேகித்து பிராரத்துவ விதிப்படி சரீரசம்பந்தத்தால் வந்த சாதிசமயக்கிரிகையாதி புறத்துருப்புக ளிருந்தபடியேயிருக்க அதனை நியமனபாக்கியமாகக் கைக்கொண்டு சர்வாதிகாரசிரோஷ்டனை சரீரியின் தகுதியை நிர்ணயித்து அகக்கரணபரிசுத்தராய் புருஷார்த்தம் பரமபுருஷார்த்தமென்னும் உபயமோக்ஷத்தையும் பெற்று கிருதகிருத்தியாளாகத் தடையற்றுவிளங்குவதில் எவ்வளவும் ஆக்ஷேபணையில்லை.

ஆருவது.— சரீரிநிர்விகாரியாயிருந்தும் நிலத்தியல்பால் நீர் திரிவதுபோல தனக்குறைவிடமான சரீரசம்பந்தத்தால் வளர்தல் தேய்தல் மரணஜனனுதி பல்வகைவிகாரத்தைப் பொருந்தி அவற் ருல்வரும் சுகாசுக ஏற்றவற்றங்களாற்றுன்புருகிருன் கருவிகரணு திகளைக்கொண்டு தர்மாதர்மங்களைச் செய்பவனுய் அவற்றைத் தவிர்பவனுய் இம்மைமறுமைக்கிப் பாத்தியனுய் பகவதாக்ஞை யால் நியாயசக்கரத்தைநடாத்தும் நீதியரசனுன எமதர்மகேள் விக்கு உத்தரவாதியாய் நன்மைக்குப்பலனையும் தீமைக்குத்தண் டனையும் அநுபவித்தற்குரியவனுயிருக்கிருன். சுவாதீனமாய்ச் செய்யுஞ் சற்கருமத்தை ஈஸ்வரார்ப்பணம்பண்ணி அர்ப்பணவிசே ஷத்தாற் சித்தசுத்தியைப்பெற்று சித்தசுத்தியினுல் தத்தெரிசன சத்தியக்ஞானஞ்சித்தித்து சத்தியக்ஞானத்தால் சர்வசரீரியான சருவேஸ்வரசற்குருவை ஆசிரயித்து அவனதுகடாக்ஷத்தால் தாபத்திரய துக்கத்தை நிவர்த்திபண்ணி சம்பந்தாநுரூபமாக ரக்ஷிக்கப்படுகிருன்.

ஏழாவது.-ஒருவன் அன்னியப்பிரேரகத்தாற் கற்பத்திற்கருத் தரித்து உந்தியின்வழியாய் ஆகாரம்உண்டு உருவாய்ச்சமைந்து பிள்ளையாய்ப்பிறந்து இடையூருவாராமற் காப்பாற்றி கல்விப் பயிர்ச்சியைப்பண்ணி இம்மைக்குரியபூரணபுருஷத்துவம் அடை வதுபோல சொப்பிரயத்தனம் இழந்து இம்மைமறுமையென்னும் சுட்டுதலற்று நிற்பரனுகவிருக்கின்ற சரீரியை நிரோதுவாகப் பரம புருஷன்அர்த்தித்து சிந்தனு திருஷ்டி அபயப்பிரதானுதிகளால் உருவாக்கி நிரோதுகடாக்ஷத்தால் வேறுவிக்கினம்வாராமற் பாது காத்து பருவமறிந்து தனக்குரிய நித்தியசம்பந்தத்தைத் தெரி வித்து இம்மையிலாரம்பித்து நித்தியபூமிக்குரிய திவ்வியலக்ஷணங் களை நாளுக்குநாளபிவிர்த்திபண்ணி மறுமையிற்பூரணப்படுத்து கிருன் தன்னையாக்குதற்கு ஒருவனுடைய பேறுதவிவேண்டும் அழித்தற்கு வேருருதவியும்வேண்டுவதில்லை.

எட்டாவது.-சரீரம் அழிவுக்குரியதாய் சரீரிக்குறைவிடமாய் பல்வகைவிகாரத்தைப்பொருந்தி நாளுக்குநாள்மாருபடுவது நாம் மனுஷஜென்மமெடுத்தபோது மிகவும் பலவீனமானநிலையிற் பிறந்து வயது முதிரமுதிரப்பூரணபுருஷத்துவம் அடைகிருேம்

மண்ணிலூரும்புழுக்கள் விண்ணிற்பரக்கும்பூச்சிகளாகமாறுபடுது முட்டையிலிருந்து பிறந்து பற்பலபறவைகளாய்ப்பறக்குது வித்தி லிருந்துமுளைத்து விவிதவிருக்ஷமாய்த் தளிர்க்குது பற்பல ஜெந்து வாயுற்பவித்து பலவாறுகமாறுபடுது சரீரி பிராணனாய்ப் பிராணி யாய்ப்பாலனாய்க்குமாரனாய் விருத்தனாய் தத்தெரிசனபரியந்தம் அவற்றிற்குத் தக்க தக்கபிரகாரம் அவ்வவ்வாகிருதியாய் அமைந் திருக்கிறான் நிருவிகாரியான தன்னைத் தெரிசிக்குமிடத்து பகிர்முக ப்பிராந்தியினால்வந்த மூடகோரங்கள் விசர்ச்சித்து எப்போதும் பிரிவில்லாத ஆந்தரரூபமான சாந்தவிருத்தியைப்பெற்று சாக்ஷிப் பொருளாகிய ஆத்மாவையும் காக்ஷிப்பொருளாகிய ஸ்ரீபரமசற் குருவையும் காரணப்பொருளாகிய பரிபூரணவியாபகசைதன்யத் தையும் திரியேகப்பொருளாகிய பரப்பிர்மவஸ்துவையும் ஸ்ரீ சற் குருகடாக்ஷத்தால் நிறைநிறையேதெரிசித்துக் கிருதகிருத்திய னாகத் தடையற்றுவிளங்கிறான்.

ஒன்பதாவது.-சரீரியானவன் சாக்ஷிப்பொருளாகிய ஆத்மசந் தெரிசனத்தால் நீதலோஜனத்தைப்பெற்று மாயாதுரிதத்தை விலக்குகிறான் காக்ஷிப்பொருளாகிய ஸ்ரீசற்குருசந்தெரிசனத்தால் நித்தியபூமிக்குறுப்பாகிய சம்பந்தநவாங்கத்தைப்பெறுகிறான் கா ரணப்பொருளாகிய பரிபூரணவியாபகசைதன்ய சந்தெரிசனத் தால் திரிகாலபேதமில்லாத பூரணஞானத்தையடைகிறான் திரி யேகப்பொருளாகிய பரப்பிர்மசந்தெரிசனத்தால் பாபாத்மாக்க ளான அநித்தியவர்க்கங்களுக்குப் பிரத்தேகசாக்ஷியாய் அவர் களைவேறுபடக்கண்டு சுகிர்தாத்மாக்களான நித்தியவர்க்கங்களுக் கடிக்கடியாய் அவர்களிடத்து சம்பந்தானுரூபமாக ஈடுபட்டு நித் திய வநித்தியமெனப்பேதிக்கும் தொந்துவரூபமானபரிச்சின்ன விருத்தியைப் பரிபூரணவியாபக சைதன்யத்திற் பரிகொடுத்து சர்வானந்தசமர்த்தியையுடைய சகஜானந்தநிஷ்டனாய் நம்புத்திக் கெட்டாத அதி ஆச்சரியகரமான தீர்க்கதெரிசன சுவிசேஷ அற் புதாதி மகிமைகளைக்கண்டு தன்யோஸ்மிதன்யோஸ்மியென்னும் வாக்கியகோஷ்ட மனோவுத்சாக ஆனந்தாவேஷ நிர்த்தனனாய் இம்மை மறுமையென்பது தோற்றாமல் சருவபரிபூரண நித்திய முத்தனாகத்தடையற்றுவிளங்குகிறான்.

பத்தாவது.-சரீரி பகிர்முகப்பிராந்தியினால் வந்த மூடகோரங்களைத்தியசித்து நிருவிகாரியாய் தனக்குரிய ஆந்தரரூபமான சாந்தவிருத்தியைப்பெற்று சாந்தவிருத்தியினால் சாதனசதுஷ்டயம் நிறைந்து அதனால் சற்குருசம்பந்தத்தைப்பெறுகின்ற முற்சாதனவதிகாரிகளும் சற்குருசம்பந்தத்தால் திவ்வியசக்ஷுவைப் பெற்று அதனாற்சாதனசதுஷ்டயம்நிறைந்து சாந்தாகாரத்தைப் பெறுகின்ற பிற்சாதனவதிகாரிகளுமாகிய நாமெல்லோர்க்கும் பிராரத்துவவிதிப்படி வர்ணாதிபீடிதமாகவந்த புறத்துருப்புகளிருந்தபடியே யிருக்க ஸ்ரீபகவான் வாசுதேவசற்குரு கடாக்ஷத்தால் அகத்துருப்பானது பழுப்பேறி நாளுக்குநாள் மாத்துயர்ந்து மரித்தர்க்குமுன்னும் மரிக்கும்போதுமிருந்தபடியே மரித்தற்குப் பின்னுமாறுபடாமல் சரண்யத்துவாரா மேல்வீடுபெற்று நித்திய சூரிகளோடுநித்தியகைங்கிரியம்பண்ணிக்கொண்டிருப்பதுசித்தம்

பதினொருவது.-சரீரிபகிர்முகவிருத்தியினால் மூடகோரங்களுக்குடன்பட்டு செயற்கையுருவான கருமசரீரத்தை யெடுத்துக்கொண்டு கர்மானுரூபமாக எடுத்ததனுவுக்குரிய விவிதவிகாரங்களைப் பொருந்தி தத்தெரிசனபரியந்தம் மாறிமாறி யுற்பவித்தழிகிறான் நிருவிகாரியான தத்தெரிசனமகிமையால் சடாகாரபீஜமாகவிருக்கின்ற மூடவிருத்தியும் திரிசிய சூனிய குவிதல்விரிதல்களாற் பூரித்துவாடுகின்ற கோரவிருத்தியும் விசர்ச்சித்து தனக்குரிய சாந்தாகார அகமுகவிருத்தியினாற் சாதனசதுஷ்டயம் நிறைந்து ஸ்ரீபரமசற்குருவைஆசிரயிக்குமிடத்து அவனதுசத்திய சங்கற்பத்தால் நித்தியமாய் எப்போதும்அழிவில்லாத தேஜோமயமான இயற்கையுருவைப்பெற்று ஞானசக்தியாதி குணகணபூர்த்தியினால் நவநவமாகப்பிரகாசிக்கிறான்.

பன்னிரண்டாவது.-எல்லாவற்றையும் காண்கிறகண் தன்னைக்காணாது எல்லாவற்றையும் அறிகிரசரீரி தன்னையறியான் கண்ணைக்காண ஒருகண்ணாடிவேண்டும் தன்னையறிய ஒருசற்குருவேண்டும் சூரியன் அளிக்கும் வெளிச்சத்தால் சூரியனைக்காண்பதுபோல் சற்குருஅருளும்வேதத்தால் சற்குருசொரூபத்தையறியலாம் வேதம் பூதக்கண்ணாடியைப்போல் தூரத்திலுள்ளவைகளைச் சமீபத்தில் திருஷ்டிக்கச்செய்யும் சரீரக்கண்ணுக்குவிஷயமாகாதவைகளை

மனக்கண்ணுக்கு விஷயமாக்கும் வேதத்திற்சொல்லியபொருள் பக்ஷபாதமில்லாமல் தெளிந்தமனதோடே கவனித்துப்பார்ப்பவர்களுக்கு அதினுண்மைநன்ருய்விளங்கும் வேதம் கரும்புபோல் அடிமுதல்நுனிவரையிலும் மதுரமுள்ளது கரும்புகசப்பது வாய்க்குற்றம் மனமாகிய உரைகல்லால் இதுசத்தியம் இதுஅசத்தியமென்னத்தெரிந்துகொள்ளலாம் பரமகிருபையைப்பெற்ற வரப்பிரசாதிகளான மகத்துக்கள் தீர்க்கதெரிசன சுவிசேஷ அற்புதாதி மகிமைகளைக்கண்டு மனதிற்குப்பயன்பட்டு நிற்சந்தேகராக விளங்குகிருர்கள் அவர்களுக்கு அனுமானுதிகள்வேண்டுவதில்லை உள்ளங்கைநெல்லிக்கனிபோல் எல்லாம் பிரத்தியக்ஷமாயிருக்கிறது மற்றையவர்களுக்கு அனுமானம் அபிப்பிராயத்தையும் அபிப்பிராயம்நிச்சயத்தையும் நாளாவட்டத்தில் இயல்பாயுண்டு பண்ணும்.

பதின்மூன்ருவது. — சீரிநிருவிகாரியான சேதனவஸ்துவாயிருந்தும் பகிர்முகப்பிராந்தியினுல் அவனதியற்கையுருவைமறந்து பூதசால கரணசதுஷ்டய குணத்திரய கர்மத்துவயரூபமான அசேதனப்பகுதியைப்பொருந்தி அதற்குரிய பல்வகைவிகாரத்தையடைந்து பராதீனனுகவசப்பட்டு ஜென்மபரம்பரையாய்த்தொடர்ந்து அவ்வசேதனப்பகுதியினு லாளப்படுகிருன் நிருவிகாரியான தத்தெரிசனமகிமையால் அவ்வசேதனப்பகுதியைத் தனக்குச்சுவாதீனமாக்கி சத்கர்ம சத்க்ஞான சத்பக்தியாதிகளை அபிவிர்த்திபண்ணி ஆர்த்ததிருப்தனென்னும் அதிகாரபருவத்தையடைந்து தேற்றறவாளனுகிய சருவேஸ்வர சற்குருவினுல் கைப்பற்றியாளுகின்ற சத்பாத்திரனுய் அவனது கடாக்ஷத்தால் திவ்வியசக்ஷுவைப்பெற்று திரியேகப்பொருளாகிய பரப்பிர்மவஸ்துவை பிரமாணநிச்சிதமாக அனுபவித்து நிர்ச்சந்தேகனுய் இம்மைமறுமையென்பது தோற்ருமல் நித்தியமுத்தனுகத்தடையற்று விளங்குகிருன்.

பிரமாணம்.—பிரத்தியக்ஷ அனுமான உவமான ஆகமமென்னச் சதுர்விதம். அவற்றுள்.-உள்ளதையுள்ளபடியுணர்த்துவதாய் இந்திரியங்களுக்கு நேராய்விளங்கும் ரூபகாரப்பிரமாணமே:பிரத்தியக்ஷம். அனுமானம்.—காரியகாரணமென்னத்துவிதம்.— காலங்

காட்டுங்கடியாரத்தைக்கண்டு இதைச்செய்தவன் ஒருவனிருக்க வேண்டுமென்பதுபோல் சமஸ்தமான படைப்புகளையுங் கண்டு இதனைப்படைத்தவன் ஒருவனிருப்பனென்று தீர்மானிப்பது: காரியானுமானம்.- கார்மேகத்தைக்கண்டு மழைபெய்யுமென்பது போல் பேரருளாளன்றிருநோக்கைக்கண்டு சுவிசேஷ அற்புதாதி மகிமைகள் உண்டாகுமென்று குறிக்கப்படுவது:காரணாநுமானம். காட்டுமாட்டைக் காணாதவனுக்கு வீட்டுமாட்டை யொப்பிட்டுக் காட்டுவதுபோல் உலக இயலை ஒப்பிட்டு பரமகிருபையை யுணர்த் தப்படுவது: உவமானம்.-சத்தியசாக்ஷிகளாகிய மகாத்மாக்களெழுதின தவராத திருவாக்கே: ஆகமம்.

பதினான்காவது.—உபதேச சங்கிரக சிட்டாசார தேசிக விலாச நிருப நியமனமென்னும் சட்பத்ததியோடுகூடிய சம்பூரண ரகசியமென்கின்ற வேதாகமம் காவியசுலோகங்களிற் கருதலா யமைக்காமல் பிதாவானவன் தன்புத்திரர்களுக் கெழுதும் நிருபம் போல் வெளிப்படையாய்க் கட்டுக்கதைகளைச் சேர்க்காமல் உப தேசமொழிகளைத் தொகுத்து நம்போலொத்த ஏழைஜனங்கள் சொலுபமாய்த்தெரிந்து உஜ்ஜீவிக்கும்படி எளிதானபாஷைநடை யில் சொல்லப்பட்டிருக்கிறது பொன்னுக்குமுலாமும் கண்ணுக்கு ஆபரணமும் அழகுக்கு அழகும்வேண்டுவதில்லை அவற்றிற்சொல் லிய உபதேசமொழிகள் ஒருவன் சுயமாகச் சொல்லப்பட்டதோ சருவாந்தரியாமியாகிய ஸ்ரீ பகவான் வாசுதேவ சற்குருவினாற் சொல்லப்பட்டதோவென்று பகவத்கடாக்ஷத்தைப்பெற்ற வாசு தேவப்பிரியன்முதலான உத்தம முமூக்ஷுக்களால்த் தெரிந்து கொள்ளலாம் மற்றையவர்களுக்குத்தெரிவிக்கமுடியாது கண்ணில் லாதவனுக்குச் சூரியவெளிச்சமும் சுவையில்லாதவனுக்குச் சர்க் கரைமதுரமும் சாதனைசெய்யாதவனுக்குப் போதனாரசனையும் இருதயபரிசுத்தமில்லாதவனுக்கு வாசுதேவசந்தெரிசனமும் எப் படிமெய்ப்பிக்கக்கூடும் அகத்தில் மங்கியெரிகிற விவேகமென் னுந்தீபத்தை சத்சங்க சதாவிசாரமென்னுந் தூண்டுகோலைக் கொண்டுதுலக்கி துலாம்பரப்படுத்தினால் அவ்வுபதேசமொழி களின்அபிப்பிராயம் நமக்கு நாளுக்குநாள் சுடர்விட்டு மறைப்பின் றிப்பிரகாசிக்கும்.

பதினைந்தாவது.—கண்டறிந்தவன் சாக்ஷியைக்கொண்டு நியாயாதிபதிகள் காணுதகாரியத்தையும் தீர்மானிக்கப்படுகிறது அநுபவமில்லாதவர்களுக்கு அசாத்தியமாய்த் தோன்றுகிற வைகள் அநுபவசாலிகளுக்குச் சாத்தியமாய்த்தோன்றுவது சகஜம் சரித்திரசம்பவம் ஏகவதாரணத்திரட்டு பலப்பிரத விதாயகமுதலான விடங்களிற்சொல்லிய தீர்க்கதெரிசன வரப்பிரசாத சுவிசேஷ அற்புதாதிமகிமைகள் நமதனுபவத்துக்கெட்டாததாகினும் அநுபவசாலிகளாகிய சத்தியசாக்ஷிகள் சொல்லும் அதியற்புதமான ஆப்தவாக்கியத்தை விஸ்வாசித்து பரமப்பிரீதியினோடு நாம் அவசியம் அதைக்கைக்கொள்ளவேண்டியது ஒருவன் இளமையிற் கற்கிறகல்வி செய்கிறமுயற்சி அவனுக்கு முதுமையிற்பயன்படுவதுபோல் நாம் இம்மையிற்செய்கின்ற சாதகோபாயங்கள் தினே தினேஅபிவிர்த்தியாகி மறுமையில் நமக்கு நித்திய போகத்தைக் கொடுத்துப் பூரணமாக்கும் ஆசிரயமான நமது பாபமுழுதையும் நிவாரணம்பண்ணி ஸ்ரீபகவான் பிராரத்துவரூபமான சத்கர்ம புஷ்பத்தை விகசிதப்படுத்தி சதேகவிதேகமென்னும் முத்திக் கனியைப்புசிப்பித்து நித்தியானந்தபோகத்தில் ரமிக்கச்செய்வது சித்தம்.

பதினாறுவது.—உபதேச சங்கிரக சிட்டாசார தேசிகவிலாச நிருப நியமனமென்னும் சட்பத்ததியோடுகூடிய சம்பூரணரகசியமென்கின்ற தயாவேதம் ஒருவன்சுயமாகயெழுதினதல்ல சருவாந்தரியாமியாகிய ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஆசிரதரக்ஷகார்த்தம் தமது அபாரகருணையை வெளிப்படுத்துதற்கு ஒருவனைத் துணைக்கருவியாய்க்கொண்டு தாமே அக்கருவியைநடாத்தும் கர்த்தாவாகவிருந்து திருவுளக்கருத்தைவெளியிட்டு பரமகிருபையினாலெழுதப்பட்டது இதுவெளிப்படையாய் எளிதான பாஷைநடையிலெழுதப்பட்டாலும் பகிர்முக விருத்தியினால் அசூயையாதி குணங்களைக்கலந்துகொண்டு சிரத்தையில்லாமற் பார்ப்பவர்களுக்கு இதிற்சொல்லியபொருள் எவ்வளவும் விளங்காது முமுக்ஷுக்களாகியநாம் ஸ்ரீபகவான் வாசுதேவசற்குருவினிடத்தில் மிகவும் அன்புடையர்களாய் இந்தநூலைச் சிரத்தையோடும் விஸ்வாசித்து இதன்பதப்பொருள் கருத்துப்பொருள்

சாமான்யார்த்தம் மூலகற்பார்த்தமுதலானவைகளை விசாரமுகத்தால்ப் பகுத்தறிந்து இதுசரீரம் இவன்சரீரி இவன்அந்தரியாமியாகிய ஈஸ்வரன் இவன்சருவாந்தரியாமியாகிய சருவேஸ்வரன் இவன் மூலஸ்தம்ப வாசுதேவபரப்பிர்மமென நிஷ்டாரூபமாய் ஆராய்ச்சிபண்ணி அவனதுகடாக்ஷத்தால் சிவேஸ்வரபேதம் சிவசரீர சருவசரீரம் சிவசரீரி சருவசரீரி சிவாபிமானி சர்வாபிமானி சிவாந்தரியாமி சர்வாந்தரியாமி சிவசாக்ஷி சருவசாக்ஷியென்கின்ற பேதவபேதமுழுமையும் விவேகித்து சம்பந்தசாக்ஷிகளை இதாகிதவஸ்துக்களில் நிலைநிறுத்திச் சாக்ஷிக்ஞானத்தால் கேவலநிச்சயத்தையும் சற்குருசம்பந்தத்தால் பூரண நிச்சயத்தையும் அநுபவரூபமாயளவிட்டு மிகவுந்துணிவுடையர்களாய் பாவத்தைவெறுக்குமிடத்து அவற்றை நிவாரணம்பண்ணிப் பரமசுகுர்தத்தைவெளியிட்டருளும் பரமதயாளனை ஆசிரயித்து பரமபதவாழ்வையடையவேண்டியதுசித்தம்.

பதினேழாவது.—ஸ்ரீபகவான் வாசுதேவசற்குருநியமனத்தால் மகாத்மாக்களிடத்துக் கோப்பியமாகவிளங்கும் பரமஅந்தரங்கமான ரகசியார்த்தம் வெளியிலேநின்றுகூப்பிடுது வீதிவீதியாய்ச்சத்தமிடுது ஒலிமுகவாசலிலே கோஷிக்குது ஊருஊராக ஓசையிடுதே அதனெச்சரிப்பை எவ்வளவுங்கவனிக்காமல் அவ்வுபதேசமொழிக்குச் செவிகொடாமல் நமக்குரிய பரஸ்பரஐக்கியத்தையுணராமல் ஒருவரையொருவர் இகழ்வது நிந்திப்பது வெறுப்பது விரோதிப்பதுமுதலான துர்க்குணங்கள் பகவத்சிநேகத்தைமாறுபடுத்தி பகிர்முகப்பிராந்தாளாய் மோசமாக்குமே முமூக்ஷுக்களாகியநமக்கு அநுசரியல்ல ஒருசரீரிக்கு ஒருசரீரம்போல சர்வசரீரியாகியசருவேஸ்வரனுக்கு நாமெல்லோரும் ஆட்டுதற்கும்அடக்குதற்குமுடைய சரீரமென்பதைத் தீர்க்கமாகநிச்சயித்து சரீரிக்குச்சரீரமாய் பர்த்தாவுக்குப்பாரிகையாய் பிதாவுக்குப்புத்திரனாய் சுவாமிக்குச்சுவமாய் சேஷிக்குச்சேஷனாய் குருவுக்குச்சிஷ்யனாய் ஆத்மாவுக்கு ஆலயமாகவிருக்கின்ற நித்தியசம்பந்தத்தைத்தெரிந்து பரஸ்பரம் அன்புடையர்களாய் பாவத்துவத்தைப் பிராரத்துவமென்றெண்ணிய பாஷண்டசங்கத்தை நிரோதனம்பண்ணி பாவத்துவம்நீங்கிய பிராரத்துவ

கர்மத்தை நியமனரூபமாயனுபவித்து விதேகப்பிராப்தியில் சரண்யத்துவாரா நித்தியபூமியையடைதற்குவேண்டிய சாத கோபாயங்களை நாம் எவ்வளவும்வழுவுதலில்லாமல் அனுஷ்டிக்க வேண்டியது சித்தம்.

பதினெட்டாவது.— நித்தியசம்பந்தஅற்புதசமூகங்களாகிய நாமெல்லோரும் அவயவம் அவ்வவயவங்களைத் ததானுரூபமாக நடத்தும் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் அவயவி வாசுதேவப் பிரேரகத்தாற்கண்பார்க்கும் காதுகேட்கும் மூக்குமுகக்கும் நாக்கு ருசிக்கும் கைகொடுக்கும் காலுநடக்கும் கண்ணுக்குநடக்குஞ் சக்தியில்லை காலுக்குப்பார்க்குஞ்சக்தியில்லை பார்க்கும்விஷயத் திற்கண்ணதிகம் நடக்கும்விஷயத்திற்காலதிகம் அவயவிக்குக் கண்ணும்வேண்டும் காலும்வேண்டும் ஓரவயவத்தை ஓரவயவம் பழிக்கலாகாது ஒன்றுக்கொன்று உதவியாயிருக்கவேண்டும் சிலர் கண்ணாகவும் சிலர்காலாகவும் இருப்பானேனென்பதற்கு உத்த ரம் எளிதிற்சொல்லமுடியாது திருவாக்குக்கு எதிர்வாக்கு இல்லை அவனிட்டதேசட்டம் சிற்பொருளாகியநாம் ஸ்ரீபகவான் கைப் பற்றியாளுதற்கேதுவாய் நம்சுதந்தரத்தைத்தவிர்ந்து சடப் பொருளைப்போல அசைவற்றிருக்கவேண்டும் பகவதவயவங்க ளாகிய நாமெல்லோரும் நமதவயவியாகிய ஸ்ரீபகவானைவிட்டுப்பிரி யாமல்அவனைக்கொண்டே திருப்தியடையவேண்டும் பகிர்முகப் பிராந்தியால்வந்த பாவத்துவமுழுதும் பகவதானுக்கிரகத்தால் நிவர்த்திபண்ணி வர்த்தமானத்தில் வர்ணதிரூபமாய்ப் பிடித்திருக் கின்ற பிராரத்வகர்மத்தை நியமனரூபமாயனுபவித்து விதே கப்பிராப்தியில் நித்தியசம்பந்தமான திவ்வியசொரூபத்தைப் பெற்று நித்தியசூரிகளோடு நித்தியகைங்கிரியபரராய் ஸ்ரீபகவா னாகிய வாசுதேவபரப்பிர்மத்தை இடையறாது சேவித்துக்கொண் டிருப்பது சித்தம்.

பத்தொன்பதாவது.— சரீரியானவன் பகிர்முகவிருத்தியி னால் இச்சாரூபமான கர்மசரீரத்தையெடுக்கிறான் அகமுகவிருத் தியினால் சாதனசாத்தியத்தைப்பெறுதற்குரிய சாந்தாகாரத்தை யடைகிறான் விருத்திக்ஷயமானவிடத்து பிரத்தேகசாக்ஷியாய் நின்று திரிசியகுணியங்களை பகுத்தறியும் கேவலம் ஆத்மசொரூப

மாய்விளங்கிறான் அகமுகவிருத்தியினால் சாந்தாகாரத்தைப் பயிர்ச்சிக்கில் சாதனசதுஷ்டயம்நிறைகிறான் சாதனசதுஷ்டய சம்பூர்த்தியால் சற்குருலாபத்தையடைகிறான் சற்குருலாபமகி மையால் சம்பந்தானுசம்பந்தங்களைத்தெரிகிறான் சம்பந்தானுரூப மாயாசிரயிக்கில் தாபத்திரயதுக்கத்தைநிவர்த்திக்கிறான் தாபத் திரயம் நிவர்த்தித்தமாத்திரம் சிராந்திவிசிராந்தியினை லீலைப் பாருகிறான் இவ்வஷ்டவிஷயத்தில் அதிருப்தனாய் ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மத்தை ஆர்த்திவிசேஷத்தாற்பிரார்த்திக்கில் அவனது அபாரகருணையினால் முமூக்ஷுத்துவம் சற்குருசாஸ்திர சிநேகம் சிரவணார்த்தசிந்தனம் சுகதுக்கசகனம் விவகாரவிலக்ஷ ணம் புறக்கரணதண்டம் அகக்கரணசிக்ஷை அநித்தியவிராகம் நித்தியவாஞ்சிதம் சகலத்தியாகம் முத்திப்பிராப்பியம் சர்வதுக் காபாவமென்னும் துவாதசரூபமான சாத்தியசாதனம் நிறைந்து நித்தியமுத்தனாய் ஊர்த்துவபாதவிதிப்படி ஆரோகணித்தும் அதோபாதவிதிப்படிஅவரோகணித்தும்ஆரோகண அவரோகண அவரோகண ஆரோகண ரூபமாய்த்தடையற்றுவிளங்குகிறான்.

இருபதாவது.— பாபோஅஹம் பாபகர்மா பாபசம்பவ பாபாத்மாவாகியயெனக்குப் பாபபரிகாரியாய்நின்று சர்வபாபங் களையும் நிவர்த்திபண்ணி பரமசுகுர்தத்தை வெளியிட்டருளிய ஸ்ரீபகவான்வாசுதேவசற்குருவுக்கு அடியார்களாய் எனக்கு ஆண் டவர்களாகவிருக்கின்ற பரமபக்தாளாகிய நித்தியசம்பந்த அற்புத சமூகங்கள்வசிக்கும் திவ்வியப்பிரதேசத்தை நோக்கி சென்னி வணங்க செவிகேட்க வாய்வாழ்த்த நெஞ்சஞ்சிந்திக்க கண்துளி ததும்ப கரமதுகுவிய இப்படியே சர்வாவயவங்களும் ஸ்தௌத்தி யம்பண்ண நின்றெழுதும் விஞ்ஞாபனம் சரீரி இயற்கைப்பொரு ளாகிய நிர்விகாரவஸ்துவாயிருந்தும் தனக்குறைவிடமான சரீர சம்பந்தத்தால் வந்த பிராரத்துவகர்மத்தை நியமனபாக்கியமாகக் கைக்கொண்டு அவற்றை நிறைவேற்றுதற்பொருட்டு பாரியா புத்திரபரிசனபரிவாராதி சகிதமாய் ஸ்ரீகோஷ்டிபுரத்தைச்சார்ந்த கிருஷ்ணசரசென்னுஞ் சுதேசத்தைநோக்கி இதோபிரயாணசம் யுக்தனாகவிருக்கிறேன்.

இருபத்தோராவது.— ஸ்ரீபகவான் வாசுதேவபரப்பிர்மம் ஆசிரதரக்ஷகார்த்தம் தமது திருச்சித்தத்தை வெளிப்படுத்துதற்குக் கோஷ்டிப்பிரதேச தெரிசனப்பிரவர்த்தக சமூகசம்பந்தரான ஓரதிகாரியைத் துணைக்கருவியாய்க்கொண்டு சட்பத்ததியோடுகூடிய சம்பூரணரகசியமென்கின்ற தயாவேதத்தை கலியுக சகாப்தம் சதுகூளஎம், பதான விய ஹூ ஆனிமீ ஆரம்பித்து சதுகூஅம்கூ, வதானதாரண ஹூ ஆனிமீ சம்பூர்த்திபண்ணி ததியாராதன சமாராதன சருவாராதன கோலாகல உச்சவபூர்வகமாய் மகாவிரதத்தைநிறைவேற்றி நியமனூர்த்தமாக சுதேசத்திற் பிரவேசிக்கும்பொருட்டு சம்பந்தநவாங்கத்திலொன்றான சரீரிசரீர சம்பந்தத்தைவிளக்கி சரீரபந்து மனோபந்து பக்தபந்து ஆத்மபந்துவாதி ஆப்தஜனவர்க்கங்களுக்குச் சமுதாயமாக அவ்வதிகாரியின் பிரயாணநிருபத்தை எழுதப்பட்டது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணாய குருப்பிர்மணேநம:



உ
ஹரி: ஓம்.
ஸ்ரீபரமசற்குருவேநம:



## நியமனபத்ததி.

நியமன நிருப விக்ஞாபன சம்பூரணமென்னச் சதுர்விதமாக நிருபிப்பது. நியமனம்.— கலியுகசகாப்தம் சதுகூஅம்கூ, வதானதாரண ஹூ ஆனிமீ பரிபூர்த்திபண்ணிவைத்திருக்கின்ற சம்பூரணரகசியத்தைப் பன்னிரண்டுவருஷமிருந்து ஆசிரயிப்பவர்க்குப்போதமாக்கி அதற்குமேல் உன்பிதாநாராயணவணிகன்மூலமாய் உனக்குநாம் நியமித்த தேசாடனவிரதத்தை பரிபூர்த்திபண்ணக்கடவையென்று ஸ்ரீவாசுதேவினால் நியமிக்கப்படுவது. நிருபம்.-சர்வமும் வாசுதேவசொரூபமெனக்கலக்கமறத்தெளிந்து சதாஆராதிக்கும் நித்தியசம்பந்த அற்புதசமூகங்கள் இப்படியே வெளிப்படையாய் ஆராதித்துக்காட்டவேணுமென்னும் பிரீதியினோடு வியாக்கிரபுரம் மதுராபுரம் கோஷ்டிபுரம் ஸ்ரீசைலம் பரமபதமென்னும் ஐந்துபிரிவாய்நின்றெழுதப்படுவது.

வியாக்கிரபுரநிரூபம்.— ஸ்ரீவியாக்கிரபுரவாசனான மதன கோபால கிருஷ்ணசிரதாயநம:வென்று அடியரடிகளைச் சிரோ பூஷணமாக்கிய அடியர்க்கடியர்களாகிய நாங்களனைவர்களும் தீர்க்க தெண்டஞ்சமர்ப்பித்து அஞ்சலியஸ்தராகநின்றெழுதும் விக்ஞா பனநிருபம் ஸ்ரீபகவானாகிய வாசுதேவசற்குருவினால் திருவிளை யாட்டஞ்செய்யும் சர்வாராதன கோலாகல உச்சவபூர்வகமாக பகவத்பிராப்தியைப்பெற்ற பாரியாபுத்திர பரிசனபரிவாராதி பகவதடிகளைப்பூசித்து பவவாரிதியைக்கடந்தேறுகிற சுபதினம் எப்போலபிக்குமென்னும்வாஞ்சிதராய் ஸ்ரீவாசுதேவ சௌந்தர நாராயண ஸ்ரீராமசுந்தர அனந்தநாராயண ஸ்ரீபாதசரண்யாயநம: வென்று சதாதாசாதிதாசர்களாகப் பிரார்த்திக்குகிறோம்.

மதுராபுரநிரூபம்.— ஸ்ரீமதுராபுரவாசனான மீனாக்ஷிசுந்த ரேஸ்வராயநம; வென்று பாரியாபுத்திர பரிசன பரிவாராதி வர்த்தமான பூருவோத்தர அதிகாரசமூகங்களாகிய நாங்களனை வர்களும் தாழுந்தடக்கையும் ஒருங்கேகூப்பிய சருவாங்கசமர்ப் பணராக நின்றெழுதும்விக்ஞாபனநிருபம் எங்களுக்கு நிருபக நீத சயேக சம்பந்த வியவகாரமென்னும் பஞ்சதிருஷ்டியை விளக்கி வர்த்தமானத்தில் பரமகிருபையினால் நியமித்தருளிய கிரியாகைங்கிரியத்தை எவ்வளவுந்தளர்ச்சிவாராமல் பூர்த்திபண் ணி இப்படியே பௌஷதியில் நித்தியகைங்கிரியத்தை நிரேது வாகத்தந்தருளி நித்தியசூரிகளோடுசேர்த்து ரக்ஷிக்கவேண்டு மென்று அனவரதகாஞ்சையையுடையர்களாய் சதாபிரார்த் திக்குகிறோம்.

கோஷ்டபுரநிரூபம்.— ஸ்ரீகோஷ்டபுரவாசனான ஸ்ரீபூனோ சமேத சௌமியநாராயணாயபரப்பிர்மணேநம: வென்று நித்திய வர்க்க நியமனவர்க்க சொரூபவர்க்க ஆலயவர்க்க அபிமானவர்க்க மென்னும் வர்க்கபஞ்சக அதிகாரசமூகங்களாகிய நாங்களனைவர்க ளும் அவயவியாகிய ஸ்ரீபகவானிடமாகப் பிர்மாஞ்சலிபண்ணி அவ னதாக்ஞையால் அநேக அவயவ அபரிச்சின்னமூர்த்திகளாகப்பிரி ந்து அநேகதெண்டசமர்ப்பிதராக நின்றெழுதும் விக்ஞாபனநிரு பம் நாங்கள் உஜ்ஜீவிக்கும்பொருட்டு ஸ்ரீபகவானாகிய எங்கள்வாசு தேவசற்குருவினால் சருவாராதன கோலாகல உச்சவபூர்வகமாக

எங்களை நித்தியகைங்கிரியத்துக்கு நியமித்தருளுகிற சுபதினம் எப்போவரும் எப்போவருமென்று சந்திரவிம்பத்தையெதிர்பார்த்திருக்கின்ற சகோரபக்ஷிகளைப்போல சதா எதிர்பார்த்துக் கொண்டிருக்குகிறோம்.

ஸ்ரீசைலநிருபம்.—ஸ்ரீசைலவாசனுன வேங்கடேச முகுர்த்த மூர்த்தகர்த்தனுயநம: வென்று ஸ்ரீயஃபதியான சருவேஸ்வரனுக்கு நித்தியபூமியில் அடிக்கடியாய் விநோதகாரணமாக லீலா பூமியில் கடைதலை தலைகடையாய் மணியும்ஒளியும் மலருமணமும்போல எக்காலமும்பிறிவற்றிருக்கும் நித்தியசம்பந்த சர்வாதிகார அற்புதசமூகங்களாகிய நாங்களனைவர்களும் ஸ்ரீபகவானது மூர்த்தாதிபாத பாதாதிகேசபரியந்தம் ஆதியோடந்தம் அந்தமோடாதி சர்வாவயவ தெரிசன சேவிதராக நின்றெழுதும் விக்ஞாபனநிருபம் எங்களுக்கு நிரேதுவாக சுபேக்ஷையாதிஞான பூமிமார்க்கமாய் ஸ்ரீபகவான் விமலசிற்குணங்களை அபிவிர்த்தி பண்ணி அகம் சித்தசித்தெனச்சுதந்தரிக்கும் அசுத்தவிருத்தியை ப்போக்கி சுத்தவிருத்தியினுற்சமர்ப்பித்த பிதிர் மாதுர் புத்திர களத்திர பௌத்திர பிதாமக தாச தாச ஆசிரத வாசிரயஆசாரியவாசாரியர்முதலிய பூருவோத்தரசமூகங்களோடு தனுகரணபுவனபோக ஜெகசீவபரசகிதமாய் நம்ஆத்மாவைக்கைக்கொண்டு பரமசுகிர்தத்தை இலவசமாய்க்கொடுத்து பலப்பிரதரூபமாய் வெளியிட்டருளிய ஸ்ரீபரமசற்குருகிருபையினுல் அக்ஞானபீஜம் நசித்து ஆவரணகோசும்பேதித்து நித்தியானந்தவாரிதிகரைபிரண்டு பூமி அந்தர சுவர்க்க சரண்ய பரமபதமென்னும் நித்தியபூமிக்குரிய ஐஸ்வரிய பஞ்சகமுந்தட்டுமாறி சதேகவிதேகமென்னும் உபயமோக்ஷமுஞ்சித்தித்து சர்வானந்தசமர்த்தியையுடைய சகஜானந்தநிஷ்டர்களாய் சுதாஸ்தௌத்தியம்பண்ணிக்கொண்டிருக்குகிறோம்.

பரமபதநிருபம்.—ஸ்ரீபரமபதவாசனுன வாசுதேவபரப்பிர்மணேநம: வென்று நம்யேகநாயகனது திருவடிசம்பந்தம்பெற்ற திருமதுரை திருக்கோஷ்டி ஸ்ரீவியாக்கிரம் ஸ்ரீசைலம் பரமபதமென்கின்ற சர்வபுவன சர்வாதிகாரசமூகங்களாகிய நாங்களனை

வர்களும் திரித்துவ திரியேகவஸ்துவாய் சர்வாத்மாக்களுக்குள்ளி லும்புறம்பிலும் மூர்த்திகரித்துநிற்கும் ஒப்பற்ற ஸ்ரீபரமாத்ம தேவை ஆரோகண அவரோகணவிதிப்படி சவ்விய அபசவ்விய சவ்வியாபசவ்விய அபசவ்வியசவ்வியாதி சர்வப்பிரகார தெரிசனசேவிதராக நின்றெழுதும்விக்ஞாபனநிருபம் எங்களுக்கு யேகதத்துவம் காலாதிவர்ச்சிதம் தொந்துவநீக்கம் விமலபாஸ்கரம் அபிஷேகம் சர்வமங்களம் நித்தியசேவிதம் சம்பூரணமென்கின்ற தெரிசனஷ்டக பூர்வகமாக திவ்வியசக்ஷுவைவிளக்கி சுவர்க்க மத்திய பாதாள பிராச்சிய பச்சிம தெக்ஷிணோத்தர மத்தியப்பிரதேச அதோஊர்த்துவாதி திரிபுவன திக்குதசங்களையும் அயோத்தி சீகாழி கோஷ்டி வேங்கடமுதலான புரப்பிரசனுதிகளையும் தத்தம்வரைகடவாமல்நிலைநிறுத்தி புரபுவன திக்குத்திகாந்த முழுதிலும் தமதுஆக்ஞாசக்கரத்தைநடாத்தியருளிய ஸ்ரீபகவான் வாசுதேவப்பிரபுவின் திவ்வியப்பிரபாவத்தைக்கீர்த்தித்து ஜயாவிஜயபவாவென்று நாத்தழும்புறவாழ்த்தி இம்மைமறுமையென்பது தோற்றுமல் தன்யோஸ்மிதன்யோஸ்மியென்னும் வாக்கிய கோஷ்ட மனோவுற்சாக ஆனந்தாவேஷ நிர்த்தனராய் சதாஸ்தௌத்தியம் பண்ணிக்கொண்டிருக்குகிறோம்.

## விக்ஞாபனம்.

ஸ்ரீகோஷ்டிப்பிரதேச தெரிசனப்பிரவர்த்தக சமூகப்பிரபுக்களுக்குத் தெண்டஞ்சமர்ப்பித்து அடியேன் நா. முத்துராமன் செட்டிசெய்யும் விக்ஞாபனம் அடியேன் பிதாவாகிய நாராயணஞ் செட்டியாரவர்கள் நிரியாணகாலத்திலனுக்கிரகித்த தத்துவோபதேச சித்தியின்பொருட்டு அடியேனுக்காகநியமித்த தேசாடன விரதத்தை துன்முகிநாமசம்வத்சர சிங்மரவியில் பரிபூர்த்தி பண்ணி சுதேசவியவகாரமருமங்களை கிரமங்கிரமமாய்ப் பிரகாசப்படுத்தி இதற்காறுவதான கும்பரவியில் ஸ்ரீகோஷ்டி புரத்தைச் சார்ந்த கிருஷ்ணசரசென்னும் சுவாராச்சியபூமிக்குப் போய்வருகிறேன்.

இங்ஙனம் தங்கள் விதேயன்,

☞ நா. முத்துராமன்செட்டி.

## சம்பூரணம்.

ஸ்ரீவாசுதேவப்பிரசாதத்தால் உபயவிபூதியும் வழுவில்லாது நிலைநிறுத்தி சருவமும் வாசுதேவசொரூபமெனக் கலக்கமறத் தெளிந்து அப்படியே நித்தியசூழாங்களோடு சதாஸ்தௌத்தியம் பண்ணிக்கொண்டிருப்பது.

ஸ்ரீராஜராஜேஸ்வர கிருஷ்ணய குருப்பிர்மணேநம:



